


72
ACC. No. 25857
7914

79/4

உ
சிவமயம்

பதினெண் சித்தர்கள்

# பெரிய
# ஞானக்கோவை

இஃது
**வா. சரவணமுத்துப் பிள்ளையவர்களால்**
ஞானவான்களுக்கு உபயோகமாகும் பொருட்டு
சில ஏட்டுப்பிரதிகளிலிருந்தும் அச்சுப்பிரதிகளிலிருந்தும்
44-அரிய நூல்களைச் சேகரித்துத்
தொகுக்கப்பெற்றது.





வெளியிடுவோர்:
**B. இரத்தின நாயகர் அண்ட் சன்ஸ்**
26, வெங்கட்ராமய்யர் தெரு, கொண்டித்தோப்பு,
சென்னை—1.

சுத்தப் பதிப்பு] :: [விலை ரூ 30



# முகவுரை

அருள்சுரந்த நாதாக்கள் பதினெண் பேர்கள்
அம்பரமாம் பூரணத்தின் ஒளிகண் டோர்கள்
தெருள்சுரந்த சிவத்தோடே சிவமாய் நின்றோர்
சித்தெல்லாம் வல்லசிவ முத்த ராஞேர்
அருள்சுரந்து அமுதமழை பொழியு மாபோல்
மண்ணுலகின் ஜீவான்ம கோடி கட்கு
பொருள்சுரந்து ஞானவரை விளங்கி மேவப்
போதித்த வேதாந்தக் கோவை யாமே. 1

வேதாந்த மென்றுபதி னெண்ம ராலே
விளக்கிவைத்த சூட்சுமமாம் ஞான மிந்நாள்
போதாந்த மாயொருங்கே கோவை யாக்கி
புலப்படுவ தில்லாது புலம்பு வோர்க்கு
நாதாந்த மாய்ப்பல நூல் நாடித் தேடி
நாள்கழிவ தல்லாது நமனை யோட்டிச்
சேதாந்த மில்லாது ஜீவத் தோங்க
சேகரித்துக் கோவையெனச் செய்திட் டோமே. 2

திட்டமுள ஆரிய நில் லாது நோக்கச்
செய்தசிவ வாக்கியந்தான் நூலே யாதி
பட்டினத்தார் பாடலொடு புலம்பல் ஞானம்
பத்திரிகிரி யருட்புலம்பல் பாம்பாட் டிசர்

வட்டமரை யிடைக்காட ரகப்பை சித்தர்
வடிவற்ற குதம்பைகடு வெளியாஞ் சித்தர்
தோட்டுரைத்த குறுமுனிவ ரழுகண் சித்தர்
துரைபோன்ற நந்தீசர் ராம தேவர். 3

தேவரொடு கொங்கணவர் ரோம நாதர்
திருமூலர் கருவூரர் பொதிகை சித்தர்
ஆவலொடு இவருரைத்த ஞானமி யாவும்
அவனியுள மனுக்களெலா மறிய வென்றே
பாவலரை நாவலரை பண்டி தோரை
பற்பலவாம் பெரியோரைப் பணிந்து கேட்டு
மாவிதமாய்ப் பிழையின்றி திருத்தஞ் செய்து
மாசறவே யச்சியற்றி மகிழ்ந்த வாறே. 4

மகிழ்வாக விந்நூலை தெரிசிப் போரை
மன்ருடிக் கேட்குமனு யாதென் ருலோ
புகழ்பெரிய சித்தர்கள்நூ லாங்காங் கேதான்
புண்ணியர்கள் கைவசமாய் பொருத்த லுண்டாம்
அகமகிழ்ந்தே யெம்மிடத்தி லருள்செய்தீ ரேல்
அச்சிட்டே பலபெரியோ ரறியச்செய் வோம்
செகம்புகழ சாஸ்திரத்தை வெளியிட் டோர்க்கு
சிவலோகம் கிட்டுமெனச் சித்தர் வர்க்கே. 5

தவநெறியின் மிக்கபதி னெண்ம ராலே
தானருளிச் செய்தபல சாத்தி ரத்தில்
சிவனவனே யாகவென சிவ கோடி
சிவமெனவே சிறப்பித்த சிவநூல் யாவும்
அவமனந்தாற் சிந்துண்டு வகலா வண்ண
மறிந்தவரை யேதிரட்டிக் கோவை யாக்கி
புவன்மனு வெளிதனிலே ஞான பாதை
புரிந்துய்ய போதிக்கப் பரந்த வாறே. 6

---

# பொருளடக்கம்

## முதல்பாகம்



## இரண்டாம்பாகம்

## மூன்றும் பாகம்

# சிவவாக்கியர் பாடல்

## நூல்

### காப்பு

அரியதோர் நமச்சிவாய மாதியந்த மானதும்
ஆறிரண்டு நூறுதேவ ரன்றுரைத்த மந்திரம்
சுரியதோ ரெழுத்தையுன்னி சொல்லுவேன்சிவவாக்கியம்
தோஷதோஷ பாவமாய்கை தூரதூர வோடவே. 1

கரியதோர் முகத்தையொத்த கற்பகத்தைக் கைதொழக்
கலைகள் நூல்கள் ஞானமுங் கருத்தில் வந்துதிக்கவே
பெரியபேர்கள் சிறியபேர்கள் கற்றுணர்ந்த பேரெலாம்
பேயனாகி யோதிடும் பிழைபொறுக்க வேண்டுமே. 2

### அக்ஷர நிலை

ஆனவஞ் செழுத்துளே யண்டமு மகண்டமும்
ஆனவஞ் செழுத்துளே யாதியான மூவரும்
ஆனவஞ் செழுத்துளே யகாரமு மகாரமும்
ஆனவஞ் செழுத்துளே யடங்கலாவ லுற்றதே. 3

### சரியை விலக்கல்

ஓடியோடி யோடியோடி யுட்கலந்த சோதியை
நாடிநாடி நாடிநாடி நாட்களுங் கழிந்துபோய்
வாடிவாடி வாடிவாடி மாண்டுபோன மாந்தர்கள்
கோடிகோடி கோடிகோடி எண்ணிறந்த கோடியே. 4

## யோக நிலை

உருத்தரித்த நாடியி லொடுங்குகின்ற வாயுவை
கருத்தினு லிருத்தியே கபாலமேற்ற வல்லிரே
வருத்தரும் பாலராவர் மேனியுஞ் சிவந்திடும்
அருட்டரித்த நாதர்பாத மம்மைபாக முண்மையே. 5

## வேத நிலை

வடிவுகண்டு கொண்டபெண்ணை மற்றொருவ னத்தினுல்
விடுவனோவவனை யின்னம் வெட்டவேணு மென்பனே
நடுவன்வந் தழைத்தபோது நாறுமிந்த நல்லுடல் [ரே.
சுடலைமட்டுங் கொண்டுபோய்த் தோட்டிகைக் கொடுப்ப

## ஞான நிலை

என்னிலே யிருந்தவொன்றை யானறிந்த தில்லையே
என்னிலே யிருந்தவொன்றை யானறிந்து கொண்டபின்
என்னிலே யிருந்தவொன்றை யாவர்காண வல்லிரோ
என்னிலே யிருந்துணர்ந்து யானுணர்ந்து கொண்டனே.

நினைப்பதொன்று கண்டிலே னீயலாது வேறிலை
நினைப்புமாய் மறப்புமாய் நின்றமாய்கை மாய்கையை
அனைத்துமா யகண்டமா யநாதிமுன் னநாதியாய்
எனக்குள் நீ யுனக்குள் நா னிருக்குமாறதெங்ஙனே. 8

மண்ணும்நீ விண்ணும்நீ மறுகடல்க ளேழும்நீ
எண்ணும்நீ எழுத்தும்நீ யிசைந்தபண் ணெழுத்தும்நீ
கண்ணும்நீ மணியும்நீ கண்ணுலாடும் பாவைநீ
நண்ணுநீர்மை நின்றபாதம் நண்ணுமா றருளிடாய். 9

அரியுமல்ல வயனுமல்ல வப்புறத்தி லப்புறம்
கருமைசெம்மை வெண்மையைக் கடந்துநின்ற காரணம்
பெரியதல்ல சிறியதல்ல பற்றுமின்கள் பற்றுமின்கள்
அரியமுங் கடந்துநின்ற தூரதூர தூரமே. 10

அந்திமாலை யுச்சிமூன்று மாடுகின்ற தீர்த்தமும்
சந்திதர்ப் பணங்களுந் தபங்களும் செபங்களும்
சிந்தைமேவு ஞானமுந் தினஞ்செபிக்கு மந்திரம்
எந்தைராம ராமராம ராமவென்னு நாமமே. 11

கதாவுபஞ்ச பாதகங்க ளைந்துரந்த மந்திரம்
இதாமிதாம தல்லவென்று வைத்துழலு மேழைகள்
சதாவிடாம லோதுவார் தமக்குநல்ல மந்திரம்
இதாமிதாமி ராமராம ராமவென்னும் நாமமே. 12

நானதேது நீயதேது நடுவினின்ற தேதடா
கோணதேது குருவதேது கூறிடுங் குலாமரே
ஆனதேது வழிவதேது வட்புறத்தி லப்புறம்
ஈனதேது ராமராம ராமவென்ற நாமமே. 13

## யோக நிலை

சாத்திரங்க ளோதுகின்ற சட்டநாத பட்டரே
வேத்திரைப்பு வந்தபோது வேதம்வந் துதவுமோ
மாத்திரைப்போ தும்முளே யறிந்துதொக்க வல்லிரேல்
சாத்திரைப்பை நோய்களேது சத்திமுத்தி சித்தியே. 14

## ஞான நிலை

தூரந்தூரந் தூரமென்று சொல்லுவார்கள் சோம்பர்கள்
பாரும்விண்ணு மெங்குமாய்ப் பரந்தஅப் பராபரம்
ஊருநாடு காடுமோடி யுழன்றுதேடு மூமைகாள்
நேரதாக வும்முளே யறிந்துணர்ந்து கொள்ளுமே. 15

## யோக நிலை

நாலுவேத மோதுவீர் ஞானபாத மறிகிலீர்
பாலுள்நெய்க லந்தவாறு பாவிகா ளறிகிலீர்
ஆலமுண்ட கண்டனு ரகத்துளே யிருக்கவே
காலனென்று சொல்லுவீர் கனவிலும்மஃ தில்லையே. 16

வித்திலாத சம்ப்ரதாய மேலுமில்லை கீழுமில்லை
தச்சிலாது மாளிகை சமைந்தவாறு தெங்ஙனே
பெற்றதாயை விற்றடிமை கொள்ளுகின்ற பேதைகாள்
சித்திலாத போதுசீவ னில்லையில்லை யில்லையே. 17

அஞ்சுமூணு மெட்டதா யநாதியான மந்திரம்
நெஞ்சிலே நினைந்துகொண்டு நீருருச் செப்பிரேல்
பஞ்சமான பாதகங்க ளூறுகோடி செய்யினும்
பஞ்சுபோல் பறக்குமென்று நான்மறைகள் பன்னுமே. 18

அண்டவாச லாயிரம் ப்ரசண்டவாச லாயிரம்
ஆறிரண்டு நூறுகோடி யானவாச லாயிரம்
இந்தவாச லேழைவாச லேகபோக மானவாசல்
எம்பிரா னிருக்கும்வாச லியாவர்காண வல்லரே. 19

சாமம்நாலு வேதமும் சகலசாத் திரங்களும்
சேமமாக வோதினும் சிவனைநீ ரறிகிலீர்
காமநோயை விட்டுநீர் கருத்துளே யுணர்ந்தபின்
ஊனமற்ற காயமா யிருப்பனெங்க ளீசனே 20

சங்கிரண்டு தாரையென்று சன்னபின்ன லாகையால்
மங்கிமாளு தேயுலகில் மானிடங்க ளெத்தனை
சங்கிரண்டை யுந்தவிர்ந்து தாரையூத வல்லிரேல்
கொங்கைமங்கை பங்கரோடு கூடிவாழ லாகுமே. 21

ஞான நிலை

தங்கமொன்று ரூபம்வேறு தன்மையான வாறுபோல்
செங்கண்மாலு மீசனுஞ் சிறந்திருந்த தெம்முளே
விங்களங்கள் பேசுவார் விளங்குகின்ற மாந்தரே
எங்குமாகி நின்றநாமம் நாமமிந்த நாமமே. 22

## யோக நிலை

அஞ்செழுத்தி லேபிறந்து அஞ்செழுத்தி லேவளர்ந்து
அஞ்செழுத்தை யோதுகின்ற பஞ்சபூத பாவிகாள்
அஞ்செழுத்தி லோரெழுத் தறிந்து கூறவல்லிரேல்
அஞ்சலஞ்ச லென்றுநாத னம்பலத்தி லாடுமே. 23

அஞ்சுமஞ்சு மஞ்சுமே யனாதியான தஞ்சுமே
பிஞ்சுபிஞ்ச தல்லவோ பித்தர்காள் பிதற்றுவீர்
நெஞ்சிலஞ்சு கொண்டுநீர் நின்றுதொக்க வல்லிரேல்
அஞ்சுமில்லை யாறுமில் லனாதியாகத் தோன்றுமே. 24

நீளவீடு கட்டுநீர் நெடுங்கதவு சாத்துவீர்
வாழவேணு மென்றல்லோ மகிழ்திருந்த மாந்தரே
காலனோலை வந்தபோது கைகலந்து நின்றிடும்
ஆலமுண்ட கண்டர்பாத மம்மைபாத முண்மையே. 25

## கிரியை நிலை

விடெடுத்து வேள்விசெய்து மெய்யரோடு பொய்யுமாய்
மாடுமக்கள் பெண்டிர்சுற்ற மென்றிருக்கு மாந்தர்காள்
நாடுபெற்ற நடுவர்கையி லோலைவந் தழைத்திடில்
ஓடுபெற்ற தவ்விலை பெருதுகாணு முடலமே. 26

## யோக நிலை

ஓடமுள்ள போதெலா மோடியே யுலாவலாம்
ஓடமுள்ள போதெலா முறுதிபண்ணிக் கொள்ளலாம்
ஓடமு முடைந்தபோது வொப்பிலாத வெளியிலே
ஆடுமில்லை கோலுமில்லை யாருமில்லை யானதே. 27

## உற்பத்தி நிலை

அண்ணலே யனாதியே யனாதிமுன் னனாதியே
பெண்ணுமாணு மொன்றலோ பிறப்பதற்கு முன்னெலாம்
கண்ணிலாணின் சுக்கிலங் கருவிலோங்கு நாளிலே
மண்ணுளோரும் விண்ணுளோரும்வந்தவாறதெங்ஙனே.

### ஞான நிலை

பண்டுநான் பறித்தெறிந்த பன்மலர்க ளெத்தனை
பாழிலே செபித்துவிட்ட மந்திரங்க ளெத்தனை
மிண்டனாய்த் திரிந்தபோ திறைத்தநீர்க ளெத்தனை
மீளவுஞ் சிவாலயங்கள் சூழவந்த தெத்தனை. 29

அண்டர்கோ னிருப்பிட மறிந்துணர்ந்த ஞானிகாள்
பண்டறிந்த பான்மைதன்னை யாரறிய வல்லரே
விண்டவேதப் பொருளையன்றி வேறுகூற வகையிலா
கண்டகோயில் தெய்வமென்று கையெடுப்ப தில்லையே.

### யோக நிலை

நெருப்பைமூட்டி நெய்யைவிட்டு நித்தநித்த நீரிலே
விருப்பமொடு நீர்குளிக்கும் வேதவாக்கியங் கேளுமின்
நெருப்புநீரு மும்முளே நினைத்துகூற வல்லிரேல்
சுருக்கமற்ற சோதியைத் தொடர்ந்துகூட லாகுமே. 31

பாட்டிலாத பரமனை பரமலோக நாதனை
நாட்டிலாத நாதனை நாரிபங்கர் பாகனை
கூட்டிமெள்ள வாய்புதைத்து குணுகுணுத்த மந்திரம்
வேட்டகாரர் குசுகுசுப்பை கூப்பிடா முனின்றதே. 32

### தரிசனம்

செய்யதெங்கி லேயிளநீர் சேர்ந்தகார ணங்கள்போல்
ஐயன்வந்து என்னுளம் புகுந்துகோயில் கொண்டனன்
ஐயன்வந்து என்னுளம் புகுந்துகோயில் கொண்டபின்
வையகத்தில் மாந்தர் முன்னம் வாய்திறப்ப தில்லையே.

### சரியை நிலை

மாறுபட்டு மணிதுலக்கி வண்டினைச்சில் கொண்டுபோய்
ஊறுபட்ட கல்லின்மீதே யூற்றுகின்ற மூடரே
மாறுபட்ட தேவரு மறிந்துநோக்கு மென்னையும்
கூறுபட்டு தீர்க்கவோ குருக்கள்பாதம் வைத்ததே. 34

## யோக நிலை

கோயிலாவ தேதடா குளங்களாவ தேதடா
கோயிலும் குளங்கலும் கும்பிடும் குலாமரே
கோயிலும் மனத்துளே குளங்களு மனத்துளே
ஆவது மழிவது மில்லையில்லை யில்லையே. 35

செங்கலுங் கருங்கலும் சிவந்தசாதி லிங்கமும்
செப்பிலும் தராவிலுஞ் சிவனிருப்ப னென்கிறீர்
உம்மத மறிந்துநீ ரும்மைநீ ரறிந்தபின்
அம்பலம் நிறைந்த ராடல்பாட லாகுமே. 36

## கிரியை நிலை

பூசைபூசை யென்றுநீர் பூசைசெய்யும் பேதைகாள்
பூசையுள்ள தன்னிலே பூசைகொண்ட தெவ்விடம்
ஆதிபூசை கொண்டதோ வநாதிபூசை கொண்டதோ
ஏதுபூசை கொண்டதோ வின்னதென் றியம்புமே. 37

## ஞான நிலை

இருக்கநாலு வேதமு மெழுத்தையற வோதிலும்
பெருக்கநீறு பூசினும் பிதற்றிலும் பிரானிரான்
உருக்கிநெஞ்சை யுட்கலந்து வுண்மைகூற வல்லிரேல்
சுருக்கமற்ற சோதியைத் தொடர்ந்து கூடலாகுமே. 38

## யோக நிலை

கலத்தின்வார்த்து வைத்தநீர் கடுத்ததீ முடுக்கினுல்
நிலத்திலே கரந்ததோ கடுத்ததீக் குடித்ததோ
கலத்திலே கரந்ததோ நீள்விசும்பு கொண்டதோ
மனத்தின்மாசை நீக்கியே மனத்துளே கரந்ததோ. 39

## சரியை நிலை

பறைச்சியாவ தேதடா பணத்தியாவ தேதடா
இறைச்சிதோ லெலும்பினு மிலக்கமிட் டிருக்குதோ
பறைச்சிபோகம் வேறதோ பணத்திபோகம் வேறதோ
பறைச்சியும் பணத்தியும் பகுத்துபாரு மும்முளே. 40

வாயிலே குடித்தநீரை யெச்சிலென்று சொல்கிறீர்
வாயிலே குதப்புவேத மெனப்படக் கடவதோ
வாயிலெச்சில் போகவென்றுநீர்தனைக் குடிப்பீர்காள்
வாயிலெச்சில் போனவண்ணம் வந்திருந்து சொல்லுமே.

ஓதுகின்ற வேதமெச்சி லுள்ளமந் திரங்களெச்சில்
மோதகங்க ளானதெச்சில் பூதலங்க ளேழுமெச்சில்
மாதிருந்த விந்துவெச்சில் மதியுமெச்சி லொளியுமெச்சில்
ஏதிலெச்சி லில்லதில்லை யில்லையில்லை யில்லையே. 42

உற்பத்தி

பிறப்பதற்கு முன்னெலா மிருக்குமாற தெங்ஙனே
பிறந்துமண் ணிறந்துபோ யிருக்குமாறு தெங்ஙனே
குறித்துநீர் சொலாவிடிற் குறிப்பில்லாத மாந்தரே
அறுப்பனே செவியிரண்டு மஞ்செழுத்து வாளினால். 43

ஞானம்

அம்பலத்தை யம்புகொண்ட சங்கென்றால் சங்குமோ
கம்பமற்ற பாற்கடல் கலங்கென்றால் கலங்குமோ
இன்பமற்ற யோகியை யிருளும்வந் தணுகுமோ
செம்பொ னம்பலத்துளே தெளிந்ததே சிவாயமே. 44

கடவுள் நிலை

சித்தமேது சிந்தையேது சிவனேது சித்தரே
சத்தியேது சம்புவேது சாதிபேத மற்றெது
முத்தியேது மூலமேது மூலமந் திரங்களேது
வித்திலாத வித்திலே யிதின்னதென் றியம்புமே. 45

ஒடுக்க நிலை

சித்தமற்று சிந்தையற்று சீவனற்று நின்றிடம்
சத்தியற்று சம்புவற்று சாதிபேத மற்றுநன்
முத்தியற்று மூலமற்று மூலமந்தி ரங்களும்
வித்தைவித்தை யீன்றவித்தில் விளைந்ததே சிவாயமே.

## கிரியை

சாதியாவ தேதடா சலந்திரண்ட நீரெலாம்
பூதவாச லொன்றலோ பூதமைந்து மொன்றலோ
காதில்வாளி காரைகம்பி பாடகம்பொ னொன்றலோ
சாதிபேத மோதுகின்ற தன்மையென்ன தன்மையே. 47

கறந்தபால் முலைப்புகா கடைந்தவெண்ணெய் மோர்புகா
உடைந்துபோன சங்கினோசை யுயிர்களு முடற்புகா
விரிந்தபூ வுதிர்ந்தகாயு மீண்டுபோய் மரம்புகா
இறந்தவர் பிறப்ப தில்லை யில்லையில்லை யில்லையே. 48

தரையினிற் கிடந்தபோ தன்றுதூமை யென்றிலீர்
துறையறிந்து நீர்குளித்த தன்றுதூமை யென்றிலீர்
பறையறிந்து நீர்பிறந்த தன்றுதூமை யென்றிலீர்
புரையிலாத வீசரோடு பொருந்துமாற தெங்ஙனே. 49

தூமைதூமை யென்றுளே துவண்டலையு மேழைகாள்
தூமையான பெண்ணிருக்க தூமைபோன தெவ்விடம்
ஆமைபோல் முழுகிவந் தனேகவேத மோதுறீர்
தூமையுந் திரண்டுருண்டு சொற்குருக்க ளானதே. 50

சொற்குருக்க ளானதும் சோதிமேனி யானதும்
மெய்க்குருக்க ளானதும் வேணபூசை செய்வதும்
சற்குருக்க ளானதும் சாத்திரங்கள் சொல்வதும்
மெய்க்குருக்க ளானதுந் திரண்டுருண்ட தூமையே. 51

கைவடங்கள் கொண்டுநீர் கண்சிமிட்டி நிற்கிறீர்
எவ்விடங்கள் கண்டுநீ ரெண்ணியெண்ணி பார்க்கிறீர்
பொய்யுணர்ந்த சிந்தையைப் பொருந்திநோக்கவல்லிரேல்
மெய்கடந்த துப்புளே விரைந்துகூற லாகுமே. 52

ஆடுகாட்டி வேங்கையை யகப்படுத்து மாறுபோல்
மாடுகாட்டி யென்னைநீ மதிமயக்க லாகுமோ
கோடுகாட்டி யானையைக் கொன்றுரித்த கொற்றவா
வீடுகாட்டி யென்னைநீ வெளிப்படுத்த வேணுமே. 53

இடதுகண்கள் சந்திரன் வலதுகண்கள் சூரியன்
இடக்கைசங்கு சக்கரம் வலக்கைசூல மான்மழு
எடுத்தபாதம் நீண்முடி யெண்டிசைக்கு மப்புறம்
உடல்கடந்து நின்றமாயம் யாவர்காண வல்லரே. 54

நாழியப்பும் நாழியுப்பும் நாழியான வாறுபோல்
ஆழியோனு மீசனு மமர்ந்துவாழ்ந் திருந்திடம்
ஏறிலேறு மீசனு மியங்குசக்ர தரனையும்
வேறுகூறுபேசுவார் வீழ்வர்வீ ணரகிலே. 55

தில்லைநா யகன்னவன் திருவரங் கனும்மவன்
எல்லையான புவன மூ மேகமூர்த்தி யானவன்
பல்லுநாவு முள்ளபேர் பகுந்துகூறி மகிழுவார்
வல்லபங்கள் பேசுவார் வாய்புகுந்து மாய்வரே. 56

எத்திசைக்கு மெவ்வுயிர்க்கு மெங்களப்ப னெம்பிரான்
முத்தியான வித்துளே முளைத்தெழுந் தவச்சுடர்
சித்தமுந் தெளிந்துவேத கோயிலுந் திறந்தபின்
அத்தனுடல் கண்டபின் னடங்கலாடல் காணுமே. 57

உற்றநூல்க ளும் முளே யுணர்ந்துணர்ந்து பாடுவீர்
பற்றறுத்து நின்றநீர் பராபரங்க ளெய்துவீர்
கொற்றமாவை யுள்ளுரைச் செருக்கறுத் திருத்திடில்
சுற்றமாக வும்முளே சோதியென்றும் வாழுமே. 58

போதடா வெழுந்ததும் புனலதாகி வந்ததும்
தாதடா புகுந்ததும் தானடா விளைந்ததும்
ஓதடா வஞ்சுமூன்று மொன்றதான வக்கரம்
ஓதடா விராமராம ராமவென்னும் நாமமே. 59

அகாரமென்ற வக்கரத்தி லவ்வுவந் துதித்ததோ
உகாரமென்ற வக்கரத்தி லுவ்வுவந் துதித்ததோ
அகாரமும் உகாரமுஞ் சிகாரமின்றி நின்றதோ
விகாரமற்ற யோகிகாள் விரித்துரைக்க வேணுமே. 60

அறத்திறங்க ளுக்குநீ யகண்டமென் டிசைக்கும்நீ
திறத்திறங்க ளுக்குநீ தேடுவார்கள் சிந்தைநீ
உறக்கம்நீ யுணர்வுநீ யுட்கலந்த ஜோதிநீ
மறக்கொணாத நின்கழல் மறப்பினுங் குடிகொளே. 61

அண்டம்நீ யகண்டம்நீ யாதிமூல மானநீ
கண்டம்நீ கருத்துநீ காவியங்க ளானநீ
புண்டரீக மற்றுளே புணருகின்ற புண்ணியர் [யே.
கொண்ட கோல மானநேர்மை கூர்மையென்ன கூர்மை

மையடர்ந்த கண்ணினால் மயங்கிடும் மயக்கிலே
ஐயிறந்து கொண்டுநீங்க ளல்லலற் றிருப்பீர்காள்
மெய்யடர்ந்த சிந்தையால் விளங்குஞான மெய்தினால்
உய்யடர்ந்து கொண்டுநீங்க ளூழிகாலம் வாழ்விரே. 63

கருவிருந்த வாசலாற் கலங்குகின்ற வூமைகாள்
குருவிருந்து சொன்னவார்த்தை குறித்துநோக்கவல்லிரே
உருவிலங்கு மேனியாகி யும்பராகி நின்றுநீர் [ல்
திருவிலங்கு மேனியாகிச் சென்றுகூட லாகுமே. 64

தீர்த்தமாட வேணுமென்று தேடுகின்ற தீனர்காள்
தீர்த்தமாட யெவ்விடந் தெரிந்துநீ ரியம்புவீர்
தீர்த்தமாட யெவ்விடந்தெரிந்துநீ ரறிந்தபின்
தீர்த்தமாக வுள்ளதுஞ் சிவாயவஞ் செழுத்துமே. 65

கழுத்தையும் நிமிர்த்திநல்ல கண்ணையும் விழித்துநீர்
பழுத்தவாய் விழுந்துபோன பாவமென்ன பாவமே
அழுத்தமான வித்திலே யனாதியா யிருப்பதோர்
எழுத்திலா வெழுத்திலே யிருக்கலா மிருந்துமே. 66

கண்டுநின்ற மாயையுங் கலந்துநின்ற பூதமும்
உண்டுறங்கு மாறுநீ ருணர்ந்திருக்க வல்லிரேல்
பண்டையாறு மொன்றுமாய் பயந்தவேத சுத்தனாய்
அண்டமுத்தி யாகிநின்ற வாதிமூல மூலமே. 67

ஈன்றவாச லுக்கிரங்கி யெண்ணிறந்து போவிர்காள்
கான்றவாழை மொட்டலர்ந்த காரண மறிகிலீர்
நான்றவாச லைத்திறந்து நாடிநோக்க வல்லிரேல்
தோன்றுமாயை விட்டொழிந்து சோதிவந்துதோன்றுமே

உழலூர்வாச லுக்கிரங்கி யூசலாடு மூமைகாள்
உழலும்வாச லைத்திறந்து வுண்மைசேர வெண்ணுவீர்
உழலும்வாச லைத்திறந்து வுண்மைநீ ருணர்ந்தபின்
உழலும்வாச லுள்ளிருந்த வுண்மைதானு மாவீரே. 69

மூலநாடி தன்னிலே முளைத்தெழுந்த சோதியை
நாலுநாழி யும்முளே நாடியே யிருந்தபின்
பாலனாகி வாழலாம் பறந்துபோக யாக்கையும்
ஆல முண்ட கண்டராணை யம்மையாணை யுண்மையே.

இருக்கவேணு மென்றபோ திருக்கலா யிருக்குமோ
மரிக்கவேணு மென்றலோ மண்ணுளே டைடத்தனர்
கருக்கமற்ற தம்பிரான் சொன்னவஞ் செழுத்தையும்
மரிக்குமுன் வணங்கிடீர் மருந்தெனப் பதங்கெடீர். 71

அம்பத்தொன்றி லக்கர மடங்கலோ ரெழுத்துமோ
விண்பரந்த மந்திரம் வேதநான்கு மொன்றலோ
விண்பரந்த மூலவஞ் செழுத்துளே முளைத்ததே
அங்கலிங்க பீடமா யமர்ந்ததே சிவாயமே. 72

சிவாயமென்ற வக்ஷரஞ் சிவனிருக்கு மக்ஷரம்
உபாமென்று நம்புதற் த உண்மையமன வக்ஷரம்
கபாடமற்ற வாயிலைக் கடந்துபோன வாயுவை
உபாயமிட் டழைக்குமே சிவாயவஞ் செழுத்துமே. 73

உருவுமல்ல வெளியுமல்ல வொன்றைமேவி நின்றதல்ல
மருவுவாசல் சொந்தமல்ல மற்றதல்ல வற்றதல்ல
பெரியதல்ல சிறியதல்த பேசலான தானுமல்ல
உரியதாகி நின்றநேர்மை யாவர்காண வல்லரே. 74

ஆத்துமா வனாதியோ வனாத்துமா வனாதியோ
பூத்திருந்த ஐம்பொறி புலன்களு மனாதியோ
தாக்கமிக்க நூல்களுஞ் சதாசிவ மனாதியோ
வீக்கவந்த யோகிகாள் விரைந்துரைக்க வேணுமே. 75

அறிவிலே பிறந்திருந் தாகமங்க ளோதுநீர்
நெறியிலே மயங்குகின்ற நேர்மையொன் றறிகிலீர்
உறியிலே தயிரிருக்க வூர்புகுந்து வெண்ணெய்தேடும்
அறிவிலாத மாந்தரோ டணுகுமாற தெங்ஙனே. 76

இருவரங்க மும்பொருந்தி யென்புருகி நோக்கிலீர்
உருவரங்க மாகிநின்ற வுண்மையொன்றை யோர்கிலீர்
கருவரங்க மாகிநின்ற கற்பனை கடந்தபின்
திருவரங்க மென்றுநீர் தெரிந்திருக்க வல்லிரே. 77

கருக்குழியி லாசையாய்க் காதலுற்று நிற்கிறீர்
குருக்கிடுக்கு மேழைகாள் குலாவுகின்ற பாவிகாள்
திருத்திருத்தி மெய்யினாற் சிவந்தவஞ் செழுத்தையும்
உருக்கழிக்கு மும்மையு முணர்ந்துணர்ந்து கொள்ளுதே.

மண்ணிலே பிறக்கவும் வழக்கலா துரைக்கவும்
எண்ணிலாத கோடிதேவ ரென்னதுன்ன தென்னவும்
கண்ணிலே கண்மணியிருக்க கண்மறைந்த வாறுபோல்
எண்ணில்கோடி தேவரு மிதன்கணால் விழிப்பதே. 79

மண்கலங் கவர்ந்தபோது வைத்துவைத் தடுக்குவார்
வெண்கலங் கவர்ந்தபோது நாறுமென்று பேணுவார்
நண்கலங் கவர்ந்தபோது நாறுமென்று போடுவார்
எண்கலந்து நின்றமாய மென்னமாய மீசனே. 80

மிக்கசெல்வ நீபடைத்த விறகுமேவிப் பாவிகாள்
விறகுடன் கொளுத்துமேனி வெந்துபோவ தறிகிலீர் [ம்
மக்கள்பெண்டிர் சுற்றமென்னுமாயை காணுமிவையெலா
றலிவந் தழைத்தபோது வந்துகூட லாகுமோ. 81

ஒக்கவந்து மாதுடன் செறிந்திடத்தி லழகியே
ஒருவராகி யிருவராகி இளமைபெற்ற வூரிலே
அக்கணிந்து கொன்றைசூடு மம்பலத்தி லாடுவார்
அஞ்செழுத்தை யோதிடி லனேகபாவ மகலுமே. 82

மாடுகன்று செல்வமு மனைவிமைந்தர் மகிழவே
மாடமாளி கைப்புறத்தில் வாழுகின்ற நாளிலே
ஓடிவந்து காலதூதர் சடுதியாக மோதவே
உடல்கிடந்துயிர் கழன்ற வுண்மைகண் டுமுணர்கிலீர். 83

பாடுகின்ற தும்பருக்கும் நங்களுக் களுக்கியே
பழுதிலாத கண்மகூட்ட மிட்டவெங்கள் பரமனே
திதிற்செம்பொ னம்பலத்து ளாடுகொண்ட வப்பனே
நிலகண்ட காலகண்ட நித்தியகல்வி யாணனே. 84

கானமற்ற காட்டகத்தில் வெந்தெழுந்த நீறுபோல்
ஞானமற்ற நெஞ்சகத்தில் நல்லதேது மில்லையே
ஊனமற்ற சோதியோ டுணர்வுசேர்ந் தடக்கினல்
தேனகத்தி னூறல்போல் தெளிந்ததே சிவாயமே. 85

பருகியோடி யும்முளே பறந்துவந்த வெளிதனை
நிருவியே நினைத்துபார்க்கில் நின்மலம தாகுமே
உருகியோடி யெங்குமாய் உதயசோதி தன்னுமே
கருதடா வுனக்குநல்ல காரணம தாகுமே 86

சோதியாதி யாகிநின்ற சுத்தமும் பலித்துவந்து
போதியாத போதகத்தை யோதுகின்ற பூரணு
விதியாக வோடிவந்து விண்ணடியி னூடுபோய்
ஆதிநாத ளுதனென் றனந்தால முள்ளதே. 87

இறைவனு லெடுத்தமாடத் தில்லையம்ப லத்திலே
அறிவினு லடுத்தகாய மஞ்சினு லமர்ந்ததே
கருவில்நாத முண்டுபோய் கழன்றவாச லொன்பதும்
ஒருவரா யொருவர்கோடி யுள்ளுளே யமர்ந்ததே. 88

நெஞ்சிலே யிருந்திருந்து நெருங்கியோடு வாயுவை
அன்பினு லிருந்துநீ ரருகிருத்த வல்லிரேல்
அன்பர்கோயில் காணலா மகன்றுமெண் டிசைக்குளே
தும்மியோடி யோடியே சொல்லடா சுவாமியே. 89

தில்லையை வணங்கிநின்று தெண்டனிட்ட வாயுவை
எல்லையைக் கடந்துநின்று ஏகபோக மாய்கையோ
டெல்லையைக் கடந்துநின்று சொர்க்கலோக வெளியிலே
வெள்ளையும் சிவப்புமாகி மெய்கலந்து நின்றதே. 90

உடம்புயி ரெடுத்ததோ வுயிருடம் பெடுத்ததோ
உடம்புயி ரெடுத்தபோ துருவமேது செப்புவீர்
உடம்புயி ரிறந்தபோ துயிரிறப்ப தில்லையே
உடம்புமெய்ம் மறந்துகண் டுணர்ந்துஞான மோதுமே.

அவ்வெனு மெழுத்தினு லகண்டமேழு மாகினுய்
உவ்வெனு மெழுத்தினு லுருத்தரித்து நின்றனை
மவ்வெனு மெழுத்தினுல் மயங்கினுர்கள் வையகம்
அவ்வுமுவ்வு மவ்வுமா யமர்ந்ததே சிவாயமே. 92

மந்திரங்க ளுண்டுநீர் மயங்குகின்ற மானிடர்
மந்திரங்க ளாவது மறத்திலூற லன்றுகாண்
மந்திரங்க ளாவது மதத்தெழுந்த வாயுவை
மந்திரத்தை யுண்டவர்க்கு மானமேது மில்லையே. 93

என்னவென்று சொல்லுவே னிலக்கண மிலாததைப்
பன்னுகின்ற செந்தமிழ்ப் பதங்கடந்த பண்பென
மின்னகத்தில் மின்னொடுங்கி மின்னதான வாறுபோல்
என்னகத்து ளீசனும் யானுமல்ல தில்லையே. 94

ஆலவித்தி லாலொடுங்கி யாலமான வாறுபோல்
வேறுவித்து மின்றியே ருளைந்துபோக மெய்திடீர்
ஆறுவித்தை யோர்கிலீ ரறிவிலாத மாந்தரே
பாருமித்தை யும்முளே பரப்பிரம்ம மானதே. 95

அவ்வுதித்த மந்திரம் மகாரமாய் உகாரமாய்
எவ்வெழுத் தறிந்தவர்க் கெழுபிறப்ப திங்கிலை
சவ்வுதித்த மந்திரத்தை தற்பரத் திருத்தினல்
அவ்வுமவ்வு மவ்வுமா யமர்ந்ததே சிவாயமே. 96

நவ்விரண்டு காலமாய் நவின்றமவ் வயிறதாய்
சிவ்விரண்டு தோளதாய் சிறந்தவவ்வு வாயதாய்
யவ்விரண்டு கண்ணதா யெழுந்துநின்ற நேர்மையிற்
செவ்வையொத்து நின்றதே சிவாயமஞ் செழுத்துமே. 97

இரண்டுமொன்று மூலமா யியங்குசக் கரத்துளே
சுருண்டுமூன்று வளையமாய் சுணங்குபோற் கிடந்ததீ
முரண்டெழுந்த சங்கினைசை மூலநாடி யூடுபோய்
அரங்கன் பட்டணத்திலே யமர்ந்ததே சிவாயமே. 98

கடலிலே திரியுமாமை கரையிலேறி முட்டையிட்டுக்
கடலிலே திரிந்தபோது ரூபமான வாறுபோல
மடலுளே யிருக்குமெங்கள் மணியரங்க சோதியை
உடலுளே நினைந்துநல்ல வுண்மையான துண்மையே.

மூன்றுமண்ட லத்தினு முட்டிநின்ற தூணிலும்
நான்றபாம் பின் வாயிலும் நவின்றெழுந்த வட்சரம்
ஈன்றதாயுமப்பரு மெடுத்துரைத்த மந்திரம்
தோன்றுமோ ரெழுத்துளே சொல்லவெங்குமில்லையே.

மூன்றுமூன்று மூன்றுமே மூவர்தேவர் தேடிடும்
மூன்றுமஞ் செழுத்துமாய் முழங்குமவ் வெழுத்துளே
ஈன்றதாயு மப்பரு மியங்குகின்ற நாதமும்
தோன்றுமண்டலத்திலே சொல்லவெங்குமில்லையே. 101

சோறுகின்ற பூதம்போற் சுணங்குபோற் கிடந்தநீர்
நாறுகின்ற கும்பியி னவின்றெழுந்த மூடரே
சீறுகின்ற வைவரைச் சிணுக்கறுக்க வல்லிரேல்
ஆறுகோடி வேணியா ராறிலொன்றி லாவிரே. 102

வட்டமென்று நும்முளே மயக்கிவிட்ட திவ்வெளி
அட்டவக் கரத்துளே யடக்கமு மொடுக்கமும்
எட்டுமெட்டு மெட்டுமா யியங்குசக் கரத்துளே
எட்டலாமு தித்தெம்பி ரானைநா னறிந்தபின். 103

பேசுவானு மீசனே பிரமஞான மும்முளே
ஆசையான வைவரு மலைந்தலைகள் செய்கிறார்
ஆசையான வைவரை யடக்கியோ ரெழுத்திலே
பேசிடா திருப்பரேல் நாதம்வந் தொலிக்குமே. 104

நமசிவாய வஞ்செழுத்தும் நல்குமேல் நிலைகளும்
நமசிவாய வஞ்சுமஞ்சும் புராணமான மாயையும்
நமசிவாய மஞ்செழுத்தும் நம்முளே யிருக்கவே
நமசிவாய வுண்மையை நன்குரைசெய் நாதனே. 105

பரமுனக் கெனக்குவேறு பயமிலை பராபரா
கரமெடுத்து நிற்றலுங் குவித்திடக் கடவதும்
சிரமுருகி யமுதளித்த சீருலாவு நாதனே
உரமெனக்கு நீயளித்த ஓம் நமசி வாயனே. 106

பச்சைமண் பதுப்பிலே பழுப்பதிந்த வேட்டுவன்
நித்தமும் நினைத்திட நினைந்தவண்ண மாயிடும்
பச்சைமண் ணிடிந்துபோய் பரந்ததும்பி யாயிடும்
பித்தர்கா ளறிந்துகொள்க பிரானிருந்த கோலமே. 107

ஒளியதான காசிமீது வந்துதங்கு வோர்க்கெலாம்
வெளியதான சோதிமேனி விசுவநாத னானவன்
தெளியுமங்கை யுடனிருந்து செப்புகின்ற தாரகம்
வெளியதோரி ராமராம ராமமிர்த நாமமே. 108

விழியினோடு புனல்விளைந்த வில்லவல்லி யோனியும்
வெளியிலே பிதற்றலாம் விளைவு நின்ற தில்லையே
வெளிபரந்த தேகமும் வெளிக்குள் மூலவித்தையும்
தெளியும்வல்ல ஞானிகள் தெளிந்திருத்தல் திண்ணமே.

ஓம்நமசி வாயமே யுணர்ந்துமெய் யுணர்ந்தபின்
ஓம்நமசி வாயமே யுணர்ந்துமெய் தெளிந்தபின்
ஓம்நமசி வாயமே யுணர்ந்துமெய் யுணர்ந்தபின்
ஓம்நமசி வாயமே யுட்கலந்து நிற்குமே. 110

அல்லல்வாச லொன்பது மறுத்தடைந்த வாசலும்
சொல்லுவாச லோரைந்தும் சொம்மிவிம்மி நின்றதும்
நல்லவாச லைத்திறந்து ஞானவாச லூடுபோய்
எல்லைவாசல் கண்டவ ரினிப்பிறப்ப தில்லையே. 111

ஆதியான தொன்றுமே யனேகனேக ரூபமாய்
சாதிபேத மாயெழுந்து சர்வசீவ னானபின்
ஆவியோடு ஆடுகின்ற மீண்டுமிந்த சென்மமாம்
சோதியான ஞானியர்க்குஞ் சுத்தமா யிருப்பரே. 112

மலர்ந்ததாது மூலமாய் வையக மலர்ந்ததும்
மலர்ந்தபூ மயக்கம்வந் தடுத்ததும் விடுத்ததும்
புலன்களைந்தும் பொறிகலங்கி பூமிமேல் விழுந்ததும்
இலங்கலங்கி நின்றமாய மென்னமாய மீசனே. 113

பாரடங்க வுள்ளதும் பரந்தவான முள்ளதும்
ஓரிடமு மன்றியே யொன்றிநின்ற வொண்சுடர்
ஆரிடமு மன்றியே யகத்துளும் புறத்துளும்
சீரிடங்கள் கண்டவர் சிவன்தெரிந்த ஞானியே. 114

மண்கிடார மேசுமந்து மலையுளேறி மறுகுறீர்
எண்படாத காரியங்க ளியலுமென்று கூறுவீர்
தம்பிரானை நாள்கடோறுந் தரையிலே தலைபடக்
கும்பிடாத மாந்தரோடு கூடிவாழ்வ தெங்ஙனே. 115

நாவிதூ ளழிந்ததும் நலங்குல மழிந்ததும்
மேவுதே ரழிந்ததும் விசாரமுங் குறைந்ததும்
பாவிகா ளிதென்னமாயம் வாமநாடு பூசலாய்
ஆவியா ரடங்கினா லவரு மடங்குவார். 116

வீடெடுத்து வேள்விசெய்து மெய்யரோடு பொய்யுமா
மாடுமக்கள் பெண்டிர்சுற்ற மென்றிருக்கு மாந்தர்காள்
நாடுபெற்ற நண்பர்கையி லோலைவந் தழைத்தபோது
ஆடுபெற்ற தவ்விலை பெருதுகாணு மிவ்வுடல். 117

இல்லைஇல்லை இல்லையென் றியம்புகின்ற வேழைகாள்
இல்லையென்றுநின்றதொன்றை அல்லையென்னலாகுமோ
இல்லையல்ல வொன்றுமல்ல விரண்டுமொன்றி நின்றதை
எல்லைகண்டு கொண்டபே ரினிப்பிறப்ப தில்லையே. 118

காரகார காரகார காவலூழி காவலன்
போரபோர போரபோர போரில்நின்ற புண்ணியன்
மாரமார மாரமார மரங்களேழு மெய்தசீ
ராமராம ராமராம ராமவென்னும் நாமமே. 119

நீடுபாரி லேபிறந்து நேயமான மாயந்தான்
வீடுபேரி தென்றபோது வேண்டியின்பம் வேண்டுமோ
பாடிநாலு வேதமும் பாரிலே படர்ந்தவோ
நாடுராம ராமராம ராமவென்னு நாமமே. 120

உயிருநன்மை யாலுட லெடுத்துவந் திருந்திடும்
உயிருடம்பொ ழிந்தபோதில் ரூபரூப மாயிடும் [ன்றிடும்
உயிர்சிவத் தின்மாய்கையாகியொன் றையொன்றைக்கொ
உயிரும்சத்தி மாய்கை பாகி ஒன்றையொன்று தின்னுமே.

நெட்டெழுத்து வட்டமோ நிறைந்த வல்லியோனியும்
நெட்டெழுத்தில் வட்டம்ஒன்று நின்றதொன்றுகண்டிலே
குட்டெழுத்தி லுற்றதென்று கொம்புகால் குறித்திடில்[ன்
நெட்டெழுத்தில் வட்டமொன்றில் நேர்படானம்மீசனே.

விண்ணிலுள்ள தேவர்க ளறியொணுத மெய்ப்பொருள்
கண்ணிலாணி யாகவே கலந்துநின்ற தெம்பிரான்
மண்ணிலாம் பிறப்பறுத்து மலரடிகள் வைத்தபின்
அண்ணலாரு மெம்முளே யமர்ந்து வாழ்வ துண்மையே.

விண்கடந்து நின்றசோதி மேலைவாச லைத்திறந்து
கண்களிக்க வுள்ளூளே கலந்துபுக் கிருந்தபின்
மண்பிறந்த மாயமும் மயக்கமு மறந்துபோய்
எண்கலந்த வீசனோ டிசைந்திருப்ப துண்மையே. 124

மூலமான மூச்சத்தில் மூச்சறிந்து விட்டபின்
நாலுநாளு மூன்னிலோரு நாட்டமாகி நாட்டிடில்
பாலனாகி நீடலாம் பரப்பிரம மாகலாம்
ஆலமுண்ட கண்டராணை யம்மையாணை யுண்மையே.

மின்னெழுந்து மின்பரந்து மின்னொடுங்கும் வாறுபோல், என்னுள்நின்ற வென்னுளீச னென்னுளே யடங்குமே, கண்ணுள்நின்ற கண்ணில்நேர் மைகண்டறி விலாமையால், என்னுள்நின்ற வென்னையன்றி யானறிந்த தில்லையே. 126

இருக்கலா மிருக்கலா மவனிலே யிருக்கலாம்
அரிக்குமால் பிரமனு மகண்ட மே ழகற்றலாம்
கருக்கொளாத குழியிலே காலிலாத கண்ணிலே
நெருப்பறை திறந்தபின்பு நீயுநானு மீசனே. 127

ஏகபோக மாகியே யிருவரு மொருவராய்
போகமும் புணர்ச்சியும் பொருந்துமாற தெங்ஙனே
ஆகலு மழிதலு மதன்கணேய தானபின்
சாகலும் பிறக்கலு மில்லையல்லை யில்லையே. 128

வேதனாலு பூதமாய் விரவுமங்கி நீரதாய்ப்
பாதமேவி லிங்கமாய்ப் பரிந்துபூசை பண்ணினால்
காதில்நின்று கடைதிறந்து கட்டறுத்து ஞானிகள்
ஆதியந்த மூங்கடந்த தரியவீட தாகுமே. 129

பருத்திநூல் முறுக்கியிட்டு பஞ்சியோது மாந்தரே
கருத்திநூல் முறுக்கியிட்டு துன்பநீங்க வல்லிரேல்
கருத்திநூல் கலைப்படுங் காலநூல் கழிந்திடும்
திருத்திநூல் காவருஞ் சிவாயவஞ் செழுத்துமே. 130

சாவதான தத்துவச் சடங்குசெய்யு மூமைகாள்
தேவர்கல்லு மாவரோ சிரிப்பதன்றி என்செய்வேன்
மூவராலு மறியொணாத முக்கணன் முதற்கொழுந்து
காவலாக வும்முளே கலந்திருப்பன் காணுமே. 131

காலைமாலை நீரிலே முழுகுமந்த மூடர்காள்
காலைமாலை நீரிலே கிடந்ததேரை யென்பெறும்
காலமே யெழுந்திருந்து கண்கள் மூன்று லொன்றினால்
மூலமே நினைந்திராகில் முத்திசித்தி யாகுமே 132

எங்கள்தேவ ருங்கள்தேவ ரென்றிரண்டு தேவரோ
அங்குமிங்கு மாகிநின்ற வாதிமூர்த்தி யொன்றலோ
அங்குமிங்கு மாகிநின்ற வாதிமூர்த்தி யொன்றெனில்
வங்கவாரஞ் சொன்னபேர்கள் வாய்ப்புழுத்து மாள்வரே.

அறையறை யிடைக்கிடந்த வன்றுதூமை என்கிறீர்
முறையறிந்து பிறந்தபோது மன்றுதூமை என்கிறீர்
துறையறிந்து நீர்குளித்தா லன்றுதூமை யென்கிறீர்
பொறையிலாத நீசரோடும் பொருந்துமாற தெங்ஙனே.

சத்தம்வந்த வெளியிலே சலமிருந்து வந்ததும்
சுத்தமாக நீரிலே துவண்டுமூழ்கு மூடரே
சுத்தமேது கட்டதேது தூய்மைகண்டு நின்றதேது
பித்தகாய முற்றதேது பேதமேது போதமே. 135

மாதமாதந் தூமைதான் மறந்துபோன தூமைதான்
மாதமற்று நின்றலோ வளர்ந்துரூப மானது
நாதமேது வேதமேத நற்குலங்களேதடா
வேதமோதும் வேதியர் விளைந்தவாறும் பேசடா. 136

தூமையற்று நின்றலோ சுதீபமுற்று நின்றது
தாண்மையற்று வாண்மையற்று சஞ்சலங்க ளற்றுநின்ற
ஆண்மையற்று நின்றலோ வழக்கமற்று நின்றது
தூமைதூமை யற்றகாலம் சொல்லுமற்று நின்றதே. 137

ஊறிநின்ற தூமையை யுறைந்துநின்ற சீவனை
வேறுபேசி மூடரே விளைந்தவாறு தேதடா
நாறுகின்ற தூமையல்லோ நற்குலங்க ளாவன
சீறுகின்ற மூடனேயத் தூமைநின்ற கோலமே. 138

தீமைகண்டு நின்றபெண்ணின் தூமைதானு மூடியே
சீமையெங்கு மாணும்பெண்ணும் சேர்ந்துலகங்கண்டதே
தூமைதானும் ஆசையாய் துறந்திருந்த சீவனை
தூமையற்று கொண்டிருந்த தேசமேது தேசமே. 139

வேணும்வேணு மென்றுநீர் வீணுழன்று தேடுவீர்
வேணுமென்று தேடிநாலு முன்னதல்ல தில்லையே
வேணுமென்று தேடுகின்ற வேட்கையைத் துறந்தபின்
வேணுமென்ற வப்பொருள் விரைந்துகாண லாகுமே.

சிட்டரோது வேதமும் சிறந்தவாக மங்களும்
நட்டகார ணங்களும் நவின்றமெய்ம்மை நூல்களும்
கட்டிவைத்த போதகங் கதைக்குகந்த பித்தெலாம்
பெட்டதாய் முடிந்ததே பிராணையா னறிந்தபின். 141

நூறுகோடி யாகமங்கள் நூறுகோடி மந்திரம்
நூறுகோடி நாளிருந்து மோதினால தென்பயன்
ஆறுமாறு மாறுமா யகத்திலோ ரெழுத்துமாய்
ஏறுசீ ரெழுத்தையோத வீசன் வந்துபேசுமே. 142

காலைமாலை தம்மிலே கலந்துநின்ற காலனார்
மாலைகாலை யாய்ச்சிவந்த மாயமேது செப்பிடீர்
காலைமாலை யற்றுநீர் கருத்திலே யொடுங்கினால்
காலைமாலை யாகிநின்ற காலனில்லை யில்லையே. 149

எட்டுமண்டலத்துளே யிரண்டுமண்ட லம்வளைத்து
இட்டமண்டலத்திலே யெண்ணிபாறு மண்டலம்
தொட்டமண்ட லத்திலே தோன்றிமூன்று மண்டலம்
நட்டமண்ட லத்திலே நாதனாடி நின்றதே. 144

நாலிரண்டு மண்டலத்துள் நாதனின்ற தெவ்விடம்
காலிரண்டு மூலநாடி கண்டதுங் குருத்திரன்
சேலிரண்டு கண்கலந்து திசைகளெட்டு மூடியே
மேலிரண்டு தான்கலந்து வீசியாடி நின்றதே. 145

அம்மையப்ப னுப்புநீ யறிந்ததே யறிகிலீர்
அம்மையப்ப னுப்புநீ யரியய னரனுமாய்
அம்மையப்ப னுப்புநீ ராதியாதி யானபின்
அம்மையப்ப னின்னையன்றி யாருமில்லை யானதே. 146

உருத்தரிப்ப தற்குமுன் னுடன்கலந்த தெங்ஙனே
கருத்தரிப்ப தற்குமுன் காரணங்க ளெங்ஙனே
பொருத்திவைத்த போதமும் பொருந்துமாற தெங்ஙனே
குருத்திருத்திவைத்தசொல் குறித்துணர்ந்துகொள்ளுமே.

ஆதியுண்டு அந்தமில்லை யன்றுநாலு வேதமில்லை
சோதியுண்டு சொல்லுமில்லை சொல்லிறந்த தேதுமில்லை
ஆதியான மூவரி லமர்ந்திருந்த வாயுவும்
ஆதியன்று தன்னையும் ஆரறிவ ரண்ணலே. 148

புலால்புலால் புலாலதென்று பேதைமைகள் பேசுறீர்
புலாலைவிட்டு வெம்பிரான் பிரிந்திருந்த தெங்ஙனே
புலாலுமாய் பிதற்றுமாய் பேருலாவுந் தானுமாய்
புலாலிலே முளைத்தெழுந்த பித்தன்காணு மத்தனே. 149

உதிரமான பால்குடித் தொக்கநீர் வளர்ந்ததும்
இதரமா யிருந்ததொன் றிரண்டுபட்ட தென்னலாம்
மதிரமாக விட்டதேது மாங்கிசம் புலாலதென்று
சதிரமாய் வளர்த்ததேது சைவரான மூடரே. 150

உண்டகல்லை யெச்சிலென் றுள்ளெறிந்து போடுறீர்
கண்டவெச்சில் கையலோ பரமனுக்கும் வேறுமா
கண்டவெச்சில் கேளடா கலந்தபாணி யப்பிலே
கொண்டசுத்த மேதடா குறிப்பிலாத மூடரே. 151

ஓதிவைத்த நூல்களு முணர்ந்துகற்ற கல்வியும்
மாதுமக்கள் சுற்றமு மறக்கவந்த நித்திரை
ஏதுபுக் கொளித்ததோ வெங்குமாதி நின்றதோ
சோதிபுக் கொளித்தமாயம் சொல்லடா சுவாமியே. 152

ஈணொருமையின் கழுத்தி லிட்டபொட்ட ணங்கள்போல்
மூணுநாலு சீலையில் முடிந்தவிழ்க்கு மூடர்காள்
மூணுநாலு லோகமு முடிவிலாத மூர்த்தியை
ஊணியூணி நீர்முடிந்த வுண்மையென்ன வுண்மையே.

சாவல்நாலும் குஞ்சதஞ்சு தாயதான வாறுபோல்
காவலான கூட்டிலே கலந்துசண் டை கொள்ளுதே
கூவமான கிழநரியக் கூட்டிலே புதந்தபின்
சாவல்நாலு குஞ்சதஞ்சுந் தானிறந்து போனதே. 154

மூலமாங் குளத்திலே முளைத்தெழுந்த கோரையை
காலமே யெழுந்திருந்து நாலுகட் டறுப்பிரேல்
பாலனாகி வாழலாம் பரப்பிரம்ம மாகலாம்
ஆலமுண்ட கண்டர்பாத மம்மைபாத முண்மையே 155

செம்பினிற் களிம்புவந்த சீதரங்கள் போலவே
அம்பினி லெழுதொணாத வணியரங்க சோதியை
வெம்பிவெம்பி வெம்பியே மெலிந்துமேல் கலங்கிட
செம்பினிற் களிம்புவிட்ட சேதியேது காணுமே. 156

நாடிநாடி யும்முளே நயந்துகாண வல்லிரேல்
ஓடியோடி மீளுவா ரும்முளே யடங்கிடும்
தேடிவந்த காலனும் திகைத்திருந்து போய்விடும்
கோடிகால மும்முகந் திருந்தவாற தெங்ஙனே. 157

பிணங்குகின்ற தேதடா பிரக்ஞைகெட்ட மூடரே
பிணங்கிலாத பேரொளிப் பிராணனை யறிகிலீர்
பிணங்குமோ ரிருவினை பிணக்கறுக்க வல்லிரேல்
பிணங்கிலாத பெரியவின்பம் பெற்றிருக்க லாகுமே. 158

மீனிறைச்சி தின்றதில்லை யன்றுமின்றும் வேதியர்
மீனிருக்கு நீரலவோ மூழ்வதுங் குடிப்பதும்
மானிறைச்சி தின்றதில்லை யன்றுமின்றும் வேதியர்
மானுரித்த தோலலோ மார்புநூ லணிவதும். 159

ஆட்டிறைச்சி தின்றதில்லை யன்றுமின்றும் வேதியர்
ஆட்டிறைச்சி யல்லவோ யாகம்நீங்க ளாற்றலே
மாட்டிறைச்சி தின்றதில்லை யன்றுமின்றும் வேதியர்
மாட்டிறைச்சி யல்லவோ மரக்கறிக் கிடுவது. 160

அக்கிடீ ரனைத்துயிர்க்கு மாதியாகி நிற்பது
முக்கிடீ ருமைப்பிடித்து முத்தரித்து விட்டது
மைக்கிடீர் பிறந்திறந்து மாண்டுமாண்டு போவ
மொக்கிடீ ருமக்குநா னுணர்த்துவித்த துண்மையே. 161

ஐயன்வந்து மெய்யகம் புகுந்தவாற தெங்ஙனே
செய்யதிங்க ளங்குரும்பை நீர்புகுந்த வண்ணமே
ஐயன்வந்து மெய்யகம் புகுந்துகோயில் கொண்டபின்
வையகத்தில் மாந்தரோடு வாய்திறப்ப தில்லையே. 162

நவ்வுமவ்வை யுங்கடந்து நாடொறுஞ்சி யின்மேல்
வவ்வுயவ்வு ளுஞ்சிறந்த வண்மைஞான போதகம்
ஒவ்வுசுத்தி யுண்ணிறைந்த துச்சியூ டுருவியே
இவ்வகை யறிந்தபேர்க ளீசனாணை யீசனே. 163

அக்கர மனாதியோ வாத்தும மனாதியோ
புக்கிருந்த பூதமும் புலன்களு மனாதியோ
தக்கமிக்க நூல்களும் சாத்திர மனாதியோ
தற்பரத்தை யூடறுத்த சற்குரு வனாதியோ. 164

பார்த்ததேது பார்த்திடில் பார்வையூ டழிந்திடும்
கூர்த்ததா யிருப்பிரேல் குறிப்பிலாச் சிவமதாம்
பார்த்தபார்த்த போதெலாம் பார்வையு மிகந்துநீர்
பூத்தபூவுங் காயுமாய்ப் பொருந்துவீர் பிறப்பிலே. 165

நெத்திபத்தி யுழலுகின்ற நீலமா விளக்கினைப்
பத்தியொத்தி நின்றுநின்று பற்றறுத்த தென்பலன்
உற்றிருந்து பாரடா வுள்ளொளிக்கு மேலொளி
அத்தனு யமர்ந்திட மறிந்தவன்ன ஞதியோ. 166

நீரையள்ளி நீரில்விட்டு நீர்நினைந்த காரியம்
ஆரையுன்னி நீரெலா மவத்திலே யிறைக்கிறீர்
வேரையுன்னி வித்தையுன்னி வித்திலேமுளைத் தெழுந்த
சீரையுன்ன வல்லிரேல் சிவபதங்கள் சேரலாம். 167

நெற்றியிற் றயங்குகின்ற நீலமாம் விளக்கினை
யுய்த்துணர்ந்து பாரடா வுள்ளிருந்த சோதியைப்
பத்தியிற் றொடர்ந்தவர் பரமயம தானவர்
அத்தலத் திருந்தபேர்க ளவரெனக்கு நாதரே. 168

கருத்தரிக்கு முன்னெலாங் காயம்நின்ற தெவ்விடம்
உருத்தரிக்கு முன்னெலா முயிர்ப்புநின்ற தெவ்விடம்
அருட்டரிக்கு முன்னெலா மாசைநின்றதெவ்விடம்
திருக்கறுத்து கொண்டதோ சிவாய மென்றுகூறுவீர். 169

கருத்தரிக்கு முன்னெலாங் காயம் நின்ற தேயுவில்
உருத்தரிக்கு முன்னெலா முயிர்ப்புநின்ற தப்புவில்
அருட்டரிக்கு முன்னலொ மாசைநின்ற வாயுவில்
திருக்கறுத்து கொண்டதே சிவாயமென்று கூறுமே. 170

தாதரான தாதருந் தலத்தினுள் ளைசவரும்
கூதரைப் பறைச்சிமக்கள் கூடிசெய்த காரியம்
வீதிபோகு ஞானியை விரைந்துகல் லெறிந்ததும்
பாதகங்க ளாகவே பலித்ததே சிவாயமே. 171

ஓடியோடி பாவிழைத் துள்ளங்கால் வெளுத்ததும்
பாவியான பூனைவந்து பாலிலே குதித்ததும்
பணிக்கன்வந்து பார்த்ததும் பாரமில்லை யென்றதும்
இழையறுந்து போனதும் என்னமாய மீசனே. 172

சதுரம்நாலு மறையுமிட்டு தானதங்கி மூன்றுமே
எதிரதான வாயுவாறு எண்ணும்வட்ட மேவியே
உதிரந்தான் வரைகளெட்டு மெண்ணுமென் சிரசின்மேல்
கதிரதான காயத்தில் கலந்தெழுந்த நாதமே. 173

நாலொடாறு பத்துமேல் நாலுமூன்று மிட்டபின்
மேலுபத்து மாறுடன் மேதிரண்ட தொன்றுமே
கோலியஞ் செழுத்துளே குருவிருந்து கூறிடில்
தோலுமேனி நாதமாய்த் தோற்றிநின்ற கோசமே. 174

கோசமா யெழுந்ததுங் கூடுருவி நின்றதும்
தேசமாய்ப் பிறந்ததும் சிவாயமஞ் செழுத்துமே
ஈசனு ரிருந்திடம் அனேகனேக மந்திரம்
ஆசனம் நிறைந்துநின்ற வைம்பத்தோ ரெழுத்துமே.

அங்கலிங்க பீடமா வையிரண் டெழுத்திலும்
பொங்குதா மரையினும் பொருந்துவா ரகத்தினும்
பங்குகொண்ட சோதியும் பரந்தவஞ் செழுத்துமே
சிங்கநாத வோசையுஞ் சிவாயமல்ல தில்லையே. 176

உவமையில்லாப் பேரொளிக்கு ளுருவமான தெவ்விடம்
உவமையாகி யண்டத்து ளுருவிநின்ற தெவ்விடம்
தவமதான பரமனார் தரித்துநின்ற தெவ்விடம்
தற்பரத்தில் ஜலம்பிறந்து தங்கிநின்ற தெவ்விடம். 177

சுகமதாக வெருதுமூன்று கன்றையீன்ற தெவ்விடம்
சொல்லுகீழு லோகமேழும் நின்றவாற தெவ்விடம்
அளவதான மேருவும் அமைவதான தெவ்விடம்
அவனுமவளு மாடலா லருஞ்சீவன் பிறந்ததே. 178

உதிக்குமென்ற தெவ்விட மொடுங்குகின்ற தெவ்விடம்
கதிக்குநின்ற தெவ்விடங் கண்ணுறக்க மெவ்விடம்
மதிக்கநின்ற தெவ்விட மதிமயக்க மெவ்விடம்
விதிக்கவல்ல ஞானிகாள் விரித்துரைக்க வேணுமே. 179

திரும்பியாடு வாசலெட்டு திறமுரைத்த வாசலெட்டு
மருங்கிலாத கோலமெட்டு வன்னியாடு வாசலெட்டு
துரும்பிலாத கோலமெட்டு சுத்திவந்த மருளரே
அரும்பிலாத பூவுமுண் டையனாணை யுண்மையே. 180

நானிருந்து மூலவங்கி தணலெழும்பி வாயுவால்
தேனிருந்து வரைதிறந்து தித்தியொன்று மொத்ததே
வானிருந்த மதியமூன்று மண்டலம் புகுந்தபின்
ஊனிருந்த தளவுகொண்ட யோகிநல்ல யோகியே. 181

முத்தனைய் நினைந்தபோது முடிந்தவண்டத் துச்சிமேல்
பத்தனாரு மம்மையும் பரிந்துவாட லாடினார்
சித்தரான ஞானிகாள் தில்லையாட லென்பிர்காள்
அத்தனாட லுற்றபோ தடங்கலாட லுற்றதே. 182

ஒன்றுமொன்று மொன்றுமே வுலகனைத்து மொன்றுமே
அன்றுமின்று மொன்றுமே யனாதியான தொன்றுமே
கன்றல்நின்ற செம்பொனைக் களிம்பறுத்து நாட்டினால்
அன்றுதெய்வ மும்முளே யறிந்ததே சிவாயமே. 183

நட்டதா வரங்களும் நவின்றசாத்திரங்களும்
இட்டமான ஓமகுண்ட மிசைந்தநாலு வேதமும்
கட்டிவைத்த புத்தகம் கடும்பிதற்றி தற்கெலாம்
பெட்டதாய் முடிந்ததே பிரானையா னறியவே. 184

வட்டமான கூட்டிலே வளர்ந்தெழுந்த வம்புலி
சட்டமீ படத்திலே சங்குசக் கரங்களாய்
விட்டதஞ்சு வாசலில் கதவினா லடைத்தபின்
முட்டையி லெழுந்தசிவன் விட்டவாற தெங்ஙனே. 185

கோயில்பள்ளி யேதடா குறித்துநின்ற தேதடா
வாயினால் தொழுதுநின்ற மந்திரங்க ளேதடா
ஞானமான பள்ளியில் நன்மையாய் வணங்கினால்
காயமான பள்ளியிற் காணலா மிறையையே. 186

நல்லவெள்ளி யாறதாய் நயந்தசெம்பு நாலதாய்
கொல்லுநாக மூன்றதாய் குலாவுசெம்பொன் னிரண்ட
வில்லினை சையொன்றுடன் விலங்கவூதவல்லிரேல்[தாய்
எல்லையொத்த சோதியானை யெட்டுமாற்றலாதுமே. 187

மனத்தகத் தழுக்கறுத மவுனஞான யோகிகள்
வனத்தகத் திருக்கினு மனத்தகத் தழுக்கறுர்
மனத்தகத் தழுக்கறுத்த மவுனஞான யோகிகள்
முலைத்தடத் திருக்கினும் பிறப்பறுத் திருப்பரே. 188

உருவுமல்ல வொளியுமல்ல வொன்றதாகி நின்றதே
மருவுமல்ல கந்தமல்ல மந்தநாடி யுற்றதல்ல
பெரியதல்ல சிறியதல்ல பேசுமாவி தானுமல்ல
அரியதாக நின்றநேர்மை யாவர்காண வல்லிரே. 189

ஓரெழுத் துலகெலா முதித்தவட் சரத்துளே
ஈரெழுத் தியம்புகின்ற வின்பமே தறிகிலிர்
மூவெழுத்து மூவராய் மூண்டெழுந்த மூர்த்தியை
நாலெழுத்து நாவிலே நவின்றதே சிவாயமே. 190

ஆதியந்த மூலவிந்து நாதமைந்து பூதமாய்
ஆதியந்த மூலவிந்து நாதமைந் தெழுத்துமாய்
ஆதியந்த மூலவிந்து நாதமேவி நின்றதும்
ஆதியந்த மூலவிந்து நாதமே சிவாயமே. 191

அன்னமிட்ட பேரெலா மனேககோடி வாழவே
சொன்னமிட்ட பேரெலாம் துரைத்தனங்கள் பண்ணலாம்
வின்னமிட்ட பேரெலாம் விழ்வர்வெந் நரகிலே
கன்னமிட்ட பேரெலாம் கடந்துநின்ற திண்ணமே. 192

ஓதொணாமல் நின்றநீ ருறக்கமூணு மற்றநீர்
சாதிபேத மற்றநீர் சங்கையன்றி நின்றநீர்
கோதிலாத வறிவிலே குறிப்புணர்ந்து நின்றநீ
ரேதுமன்றி நின்றநீ ரியங்குமாற தெங்ஙனே. 193

பிறந்தபோது கோவண மிலங்குநூல் குடுமியும்
பிறந்துடன் பிறந்ததோ பிறங்குநாற் சடங்கெலா
மறந்தநாலு வேதமும் மனத்துளே யுதித்தவோ
நிலம்பிளந்து வானிடிந்து நின்றதென்ன வல்லிரே. 194

துருத்தியுண்டு கொல்லருண்டு சொர்னமான சோதியுண்
திருத்தமாய் மனதிலுன்னித் திகழவூத வல்லிரேல் [டு
பெருத்ததூ ணிலங்கியே பிழம்பதாய் விரிந்திடும்
நிருத்தமான சோதியு நீயுமல்ல தில்லையே. 195

வேடமிட்டு மின்துலக்கி மிக்கதூப தீபமாய்
ஆடறுத்து கூறுபோட்ட அவர்கள்போலும்பண்ணுநீர்
தேடிவைத்த செம்பெலாந் திரள்படப் பரப்பியே
போடுகின்ற புட்பபூசை பூசையென்ன பூசையே. 196

முட்டுகண்ட தூமையின் முளைத்தெழுந்த சீவனை
கட்டிக்கொண்டு நின்றிடங் கடந்துநோக்க வல்லிரேல்
முட்டுமற்று கட்டுமற்று முடியினின்ற நாதனை
எட்டுதிக்குங் கையினு லிருந்தவீட தாகுமே. 197

அருக்கனோடு சோமனு மதுக்குமப் புறத்திலே
நெருக்கியேறு தாரகை நெருங்கிநின்ற நேர்மையை
உருக்கியே ரெழுத்துளே யொப்பிலாத வெளியிலே
இருக்கவல்ல பேரலோ யினிப்பிறப்ப தில்லையே. 198

மூலவட்ட மீதிலே முளைத்தவஞ் செழுத்தின்மேல்
கோலவட்ட மூன்றுமாய்க் குலைந்தலைந்து நின்றநீர்
ஞாலவட்ட மன்றுளே நவின்றஞான மாகிலோ
ஏலவட்ட மாகியே யிருந்ததே சிவாயமே. 199

சுக்கிலத் திசையுளே சுரோணிதத்தின் வாசலுள்
முச்சதுர மெட்டுளே மூலதார வறையிலே
அச்சமற்ற சவ்வுளே யரியர னயனுமாய்
உச்சரிக்கு மந்திர முண்மையே சிவாயமே. 200

பூவுநீரு மென்மனம் பொருந்துகோயி லென்னுளம்
ஆவியோடு லிங்கமா யகண்டமெங்கு மாகிலும்
மேவுகின்ற ஐவரும் விளங்குதீப தீபமாய்
ஆடுகின்ற கூத்தனுக்கோ ரந்திசந்தி யில்லையே. 201

உருக்கலந்த பின்னலோ வுன்னைநா னறிந்தது
இருக்கிலென் மறக்கிலென் நினைத்திருந்த போதெலாம்
உருக்கலந்து நின்றபோது நீயுநானு மொன்றலோ
திருக்கலந்த போதலோ தெளிந்ததே சிவாயமே. 202

சிவாயமஞ் செழுத்திலே தெளிந்து தேவராகலாம்
சிவாயமஞ் செழுத்திலே தெளிந்துவான மாளலாம்
சிவாயமஞ் செழுத்திலே தெளிந்துகொண்டவான்பொருள்
சிவாயமஞ் செழுத்திலே தெளிந்துகொள்ளு முண்மையே.

பொய்க்குடத்தி லைந்தொதுங்கி போகவிசு மாறுபோல்
இச்சடமு மிந்திரியமும் நீருமே லலைந்ததே
அக்குடஞ் சவத்தைமொண்ட மர்ந்திருந்த வாறுபோல்
இச்சடஞ் சிவத்தைமொண் டுகர்ந்தமர்ந் திருப்பதே.204

பட்டமுங் கயிறுபோல் பறக்கநின்ற சீவனை
பார்வையாலே பார்த்துநீ படுமுடிச்சி போடடா
திட்டவும் படாதடா சீவனை விடாதடா
கட்டடாநீ சிக்கெனக் களவறிந்த கள்ளனை. 205

அல்லிறந்து பகலிறந் தகப்பிரம மிறந்துபோய்
அண்டரண்ட முங்கடந்த தனேகனேக ரூபமாய்ச்
சொல்லிறந்து மனமிறந்த சுகசொரூப வுண்மையைச்
சொல்லியாற வென்னில்வேறு துணைவரில்லை யானதே.

ஐயிரண்டு திங்களா யடங்கிநின்ற தூமைதான்
கையிரண்டு காலிரண்டு கண்ணிரண்டு மாகியே
மெய்திரண்டு சத்தமாய் விளங்கிரச கந்தமும்
துய்யகாய மானதும் சொல்லுகின்ற தூமையே. 207

அங்கலிங்க பீடமு மசவைமூன் றெழுத்தினுஞ்
சங்குசக்க ரத்தினும் சகலவா னகத் தினும்
பங்குகொண்ட யோகிகள் பரமவாச லஞ்சினும்
சிங்கநாத வோசையும் சிவாயமில்ல தில்லையே. 208

அஞ்செழுத்து மூன்றெழுத்து மென்றுரைத்த வன்பர்கா
ளஞ்செழுத்து மூன்றெழுத்த மல்லகாணு மப்பொருள்
அஞ்செழுத்த நெஞ்செழுத்து வவ்வெழுத் தறிந்தபின்
அஞ்செழுத்து வவ்வின்வண்ண மானதே சிவாயமே.209

ஆதரித்த மந்திர மமைந்தவாக மங்களும்
மாதர்மக்கள் சுற்றமு மயக்கவந்த நித்திரை
ஏதுபுக் கொளித்ததோ வெங்குமாகி நின்றதோ
சோதிபுக் கொளித்திடம் சொல்லடா சுவாமியே. 210

அச்கரமனு தியோ வாத்து மா வனுதியோ
புக்கிருந்த பூதமும் புலன்களு மனுதியோ
தக்கமிக்க நூல்களுஞ் சதாசிவம் அனுதியோ
மிக்கவந்த யோகிகாள் விரைந்துரைக்க வேணுமே. 211

ஒன்பதான வாசல்தா னொழியுநா ளிருக்கையில்
ஒன்டதாமி ராமராம ராமவென்னு நாமமே
வன்மமான பேர்கள் வாக்கில் வந்துநோ யடைப்பதாம்
அன்பரான பேர்கள் வாக்கி லாழ்ந்தமைந்திருப்பதே.212

அள்ளிநீரை யிட்டதேது கங்கையிற் குழைத்ததேது
மெள்ளவே மூணமுணென்று விளம்புகின்ற மூடர்கள்
கள்ளவேட மிட்டதேது கண்ணைமூடி விட்டதேது
மெள்ளவே குருக்களே விளம்பிடீர் விளம்பிடீர். 213

அன்னைகர்ப்பத் தூமையி லவதரித்த சுக்கிலம்
முன்னையே தரித்ததும் பனித்துளிபோ லாகுமே
உன்னிதொக்கு ளமலுந் தூமையுள்ளுளே யடங்கிடும்
பின்னையே பிறப்பதுந் தூமைகாணும் பித்தரே. 214

அழுக்கறத்தி னங்குளித் தழுக்கருத மாந்தரே
அழுக்கிருந்த தவ்விட மழுக்கிலாத தெவ்விடம்
அழுக்கிருந்த தவ்விடத் தழுக்கறுக்க வல்லிரேல்
அழுக்கிலாத சோதியோ டணுகிவாழ லாகுமே. 215

அணுத்திரண்ட கண்டமா யனைத்துபல்லி யோனியாய்
மனுப்பிறந் தோதிவைத்த நூலிலே மயங்குறீர்
சனிப்பதேது சாவதேது தாபரத்தி னூடுபோய்
நினைப்பதேது நிற்பதேது நீர்நினைந்து பாருமே. 216

ஆதியாகி யண்டரண்ட மப்புறத்து மப்புறம்
சோதியாகி நின்றிலங்கு சுருதிநாத சோமனை
பேதியாமல் தம்முளே பெற்றுணர்ந்த ஞானிகள்
சாதிபேத மென்பதொன்று சற்றுமில்லை யில்லையே. 217

ஆக்கைமூப்ப தில்லையே யாதிகா ரணத்தினாலே
நாக்கைமூக்கை யுள்மடித்து நாதநாடி யூடுபோய்
ஏக்கறுத்தி ரெட்டையு மிறுக்கமுத்த வல்லிரேல்
பார்க்கப்பார்க்க திக்கெல்லாம் பரப்பிரம்ம மாகுமே. 218

அஞ்சுமஞ்சு மஞ்சுமஞ்சு மல்லல்செய்து நிற்பதும்
அஞ்சுமஞ்சு மஞ்சுமே யமர்ந்துளே யிருப்பதும்
அஞ்சுமஞ்சு மஞ்சுமே யாதரிக்க வல்லிரேல்
அஞ்சுமஞ்சு மும்முளே யமர்ந்ததே சிவாயமே. 219

அஞ்செழுத்தி னாதியா யமர்ந்துநின்ற தேதடா
நெஞ்சழுத்தி நின்றுகொண்டு நீசெபிப்ப தேதடா
அஞ்செழுத்தின் வாளதா லறுப்பதாவ தேதடா
பிஞ்செழுத்தின் நேர்மைதான்பிரித்துரைக்கவேண்டுமே.

உயிரிருந்த தெவ்விட முடம்பெடுத்த தன்முனம்
உயிரதாவ தேதடா வுடம்பதாவ தேதடா
உயிரையு முடம்பையு மொன்றுவிப்ப தேதடா
உயிரினா லுடம்பெடுத்த வுண்மை ஞானி சொல்லடா. 221

சுழித்தவோ ரெழுத்தையுஞ் சொன்முகத் திருத்தியே
துன்பவின்ப முங்கடந்து சொல்லுமூல நாடிகள்
அழுத்தமான அக்கர மங்கியுள்ளெ ழுப்பியே
ஆறுபங்க யங்கலந் தப்புறத் தலத்துளே. 222

உருத்தரிப்ப தற்குமுன் னுயிர்புகுந்த நாதமும்
கருத்தரிப்ப தற்தமுன் காயமென்ன சோணிதம்
அருள்தரிப்ப தற்குமுன் னறிவுமூலா தாரமாம்
குருத்தறிந்து கொள்ளுவீர் குணங்கெ நிங் குருக்களே. 223

எங்குமுள்ள விசனு ரெம்முடல் புகுந்தபின்
பங்குகூறு பேசுவார் பாடுசென் றணுகிலார்
எங்கள்தெய்வ முங்கள்தெய்வ மென்றிரண்டு பேதமோ
உங்கள்பேத மன்றியே யுண்மையிரண்டு மில்லையே. 224

அரியுமாகி யயனுமாகி அண்டமெங்கு மொன்றதாய்
பெரியதாகி யுலகுதன்னில் நின்றபாத மொன்றலோ
விரிவதென்று வேறுசெய்து வேடமிட்ட மூடரே
அறிவினோடு பாருமிங்கு மங்குமெங்கு மொன்றதே. 225

வெந்தநீறு மெய்க்கணிந்து வேடமுந் தரிக்கிறீர்
சிந்தையுள் நினைந்துமே தினஞ்செபிக்கு மந்திரம்
முந்துமந் திரத்திலோ மூலமந்தி ரத்திலோ
எந்தமந்தி ரத்திலோ வீசன்வந் தியங்குமே. 226

அகாரகார ணத்திலே யனேகனேக ரூபமாய்
உகாரகார ணத்திலே யுருத்தரித்து நின்றனன்
மகாரகார ணத்திலே மயங்குகின்ற வையகம்
சிகாரகார ணத்திலே தெளிந்ததே சிவாயமே. 227

அவ்வெழுத்தி லுவ்வுவந்த அகாரமுஞ் சனித்ததோ
எவ்வெழுத்து மவ்வெழுத்து மொன்றையொன்றி நின்ற
செவ்வையொத்துநின்றலோ சிவபதங்கள் சேரினும் [தோ
மீவ்வையொத்த ஞானிகாள் விரித்துரைக்க வேணுமே.

ஆதியான வஞ்சிலு மனுதியான நாலிலும்
சோதியான மூன்றிலுஞ் சொரூபமற்ற ரெண்டிலும்
நீதியான தொன்றிலே நிறைந்துநின்ற வஸ்துவை
ஆதியான தொன்றுமே யற்றதஞ் செழுத்துமே. 229

வானிலாத தொன்றுமில்லை வானுமில்லை வானிடில்
ஊனிலாத தொன்றுமில்லை யூனுமில்லை ஊனிடில்
நானிலாத தொன்றுமில்லை நானுமில்லை நண்ணிடில்
தானிலாத தொன்றுமே தயங்கியாடு கின்றதே. 230

சுழித்ததோ ரெழுத்தையுன்னி சொல்முகத் திருத்தியே
துன்பவின்ப மூங்கடந்து சொல்லுநாடி யூடுபோய்
அழுத்தமான வக்கரத்தி னங்கியை யெழுப்பியே
ஆறுபங்க யங்கடந் தப்புறத்து வெளியிலே. 231

விழித்தகண் குவித்தபோ தடைந்துபோ யெழுத்தெலாம்
விளைந்துவிட்ட விந்திரசால வீடதான வெளியிலே
அழுத்தினலு மதிமயங்கி யனுபவிக்கும் வேளையில்
அவனுமுண்டு நானுமில்லை யாருமில்லை யானதே. 232

நல்லமஞ் சனங்கள்தேடி நாடியாடி யோடுறீர்
நல்லமஞ் சனங்களுண்டு நாதனுண் டு நம்முளே
எல்லமஞ் சனங்கள்தேடி யேகபூசை பண்ணினல்
தில்லைமேவு சீவனுஞ் சிவபதத்து ளாடுமே. 233

உயிரகத்தில் நின்றிடு முடம்பெடுத்த தற்குமுன்
உயிரகார மாயிடு முடலுகார மாயிடும்
உயிரையு முடம்பையு மொன்றுவிப்ப தச்சிவம்
உயிரினு லுடம்புதா னெடுத்தவா றுரைக்கிறேன். 234

அண்டமேழு முழலவே யனந்தயோனி யுழலவே
பண்டுமா லயனுடன் பரந்துநின்று முழலவே
எண்டிசை கடந்துநின் றிருண்டசத்தி யுழலவே
அண்டரண்ட மொன்றதா யாதிநட்ட மாடுமே. 235

உருவநீ ருறுப்புகொண் டுருத் தரித்து வைத்திடும்
பெரியபாதை பேசுமோ பிசாசையொத்த மூடரே
கரியமாலு மயனுமாக காணொணாத கடவுளை
உரிமையாக வும்முளே யுணர்ந்துணர்ந்து கொள்ளுமே.

பண்ணிவைத்த கல்லையும் பழம்பொருள தென்றுநீர்
எண்ணமுற்று மென்னபே றுரைக்கிறீர்க ளேழைகாள்
பண்ணவும் படைக்கவும் படைத்துவைத் தளிக்கவும்
ஒண்ணுமாகி யுலகளித்த வொன்றைநெஞ்சி லுன்னுமே.

நாலதான யோனியுள் நவின்றவிந்து மொன்றதாய்
ஆலதான வித்துளே யமர்ந்தொடுங்கு மாறுபோல்
மூலதான வுற்பனஞ் சொல்வதான மந்திரம்
மேலதான ஞானிகாள் விரித்துரைக்க வேணுமே. 238

அருவமா யிருந்தபோ துன்னையங் கறிந்திலை
உருவமா யிருந்தபோ துன்னைநா னறிந்தனன்
குருவினால் தெளிந்துகொண்டு கோதிலாத ஞானமாம்
பருவமான போதலோ பரப்பிரம்ம மானதே. 239

பிறப்பது மிறப்பதும் பிறந்திடா திருப்பதும்
மறப்பது நினைப்பது மறந்ததைத் தெளிந்ததும்
துறப்பதுந் தொடுப்பதுஞ் சுகித்துவாரி யுண்பதும்
பிறப்பது மிறப்பதும் பிறந்தவீ டடங்குமே. 240

கண்ணிலே யிருப்பனே கருங்கடல் கடைந்தமால்
விண்ணிலே யிருப்பனே மேவியங்கு நிற்பனே
தன்னுளே யிருப்பனே தராதலம் படைத்தவன்
என்னுலே யிருப்பனே யெங்குமாகி நிற்பனே. 241

ஆடுநாடு தேடினு மானைசேனை தேடினும்
கோடிவாசி தேடினும் குறுக்கேவந்து நிற்குமோ
ஓடியிட்ட பிச்சையு மூகந்துசெய்த தர்மமும்
சாடிவிட்ட குதிரைபோல் தர்மம்வந்து நிற்குமே. 242

எள்ளிரும்பு கம்பிளி யிடும்பருத்தி வெண்கலம்
அள்ளியுண்ட நாதனுக்கோ ராடைமாடை வஸ்திரம்
உள்ளிருக்கும் வேதியர்க் குற்றதான மீதிரால்
மெள்ளவந்து நோயணைத்து மீண்டிடுஞ் சிவாயமே. 243

ஊரிலுள்ள மனிதர்கா ளொருமனதாய்க் கூடியே
தேரிலே வடத்தையிட்டு செம்பைவைத் திழுக்கிறீர்
ஆரினலு மறியொணுத வாதிசித்த நாதரை
பேதையான மனிதர்பண்ணும் புரளிபாரும் பாருமே 244

மருள்பழுத்த சிந்தையால் மயங்குகின்ற மாந்தரே
குருக்கொடுத்த மந்திரங் கொண்டுநீந்த வல்லிரேல்
குருக்கொடுத்த தொண்டருங் குகனெடிந்த பிள்ளையும்
பருத்திபட்ட பன்னிரண்டு பாடுதான் படுவரே. 245

அன்னைகர்ப்ப அறையதற்கு ளங்கியின் பிரகாசமாய்
அந்தறைக் குள் வந்திருந் தரியவிந்து ரூபமாய்த் [ய்த்
தன்னையொத்து நின்றபோது தடையறுத்து வெளியதா
தங்கநற் பெருமைதந்து தலைவனய் வளர்ந்ததே. 246

உன்னையற்ப நேரமு மறந்திருக்க லாகுமோ
உள்ளமீது றைந்தனை மறைப்பிலாத சோதியே
பொன்னைவென்ற பேரொளிப் பொருவிலாத ஈசனே
பெண்ணடிப் பிறப்பிலாமை யென்றும்நல்க வேணுமே.

பிடித்ததண்டு மும்மதோ பிரமமான பித்தர்காள்
தடித்தகோல மத்தைவிட்டுச் சாதிபேதங் கொண்மினே
வடித்திருந்த தோர்சிவத்தை வாய்மைகூற வல்லிரேல்
திடுக்கமுற்ற ஈசனைச் சென்று கூடலாகுமோ. 248

சத்திநீ தயவுநீ தயங்குசங்கி னேசைநீ
சித்திநீ சிவனுநீ சிவாயமா மெழுத்துநீ
முந்திநீ முதலுநீ மூவரான தேவர்நீ
அத்திரமு முமுளே யறந்துணர்ந்து கொள்ளுமே. 249

சட்டையிட்டு மணிதுலக்குஞ் சாத்திரச் சழக்கரே
பொத்தகத்தை மெத்தவைத்துப் போதமோதும் பொய்ய
நிட்டையேது ஞானமேது நீரிருந்த அட்சரம் [ரே
பட்டையேது சொல்லிரே பாதகக் கபடரே. 250

உண்மையான சுக்கில மூபாயமா யிருந்ததும்
வெண்மையாகி நீரிலே விரைந்து நீரதானதும்
தண்மையான காயமே தரித்துரூப மானதும்
தெண்மையான ஞானிகாள் தெளிந்துரைக்க வேணுமே.

வஞ்சகப் பிறவியை மனத்துளே விரும்பியே
அஞ்செழுத்தி னுண்மையை யறிகிலாத மாந்தர்காள்
வஞ்சகப் பிறவியை வதைத்திடவும் வல்லிரேல்
அஞ்செழுத்தி னுண்மையை யறிந்துகொள்ள லாகுமே.

காயிலாத சோலையிற் கனியுகுந்த வண்டுகாள்
ஈயிலாத தேனையுண் டிராப்ப கல்லுறங்குறீர்
பாயிலாத கப்பலேறி யக்கரைப் படுமுனே
வாயினாலு ரைப்பதாகு மோமவுன ஞானமே. 253

பேய்கள் பேய்களென்கிறீர் பிதற்றுகின்ற பேயர்காள்
பேய்கள் பூசை கொள்ளுமோ பிடாரிபூசை கொள்ளுமோ
ஆதிபூசை கொள்ளுமோ அனாதிபூசை கொள்ளுமோ
காயமான பேயலோ கணக்கறிந்து கொண்டதே. 254

மூலமண் டலத்திலேயு முச்சதுர மாதியாய்
நாலுவாச லெம்பிரான் நடுவுதித்த மந்திரம்
கோலியெட்டி தழுமாய்க் குளிர்ந்தலர்ந்த தீட்டமாய்
மேலும்வேறு காண்கிலேன் விளைந்ததே சிவாயமோ. 255

ஆதிகூடு நாடியோடிக் காலைமாலை நீரிலே
சோதிமூல மானநாடி சொல்லிறந்த தூவெளி
ஆதிகூடி நெற்பறித் தகாரமாதி யாகமம்
பேத பேதமாகியே பிறந்துடல்லி றந்ததே. 256

பாங்கினே டிருந்துகொண் டு பரமனஞ்செ ழுத்துளே
ஓங்கிநாடி மேலிருந்தங் குச்சரித்த மந்திரம்
மூங்கில்வெட்டி நாருரித்து முச்சில்செய் விதத்தினின்
ஆய்ந்தநூலிற் றேன்றுமே அறிந்துணர்ந்துகொள்ளுமே.

புண்டரிக மத்தியி லுதித்தெழுந்த சோதியை
மண்டலங்கள் மூன்றெடு மன்னுகின்ற மாயனை
அண்டரண்ட மூடறுத்த றிந்துணர வல்லிரேல்
கண்டகோயில் தெய்வமென்று கையெடுப்ப தில்லையே.

அம்பலங்கள் சந்தியி லாடுகின்ற வம்பனே
அன்பனுக்கு ளன்பனாய் நிற்பனாதி வீரனே
அன்பருக்கு ளன்பனாய் நின்றவாதி நாதனே
உம்பருக்கு முண்மையாய் நின்றவுண்மை யுண்மையே

அண்ணலாவ தேதடா வறிந்துரைத்த மந்திரம்
தண்ணலாக வந்தவன் சகலபுராணங் கற்றவன்
கண்ணனாக வந்தவன் காரணத் துதித்தவன்
ஒண்ணுதாவ தேதடா வுண்மையான மந்திரம். 260

உள்ளதோ புறம்பதோ வுயிரொடுங்கி நின்றிடம்
மெள்ளவந்து கிட்டினீர் வினவவேணு மென்கிறீர்
உள்ள தும்புறம்பது மொத்தபோது நாதமாம்
கள்ளவாசலைத்திறந்து காணவேணு மாந்தரே. 261

ஆரலைந்து பூதமா யளவிடாத யோனியும்
பாரமான தேவரும் பழுதிலாத பாசமும்
ஓரொணாத அட்டமு மலோகலோக லோகமும்
சேரவெந்து போயிருந்த தேகமேது செப்புமே. 262

என்னகத்து ளென்னைநா னெங்குந்தம்நாடி யோடினேன்
என்னகத்து ளென்னைநா னறிந்திலாத தன்மையால்
என்னகத்து ளென்னைநா னறிந்துமே தெரிந்தபின்
என்னகத்து யென்னையன்றி யாதுமொன்று மில்லையே.

விண்ணினின்று மின்னெழுந்து மின்னொடுங்குமாறுபோல்
என்னுள் நின்று மெண்ணுமீச னென்னகத் திருக்கையால்
கண்ணி னின்று கண்ணில்தோன்றும் கண்ணறிவிலாமை
என்னுணின்ற வென்னையும் யானறிந்த தில்லையே.[யால்

அடக்கினும்ம டக்கொணாத அம்பலத்தி னூடுபோய்
அடக்கினும்ம டக்கொணாம லன்பருக்கு மென்னுளே
கிடக்கினும்மி ருக்கினுங் கிலேசம்வந் திருக்கினும்
நடக்கினும்மி டைவிடாத நாதசங்கொ லிக்குமே. 265

மட்டுலாவு தண்டுழா யலங்கலாய்பு னற்கழல்
விட்டுவீழில் தாகபோக விண்ணில்நண் ணில் வெளியி
எட்டினோடி ரண்டினு மிதத்தினால்ம னந்தனைக் [னும்
கட்டிவீடி லாதுவைத்த காதலின்ப மாகுமே. 266

ஏகமுத்தி மூன்றுமுத் தி நாலுமுத்தி நன்மைசேர்
போகமுற்றிப் புண்ணியத்தில் முத்தியன்றி முத்தியாய்
நாகமுற்ற சயனமாய் நலங்கடல் கடந்ததீ
யாகமுற்றி யாகிநின்ற தென்கொலாதி தேவனே. 267

மூன்றுமுப்பத் தாறினோடு மூன்றுமூன்று மாயமாய்
மூன்றுமூத்தி யாகிமூன்று மூன்றுமூன்று மூன்றுமாய்த்
தோன்றுசோதி மூன்றதாய்த் துலக்கமில்வி ளக்கதாய்
ஏன்றெனுவி லுள்புகுந்த தென்கொலோவெம் மீசனே.

ஐந்துமைந்து மைந்துமா யல்லவற்று ளாயுமாய்
ஐந்துமூன்று மொன்றுமாய் நின்றவாதி தேவனே
ஐந்துமைந்து மைந்துமா யமைந்தனைத்து நின்றநீ
ஐந்துமைந்து மாயநின்னை யாவர்காண வல்லரே. 269

ஆறுமாறு மாறுமாய் ஓரைந்துமைந்து மைந்துமாய்
ஏறுசீரி ரண்டுமூன்று மேழுமாறு மெட்டுமாய்
வேறுவேறு ஞானமாகி மெய்யினோடு பொய்யுமாய்
ஊறுமோசை யாயமர்ந்த மாயமாய மாயனே. 270

எட்டுமெட்டு மெட்டுமாய் ஓரேழுமேழு மேழுமாய்
எட்டுமூன்று மொன்றுமாகி நின்றவாதி தேவனே
எட்டுமாய பாதமோ டிறைஞ்சிநின்ற வண்ணமே
எட்டெழுத்து மோதுவார்க ளல்லல்நீங்கி நிற்பரே. 271

பத்திஞேடு பத்துமாய் ஓரேழிஞேடு மொன்பதாய்
பத்துநாற்றி சைக்குணின்ற நாடுபெற்ற நன்மையாய்
அத்துமாய கொத்தமோடு மத்தலமிக் காதிமால்
பத்கர்கட்க லாதுமுத்தி மூத்திமுத்தி யாதமே. 272

வாசியாகி நேசமொன்றி வந்தெதிர்த்த தென்னுக
நேசமாக நாளுளாவ நன்மைசேர் பவங்களில்
வீசிமேல் நிமிர்ந்ததோளி யில்லையாக்கி னுய்கழல்
ஆசையால்ம றக்கலா தமரராக லாதுமே. 273

எளியதான காயமீது வெம்பிரா னிருப்பிடம்
அளிவுருது நின்றதே அகாரமும் உகாரமும்
கொளுகையான சோதியுங் துலாவிநின்ற தவ்விடம்
வெளியதாகு மொன்றிலே விளைந்ததேசி வாயமே. 274

அஞ்செழுத்து மூன்றெழுத்து மென்றுரைக்கு மன்பர்காள்
அஞ்செழுத்து மூன்றெழுத்து மல்லகாணு மப்பொருள்
அஞ்செழுத்தை நெஞ்சமுத்தி அவ்வெழுத் தறிந்தபின்
அஞ்செழுத்து மூன்றெழுத்து மவ்வுபாயஞ் சிவாயமே.275

பொய்யுரைக்கப் போதமென்று பொய்யருக் கிருக்கையால்
மெய்யுரைக்கவேண்டுதில் லைமெய்யர்மெய்க்கிலாமையால்
வையகத்தி னுண்மைதன்னை வாய்திறக்க அஞ்சினேன்
நையவைத்த தென்கொலோ நமசிவாய நாதனே. 276

ஒன்றையொன்று கொன்றுகூட வுணவுசெய்திருக்கினும்
மன்றினூடு பொய்களவு மாறுவேறு செய்யினும்
பன்றிதேடு மீசனைப் பரிந்துகூட வல்லிரேல்
அன்றுதேவ ரும்முளே யறிந்துணர்ந்து கொள்ளுமே. 277

மச்சகத்து ளேயிவர்ந்து மாயைபேசும் வாயுவை
அச்சகத்து ளேயிருந் தறிவுணர்த்திக் கொள்விரேல்
அச்சகத்து ளேயிருந் தறிவுணர்த்திக் கொண்டபின்
இச்சையற்ற எம்பிரா னெங்குமாகி நிற்பனே. 278

வயலிலேமுளைத்த செந்நெல் களையதான வாறுபோல்
உலகினோரும் வண்மைகூறின் உய்யுமாற தெங்ஙனே
விரகிலே முளைத்தெழுந்த மெய்யலாது பொய்யதாய்
நரகிலே பிறந்திருந்து நாடுபட்ட பாடதே. 279

ஆடுகின்ற எம்பிரானை யங்குமிங்கு மென்றுநீர்
தேடுகின்ற பாவிகாள் தெளிந்தவொன்றை ஓர்கிலீர்
காடுநாடு வீடுவிண் கலந்துநின்ற கள்வனை
நாடியோடி யும்முளே நயந்துணர்ந்து பாருமே. 280

ஆடுகின்ற அண்டர்கூடு மப்புறம்ம திப்புறம்
தேடுநாலு வேதமுந் தேவரான மூவரும்
நீடுவாழி பூதமும்நின்ற தோர்நி லைகளும்
ஆடுவாழி னொழியலா தனைத்துமில்லை யில்லையே. 281

ஆவதும்ப ரத்துளே அழிவதும்ப ரத்துளே
போவதும்ப ரத்துளே புகுவதும்ப ரத்துளே
தேவரும்ப ரத்துளே திசைகளும்ப ரத்துளே
யாவரும் பரத்துளே யானுமப்ப ரத்துளே. 282

ஏழுபாரேழுக டல்இ பங்களெட்டு வெற்புடன்
சூழுவான்கி ரிகடந்து சொல்லுமேழு லகமும்
ஆழிமால்வி சும்புபோ னள்பிர மாண்டரண்ட அண்டமும்
ஊழியானொ ளிக்குள்ளே யுதித்துடனொ டுக்குமே. 283

கயத்துநீரிறைக்கிறீர் கைகள் சோர்ந்து நிற்பதேன்
மனத்துளீர மொன்றிலாத மதியிலாத மாந்தர்காள்
மனத்துளீரங் கொண்டுநீ ரழுக்கறுக்க வல்லிரேல்
நினைத்திருந்த சோதியும் நீயும்நானு மொன்றலோ. 284

நீரிலே பிறந்திருந்து நீர்சடங்கு செய்கிறீர்
ஆரையுன்னி நீரெலா மவத்திலேயி ரைக்கிறீர்
வேரையுன்னி வித்தையுன்னி வித்திலே முளைத்தெழுஞ்
சீரையுன்ன வல்லிரேற் சிவபதம் அடைவிரே. 285

பத்தொடொத்த வாசலிற் பரந்துமூல வக்கரம்
முத்திசித்தி தொந்தமென் றியங்குகின்ற மூலமே
மத்தசித்த ஐம்புலன் மகாரமான கூத்தையே
அத்தியூரர் தம்முளே யமைந்ததேசி வாயமே. 286

அணுவினோடு மண்டமா யளவீடாத சோதியைக்
குணமதாகி யும்முளே குறித்திருக்கின் முத்தியாம்
முணமுணென்று உம்முளே விரலையொன்றி மீளவும்
தினந்தினம்ம யக்குவீர் செம்புபூசை பண்ணியே. 287

மூலமான அக்கர முகப்பதற்கு முன்னெலாம்
மூலமாக மூடுகின்ற மூடமேது மூடரே
காலனை அஞ்சுபூத மஞ்சிலே யொடுங்கினால்
ஆதியோடு கூடுமோ அனாதியோடு கூடுமோ. 288

முச்சதுர மூலமாகி முடிவுமாகி யோகமாய்
அச்சதுர மாகியேய டங்கியோரெ ழுத்துமாய்
மெய்ச்சதுர மெய்யுளேவி ளங்குஞான தீபமாய்
உச்சரிக்கு மந்திரத்தி லுண்மையே சிவாயமே. 289

வண்டுலங்கு போலுநீர் மனத்துமாச றுக்கிலீர்
குண்டலங்கள் போலுநீர் குடத்திலேமு ழுகிறீர்
பண்டுமுங்கள் நான்முகன் பறந்துதேடிக் காண்கிலான்
கண்டிருக்கு மும்முளே கலந்திருப்பர் காணுமே. 290

நின்றதன்றி ருந்ததன்று நேரிதன்று கூரிதன்று
பந்தமன்று வீடுமன்று பாவகங்க ளற்றது
கெந்தமன்று கேள்வியன்று கேடிலாத வானிலே
அந்தமின்றி நின்றதொன்ற தெங்ஙனே யுரைப்பதே. 291

பொருந்துநீரு மும்முளே புகுந்துநின்ற காரணம்
எருதிரண்டு கன்றையீன்ற ஏகமொன்றை ஓர்கிலீர்
அருகிருந்து சாவுகின்ற ஆவையும் மறிந்திலீர்
குருவிருந்து லாவுகின்ற கோலமென்ன கோலமே. 292

அம்பரத்து ளாடுகின்ற அஞ்செழுத்து நீயலோ
சிம்பளாய்ப்ப றந்துநின்ற சிற்பரமு நீயலோ
எம்பிரானு மெவ்வுயிர்க்கு மேகபோக மாதலால்
எம்பிரானு நானுமா யிருந்ததேசி வாயமே. 293

ஈரொளிய திங்களேயி யங்கிநின்ற தற்பரம்
ஏரொளிய திங்களேயஃ தியாவரும்ம றிகிலீர்
காரொளிய படலமுங்க டந்துபோன தற்பரம்
பேரொளிப் பெரும்பதமு மேகநாத பாதமே. 294

கொள்ளொணாது மெல்லொணாது கோதறக் குதட்டடா
தள்ளொணா தணுகொணாத தாதலான் மனத்துளே
தெள்ளொணாது தெளியொணாது சிற்பரத்தி னுட்பயன்
விள்ளொணாத பொருளைநான்வி ளம்புமாற தெங்ஙனே.

வாக்கினால் மனத்தினால் மதித்தகா ரணத்தினால் [குவார்
நோக்கொணாத நோக்கையன்றி நோக்கையாவர் நோக்
நோக்கொணாத நோக்குவந்துநோக்கநோக்கநோக்கிடில்
நோக்கொணாத நோக்குவந்து நோக்கை யெங்ஙனோக்
[குமே. 296

உள்ளினும்பு றம்பினு முலகமெங்க ணும்பரந்
தெள்ளிலெண் ணெய்போலநின் றியங்குகின்ற எம்பிரான்
மெள்ளவந்தெ னுட்புகுந்து மெய்த்தவம்பு ரிந்தபின்
வள்ளலென்ன வள்ளலுக்கு வண்ணமென்ன வண்ணமே.

வேதமொன்று கண்டிலேன் வெம்பிறப்பி லாமையால்
போதநின்ற வடிவதாய்ப் புவனமெங்கு மாயினாய்
சோதியுள்ளொ ளியுமாய்த் துரியமோட தீதமாய்
ஆதிமூல மாதியா யமைந்ததேசி வாயமே. 298

சாணிநம டங்கினற் சரிந்தகொண்டை தன்னுலே
பேணியப்ப திக்குளே பிறந்திறந்து ழலுவீர்
தோணியான ஐவரைத் துறந்தறுக்க வல்லிரேல்
காணிகண்டு கோடியாய்க் கலந்ததேசி வாயமே. 299

அஞ்சுகோடி மந்திரம் அஞ்சுளேய டங்கினல்
நெஞ்சுகூர வும்முளே நினைப்பதோரே ழுத்துளே
அஞ்சு நாலு மூன்றதாகி யும்முளே யடங்கினல்
அஞ்சுமோரெ ழுத்ததா யமைந்ததேசி வாயமே. 300

அக்கரந்த அக்கரத்தி லுட்கரந்த அக்கரம்
சக்கரத்துச் சிவ்வையுண்டு சம்புளத்தி ருந்ததும்
எட்கரந்த எண்ணெய்போல் எவ்வெழுத்து மெம்பிரான்
உட்கரந்து நின்றநேர்மை யாவர்காண வல்லரே. 301

ஆகமத்தி னுட்பொரு ளகண்டமூல மாதலால்
தாகபோக மின்றியே தரித்ததற்ப ரமுநீ
ஏகபாதம் வைத்தனை யுணர்ந்துமஞ்செ ழுத்துளே
ஏகபோக மாகியே யிருந்ததேசி வாயமே. 302

மூலவாசல் மீதுளேயோர் முச்சதுர மாகியே
நாலுவாச லெண்விரல் நடுவுதித்த மந்திரம்
கோலமொன்று மஞ்சுமாகு மிங்கலந்து நின்றநீ
வேறுவேறு கண்டிலேன் விளைந்ததேசி வாயமே. 303

சுக்கிலத்த டியுளே சுழித்ததோ ரெழுத்துளே
அக்கரத்த டியுளே யமர்ந்தவாதி சோதிநீ
உக்கரத்த டியுளே யுணர்ந்த அஞ்செ ழுத்துளே
அக்கரம்ம தாகியே அமர்ந்ததேசி வாயமே. 304

குண்டலத்து ளேயுளே குறித்தகத்து நாயகன்
கண்டவந்த மண்டலங் கருத்தழித்த கூத்தனை
விண்டலர்ந்த சந்திரன் விளங்குகின்ற மெய்ப்பொருள்
கண்டுகொண்ட மண்டலஞ் சிவாயமல்ல தில்லையே. 305

சுற்றுமைந்து கூடமொன்று சொல்லிறந்த தோர்வெளி
சத்தியுஞ் சிவனுமாக நின்றதன்மை யோர்கிலீர்
சத்தியாவ தும்முடல் தயங்குசிவ னுட்சிவம்
பித்தர்காள் அறிந்திலீர் பிரானிருந்த கோலமே. 306

மூலமென்ற மந்திர முளைத்த அஞ்செ ழுத்துளே
நாலுவேத நாவுளே நவின்றஞான மெய்யுளே
ஆலமுண்ட கண்டனும்ம ரியயனு மாதலால்
ஓலமென்ற மந்திரஞ் சிவாயமல்ல தில்லையே. 307

தத்துவங்க ளென்றுநீர் தமைக்கடிந்து போவீர்காள்
தத்துவஞ் சிவமதாகில் தற்பரமும் நீரல்லோ
முத்திசிவ னுதமே மூலபாதம் வைத்தபின்
அத்தனுரு மும்முளே யறிந்துணர்ந்து கொள்ளுமே. 308

மூன்றுபத்து மூன்றையு மூன்றுசொன்ன மூலனே
தோன்றுசேர ஞானிகாள் துய்யபாத மென்றலை
ஏன்றுவைத்த வைத்தபின் இயம்புமஞ்செ ழுத்தையும்
தோன்றவோத வல்லிரேல் துய்யசோதி காணுமே. 309

உம்பர்வான கத்திலும் உலகபார மேழினும்
நம்பர்நாடு தன்னிலும் நாவலென்ற தீவினும்
செம்பொன்மாட மல்குதில்லை யம்பலத்து ளாடுவான்
எம்பிரானலாது தெய்வமில்லை யில்லை யில்லையே. 310

பூவிலாய ஐந்துமாய்ப் புனலில்நின்ற நான்குமாய்த்
தீயிலாய மூன்றுமாய்ச் சிறந்தகாலி ரண்டுமாய்
வேயிலாய தொன்றுமாய் வேறுவேறு தன்மையாய்
நீயலாமல் நின்றநேர்மை யாவர்காண வல்லரே. 211

அந்தரத்தி லொன்றுமா யசைவுகாலி ரண்டுமாய்ச்
செந்தழலில் மூன்றுமாகிச் சிறந்தஅப்பு நான்குமாய்
ஐந்துபாரி லைந்துமா யமர்ந்திருந்த நாதனைச்
சிந்தையிற் றெளிந்தமாயை யாவர்காண வல்லரே. 312

மனவிகார மற்றுநீர் மதித்திருக்க வல்லீரேல்
நினைவிலாத மணிவிளக்கு நித்தமாகி நின்றிடும்
அனைவரோதும் வேதமு மகம்பிதற்ற வேணுமேற்
கனவுகண்ட துண்மைநீர் தெளிந்ததேசி வாயமே. 313

இட்டகுண்ட மேதடா இருக்குவேத மேதடா
சுட்டமட்க லத்திலே சுற்றுநூல்கள் ஏதடா
முட்டிநின்ற தூணிலே முளைத்தெழுந்த சோதியைப்
பற்றிநின்ற தேதடா பட்டநாத பட்டனே. 314

நீரிலே முளைத்தெழுந்த தாமரையி னோரிலை
நீரினோடு கூடிநின்றும் நீரிலாத வாறுபோல்
பாரிலே முளைத்தெழுந்த பண்டிதப் பராபரம்
பாரினோடு கூடிநின்ற பண்புகண்டி ருப்பிரே. 315

உறங்கிலென்வி ழிக்கிலென்உணர்வு சென்றொடுங்கிலென்
சிறந்தவைம்பு லன்களுந் திசைத்திசைக லொன்றிலென்
புறம்புமுள்ளு மெங்கணும் பொருந்திருந்த தேகமாய்
நிறைந்திருந்த ஞானிகாள் நினைப்பதேதுமில்லையே. 316

ஓதுவார்க ளோதுகின்ற வோரெழுத்து மொன்றதே
வேதமென்ற தேகமாய் விளம்புகின்ற தன்றிது
நாதமொன்று நான்முகன் மாலும்நானு மொன்றதே
ஏதுமன்றி நின்றதொன்றை யானுணர்ந்த நேர்மையே.

பொங்கியே தரித்தஅச்சுப் புண்டரீக வெளியிலே
தங்கியே தரித்தபோது தாதுமாது ளையதாம்
அங்கியுள் சரித்தபோது வடிவுகள்ளொ ளியுமாய்க்
கொம்புமேல் வடிவுகொண்டு குருவிருந்த கோலமே. 318

மண்ணுளோரும் விண்ணுளோரும் வந்தவாற தெங்கே
கண்ணினோடு சோதிபோற் கலந்தநாத விந்துவும் [னில்
அண்ணலோடு சத்தியு மஞ்சுபஞ்ச பூதமும்
பண்ணினோடு கொடுத்தழிப் பாரொடேழு மின்றுமே. 319

ஒடுக்குகின்ற சோதியு மூந்திநின்ற வொருவனும்
நடுத்தலத்தி லொருவனும் நடந்துகாலி லேறியே
விடுத்துநின்ற இருவரோடு மெய்யிேைடு பொய்யுமாய்
அடுத்துநின்ற றிமினே அனதிநின்ற வாதியே. 320

உதித்த மந்திரத்தினு மோ ரங்கு மக்கரத்தினும்
மதித்த மண்டலத்தினு மறைந்து நின்ற சோதிநீ
மதித்த மண்டலத்துளே மரித்துநீயி ருந்தபின்
சிரித்த மண்டலத்துளே சிறந்ததேசி வாய மே. 321

திருத்திவைத்த சற்குருவைச் சீர்பெற வணங்கிலீர்
குருக்கொடுக்கும் பித்தரே கொண்டுநீந்த வல்லிரோ
குருக்கொடுக்கும் பித்தருங் குருக்கொள்வந்த சீடனும்
பருத்திபட்ட பாடுதான் பன்னிரண்டும் பட்டதே. 322

விழித்தகண் துதிக்கவும் விந்துநாத வோசையும்
மேருவுங் கடந்தவண்ட கோள மங்க டந்துபோய்
எழுத்தெலா மறிந்துவிட்ட இந்திரஞால வெளியிலே
யானுநீயு மேகலந்த தென்னதன்மை யீசனே. 323

ஓம்நமோவென் றும்முளே பாவையென்ற றிந்தபின்
பானுடற் கருத்துளே பாவையென்ற றிந்தபின்
நானுநீயு மூண்டடா நலங்குலம துண்டடா
ஊனுமூனு மொன்றுமே யுணர்ந்திடா யுனக்குளே. 324

ஐம்புலனை வென்றவர்க்கிங் கன்னதான மீவதாய்
நன்புலன்க ளாகிநின்ற நாதருக்க தேறுமோ
ஐம்புலனை வென்றிடா தவத்தமேயு மன்றிடும்
வம்பருக்கு மீவதுங் கொடுப்பதும்ம வத்தமே. 325

ஆணியான ஐம்புலன்க ளவையுமொக்கு ளொக்குமோ
யோனியிற் பிறந்திருந்த துன்பமிக்கு மொக்குமோ
வீணர்காள் பிதற்றுவீர் மெய்ம்மையே யுணர்திரேல்
ஊனுறக்க போகமு முமக்கெனக்கு மொக்குமே. 326

ஓடுகின்ற ஐம்புலன் ஒடுங்கஅஞ்செ ழுத்துளே
நாடுகின்ற நான்மறை நவிலுகின்ற ஞானிகாள்
கூடுகின்ற கண்டித துணங்கள்மூன் றெழுத்துளே
ஆடுகின்ற பாவையா யமைந்ததேசி வாயமே. 327

புவனசக்க ரத்துளே பூதநாத வெளியிலே
பொங்குதீப அங்கியுள் பொதிந்தெழுந்த வாயுவைத்
தவனசோம ரிருவருந் தாமியங்கும் வாசலில்
தண்டுமாறி யேறிநின்ற சரசமான வெளியிலே. 328

மவுன அஞ்செ ழுத்திலே வாசியேறி மெள்ளவே
வானளாய் நிறைந்தசோதி மண்டலம்பு குந்தபின்
அவனுநானு மெய்கலந் தனுபவித்த அளவிலே
அவனுமுண்டு நானுமில்லை யாருமில்லை யானதே. 329

வாளுறையில் வாளடக்கம் வாயுறையில் வாய்வடக்கம்
ஆளுறையில் ஆளடக்கம் அருமையென்ன வித்தைகாண்
தாளுறையில் தாளடக்கம் தன்மையான தன்மையும்
நாளுறையில் நாளடக்கம் நானும்நீயும் கண்டதே. 330

வழுத்திடான முத்திடான் மாயரூப மாகிடான்
கழன்றிடான்வெ குண்டிடான் காலகால காலமும்
துவண்டிடான சைந்திடான் தூயதூப மாகிடான்
சுவன்றிடானு ரைத்திடான் சூட்சசூட்ச சூட்சமே. 331

ஆகிகூவென் றேயுரைத்த அட்சரத்தி னனந்தம்
யோகியோகி யென்பர்கோடி யுற்றறிந்து கண்டிடார்
பூகமாய் மனக்குரங்கு பொங்குமங்கு மிங்குமாய்
ஏகமேக மாகவே யிருப்பர்கோடி கோடியே. 332

கோடிகோடி கோடிகோடி குவலயத்தோ ராதியை
நாடிநாடி நாடிநாடி நாளகன்று வீணதாய்த்
தேடித்தேடித் தேடித்தேடித் தேகமுங் கசங்கியே
கூடிக்கூடிக் கூடிக்கூடி நிற்பர்கோடி கோடியே. 333

கருத்திலான்வெ ளுத்திலான் பரனிருந்த காரணம்
இருத்திலானெ ளித்திலா னென்றிரண்டு மாகிலான்
ஒருத்திலான்ம ரித்திலா னெழிந்திடான ழிந்திடான்
கருத்திற்கீயுங் கூவுமுற்றேன் கண்டறிந்த வாதியே. 334

வாதிவாதி வாதிவாதி வண்டலை யறிந்திடான்
ஊதியூதி யூதியூதி யொளிமழுங்கி யுளறுவான்
வீதிவிதி விதிவிதி விடையெருப் பொறுக்குவோன்
சாதிசாதி சாதிசாதி சாகரத்தைக் கண்டிடான். 335

ஆண்மையாண்மை யாண்மையாண்மை ஆண்மைகூறு
காண்மையான வாதிரூபங் காலகால காலமும் [மசடரே
பான்மையாகி மோனமான பாசமாகி நின்றிடும்
நாண்மையான நரலைவாயில் நங்குமிங்கு மங்குமே. 336

மிங்குவென்ற அட்சரத்தின் மீட்டுவாகிக் கூவுடன்
துங்கமாகச் சோமனோடு சோமன்மாறி நின்றிடும்
அங்கமாமு னைச்சுழியி லாகுமேக வாகையாய்க்
கங்குலற்றுக் கியானமுற்றுக் காணுவாய் சுடரொளி. 337

சுடரெழும்பும் சூட்சமும் சுழிமுனையின் சூட்சமும்
அடரெழும்பி யேகமாக அமர்ந்துநின்ற சூட்சமுந்
திடரதான சூட்சமுந் திரியின்வாலை சூட்சமுங்
கடலெழும்பு சூட்சமுங் கண்டறிந்தோன் ஞானியே. 338

ஞானிஞானி என்றுரைத்த நாய்கள் கோடிகோடியே
வானிலாத மழைநாளென்ற வாதிகோடி. கோடியே
தானிலான சாகரத்தின் தன்மைகாணு மூடர்கள்
மூனிலாமற் கோடிகோடி முன்னறிந்த தென்பரே. 339

சூட்சமான கொம்பிலே சுழிமுனைச் சுடரிலே
விச்சமான வீயிலே விபுலைதங்கும் வாயிலே
கூச்சமான கொடியிலே குடியிருந்த கோவிலே
தீட்சையான தீவிலே சிறந்தேசி வாயமே. 340

பொங்கிநின்ற மோனமும் பொதிந்துநின்ற மோனமுந்
தங்கிநின்ற மோனமுந் தயங்கிநின்ற மோனமுங்
கங்கையான மோனமுங் கதித்துநின்ற மோனமுந்
திங்களான மோனமுஞ் சிவனிருந்த மோனமே. 341

மோனமான வீதியில் முனைச்சுழியின் வாலையில்
பானமான வீதியில் பசைந்தசெஞ்சு டரினில்
ஞானமான மூலையில் நரலைதங்கும் வாயிலில்
ஓனமான செஞ்சுட ருதித்ததேசி வாயமே. 342

உதித்தெழுந்த வாலையு முயங்கிநின்ற வாலையும்
கதித்தெழுந்த வாலையுங் காலையான வாலையும்
மதித்தெழுந்த வாலையு மறைந்துநின்ற ஞானமுங்
கொதித்தெழுந்து கும்பலாகிக் கூவும்கியு மானதே. 343

கூவுங்கியு மோனமாகிக் கொள்கையான கொள்கையை
மூவிலே யுதித்தெழுந்த மூச்சுடர் விரிவிலே
பூவிலேநறைகள் போலப் பொருந்திநின்ற பூரணம்
ஆவியாவி யாவியாவி யன்பருள்ள முற்றதே. 344

ஆண்மைகூறு மாந்தரே அருக்கனோடும் வீதியைக்
காண்மையாகக் காண்பிரே கசடறுக்க வல்லிரே
தூண்மையான வாதிசூட்சந் சோபமாகு மாகுமே
நாண்மையான வாயிலில் நடித்துநின்ற நாதமே. 345

நாதமான வாயிலில் நடித்துநின்ற சாயலில்
வேதமான வீதியில் விரிந்தமூச்சு டரிலே
கீதமான கீயிலே கிளர்ந்துநின்ற கூவிலே
பூதமான வாயிலைப் புகலறிவன் ஆதியே. 346

ஆவியாவி யாவியாவி ஐந்துகொம்பி னுவியே
மேவிமேவி மேவிமேவி மேதினியின் மானிடர்
வாவிவாவி வாவிவாவி வண்டல்களறிந்திடார்
பாவிபாவி பாவிபாவி படியிலுற்ற மாந்தரே. 247

வித்திலே முளைத்தசோதி வில்வளைவின் மத்தியில்
உத்திலே யொளிவதாகி மோனமான தீபமே
நத்திலே திரட்சிபோன்ற நாதனை யறிந்திடார்
வத்திலே கிடந்துழன்ற வாலையான சூட்சமே. 348

மாலையோடு காலையும் வடிந்துபொங்கு மோனமே
மாலையோடு காலையான வாறறிந்த மாந்தரே
மூலையான கோணமின் முளைத்தெழுந்த செஞ்சுடர்
காலையோடு பானகன்று தங்கிநின்ற மோனமே. 349

மோனமான வீதியில் முடுகிநின்ற நாதமே
ஈனமின்றி வேகமான வேகமென்ன வேகமே
கானமான மூலையிற் கனிந்திருந்த வாலையில்
ஞானமான செஞ்சுடர் நடந்ததேசி வாயமே. 350

உச்சிமத்தி வீதியி லொழிந்திருந்த சாதியிற்
பச்சியுற்ற சோமனும் பரந்துநின்று லாவவே
செச்சியான தீபமே தியானமான மோனமே
கச்சியான மோனமே கடந்துதேசி வாயமே. 351

அஞ்சுகொம்பி னின்றநாதம் ஆலைபோ லெழும்பியே
பிஞ்சினோடு பூமலர்ந்து பெற்றியுற்ற சுத்தமே
செஞ்சுட ருதித்தபோது தேசிகன்சு ழன்றுடன்
பஞ்சபூத மானதே பரந்துநின்ற மோனமே. 352

சடுதியான கொம்பிலே தத்துவத்தின் ஹீயிலே
அடுதியான ஆவிலே அரனிருந்த ஹூவிலே
இடுதியென்ற சோலையி லிருந்துமுச் சுடரிலே
நடுதியென்று நாதமோடி நன்குற அமைந்ததே. 353

அமையுமால் மோனமும் அரனிருந்த மோனமும்
சமையும்பூத மோனமுந் தரித்திருந்த மோனமும்
இமையுங்கொண்ட வேகமும் இலங்குமுச்சி மோனமும்
நமையறிந்த மாந்தரே சடத்தையுற்று நோக்கிலார். 354

டாய்ச்சலூர் வழியிலே பரனிருந்த சுழியிலே
காய்ச்சகாம்பி னுனியிலே கனியிருந்த மலையிலே
வீச்சமான தேதடா விரிவுதங்கு மிங்குமே
மூச்சினோடு மூச்சைவாங்கு மூட்டிநின்ற சோதியே. 355

சோதிசோதி யென்றுநாடித் தோற்பவர் சிலவரே
ஆதிஆதி யென்றுநாடு மாடவர் சிலவரே
வாதிவாதி யென்றுசொல்லும் வம்பருஞ் சிலவரே
நீதிநீதி நீதிநீத நின்றிடு முழுச்சுடர். 356

சுடரதாகி யெழும்பியங்குந் தூபமான காலமே
இடரதாய்ப் புவியும்விண்ணு மேகமா யமைக்கமுன்
படரதாக நின்றவாதி பஞ்சபூத மாகியே
அடரதாக அண்டமெங்கு மாண்மையாக நின்றதே. 357

நின்றிருந்த சோதியை நிலத்திலுற்ற மானிடர்
கண்டறிந்து கண்குளிர்ந்துகாதலுற் றுலாவுவோர்
கண்டமுற்ற மேன்முனையின் காட்சிதன்னைக் காணுவார்
நன்றியற்று நரலை பொங்கிநாதமும் மகிழ்ந்திடும். 358

வயங்குமோனச் செஞ்சுடர் வடிந்தசோதி நாதமும்
கயங்கள்போலக் கதறியே கருவூரற்ற வெளியிலே
பயங்கொடின்றி யின்றியே படர்ந்து நின்ற பான்மையே
நயங்கள்கோவென் றேநடுங்கி நங்கையான தீபமே. 359

தீபவுச்சி முனையிலே திவாகரத்தின் சுழியிலே
கோபமாறு கூவிலே கொதித்துநின்ற தீயிலே
தாபமான மூலையிற் சமைந்துநின்ற சூட்சமுஞ்
சாபமான மோட்சமுந் தடிந்துநின்றி லங்குமே. 360

தேசிகன் சுழன்றதே திரிமுனையின் வாலையில்
வேசமோடு வாலையில் வியனிருந்த மூலையில்
நேசசந்தி ரோதயம் நிறைந்திருந்த வாரமில்
வீசிவீசி நின்றதே விரிந்துநின்ற மோனமே. 361

உட்கமல மோனமீதி லுயங்கிநின்ற நந்தியை
விக்கலோடு கீயுமாகி யில்வளைவின் மத்தியில்
முட்பொதிந்த தென்னவே முடுகிநின்ற செஞ்சுடர்
கட்குவைகள் போலவுங் கடிந்துநின்ற காட்சியே. 362

உந்தியிற் சுழிவழியி லுச்சியுற்ற மத்தியில்
சந்திரன் ஒளிக்கிரணந் தாண்டிநின்ற செஞ்சுடர்
பந்தமாக வில்வளையிற் பஞ்சபூத விஞ்சைபாங்
கிந்துபோலக் கீயில்நின்று கீச்சிமூச்சு மென்றதே. 363

செச்சையென்ற மூச்சினோடு சிகாரமும் வகாரமும்
பச்சையாகி நின்றதே பரவெளியின் பான்மையே
இச்சையான ஹூவிலே யிருந்தெழுந்த ஹீயிலே
உச்சியான கோணத்தி லுதித்ததேசி வாயமே. 364

ஆறுமூலக் கோணத்தி லமைந்தவொன்ப தாத்திலே
நாறுமென்று நங்கையான நாவியுந் தெரிந்திடக்
கூறுமென்று ஐவரங்குக் கொண்டுநின்ற மோனமே
பாறுகொண்டு நின்றது பரந்ததேசி வாயமே. 365

பறந்ததே கறந்தபோது பாய்ச்சலூரின் வழியிலே
பிறந்ததே பிராணனன்றிப் பெண்ணுமாணு மல்லவே
துறந்ததோ சிறந்ததோ துயதுங்க மானதோ
இறந்தபோதி லன்றதே இலங்கிநிஞ்சி வாயமே. 366

அருளிருந்த வெளியிலே அருக்கனின்ற இருளிலே
பொருளிருந்த சுழியிலே புரண்டெழுந்த வழியிலே
தெருளிருந்த கலையிலே தியங்கிநின்ற வலையிலே
குருவிருந்த வழியினின்று ஹூவும்ஹீயு மானதே. 367

ஆனதோரெ ழுத்திலே அமைந்துநின்ற ஆதியே
கானமோடு தாலமீதிற் கண்டறிவ தில்லையே
தானுந்தானு மானதே சமைந்தமாலை காலையில்
ஏனலோடு மாறுபோல் விரிந்ததேசி வாயமே 368

ஆறுகொண்ட வாரியு மமைந்துநின்ற தெய்வமுந்
தூறுகொண்ட மாரியுந் துலங்கிநின்ற தூபமும்
வீறுகொண்ட மோனமும் விளங்குமுட் கமலமும்
மாறுகொண்ட ஊவிலே மடிந்ததேசி வாயமே. 369

வாயில்கண்ட கோணமில் வயங்குமைவர் வைகியே
சாயல்கண்டு சார்ந்ததுந் தலைமன்னுயு றைந்ததுங்
காயவண்டு கண்டதுங் கருவூரங்குச் சென்றதும்
பாயுமென்று சென்றதும் பறந்ததேசி வாயமே. 370

பறந்ததே துறந்தபோது பாய்ச்சலூரின் வழியிலே
மறந்ததே கவ்வுமுற்ற வாணர்கையின் மேவியே
பிறந்ததே யிறந்தபோதிற் பீடிடாமற் கீயிலே
சிறந்துநின்ற மோனமே தெளிந்ததேசி வாயமே. 371

வடிவுபத்ம வாசனத் திருத்திமூல வனலையே
மாருதத்தி னாலெழுப்பி வாசலைந்து நாலையும்
முடிவுமுத்தி ரைப்படுத்தி மூலவீணா தண்டினால்
முளரியால யங்கடந்து மூலநாடி யூடுபோம். 372

அடிதுவக்கி முடியளவு மாறுமா நிலங்கடந்
தப்புறத்தில் வெளிகடந்த ஆதியெங்கள் சோதியை
உடுபதிக்க ணமுதருந்தி யுண்மைஞான உவகையுள்
உச்சிப்பட்டி றங்குகின்ற யோகிநல்ல யோகியே. 373

மந்திரங்க ளுண்டுநீர் மயங்குகின்ற மாந்தரே
மந்திரங்க ளாவதும் மறத்திலூற லன்றுகாண்
மந்திரங்க ளாவது மதித்தெழுந்த வாயுவை
மந்திரத்தை யுண்டவர்க்கு மரணமேது மில்லையே. 374

மந்திரங்கள் கற்றுநீர் மயங்குகின்ற மாந்தரே
மந்திரங்கள் கற்றநீர் மரித்தபோது சொல்விரோ
மந்திரங்க ளும்முளே மதித்தநீறு மும்முளே
மந்திரங்க ளாவது மனத்திணைந்த மூத்துமே. 375

உள்ளதோ புறம்பதோ வுயிரொடுங்கி நின்றிடம்
மெள்ளவந்து கிட்டிநீர் வினவவேண்டு மென்கிறீர்
உள்ளதும் பிறப்பதும் மொத்தபோது நாதமாங்
கள்ளவாசலைத் திறந்து காணவேண்டு மாந்தரே. 376

ஓரெழுத்து லிங்கமா யோதுமட்ச ரத்துளே
ஓரெழுத்தி யங்குகின்ற வுண்மையை யறிகிலீர்
மூவெழுத்து மூவராய் முளைத்தெழுந்த சோதியை
நாவெழுத்து நாவுளே நவின்றதேசி வாயமே. 377

முத்தசித்தி தொந்தமா மியங்குகின்ற மூர்த்தியை
மற்றுதித்த வப்புலன்க ளாகுமத்தி மப்புலன்
அத்தர்நித்தர் காளகண்ட ரன்பின லனுதினம்
உச்சரித்து ளத்திலே யறிந்துணர்ந்து கொண்மினே. 378

மூன்றிரண்டு மைந்துமாய் முயன்றெழுந்த தேவராய்
மூன்றிரண்டு மைந்ததாய் முயன்றதேயு லகெலாம்
ஈன்றதாயு மப்பனு மியங்குகின்ற நாதமாய்த்
தோன்றுமோரெ ழுத்திளுேடு சொல்லஒன்று மில்லையே.

வெளியுருக்கி யஞ்செழுத்தும் விந்துநாத சத்தமுந்
தளியுருக்கி நெய்கலந்து சகலசுத்தி யானதும்
வெளியிலுமவ் வினையிலு மிருவரைய றிந்தபின்
தெளிகலந்த தன்மையால் தெளிந்ததேசி வாயமே. 380

முப்புரத்தி லப்புறம் முக்கணன் விளைவிலே
சிற்பரத்து ளுற்பனஞ் சிவாயமஞ்செ ழுத்துமாந்
தற்பரமுதித்து நின்று தாணுவெங்கு மானபின்
இப்புறமொடுங்கு மோடி யெங்கும் லிங்க மானதே. 381

ஆடிநின்ற சீவனோ ரஞ்சுபஞ்ச பூதமோ
கூடிநின்ற சோதியோ குலாவிநின்ற மூலமோ
நாடுகண்டு நின்றதோ நாவுகற்ற கல்வியோ
வீடுகண்டு விண்டிடின் வெட்டவெளியு மானதே. 382

உருத்தரித்த போதுசீவன் ஒக்கநின்ற வுண்மையுந்
திருத்தமுள்ள தொன்றிலுஞ் சிவாயமஞ்செழுத்துமாம்
இருத்துநின் றுறுத்தடங்கி யேகபோக மானபின்
கருத்தினின் றுதித்ததே கபாலமேந்து நாதனே. 383

கருத்தரித் துதித்தபோது கமலபீட மானதுங்
கருத்தரித் துதித்தபோது காரணங்க ளானதுங்
கருத்தரித் துதித்தபோது காணிரண்டு கண்களாய்க்
கருத்தினின் றுதித்ததே கபாலமேந்து நாதனே. 384

ஆனவன்னி மூன்றுகோணமா றிரண்டும் எட்டிலே
ஆனசீவ னஞ்செழுத் தகாரமிட்ட லர்ந்ததும்
ஆனசோதி யுண்மையும் அனாதியான வுண்மையும்
ஆனதான தானதா யவலமாய்ம றைந்திடும் 385

ஊன்றெழுந்த வெம்பிரான் திருவரங்க வெளியிலே
நான்றபாம்பின் வாயினால் நாலுதிக்கு மாயினான்
மூன்றுமூன்று வளையமாய் முப்புரங்க டந்தபின்
ஊன்றெழுந்த அவ்வினைசை யெங்குமாகி நின்றதே. 386

எங்குமெங்கு மொன்றலோவீ ரேழுலோக மொன்றலோ
அங்குமிங்கு மொன்றலோ அனாதியான தொன்றலோ
தங்குதாப ரங்களுந் தரித்துவார தொன்றலோ
உங்களெங்கள் பங்கினி லுதித்ததேசி வாயமே. 387

அம்பரத்தி லாடுஞ்சோதி யானவன்னி மூலமாம்
அம்பரமும் தம்பரமும் அகோரமிட்ட லர்ந்ததும்
அம்பரக்கு ழியிலே அங்கமிட்டு ருக்கிட
அம்பரத்தி லாதியோ டமர்ந்ததேசி வாயமே. 388

வாடிலாத பூமலர்ந்து வண்டிரிசை நாவிலே
ஓடிநின்று ருவெடுத் துகாரமாய லர்ந்ததும்
ஆடியாடி யங்கமு மகப்படக்க டந்தபின்
கூடிநின்று லாவுமே குருவிருந்த கோலமே. 389

விட்டடி விரைத்ததோ வேருருக்கி நின்றதோ
எட்டிநின்ற சிவனுமீ ரேழுலோகங் கண்டதோ
தட்டுருவமாகி நின்ற சதா சிவத் தொளியதோ
வட்டவீடறிந்த பேர்கள் வானதேவ ராவரே. 390

வானவர் நிறைந்தசோதி மானிடக் கருவிலே
வானதேவ ரத்தனைக்குள் வந்தவைவர் வானவர்
வானகமும் மண்ண கமும்வட்டவீ டறிந்தபின்
வானெலா நிறைந்துமன்னு மாணிக் கங்க ளானவே. 391

பன்னிரண்டு கால்நிறுத்திப் பஞ்சவண்ண முற்றிடின்
மின்னியே வெளிக்குனின்று வேறிடத்த மர்ந்ததுஞ்
சென்னியாந்த லத்திலே சீவனின்றி யங்கிடும்
பன்னி யுன்னியாந்த வர்பரப்பிரம மானதே. 392

உச்சிகண்டு கண்கள்கட்டி யுண்மைகண்ட தெவ்விடம்
மச்சுமாளி கைக்குளே மானிடங்க லப்பிரேல்
எச்சிலான வாசலு மேகபோக மாய்விடும்
பச்சைமாலு மீசனும் பரந்ததேசி வாயமே. 393

வாயிலிட்டு நல்லுரிசை யட்சரத்தொ ளியிலே
கோயிலிட்டு வாவியு மங்கொம்பிலே யுலர்ந்ததும்
ஆயிலிட்ட காயமு மனுதியிட்ட சீவனும்
வாயுவிட்ட வன்னியும் வளர்ந்ததேசி வாயமே. 394

அட்சரத்தை யுச்சரித் தனுதியங்கி மூலமாய்
அட்சரத்தை யுந்திறந்த சோரமிட் டலர்ந்ததும்
அட்சரத்தி லுட்கர மகப்படக்க டந்தபின்
அட்சரத்தி லாதியோ டமர்ந்ததேசி வாயமே. 395

கோயிலுங்கு ளங்களுங் குறியினிற்கு ருக்களாய்
மாயிலும் மடியிலு மனதிலேம யங்குறீர்
ஆயனை யரனையும் அறிந்துணர்ந்து கொள்விரேல்
தாயினுந் தகப்பனோடு தானமர்ந்த தொக்குமே. 396

கோயிலெங்கும் ஒன்றலோ குளங்கனீர்கள் ஒன்றலோ
தேயுவாயு ஒன்றலோ சிவனுமங்கே ஒன்றலோ
ஆயசீவ னெங்குமா யமர்ந்துவார தொன்றலோ
காயமீத றிந்தபேர்கள் காட்சியாவர் காணுமே. 397

காதுகண்கள் மூக்குவாய் கலந்துவார தொன்றலோ
சோதியிட்டெ டுத்ததுஞ் சுகங்களஞ்சு மொன்றலோ
ஓதிவைத்த சாத்திர முதித்துவார தொன்றலோ
நாதவீடறிந்த பேர்களுத ராவர் காணுமே. 398

அவ்வுதித்த அட்சரத்தி னுட்கலந்த அட்சரம்
சவ்வுதித்த மந்திரஞ் சம்புளத்தி ருந்ததால்
மவ்வுதித்த மாய்கையால் மயங்குகின்ற மாந்தர்காள்
உவ்வுதித்த தவ்வுமா யுருத்தரித்த வுண்மையே. 399

அகாரமென்னு மக்கரத்தி லக்கர மொழிந்ததோ
அகாரமென்னு மக்கரத்தி லவ்வுவந்து தித்ததோ
உகாரமும் மகாரமு மொன்றிநன்று நின்றதோ
விகாரமற்ற ஞானிகாள் விரித்துரைக்க வேணுமே. 400

சத்தியாவ துன்னுடல் தயங்குசீவ னுட்சிவம்
பித்தர்காளி தற்குமேல் பிதற்றுகின்ற தில்லையே
சுத்தியைந்து கூடமொன்று சொல்லிறந்த தோர்வெளி
சத்திசிவமு மாகிநின்று தண்மையாவ துண்மையே. 401

சுக்கிலத்து ளையிலே சுரோணிதக்க ருவுளே
முச்சதுர வாசல்தன்னில் முளைத்தெழுந்த வோட்டினில்
மெய்ச்சதுர மெய்யுளேவி ளங்குஞான தீபமாய்
உச்சரிக்கு மந்திரம் ஓம்நமச்சி வாயமே. 402

அக்கர மனாதியல்ல ஆத்துமம்ம னாதியல்ல
புக்கிருந்த பூதமும் புலன்களும் அனாதியல்ல
தக்கமிக்க நூல்களுஞ் சாத்திரம் அனாதியல்ல
ஒக்கநின்று டன்கலந்த உண்மைகாண் அனாதியே. 403

மென்மையாகி நின்றதேது விட்டுநின்று தொட்டதேது
உண்மையாக நீயுரைக்க வேணுமெங்க ளுத்தமா
பெண்மையாகி நின்றதொன்று விட்டுநின்று தொட்டதை
உண்மையா யுரைக்கமுத்தி யுட்கலந் திருந்ததே. 404

அடக்கினு லடங்குமோ அண்டமஞ்செ ழுத்துளே
உடக்கினு லெடுத்தகாய முண்மையென் றுணர்ந்துநீ
சடக்கிலாறு வேதமுந் தரிக்கவோதி லாமையால்
விடக்குநாயு மாயவோதி வேறுவேறு பேசுமோ. 405

உண்மையான சக்கரம் உபாயமா யிருந்ததுந்
தண்மையான காயமுந் தரித்தரூப மானதும்
வெண்மையாகி நீறியே விளைந்துநின்ற தானதும்
உண்மையான ஞானிகாள் விரித்துரைக்க வேணுமே.

எள்ளகத்தி லெண்ணெய்போல வெங்குமாகி யெம்பிரான்
உள்ளகத்தி லேயிருக்க வூசலாடு மூடர்காள்
கொள்ளைநாயின் வாலைக் குணக்கெடுக்க வல்லிரேல்
வள்ளலாகி நின்றசோதி காணலாகு மெய்ம்மையே. 407

வேணுமென்ற ஞானமும் விரும்புகின்ற நூலிலே
தாணுவுண்டங் கென்கிறீர் தரிக்கிலீர்ம றக்கிலீர்
தாணுவொன்று மூலநாடி தன்னுள் நாடி யும்முளே
காணுமன்றி வேறியாவுங் கனமயக்க மொக்குமே. 408

வழக்கிலேயு ரைக்கிறீர் மனத்துளேத விக்கிறீர்
உழக்கிலாது நாழியான வாறுபோலு மூமைகாள்
உழக்குநாலு நாழியான வாறுபோல மும்முளே
வழக்கிலேயு ரைக்கிறீர் மனத்துளீசன் மன்னுமே. 409

அறத்திறங்க ளுக்குநீ யண்டமெண் டிசைக்குநீ
திறத்திறங்க ளுக்குநீ தேடுவார்கள் சிந்தைநீ
யுறக்குநீ யுணர்வுநீ யுட்கலந்த சோதிநீ
மறக்கொணாத நின்கழல் மறப்பினுங் குடிகொளே. 410

ஆடுகின்ற எம்பிரானை யங்குமிங்கு நின்றுநீர்
தேடுகின்ற வீணர்காள் தெளிவதொன்றை ஓர்கிலீர்
நாடியாடி யும்முளே நவின்றுநோக்க வல்லிரேல்
கூடொணாத தற்பரங் குவிந்துகூட லாகுமே. 411

சுத்தியைந்து கூடமொன்று சொல்லிறந்த தோர்வெளி
சத்தியுஞ் சிவமுமாகி நின்றதன்மை யோர்கிலீர்
சத்தியாவ தும்முடல் தயங்குசீவ னுட்சிவம்
பித்தர்காள் அறிந்துகொள் பிரானிருந்த கோலமே. 412

அகாரமான தம்பலம் அனாதியான தம்பலம்
உகாரமான தம்பலம் உண்மையான தம்பலம்
மகாரமான தம்பலம் வடிவமான தம்பலஞ்
சிகாரமான தம்பலம் தெளிந்ததேசி வாயமே. 413

சக்கரம் பறந்தகோடிச் சக்கரப்போல் பலகையாய்ச்
செக்கிலாடு மெண்ணெய்போலச் சிங்குவாயு தேயுவும்
உக்கிலேயொ ளிகலந்து யுகங்களுங்க லக்கமாய்ப்
புக்கிலேபுகுந்த போது போனவாற தெங்ஙனே. 414

வளர்ந்தெழுந்த கொங்கைதன்னை மாயமாமென்
[றெண்ணிநீர்
வளங்கொள்சீவராமுடம்பைஉண்மையாகத்தேர்விர்காள்
விளங்குஞான மேவியே மிக்கோர்சொல்லைக் கேட்பிரேல்
களங்கமற்று நெஞ்சுளே கருத்துவந்து புக்குமே. 415

நாலுவேத மோதுகின்ற ஞானமொன் றறிவிரோ
நாலுசாம மாகியே நவின்றஞான போதமாய்
ஆலமுண்ட கண்டனும் அயனுமந்த மாலுமாய்ச்
சாலவுன்னி நெஞ்சுளே தரித்ததேசி வாயமே. 416

சுற்றமென்று சொல்வதுஞ் சுருதிமுடிவில் வைத்திடீர்
அத்தனித்த மாடியே அமர்ந்திருந்த தெவ்விடம்
பத்திமுற்றி யன்பர்கள் பரத்திலொன்று பாழது
பித்தரே இதைக்கருதிப் பேசலாவ தெங்ஙனே. 417

எங்ஙனவி ளக்கதுக்கு ளேற்றவாறு நின்றுதான்
எங்ஙனேயெ ழுந்தருளி யீசனேச ரென்பரேல்
அங்ஙனேயி ருந்தருளும் ஆதியான தற்பரம்
சிங்கமண்மி யானைபோலத் திரிமலங்க ளற்றவே. 418

அற்றவுள்ள கத்தையும் அலக்கிடும்மெ முகிடும்
மெத்ததீப மிட்டதிற்பிற லாதபூசை யேத்தியே
நற்றவம் புரிந்துஏக நாதர்பாதம் நாடியே
கற்றிருப்ப தேசரிதை கண்டுகொள்ளு மும்முளே. 419

பார்த்துநின்ற தம்பலம் பரமனோடு மம்பலம்
கூர்த்துநின்ற தம்பலம் கோரமான தம்பலம்
வார்த்தையான தம்பலம் வன்னியான தம்பலம்
சீற்றமான தம்பலந் தெளிந்ததேசி வாயமே. 420

சென்றுசென்றி டந்தொறும் சிறந்தசெம்பொ னம்பலம்
அன்றுமின்று நின்றதோ ரனாதியான தம்பலம்
என்றுமென்றி ருப்பதோர் இறுதியான அம்பலம்
ஒன்றியொன்றி நின்றது ளொழிந்ததேசி வாயமே. 421

தந்தைதாய்த மரும்நீ சகலதேவ தையும்நீ
சிந்தைநீ தெளிவுநீ சித்திமுத்தி தானும்நீ
விந்துநீ விளைவுநீ மேலதாய வேதம்நீ
எந்தைநீ இறைவநீ என்னையாண்ட ஈசனே. 422

எப்பிறப்பி லும்பிறந் திறந்தழிந்த ஏழைகாள்
இப்பிறப்பி லும்பிறந் தென்னநீறு பூசுநீர்
அப்புடன் மலமறுத்தே ஆசைநீக்க வல்லிரேல்
செப்புநாத வோசையிற் றெளிந்துகாண லாகுமே. 423

மந்திரங்கள் கற்றுநீர் மயங்குகின்ற மாந்தரே
மந்திரங்கள் கற்றுநீர் மரித்தபோது சொல்விரோ
மந்திரங்க ளும்முளே மதிக்கநீறு மும்முளே
மந்திரங்க ளாவது மனத்தினைந் தெழுத்துமே. 424

எட்டுயோக மானதும் இயங்குகின்ற நாதமும்
எட்டுவக்க ரத்துளே உகாரமும்ம காரமும்
விட்டலர்ந்த மந்திரம் வீணுத்தண்டி னூடுபோய்
அட்டவக்க ரத்துளே யமர்ந்ததேசி வாயமே. 425

பிரான்பிரான் என்றுநீர் பினத்துகின்ற மூடரே
பிரானைவிட்டு மெம்பிரான் பிரிந்தவாற தெங்ஙனே
பிரானுமாய்ப் பிரானுமாய்ப் பேருலகந் தானுமாய்ப்
பிரானிலேமுளைத் தெழுந்த பித்தர்காணு மும்மூடல். 426

ஆதியில்லை அந்தமில்லை ஆனநாலு வேதமில்லை
சோதியில்லை சொல்லுமில்லை சொல்லிறந்த தூவெளி
நீதியில்லை நேசமில்லை நிச்சயப் படாததும்
ஆதிகண்டு கொண்டபின் னஞ்செழுத்து மில்லையே. 427

அம்மையப்ப னப்பநீ ரமர்ந்த போதறிகிலீர்
அம்மையப்பு னைநீ ராதியான பாசமே
அம்மையப்ப னின்னையன்றி யாருமில்லை யானபின்
அம்மையப்ப னின்னையன்றி யாருமில்லை யில்லையே. 428

நூறுகோடி மந்திரம் நூறுகோடி யாகமம்
நூறுகோடி நாளிருந் தூடாடினுலு மென்பயன்
ஆறுமாறு மாறுமா யகத்திலோரெ ழுத்ததாய்ச்
சீரையோத வல்லிரேல் சிவபதங்கள் சேரலாம். 429

முந்தவோரெ ழுத்துளே முளைத்தெழுந்த செஞ்சுடர்
அந்தவோரெ ழுத்துளே பிறந்துகாய மானதும்
அந்தவோரெ ழுத்துளே யேகமாகி நின்றதும்
அந்தவோரெ ழுத்தையு மறிந்துணர்ந்து கொள்ளுமே.

கூட்டமிட்டு நீங்களுங் கூடிவேத மோதுறீர்
எட்டகத்து ளீசனு மிருப்பதென்னெ ழுத்துளே
நாட்டமிட்டு நாடிடு நாலுமூன்று தன்னுளே
ஆட்டகத்து ளாடிடு மம்மையாணை யுண்மையே. 431

காக்கைமூக்கை யாமையா ரெடுத்துரைத்த காரணம்
நாக்கையூன்றி யுள்வளைத்து ஞானநாடி யூடுபோய்
ஏக்கைநோக்க அட்சர மிரண்டெழுத்து மேத்திடிற்
பார்த்தபார்த்த திக்கெலாம் பரப்பிரம்ம மானதே. 432

கொள்ளொணாது குவிக்கொணாது கோதறக் குலைக்
[கொணாது
அள்ளொணாது வணுகொணாது வாதிமூல மானதைத்
தெள்ளொணாது தெளியொணாது சிற்பரத்தி னுட்பணன்
வில்லொணாத பொருளையான் விளம்புமாற தெங்ஙனே.

சையுள்ள கல்லைநீர் உடைத்திரண்டு செய்துமே
வாசலிற் பதித்தகல்லை மழுங்கவேமி திக்கிறீர்
பூசனைக்கு வைத்தகல்லில் பூவும்நீருஞ் சார்த்துறீர்
ஈசனுக் குகந்தகல் எந்தக்கல்லு சொல்லுமே. 434

ஓட்டுவைத்துக் கட்டிநீ ரூபாயமான மந்திரம்
கட்டுப்பட்ட போதிலுங் கருத்தனங்கு வாழுமோ
எட்டுமெட்டு மெட்டுளே யியங்குகின்ற வாயுவை
வட்டமிட்ட யவ்விலே வைத்துணர்ந்து பாருமே. 435

இந்தவூரி லில்லையென் றெங்குநாடி யோடுறீர்
அந்தவூரி லீசனு மமர்ந்துவாழ்வ தெங்ஙனே
அந்தமான பொந்திலாரில் மேவிநின்ற நாதனை
அந்தமான சீயிலவ்வி லறிந்துணர்ந்து கொள்ளுமே. 436

புக்கிருந்த தும்முளே பூரியிட்ட தோத்திரம்
தொக்குசட்சு சிங்குவை யாக்கிராணன் சூழ்ந்திடில்
அக்குமணியும் கொன்றைசூடி அம்பலத்து ளாடுவார்
மிக்கசோதி யன்புடன் விளம்பிடாது பின்னையே. 437

பின்னெழுந்த மாங்கிசத்தைப் பேதையர்கண் பற்றியே
பின்புமாங்கி சத்தினல் போகமாய்கை பண்ணினல்
துன்புறும்வி னைகள்தாம் சூழ்ந்திடும்பி னென்றநேலா
அன்பராயிருந்த பேர்களாறு நீந்தல் போல்விடே. 438

விட்டிருந்த தும்முளே விதன மற்றி நக்கிறீர்
கட்டிவைத்த வாசல்மூன்று காட்சியான வாசலொன்று
கட்டிவைத்த வாசலுங் கதவுதாள் திறந்துபோய்த்
திட்டமான வீசனைத் தெளியுமாங்கி சத்துளே. 439

ஆதுமாகு மாகுமே அனுதியான அப்பொருள்
ஏகர்பாதம் நாடிநாடி யேத்திநிற்க வல்லிரேல்
பாகுசேர்மொழி யுமைக்குப் பாலனுகி வாழலாம்
வாகுடனே வன்னியை மருவியேவ ருந்திடீர். 440

உண்மையான தொன்றதொன்றை யுற்றுநோக்கி [யும்முளே
வண்மையான வாசியுண்டு வாழ்த்தியேத்த வல்லிரேல்
தண்மை பெற்றிருக்கலாம் தனமும்வந்து நேரிடும்
கன்மதன்ம மாகுமீசர் காட்சிதானுங் காணுமே. 441

பாலனுக வேணுமென்று பத்திமுற்று மென்பரே
நாலுபாத முண்டதில் நனைந்திரண்ட டுத்ததால்
மூலநாடி தன்னில்வன்னி மூட்டியந்த நீருண
ஏலவார் குழலியூடே யீசர்பாத மெய்துமே. 442

எய்துநின்னை யன்பினு லிறைஞ்சியேத்த வல்லிரேல்
எய்துமுண்மை தன்னிலே யிறப்பிறப்ப கற்றிடும்
மையிலங்கு கண்ணிபங்கன் வாசிவானி லேறிமுன்
செய்தவல்வி னைகளுஞ் சிதறுமஃது திண்ணமே. 443

திண்ணமென்று சேதிசொன்ன செவ்வியோர்கள்கேண்மி
அண்ண லன்புளன்பு ருகியறிந்து நோக்கலாயிடும் [னே
மண்ணதிர விண்ணதிர வாசியை நடத்திடில்
நண்ணியெங்க ளீசனும் நமதுடலில் இருப்பனே. 444

இருப்பனெட்டெட் டெண்ணிலே இருந்துவேற தாகுவன்
நெருப்புவாயு நீருமண்ணும் நீள்விசும்பு மாகுவன்
கருப்புகுந்து காலமே கலந்தசோதி நாதனைக்
குருப்புனலில் மூழ்கினுர் குறித்துணர்ந்து கொள்வரே. 445

கொள்ளுவார்கள் சிந்தையிற் குறிப்புணர்ந்த ஞானிகள்
விள்ளுவார்கள் பக்குவத்தில் வேண்டிவேண்டி யேத்தி
உள்ளுமாய்ப்பு றம்புமா யுணர்வதற்கு ணர்வுமாய்த்[னுல்
தெள்ளிதாக நின்றசோதி செம்மையைத் தெளிந்திடே.

தெளிந்தநற் சரியைதன்னில் சென்றுசாலோ கம்பெறும்
தெளிந்தநற் கிரியைபூசை சேரலாஞ் சாமீபமே
தெளிந்தநல்ல யோகந்தன்னில் சேரலாகுஞ் சாரூபம்
தெளிந்தஞானம் நான்கிலும் சேரலாஞ்சா யுச்யமே. 447

சேருவார்கள் ஞானமென்று செப்புவார் தெளிவுளோர்
சேருவார்கள் நாலுபாதச் செம்மையென்ற தில்லையே
சேருவார்கள் சிவகதி திருவருளைப் பெற்றபேர்
சேருமாறு கண்டுநாலுஞ் செய்தொழில் திடப்படே. 448

திறமலிக்கு நாலுபாதஞ் செம்மையுந் திடப்படார்
அறிவிலிகள் தேசநாடி அவத்திலே யலைவதே
குறியதனைக் காட்டியுட் குறித்துநோக்க வல்லிரேல்
வெறிகமழ் சடையுடையோன் மெய்ப்ப தம்மடைவீரே.

அடைவுளோர்கள் முத்தியை யறிந்திடாத மூடரே
படையுடைய தத்துவமும் பாதகங்க ளல்லவோ
மடைதிறக்க வாரியின் மடையிலேறு மாறுபோல்
உடலில் மூலநாடியை யுயரவேற்றி யூன்றிடே. 450

ஊன்றியேற்றி மண்டல முருவிமூன்று தாள்திறந்
தூன்றுதந்தி யேறிடி லமுதம்வந்தி றங்கிடும்
நான்றிதென்று தொண்டருக்கு நாதனும் வெளிப்படும்.
ஆன்றியு முயிர்பரம் பொருந்திவாழ்வ தாகவே. 451

ஆகமூல நாடியி லனலெழுப்பி யன்புடன்
மோகமான மாயையில் முயல்வ தும்மொழிந்திடில்
தாகமேரு நாடியேகர் ஏகமான வாறுபோல்
ஏகர்பாத மன்புட னிறைஞ்சினு ரறிவரே. 452

அறிந்துநோக்கி யும்முளே யயன்தியான மும்முளே
இருந்திராம லேகர்பாதம் பெற்றிருப்ப துண்மையே
அறிந்துமீள வைத்திடா வகையுமரண மேத்தினுர்
செறிந்து மேலைவாசலைத் திறந்துபாரு மும்முளே. 453

சோதியாக வும்முளே தெளிந்துநோக்க வல்லிரேல்
சோதிவந்து தித்திடுந் துரியாதீத முற்றிடும்
ஆதிசக்கரத் தினிலமர்ந்து தீர்த்த மாடுவன்
பேதியாதி கண்டுகொள் பிராணனைத்தி ருத்தியே. 454

திருவுமாகிச் சிவனுமாகித் தெளிந்துளோர்கள்சிந்தையில்
மருவிலே யெழுந்துவீசும் வாசனைய தாதுவன்
கருவிலே விழுந்தெழுந்த கன்மவாத னையெலாம்
பருதிமுன் னிருளதாய் பறியுமங்கி பாருமே. 455

பாருமெந்தை யீசன்வைத்த பண்பிலே யிருந்துநீர்
சேருமே நடுவறிந்து செம்மையான அப்பொருள்
வேரை யும்முடியையும் விரைந்துதேடி மாலயன்
பாரிடந்து விண்ணிலே பறந்துங்கண்ட தில்லையே. 456

கண்டிலா தயன்மாலென்று காட்சியாகச் சொல்கிறீர்
மிண்டினுல ரனுடன் மேவலாயி ருக்குமோ
தொண்டுமட்டு மன்புடன் தொழுதுநோக்க வல்லிரேல்
பண்டுமுப்பு ரம்மெரித்த பத்திவந்து முற்றுமே. 457

முற்றுமே யவனெழிந்து முன்பினென்றுங் காண்கிலேன்
பற்றிலாத தொன்றுதன்னைப் பற்றிநிற்க வல்லது
கற்றிதாலே யீசர்பாதங் காணலா யிருக்குமோ
பெற்றபேரை யன்புடன் பிரியமாகக் கேளுமே. 458

கேட்டுநின்ற வுன்னிலை கிடைத்தகாலந் தன்னுளே
வாட்டமுள்ள தத்துவ மயக்கமும்ம கற்றிடும்
வீட்டிலே வெளியதாகும் விளங்கவந்து நேரிடும்
கூட்டிவன்னி மாருதங் குயத்தைவிட் டெழுப்புமே. 459

எழுப்பிமூல நாடியை யிதப்படுத்த லாகுமோ
மழுப்பிலாத சபையைநீர் வலித்துவாங்க வல்லிரேல்
சுழுத்தியுங்க டந்துபோய்ச் சொப்பனத்தி லப்புறம்
அழுத்தியோ ரெழுத்துளே யமைப்பதுண் மையையனே

அல்லதில்லை யென்றதா னுவியும் பொருளுடல்
நல்லவீசர் தாளிணைக்கும் நாதனுக்கு மீந்திலை
என்றுமென்னுள் நேசமும் வாசியைவருந்தினல்
தொல்லையாம் வினைவிடென்று தூரதூர மானதே. 461

ஆனதேப தியது யிற்றதேப சுபாசம்
போனவே மலங்களும் புலன்களும் வினைகளும்
கானகத்தி லிட்டதீயிற் காற்றுவந் தடுத்ததோ
வானகத்தில் வாயுவன்னி யொன்றியே யுலாவுமே. 462

உலாவுமுவ்வு மவ்வுமா யுதித்தடர்ந்து நின்றதும்
உலாவியைம் புலன்களு மொருதலத்தி ருந்திடும்
நிலாவுமங்கு நேசமாகி நின்றமிர்த முண்டுதாங்
குலாவுமெங்க ளீசனைக் குறித்துணர்ந்து கும்பிடே. 463

கும்பிடுங் கருத்துளே குகனையைங்க ரனையும்
நம்பியே யிடம்வலம் நமஸ்கரித்து நாடிட
எம்பிரானு மம்மையு மிருத்தியே நடுவணைத்
தும்பிபோல வாசகந் தொடர்ந்து சோம்பி நீங்குமே. 464

நீங்குமைம்பு லன்களும் நிறைந்தவல்வி னைகளும்
ஆங்காரமாம் மாசையு மருந்தடர்ந்த பாவமும்
ஓங்காரத்தி னுள்ளிருந்த ஒன்பதொழிந் தொன்றிலத்
தூங்கவீசர் சொற்படி துணிந்திருக்க சுத்தமே. 465

நினைப்பதொன்று கண்டிலே னீயலாது வேறிலை
நினைப்புமாய் மறப்புமாய் நின்றமாய்கை மாய்கையே
யனைத்துமா யகண்டமா யனாதிமுன் னனாதியாய்
நினைக்குள் நா னெனக்குள் நீ நினைக்குமாற தெங்ஙனே.

கருக்கலந்த காலமே கண்டுநின்ற காரணம்
உருக்கலந்த போதலோ வுன்னைநா னுணர்ந்தது
விரிக்கிலென் மறைக்கிலென் வினைக்கிசைந்தபோதெலாம்
உருக்கலந்து நின்றபோது நீயும்நானு மொன்றலே. 467

ஞானநூல்கள் தேடியே நவின்றஞான யோகிகாள்
ஞானமான சோதியை நாடியுள் ளறிகிலீர்
ஞானமாகி நின்றதோர் நாதனை யறிந்தபின்
ஞானமல்ல தில்லைவேறு நாமுரைத்த துண்மையே. 468

கருத்தரிப்ப தற்குமுன் காயம்நின்ற தெவ்விடம்
உருத்தரிப்ப தற்குமுன் உயிர்ப்புநின்ற தெவ்விடம்
மருட்பொதிந்த சிந்தையில் மயக்கம்நின்ற தெவ்விடம்
விருப்புணர்ந்த ஞானிகாள் விரித்துரைக்க வேணுமே.

கருவினிற் கருவதா யெடுத்தவேழு தோற்றமும்
இருவினைப் பயத்தினால் பிறந்திறந்து ழன்றிடும்
மறுவினைப் பிறவிமூன்று காலமும் வகுத்தபின்
உறுவினைப் பயனிதென் றுணர்ந்தஞானி சொல்லுமே.

வாயிலெச்சில் போகவே நீர்குடித்துத் துப்புவீர்
வாயிருக்க எச்சில்போன வாறதென்ன தெவ்விடம்
வாயிலெச்சி லல்லவோ நீருரைத்த மந்திரம்
நாதனை யறிந்தபோது நாடுமெச்சி லேதுசொல். 471

தொடக்கதென்று நீர்விழத் தொடங்குகின்ற வூமர்காள்
தொடக்கிருந்த தெவ்விடம் சுத்தியான தெவ்விடம்
தொடக்கிருந்த வாறறிந்து சுத்திபண்ண வல்லிரேல்
தொடக்கிலாத சோதியைத் தொடர்ந்துகாண லாகுமே.

மேதியோடும் ஆவுமே விரும்பியே புணர்ந்திடில்
சாதிபேத மாயுருத் தரிக்குமாறு போலவே
வேதமோது வானுடன் புலைச்சிசென்று மேவிடில்
பேதமாய்ப் பிறக்கிலாத வாறதென்ன பேசுமே. 473

வகைக்குலங்கள் பேசியே வழக்குரைக்கு மாந்தர்காள்
தொகைக்கு லங்களான நேர்மைநாடியே யுணர்ந்தபின்
மிகைத்த சுக்லமன்றியே வேறுமொன்று கண்டிலீர்
நகைத்தநாதன் மன்றுள்நின்ற நந்தனியாரு பேசுமே.

ஓதும்நாலு வேதமுறைத்த சாத்திரங்களும்
பூததத்து வங்களும் பொருந்துமாக மங்களும்
சாதிபேத வுண்மையுந் தயங்குகின்ற நூல்களும்
பேதபேத மாகியே பிறந்துழன்றி ருந்தவே. 475

உறங்கிலென் விழிக்கிலென் உணர்வுசென்றொடுங்கிலென்
திறம்பிலென்றி கைக்கிலென் சிலதிசைக ளெட்டிலென்
புறம்புமுள்ளு மெங்ஙணும் பொதிந்திருந்த தேகமாய்
நிறைந்திருந்த ஞானிகள் நினைப்பதேது மில்லையே. 476

அங்கலிங்கம் பூண்டுநீ ரகண்டபூசை செய்கிறீர்
அங்கலிங்கம் பூண்டுநீ ரமர்ந்திருந்த மார்பரே
எங்குமோடி யெங்குமெங்கும் ஈடழிந்து மாய்கிறீர்
செங்கல்செம்பு கல்லெலாஞ் சிறந்துபார்க்கு மூடரே. 477

தீட்டந்தீட்ட மென்றுநீர் தினமுழுகு மூடரே
தீட்டமாகி யல்லவோ திரண்டுகாய மானதும்
பூட்டகாய மும்முளே புகழுகின்ற பேயரே
தீட்டுவந்து கொண்டலோ தெளிந்ததேசி வாயமே. 478

மூலநாடி தம்முளே முளைத்தெழுந்த வாயுவை
நாளுநாளு மும்முளே நடுவிருத்த வல்லிரேல்
பாலனாகு முடல் பறந்துபோக லாய்விடும்
ஆலமுண்ட கண்டர்பாத மம்மைபாத முண்மையே. 479

உந்திமேலே நாலும்மூன்றும் ஓம்நமசி வாயமாம்
சந்திசந்தி யென்றுநீர் சாற்றுகின்ற பேயரே
முந்தவந்து நும்முளே மூலநாடி யூடுபோய்
அந்திசந்தி யற்றிட மறிந்துணர்ந்து பாருமே. 480

வன்னிமூன்று தீயிலில் வாழுமெங்கள் நாதனும்
கன்னியான துள்ளிருக்க காதல்கொண்ட தெவ்விடம்
சென்னி நாலுகையிரண்டு சிந்தையி லிரண்டிலொன்
றுன்னியுன்னி நம்முளே யுய்த்துணர்ந்து பாருமே. 481

தொண்டுசெய்து நீங்களுஞ் சூழவோடி மாள்கிறீர்
உண்டுழன்று நம்முளே யுற்றுணர்ந்து பார்க்கிலீர்
வண் டுலாவு சோலைசூழ வாழுமெங் கள் நாதனும்
பண்டுபோல நம்முளே பகுத்திருப்ப னீசனே. 482

அரியதோர் நமச்சிவாய மாதியந்த மானதும்
ஆறிரண்டு நூறுகோடி யள விடாத மந்திரம்
தெரியநாலு வேதமாறு சாத்திர புராண மும்
தேடுமாறு மயனுஞ்சர்வ தேவதேவ தேவனே. 483

பரமுனக்கெ னக்குவேறு பயமுமில்லை பாரையா
கர முனக்கு நித்தமுங் குவித்திடக்க டமைபாம்
சிரமுருக்கி யமுதளித்த சீருலாவு நாதனே
ஊரமெனக்கு நீயளித்த வுண்மையுண்மை யுண்மையே.

மூலவட்ட மீதிலே முளைத்தவைந் தெழுத்திலே
கோலவட்ட மூன்றுமாய்க் குளிர்ந்தலர்ந்து நின்றநீ
ஞாலவட்ட மன்றுளே நவின்றஞானி மேலதாய்
ஏலவட்ட மாகியே யிருந்ததேசி வாயமே. 485

என்னகத்தி லென்னைநா னெங்குமோடி நாடினேன்
என்னகத்தி லென்னையன்றி ஏதுமொன்று கண்டிலேன்
விண்ணெழும்பிவிண் ணகத்தின் மின்னொடுங்கு மாறுபோல்
என்னகத்து ளீசனோ டியானுமல்ல தில்லையே. 486

நாலுவேத மோதுகின்ற ஞானமொன் றறிவிரோ
நாலுசாமி யாகிய நவின்றஞான போதமாய்
ஆலமுண்ட கண்டனு மயனுமந்த மாலுமாய்ச்
சாலவுன்னி நெஞ்சிலே தரித்ததேசி வாயமே. 487

முச்சதுர மூலமாகி மூன்றதான பேதமாய்
அச்சதுர மும்முளே யடங்கவாசி யோகமாம்
மெய்ச்சதுர மெய்யுளேவி ளங்குஞான தீபமாய்
உச்சரித்த மந்திரம் ஓம்நமச்சி வாயமே. 488

மூலமண்ட லத்துளே முச்சதுர மாயமாய்
நாலுவாச லெண்விரலி ழுடுத்தித்த மந்திரம்
கோலியென்று மைந்துமாய்க் குளிர்ந்தலந்து நின்றநீ
மேலுமேலு நாடினேன் விழைத்ததே சிவாயமே. 489

இடங்கள்பண்ணி சுத்திசெய்தே யிட்டபீடமீதிலே
அடங்கநீரும் பூசல்செய் தருந் தவங்கள் பண்ணுவீர்
ஒடுங்குகின்ற நாதனு ருதிச்குஞான மெவ்விடம்
அடங்குகின்ற தெவ்விடம் அறிந்துபூசை செய்யுமே. 490

புத்தகங் களைச்சுமந்து பொய்களைப் பிதற்றுவீர்
செத்திடம் பிறந்திடம்ம தெங்ஙனென் றறிகிலீர்
அத்தனைய சித்தனை யறிந்துநோக்க வல்லிரேல்
உத்தமத்து ளாயசோதி யுணரும்போக மாகுமே. 491

அருளிலேபிறந்து தித்து மாயைரூப மாகியே
இருளிலே தயங்குகின்ற ஏழைமாந்தர் கேண்மினோ
பொருளிலே தவம்புனைந்து பொருந்தி நோக்க வல்லிரேல்
மருளதேது வன்னியின் மறைந்தேசி வாயமே. 492

கருக்கலந்த காலமே கண்டிருந்த காரணா
வுருக்கலந்த சோதியைத் தெளிந்துயா னறிந்தபின்
தருக்கலந்த சோதியைத் தெளிந்துயா னறிந்தபின்
இருக்கிலே னிறக்கிலே னிரண்டுமற் றிருந்ததே. 493

தன்மசிந்தை யாமளவுந் தவமறியாத் தன்மையாய்க்
கன்மசிந்தை வெயிலுழன்று கருத்தழிந்த கசடரே
சென்மசென்ம மந் தேடியுந் தெளியொணாத செல்வனை
நன்மையாக வும்முளே நயந்துகாண வேண்டுமே. 494

கள்ளவுள்ள மேயிருக்கக் கடந்தஞான மோதுவீர்
கள்ளமுள்ள றுத்தபோது கதியிதன்றிக் காண்கிலீர்
உள்ளமே விளக்கிநித்த மொளியைய ணுக வல்லிரேல்
தெள்ளுஞான மும்முளே சிறந்ததேசி வாயமே. 495

காணவேண்டு மென்றுநீர் கடன்மலைக ளேறுவீர்
ஆணவம்ம தல்லவோ அறிவிலாத மாந்தரே
வேணுமென்றவ் வீசர்பாத மெய்யுளே தரிப்பிரேல்
தாணுவாக நின்றசீவன் ருன்சிவம தாகுமே. 496

அணுவினேடை கண்டமா யளவிடாத சோதியைக்
குணமதாக வும்முளேகுறித்து நோக்கின் முத்தியாம்
மிணமிணென்று விரலை யெண்ணுமீளொ ணு மயக்கமாய்த்
துணிவிலாத படியினுற் ரெடர்த்துபூசை செய்குவீர். 497

எச்சிலெச்சி லென்றுநீ ரிடைந்திருக்கு மேழைகாள்
துச்சிலெச்சி லல்லவோ தூயகாய மானதும்
வைச்சலெச்சில் தேனலோ வண்டினெச்சில் பூவலோ
கைச்சுதாவில் வைத்துடன் கறந்தபாலு மெச்சிலே. 498

தீர்த்தலிங்க மூர்த்தியென்று தேடியோடுத் தீதரே
தீர்த்தலிங்க முள்ளிநின்ற சீவனைத் தெளியுமே
தீர்த்தலிங்க மும்முளே தெளிந்துகாண வல்லிரேல்
தீர்த்தலிங்கந் தானதாய்ச் சிறந்ததேசி வாயமே. 499

ஆடுகொண்டு கூறுசெய் தமர்ந்திருக்கு மாறுபோல்
தேடுகின்ற செம்பினைத் திடப்படப்ப ரப்பியே
நாடுகின்ற தம்பிரானு நம்முளே யிருக்கவே
போடுதர்ப்ப பூசையொன்றும் பூசையென்ன பூசையே.

என்னை யற்பநேரமு மறக்கிலாத நாதனே
ஏகனே இறைவனே இராசராச ராசனே
உன்னையற்ப நேரமு மொழிந்திறக்க லாகுமோ
உனதுநாம மெனதுநாவி லுதவிசெய்க வீசனே. 501

எல்லையற்று நின்றசோதி யேகமா யெரிக்கவே
வல்லபூர ணப்ரகாச யோகபோக மாகியே
நல்லவின்ப மோன சாகரத்திலே யழுத்தியே
நாடொணுத வமிர்தமுண்டு நானழிந்து நின்றநாள். 502

ஆனவாற தாயிடு மகண்டமான சோதியை
ஊனைக்காட்டி யும்முளே யுகந்துகாண வல்லிரேல்
ஊனகாய மாளலா முலகபார மாளலாம்
வானநாடு மாளலாம் வண்ணைநாட ராணையே. 503

நித்தமும ணிதுலக்கி நீடுமூலை புக்கிருந்து
கத்தியேக தறியே கண்கள்மூடி என்பயன்
எத்தனைபே ரெண்ணினு மெட்டிரண்டும் பத்தலோ
அத்தனுக்கி தேற்றுமோ அறிவிலாத மாந்தரே. 504

எட்டிரண் டுங்கூடியே யிலிங்கமான தேவனை
மட்டதாக வும்முளே மதித்துநோக்க வல்லிரேல்
கட்டமான பிறவியென் கருங்கடல்க டக்கலாம்
இட்டமான வெளியினே டிசைந்திருப்பீர் காண்மினே.

உண்மையான மந்திரம் ஒளியிலேயி ருந்திடும்
தண்மையான மந்திரஞ் சமைந்துருப மாகியே
வெண்மையான மந்திரம் விளைந்துநீற தானதே
உண்மையான மந்திரம தொன்றுமேசி வாயமே. 506

பன்னிரண்டு நாளிருத்திப் பஞ்சவன்ன மொத்திட
மின்னியவ் வெளிக்குணின்று வேரெடுத் தமர்ந்து
சென்னியான தலத்திலே சீவனின்றி யங்கிடும்
பன்னியுன்னி யாய்ந்தவிர் பரப்பிரம்ம மாவரே. 507

தச்சுவா பி லுச்சிமே லாயிரந்த லங்களாய்
முச்சுடரு மூவிரண்டு மூண்டெழுந்த தீச்சுடர்
வச்சிரம தாகியே வளர்ந்துநின்ற தெவ்விடம்
இச்சுடரு மிந்திரியமு மேகமான தெங்ஙனே. 508

முத்திசித்தி தொந்தமாய் முயங்குகின்ற மூர்த்தியை
மற்றுதித்த வைம்புலன்க ளாகுமத்தி மப்புலன்
அத்தனித்த காலகண்ட ரன்பினு லனுதினம்
உச்சரித்து ளத்திலே யறிந்துணர்ந்து கொண்மினே. 509

அண்ணலா ரநாதியா யநாதிமு னநாதியாய்
பெண்ணுமாணு மொன்றலோ பிறப்பதாகு முன்னலோ
கண்ணிலானில் சுக்கிலங் கருத்தொடுங்கி நின்றபின்
மண்ணுளோரு விண்ணுளோரு வந்தவா றதெங்ஙனே.

எத்திசைக்கு மெவ்வுயிர்க்கு மெங்களப்ப னெம்பிரான்
முத்தியான வித்துளே முளைத்தெழுந்த செஞ்சுடர்
சித்தினிற் றெளிந்தபோது தேவர்கோயிற் சேர்ந்தன
னத்தனுடல் கண்டபோ தடங்கியாட லுற்றதே. 511

வல்லவாச லொன்பதும் மருத்தடைத்த வாசலும்
சொல்லும்வாச லோரைந்துஞ் சொல்லவிம்மி நின்றதும்
நல்லவாச லைத்திறந்து ஞானவாச லூடுபோய்
எல்லைவாசல் கண்டபின் இனிப்பிறப்ப தில்லையே. 512

ஆதியான தொன்றுமே யனேகரூப மாயமாய்ப்
பேதபேத மாயெழுந்து சர்வசீவ னனபின்
ஆதியோடு கூடிமீண் டெழுந்துசன்ம மானபின்
சோதியான ஞானியருஞ் சுத்தமா யிருப்பரே. 513

வண்டுபூ மணங்களோடு வந்திருந்த தேனெலாம்
உண்டுளே யடங்குவண்ண மோதுலிங்க மூலமாய்க்
கண்டுகண்டு வேரிலே கருத்தொடுங்க வல்லிரேல்
பண்டுகொண்ட வல்வினை பறந்திடுஞ்சி வாயமே. 514

ஓரெழுத்தி லிங்கமாக வோதுமக்க ரத்துளே
ஓரெழுத்தி யங்குகின்ற வுண்மையை யறிகிலீர்
மூவெழுத்தும் மூவராய் முளைத்தெழுந்த சோதியை
நாலெழுத்து நாவுளே நவின்றதேசி வாயமே. 515

தூரதூர தூரமுந் தொடர்ந்தெழுந்த தூரமும்
பாரபார மென்றுமே பரிந்திருந்த பாவிகாள்
நேரநேர நேரமு நினைந்திருக்க வல்லிரேல்
தூரதூர தூரமுந் தொடர்ந்துகூட லாகுமே. 516

குண்டலங்கள் பூண்டுநீர் குளங்கடோறு மூழ்கிறீர்
மண்டுகங்கள் போலநீர் மனத்தின்மாசு றுக்கிலீர்
மண்டையேந்து கையரை மனத்திருத்த வல்லிரேல்
பண்டைமால யன்றொழப் பணிந்துவாழ லாகுமே. 517

கூடுகட்டி முட்டையிட்டுக் கொண்டிருந்த வாறுபோல்
ஆடிரண்டு கன்றையீன்ற வம்பலத்து ளாடுதே
மாடுகொண்டு வெண்ணெயுண்ணு மானிடப் பசுக்களே
வீடுகண்டு கொண்டபின்பு வெட்டவெளியும் காணுமே.

உள்ளதோ பிறப்பதோ யுயிர்ப்படங்கி நின்றிடும்
மெள்ளவந்து கிட்டநீர் வினவவேண்டு மென்கிறீர்
உள்ளதும் பிறப்பது மொத்தபோது நாதமாங்
கள்ளவாச லைத்திறந்து காணவேண்டு மாந்தரே. 519

நட்டகல்லைத் தெய்வமென்று நாலுபுட்பஞ் சாத்தியே
சுற்றிவந்து முணமுணென்று சொல்லுமந்த்ர மேதடா
நட்டகல்லும் பேசுமோ நாதனுள்ளி ருக்கையில்
சுட்டசட்டி சட்டுவங் கறிச்சுவைய றியுமோ 620

நானுமல்ல நீயுமல்ல நாதனல்ல ஓதுவேன்
வானிலுள்ள சோதியல்ல சோதிநம்மு ளுள்ளதே
வானுநீயு மொத்தபோது நாடிக்காணு லாகுமே
தானதான தத்ததான நாதனான தானனே. 521

நல்லதல்ல கெட்டதல்ல நடுவில்நிற்ப தொன்றுதான்
நல்லதென்ற போதது நல்லதாகி நின்றுபின்
நல்லதல்ல கெட்டதென்றால் கெட்டதாகு மாதலால்
நல்லதென்று நாடிநின்று நாமஞ்சொல்லவேண்டுமே. 522

பேய்கள்கூடிப் பிணங்கள் தின்னும்பிரிய மில்லாக் காட்டி
நாய்கள்சுற்ற நடனமாடு நம்பன்வாழ்க்கை யேதடா[லே
தாய்கள்பா லுதிக்குமிச்சை தவிரவேண்டி நாடினல்
நோய்கள்பட்டு ழல்வதேது நோக்கிப்பாரு மும்முளே.

உப்பைநீக்கி லழுகிப்போகு மூற்றையாகு முடலில்நீ
அப்பியாசை கொண்டிருக்க லாதுமோசொ லறிவிலா
தப்பிலிப்பொய் மானங்கெட்ட தடியனுது மனமேகேள்
ஒப்பிலாச்செஞ்சடையனுது மொருவன்பாதமுண்மையே.

பிறப்பதெல்லா மிறப்பதுண்டு பேதைமக்கள் தெரிகிலா
திறப்ப தில்லை யெனமகிழ்ந்தே யெங்களுங்கள் சொத்
[தெனக்
குறிப்புப்பேசித்திரிவரன்றிக்கொண்டகோலமென்னவோ
நிறப்பும்பொந்தி யழிந்தபோது நேசமாமோ வீசனே.

சுட்டெரித்த சாந்துபூசுஞ் சுந்தரப்பெண் மதிமுகத்
திட்டநெட்டெ ழுத்தறியா தேங்கிநோக்கு மதவலீர்
பெட்டகத்துப் பாம்புறங்கும் பித்தலாட்ட மறியிரோ
கட்டவிழ்த்துப் பிரமன்பார்க்கில் கதியுமக்கு மேதுகாண்.

வேதமோது வேலையோ வீணதாகும் பாரிலே
காதகாத தூரமோடிக் காதல்பூசை வேணுமோ
ஆதிநாதன் வெண்ணெயுண்ட அவனிருக்க நம்முளே
கோதுபூசை வேதமேது குறித்துப்பாரு மும்முளே. 527

பரமிலாத தெவ்விடம் பரமிருப்ப தெவ்விடம்
அறமிலாத பாவிகட்குப் பரமில்லைய துண்மையே
கரமிருந்தும் பொருளிருந்தும் அருளிலாத போதது
பரமிலாத சூன்யமாகும் பாழ்நரக மாகுமே. 528

மாதர்தோள் சேராததேவர் மாநிலத்தி லில்லையே
மாதர்தோள்பு ணர்ந்தபோது மனிதர்வாழ்சி றக்குமே
மாதராகுஞ் சக்தியொன்று மாட்டிக்கொண்ட தாதலால்
மாதராகும் நீலிகங்கை மகிழ்ந்துகொண்டான் ஈசனே.

சித்தரென்றுஞ் சிறியரென்று மறியொணுத சீவர்காள்
சித்தரிங்கி ருந்தபோது பித்தரென்றே எண்ணுவீர்
சித்தரிங்கி ருந்துமென்ன பித்தனுட்டி ருப்பரே
அத்தனுடு மிந்தநாடு மவர்களுக்கெ லாமொன்றே. 530

மாந்தர்வாழ்வு மண்ணிலே மறந்தபோது விண்ணிலே
சாந்தனுன் ஆவியைச் சரிப்படுத்த வல்லிரேல்
வேந்தனுகி மன்றுளாடும் விமலன்பாதம் காணலாம்
கூந்தலம்மை கோணலொன்றுங் குறிக்கொணுதி துண்
[மையே. 531

சருகருந்தி நீர்குடித்துச் சாரல்வாழ் தவசிகாள்
சருகருந்தில் தேகங்குன்றிச் சஞ்சலமுண் டாகுமே
வருவிருந்தோ டுண்டுடுத்தி வளர்மனை சுகிப்பிரேல்
வருவிருந்தோ னீசனுகி வாழ்வளிக்குஞ் சிவாயமே. 532

காடுமேடு குன்றுபள்ளம் கானிறை கற்றியும்
நாடுதேசம் விட்டலைவர் நாதன்பாதங் காண்பரோ
கூடுவிட்ட கன்றுன்னுவி கூத்தனூர்க்கே நோக்கலால்
வீடுபெற்ற ரன்பதத்தில் வீற்றிருப்ப ரில்லையே. 533

கட்டையாற்செய் தேவருங் கல்லினுற்செய் தேவரும்
மட்டையாற்செய் தேவரும் மஞ்சளாற்செய் தேவரும்
சட்டையாற்செய் தேவரும் சாணியாற்செய் தேவரும்
வெட்டவெளிய தன்றிமற்று வேறுதெய்வ மில்லையே. 534

தங்கள்தேகம் நோய்பெறின் தணைப்பிடாரி கோயிலிற்
பொங்கல்வைத்தும் ஆடுகோழிப் பூசைப்பலியை இட்டிட
நங்கச்சொல்லு நலிமிதந்து நாளுந்தேய்ந்து மூஞ்சூராய்
உங்கள்குலத் தெய்வமுங்க ளுருக்குலைப்ப துண்மையே.

ஆசைகொண்ட னுதினமும் அன்னியர்பொ ருளினை
மோசஞ்செய்த பகரிக்க முற்றிலும்ம லைபவர்
பூசையோடு நேமநிட்டை பூரிக்கச்செய் பாதகர்
காசினியில் எழுநரகைக் காத்திருப்ப துண்மையே. 536

நேசமுற்றுப் பூசைசெய்து நீறுபூசிச் சந்தனம்
வாசமோட ணிந்துநெற்றி மைதிலர்த மிட்டுமே
மோசம்பொய்பு ணைசுருட்டு முற்றிலுஞ்செய் மூடர்காள்
வேசரிகளம்பு ரண்ட வெண்ணரிருகு மேனியே. 537

வாதஞ்செய்வேன் வெள்ளியும்பொன் மாற்றுயர்ந்த தங்கமும்
போதவேகுரு முடிக்கப் பொன்பணங்கள் தாவெனச் [
சா தனைசெய் தெத்திச்சொத்துத் தந்ததைக்க வர்ந்துமே
காததூர மோடிச்செல் வர் காண்பதும்ம ருமையே. 538

யோகசாடை காட்டுவார் உயரவும்மெ மும்புவார்
வேகமாக அட்டசித்து வித்தைகற்று நெட்டுவார்
மோகங்கொண்டு மாதரின் மூத்திரப்பை சிக்கிப்பின்
பேயதுபிடித்த வர்போற் பேருலகிற் சாவரே. 539

காயகாய முண்பதாகக் கண்டவர்ம தித்திட
மாயவித்தை செய்வதெங்கு மடிப்புமோசஞ் செய்பவர்
நேயமாக்கஞ் சாவடித்து நேரபினியைத் தின்பதால்
நாயதாக நக்கிமுக்கி நாட்டினில்லலைவரே. 540

நீரினிற்கு மிழியொத்த நிலையிலாத காயமென்
றூரினிற்ப றையடித்து உதாரியாய்த்தி ரிபவர்
சீரினில்லு னக்குஞான சித்திசெய்வேன் பாரென
நேரினிற்பி றர்பொருளை நீளவுங்கைப் பற்றுவர். 541

காவியுஞ் சடைமுடி கமண்டலங்க ளாசனம்
தாவுருத்தி ராட்சம்யோகத் தண்டுகொண்ட மாடுகள்
தேவியை யலையவிட்டுத் தேசமெங்குஞ் சுற்றியே
பாவியென்ன வீடெலாம் பருக்கை கேட்டலைவரே. 542

முத்திசேறச் சித்தியிங்கு முன்னளிப்பேன் பாரெனச்
சத்தியங்கள் சொல்லியெங்குஞ் சாமிவேடம் பூண்டவர்
நித்தியம்வ யிறுவளர்க்க நீதிஞானம் பேசியே
பத்தியாய்ப்ப ணம்பறித்துப் பாழ்நரகில் வீழ்வரே. 543

செம்மை சேர்மரத்திலே சிலைதலைகள் செய்கிறீர்
கொம்மையற்ற கிளையில் பாத குறடுசெய் தழிக்கிறீர்
நும்முளே விளங்குவோனை நாடி நோக்க வல்லிரேல்
இம்மைமும் மும்மையும் மெம்மையு மல்லவே. 544

எத்திசையெங் கெங்குமோடி எண்ணிலாத நதிகளில்
சுற்றியுந் தலைமுழுகச் சுத்தஞானி யாவரோ
பத்தியோட ரன்பதம் பணிந்திடாத பாவிகாள்
முத்தியின்றிப் பாழ்நரகில் மூழ்கி நொந்தலைவரே. 545

கல்லுவெள்ளி செம்பிரும்பு காய்ச்சிடுந்த ராக்களில்
வல்லதேவ ரூபபேத மங்கமைத்துப் போற்றிடின்
தொல்லையற்றி டப்பெருஞ் சுகந்தருமோ சொல்லுவீர்
இல்லை இல்லை இல்லையில்லை ஈசனாணை இல்லையே. 546

இச்சகஞ்ச னித்ததுவும் ஈசனைந் தெழுத்திலே
மெச்சவுஞ்ச ராசரங்கள் மேவுமைந் தெழுத்திலே
உச்சிதப்ப லவுயிர்கள் ஒங்கலஞ் செழுத்திலே
நிச்சயமெய்ஞ் ஞானபோதம் நிற்குமைந்தெ ழுத்திலே.

சாத்திரங்கள் பார்த்துப்பார்த்துத் தாங்குருடா வதலால்
நேத்திரங்கெ டவெய்யோனை நேர்துதிசெய் மூடர்காள்
பாத்திர மறிந்துபோன பத்திசெய்ய வல்லிரேல்
சூத்திரப்படி யாவருஞ் சுத்தராவ ரங்ஙனே. 548

மனவுறுதி தானிலாத மட்டிப் பிணமாடுகள்
சினமுறப்பி றர்பொருளைச் சேகரித்து வைத்ததைத்
தினந்தினம்மு ரெங்குஞ்சுற்றித் திண்டிக்கே யலைபவர்
இனமதிற் பலர்கள்வையும் இன்பமற்ற பாவிகள். 549

சிவாயவசி யென்னவுஞ் செபிக்க இச்சகமெலாம்
சிவாயவசி யென்னவுஞ் செபிக்கயாவுஞ் சித்தியாம்
சிவாயவசி யென்னவுஞ் செபிக்கவான மாளலாம்
சிவாயவசி யென்பதே இருதலைத் தீயாகுமே. 550

சிவவாக்கியர் பாடல் முற்றிற்று

---

## பட்டினத்தடிகள்

# வரலாற்றுச் சுருக்கம்

நம் தென்னாட்டின் திலகமெனத் திகழ்ந்து வந்த காவிரிப் பூம் பட்டினத்தனவின் மிகு சிறப்பில் மயங்கிய குபேரனானவன் சிவாஞ்ஞைப்படி அக்காவிரி பூம் பட்டினத்திலே சிவநெறிச் செல்வரான சிவநேச செட்டியார் என்னும் வைசியப் பிரபுவின் மனைவியாராகிய ஞானகலை என்பாருக்கு மைந்தராய்ப் பிறந்து சுவேதாரண்யர் எனனும் பெயரிடப்பெற்று கலலாசிரியரிடத்துச் சகல கலைகளையும் பழுதற வோதியுணர்ந்து இளம் பிராயத்திலேயே பக்குவராய்ச் சிவபக்தி அடியார் பக்திகளிற் சிறந்து ஒழுகி வரலாயினர் பின்னர் சிவகலை என்னுங் குணவதியை மணந்து இல்லறக் கடன்களை வழுவாதியற்றிக் குலத்தொழிலாகிய பொருளீட்டுதலை மேற்கொண்டு தாயமரபினர்களுள் மேம்பட்டுத் தம்மை யாவரும பட்டினத்து செட்டியார் என்று சிறப்புப் பெயரிட்டு வழங்க வாழ்ந்து வருகையில மகப்பேறின்றி வருந்தலாயினர்.

அக்கால், திருவிடைமருதூரிலே ஆதி சைவராகிய சிவசருமர், சுசீலை என்னும் தம்பதிகள் தமது செல்வ முழுவதையும் சிவனடியார் பூசையில் செலவழித்து வறுமையுற்றிருக்கையில் சிவபெருமான் அவர்கள் கனவில் தோன்றி "நாம் வில்வ விருட்சத்தினடியில் மகவுருக்கொண்டிருப்போம் நீங்கள் அக்குழவியைக் கொண்டுத்துச் சென்று காவிரிப்பூம் பட்டினத்திலுள்ள சுவேதாரண்யர் வசம் ஒப்புவித்துக் குழவியினெடைப் பொன் பெற்று தரித்திரமை நீர்த்தொழுகுவீராக" என்ற கட்டளைப்படி அவர்கள் அவ்விதம் கொண்டேக. சிவபெருமான் சுவேதாரண்யர் கனவிலும் தோன்றி இதுபற்றிக தெரிவிக்க. சுவேதாரண்யர் மிக மகிழ்ச்சியுடன் அக்குழவியை ஏற்று பொன் தந்து களிப்பெய்தி மருதப்பிரான் எனப் பெயரிட்டு வளர்த்து வரலாயினர்.

பின்னர் மருதப்பிரானின் பதினாறுமாண்டில் ஒரு நாள் சுவேதாரண்யர் சற்றே சஞ்சலமுற்றிருக்கையில அவர் மனைவியார் ஒரு சிறு பெட்டியை அவர் முன் வைத்து "இதனைத் தங்களிடம்

தருமாறு எம் புதல்வன் தந்துபோயினன்" எனவும், புதல்வனைக் காணாத பட்டினத்தார் பேராவலுடன் அதனைத் திறந்து பார்க்கையில் அதனுள் ஒரு காதற்ற ஊசியும், 'காதற்ற ஊசியும் வாராதுகாண் கடைவழிக்கே" என்று எழுதியிருந்த ஓலைச் சீட்டொன்றுமிருக்கக் கண்டு, தமது பூர்வ வாசனையினாலும் சிவபெருமான் திருவருள் நோக்கத்தாலும் அதி தீவிரப் பக்குவராய்ச் சஞ்சல நீங்கித் தெளிவெய்தி, தமது குபேரச் செல்வமனைத்தையும் ஊரிலுள்ளோரனைவரும் எடுத்துச் செல்லக் கட்டளையிட்டுத் துறவறம பூண்டார்.

இவ்வரிய துறவுபூண்ட பட்டினத்தடிகள் பெரும் பித்தர் போலத் திரிதல் தம் குலப் பெருமைக் கிழுக்கென்று கருதிய தமக்கையார் நஞ்சூட்டிய அப்பத்தை இவருக்கு உண்ணத் தரவும் "அதையுணர்ந்த அடிகள் தன்வினை தன்னைச்சுடும், ஓட்டப்பம் வீட்டைச்சுடும்" எனக்கூறி அதனை வீட்டின் கூரையில் வைக்க அவ்வீடு எரிந்தொழிந்தது.

மாபெருந் துறவுபூண்டும் தம் அருமை அன்னையாருக்கு ஆற்றவேண்டிய இறுதிக்கடனை முடிக்குந்தனையும் "குடியிருந்த வீட்டிற்குக் கொள்ளி வைக்கவேண்டும்" எனச் சொல்லி, சிவ தீக்ஷையிலிருந்து வந்த அடிகளார் தேகவியோகமடைந்த அன்னையின் உடலத்தை பச்சை வாழை மட்டைமேற் கிடத்தி சில பாடல்களைப் பாட அச்சிதை பற்றி யெரியச் சடங்கினை முடிப்பித்து அங்கிருந்து நீங்கி திருத்தலங்கள் பலவற்றிற்குஞ் சென்று திருப்பாடல்கள் பலவும் பாடித் துதித்து யோகசித்தி கைவரப் பெற்றவராய் அற்புதங்கள் பலவு நிகழ்த்துவித்து இறுதியில் திருவொற்றியூரை யடைந்து ஒறற்பூசைப் பலமுறை பண்ணி, கோபாலச் சிறுவர்களுடன் கூடி வித்தகம் பல விளைத்து தம் உடலை நீத்துச் சிவலிங்க வுருவாகக் காட்டி முக்தியடைந்து சிவபெருமானின் திருவருளைப் பெற்றனர்

சென்னையைச் சார்ந்த திருவொற்றியூர்க் கடற்கரை யோரம் இப்பொழுது அவ்விடத்தில் அவர் பேரால் ஓர் ஆலயஞ் சமைக்கப் பட்டிருக்கின்றது.

பட்டினத்தடிகள் வரலாற்றுச் சுருக்கம் முற்றிற்று.

———

## பட்டினத்தடிகள்

# திருப்பாடற்றிரட்டு

### முதலாவது

## கோயிற்றிருவகவல்

திருச்சிற்றம்பலம்

நிலமண்டில ஆசிரியப்பா

நினைமின் மனனே நினைமின் மனனே
சிவபெரு மானைச் செம்பொனம் பலவனை
நினைமின் மனனே நினைமின் மனனே
அலகைத் தேரின் அலமரு காலின்
உலகப்பொய் வாழ்க்கையை யுடலையோம் பற்க
பிறந்தன இறக்கும் இறந்தன பிறக்கும்
தோன்றின மறையும் மறைந்தன தோன்றும்
பெருத்தன சிறுக்கும் சிறுத்தன பெருக்கும்
உணர்ந்தன மறக்கும் மறந்தன வுணரும்
புணர்ந்தன பிரியும் பிரிந்தன புணரும்
அருந்தின மலமாம் புனைந்தன அழுக்காம்
உவப்பன வெறுப்பாம் வெறுப்பன வுவப்பாம்
என்றிவை யனைத்தும் உணர்ந்தனை யன்றியும்
பிறந்தன பிறந்தன பிறவிக டோறும்
கொன்றனை யனைத்தும் அனைத்துநினைக் கொன்றன
தின்றனை யனைத்தும் அனைத்துநினைத் தின்றன
பெற்றனை யனைத்தும் அனைத்துநினைப் பெற்றன
ஓம்பினை யனைத்தும் அனைத்துநினை யோம்பின
செல்வத்துக் களித்தனை தரித்திரத் தழுங்கினை
சுவர்க்கத் திருந்தனை நரகிற் கிடந்தனை
இன்பமுந் துன்பமும் இருநிலத் தருந்தினை

ஒன்றென் றொழியா துற்றனை அன்றியும்
புற்புதக் குரம்பை துச்சி லொதுக்கிடம்
என்னநின் றியங்கும் இருவினைக் கூட்டைக்
கல்லினும் வலிதாக் கருதினை இதனுள்
பீளையும் நீரும் புறப்படும் ஒருபொறி
மீளுங் குறும்பி வெளிப்படும் ஒருபொறி
சளியும் நீரும் தவழும் ஒருபொறி
உமிழ்நீர் கோழை ஒழுகும் ஒருபொறி
வளியும் மலமும் வழங்கும் ஒருவழி
சலமும் சீயுஞ் சரியும் ஒருவழி
உள்ளூறத் தொடங்கி வெளிப்பட நாறுஞ்
சட்டகம் முடிவிற் சுட்டெலும் பாகும்
உடலுறு வாழ்க்கையை உள்ளூறத் தேர்ந்து
கடிமலர்க் கொன்றைச் சடைமுடிக் கடவுளை
ஒழிவருஞ் சிவபெரும் போக வின்பத்தை
நிழலெனக் கடவா நீர்மையொடு பொருந்தி
எனதற நினைவற இருவினை மலமற
வரவொடு செலவற மருளற இருளற
இரவொடு பகலற இகபரம் அறவொரு
முதல்வனைத் தில்லையுள் முளைத்தெழுஞ் சோதியை
அம்பலத் தரசனை ஆனந்தக் கூத்தனை
நெருப்பினி லரக்கென நெக்குநெக் குருகித்
திருச்சிற் றம்பலத் தொளிருஞ் சிவனை
நினைமின் மனனே நினைமின் மனனே
சிவபெரு மானைச் செம்பொனம் பலவனை
நினைமின் மனனே நினைமின் மனனே.

திருச்சிற்றம்பலம்

---

## இரண்டாவது

## கோயிற்றிருவகவல்

நேரிசை ஆசிரி

காதள வோடிய கலகப் பாதகக்
கண்ணியர் மருங்கிற் புண்ணுட னுடுங்
காதலுங் கருத்துமல் லால்நின் னிருதாட்
பங்கயஞ் சூடப் பாக்கியஞ் செய்யாச்
சங்கடங் கூர்ந்த தமியேன் பாங்கிருந்
தங்கோ டிங்கோ டலமருங் கள்வர்
ஐவர் கலகமிட் டலைக்குங் கானகம்
சலமலப் பேழை இருவினைப் பெட்டகம்
வாதபித் தங்கோ ழை குடிபுகுஞ் சிற்றூர்
ஊத்தைப் புன்தோல் உதிரக் கட்டளை
நாற்றப் பாண்டம் நான்முழத் தொன்பது
பீற்றற் றுண்டம் பேய்ச்சுரைத் தோட்டம்
அடலைப் பெரிய சுடலைத் திடருள்
ஆசைக் கயிற்றில் ஆடும் பம்பரம்
ஓயா நோய்க்கிடம் ஓடு மரக்கலம்
மாயா விகார மரணப் பஞ்சரம்
சோற்றுத் துருத்தி தூற்றும் பத்தம்
காற்றிற் பறக்கும் கானப் பட்டம்
விதிவழித் தருமன் வெட்டுங் கட்டை
சதுர்முகப் பாணன் தைக்குஞ் சட்டை
ஊமக் கனலி லிடுசில விருந்து
காமக் கனலிற் கருகுஞ் சருகு
கிருமி கிண்டுங் கிழங்கஞ் சருமி
பவக்கொழுந் தேறுங் கவைக்கொழு கொம்பு
மணமாய் நடக்கும் வடிவின் முடிவிற்

பிணமாய்க் கிடக்கும் பிண்டம் பிணமேல்
ஊரிற் கிடக்க வொட்டா வுபாதி
காலெதிர் குவிந்த பூளை காலைக்
கதிரெதிர் பட்ட கடும்பனிக் கூட்டம்
அந்தரத் தியங்கும் இந்திர சாபம்
அதிரு மேகத் துருவி னருநிழல்
நீரிற் குமிழி நீர்மே லெழுத்து
கண்டுயில் கனவிற் கண்டகண் காட்சி
அதனினும் பொல்லா மாயக் களங்கம்
அமையும் அமையுர் பிரானே அமையும்
இமைய வல்லி வாழியென் றேத்த
ஆனந்தத் தாண்டவங் காட்டி
ஆண்டுகொண் டருள்கைநின் அருளினுக் கழகே.

---

## மூன்றாவது

## கோயிற்றிருவகவல்

---

### இணைக்குறள் ஆசிரியப்பா

பாற்கடல் கடையப் படுங்கடு வெண்ணெயைத்
திருமிடற் றடங்கிய சிவனே அடைக்கலம்
அடங்கலும் அடக்கிடுங் கடுக்கொலைக் காலனைக்
காலெடுத் தடக்கிய கடவுணின் அடைக்கலம்
உலகடங் கலும்படைத் துடையவன் தலைபறித்
திடக்கையி லடக்கிய இறைவனின் அடைக்கலம்
செய்யபொன் னம்பலச் செல்வனின் அடைக்கலம்
ஐயநின் னடைக்கலம் அடியனின் னடைக்கலம்
மனைவழி யலைத்திடுங் கனவேனும் வாழ்க்கையும்
விழுப்பொரு ளறியா அழுக்குறு மனனும்

ஆணவ மலத்துதித் தளைந்ததில் உளைந்திடும்
நினைவைப் புழுவென நெளிந்திடு சிந்தையும்
படிறும் பாவமும் பழிப்புறு நினைப்பும்
தவறும் அழுக்காறும் இவறுபொச் சாப்பும்
கவடும் பொய்யுஞ் சுவடும் பெருஞ்சின
இகலுங் கொலையும் இழிப்புறு புன்மையும்
பகையும் அச்சமும் துணிவும் பனிப்பும்
முக்குண மடமையு மைம்பொறி மயக்கமும்
இடும்பையும் பிணியும் இடுக்கிய ஆக்கையை
உயிரெனும் குருகுவிட் டோடுங் குரம்பையை
எலும்பொடு நரம்புகொண் டிடையிற் பிணித்துக்
கொழுந்தசை மேய்ந்து மெழுக்குவிழுங் குடிலைச்
செழும்பெழு வுதிரச் சிறுபுழுக் குரம்பையை
மலவுடற் குடத்தை புலவுடற் புட்டிலைத்
தொலைவிலாச் சோற்றுத் துன்பக் குழியைக்
கொலைப்படைக் கலம்பல கிடக்குங் கூட்டைச்
சலிப்புறு வினைப்பல சரக்குக் குப்பையைக்
கோட்சரக் கொழுகும் பீற்றற் கோணியைக்
கோபத்தீ மூட்டுங் கொல்லன் துருத்தியை
ஐம்புலப் பறவை யடையும்பஞ் சரத்தைப்
புலராக் கவலை விளைமரப் பொதும்பை
ஆசைக் கயிற்றி லாடும்பம் பரத்தைக்
காசிற் பணத்திற் சுழலுங்காற் றாடியை
மக்கள் வினையின் மயக்குந் திகிரியைக்
கடுவெளி யுருட்டிய சகடக் காலைப்
பாவச் சரக்கொடு பவக்கடல் புக்குக்
காமக் காற்றெடுத் தலைப்பக்
கெடுவழிக் கரைசேர் கொடுமரக் கலத்தை
இருவினை விலங்கொடும் இயங்குபுற் கலனை
நடுவன்வந் தழைத்திட நடுங்கிடும் யாக்கையைப்

பிணமெனப் படுத்தியான் புறப்படும் பொழுதுநின்
அடிமலர்க் கமலததுக் கபய நின்னடைக்கலம்
வெளியிடை யுருமிடி யிடித்தென வெறித்தெழுங்
கடுநடை வெள்விடைக் கடவுணின் னடைக்கலம்
இமையா நாட்டத் திறையே அடைக்கலம்
அடியார்க் கெளியாய் அடைக்கல மடைக்கலம்
மறையவர் தில்லை மன்றுணின் றாடிக்
கருணைமொண் டலையெறி கடலே அடைக்கலம்
தேவரு முனிவருஞ் சென்றுநின் றேத்தப்
பாசிழைக் கொடியொடு பரிந்தருள் புரியும்
எம்பெரு மானின் னிணையடிக் கபயம்
அம்பலத் தரசசே அடைக்கல முனக்கே.

---

## நான்காவது

# கச்சித் திருவகவல்

---

### நிலைமண்டில ஆசிரியப்பா

திருமால் பயந்த திசைமுக னமைத்து
வருமேழ் பிறவியு மானிடத் துதித்து
மலைமகள் கோமான் மலரடி யிறைஞ்சிக்
குலவிய சிவபதங் குறுகா தவமே
மாதரை மகிழ்ந்து காதல்கொண் டாடும்
மானிடர்க் கெல்லாம் யானெடுத் துரைப்பேன்
விழிவெளி மாக்கள் தெளிவுறக் கேண்மின்
முள்ளும் கல்லும் முயன்று நடக்கும்
உள்ளங் காலைப் பஞ்சென வுரைத்தும்
வெள்ளெலும் பாலே மேவிய கணைக்கால்

தள்ளும் வராலெனச் சொல்லித் துதிக்கும்
தசையு மெலும்புந் தக்கபுன் குறங்கை
இசையுங் கதலித் தண்டென இயம்பியும்
நெடுமுடல் தாங்கி நின்றிடும் இடையைத்
துடிபிடி யென்று சொல்லித் துதித்தும்
மலமுஞ் சலமும் வழும்புந் திரையும்
அலையும் வயிற்றை ஆலிலை யென்றும்
சிலந்தி போலக் கிளைத்துமுன் னெழுந்து
திரண்டு விம்மிச் சீப்பாய்த் தேறி
உகிராற் கீற வுலர்ந்துள் ளுருகி
நகுவார்க் கிடமாய் நான்று வற்றும்
முலையைப் பார்த்து முளரிமொட் டென்றும்
குலையுங் காமக் குருடர்க் குரைப்பேன்
நீட்டவும் முடக்கவும் நெடும்பொருள் வாங்கவும்
ஊட்டவும் பிசையவு முதவியிங் கியற்றும்
அலங்கையைப் பார்த்துக் காந்தளென் றுரைத்தும்
வேர்வையும் அழுக்கும் மேவிய கழுத்தைப்
பாரினி லினிய கமுகெனப் பகர்ந்தும்
வெப்பும் ஊத்தையும் மேவிய வாயைத்
துப்பு முருக்கின் தூய்மல ரென்றும்
அன்னமுங் கறியும் அசைவிட் டிறக்கும்
முன்னிய பல்லை முத்தென மொழிந்தும்
நீருஞ் சளியும் நின்றுநின் றொழுகும்
கூரிய மூக்கைக் குமிழெனக் கூறியும்
தண்ணீர் பீளை தவிரா தொழுகும்
கண்ணைப் பார்த்துக் கழுநீ ரென்றும்
உள்ளுங் குறும்பி யொழுகுங் காதை
வள்ளைத் தண்டின் வளமென வாழ்த்தியும்
கையுமெண் ணெயுங் கல்வா தொழியில்
வெய்ய அதரும் பேனும் விளையத்
தக்க தலையோட் டின்முளைத் தெழுந்த

சிக்கின் மயிரைத் திரண்முகி லென்றும்
சொற்பல பேசித் துதித்து நீங்கள்
நச்சிச் செல்லும் நரக வாயில்
தோலும் இறைச்சியுந் துதைந்துசீப் பாயும்
காமப் பாழி கருவிளை கழனி
தூமைக் கடைவழி தொலைபெறு வாயில்
எண்சா ணுடம்பும் இழியும் பெருவழி
மண்பாற் காமம் கழிக்கு மறைவிடம்
நச்சிக் காமுக நாய்தா னென்றும்
இச்சித் திருக்கு மிடைகழி வாயில்
திங்கட் சடையோன் திருவரு ளில்லார்
தங்கித் திரியுஞ் சவலைப் பெருவழி
புண்ணிது வென்று புடவையை மூடி
உண்ணீர் பாயும் ஓசைச் செழும்புண்
மால்கொண் டறியா மாந்தர் புகும்வழி
நோய்கொண் டொழியா நுண்ணியர் போம்வழி
தருக்கிய காமுகர் சாரும் படுகுழி
செருக்கிய காமுகர் சேருஞ் சிறுகுழி
பெண்ணும் ஆணும் பிறக்கும் பெருவழி
மலஞ்சொரிந் திழியும் வாயிற் கருகே
சலஞ்சொரிந் திழியுந் தண்ணீர் வாயில்
இத்தை நீங்க ளினிதென வேண்டா
பச்சிலை யிடினும் பத்தர்க் கிரங்கி
மெச்சிச் சிவபத வீடருள் பவனை
முத்தி நாதனை மூவா முதல்வனை
அண்டர் அண்டமும் அனைத்துள புவனமும்
கண்ட அண்ணலைக் கச்சிற் கடவுளை
ஏக நாதனை இணையடி யிறைஞ்சுமின்
போக மாதரைப் போற்றுத லொழிந்ததே.

— —

# திருவேகம்பமாலை

கட்டளைக் கலித்துறை

அறந்தான் இயற்றும் அவனிலுங் கோடி அதிக மில்லம், துறந்தான் அவனிற் சதகோடி உள்ளத் துறவுடையோன், மறந்தான் அறக்கற் றறிவோடிருந்திரு வாதனையற்று, இறந்தான் பெருமையை என்சொல்லு வேன்கச்சி ஏகம்பனே. 1

கட்டிஅணைத்திடும் பெண்டிரும் மக்களுங் காலத்தச்சன்
வெட்டிமுறிக்கும் மரம்போற் சரீரத்தை வீழ்த்திவிட்டால்
கொட்டி முழக்கி அழுவார் மயானங் குறுகியப்பால்
எட்டி யடிவைப்ப ரோவிறை வாகச்சி ஏகம்பனே. 2

கைப்பிடிநாயகன் தூங்கையிலே யவன்கையை யெடுத்து
அப்புறந் தன்னில் அசையாமல் முன்வைத்தயல்வளவில்
ஒப்புடன் சென்று துயினித்துப் பின்வந் துறங்குவளை
எப்படி நானம்பு வேன்இறை வாகச்சி ஏகம்பனே. 3

நன்னாரிற் பூட்டிய சூத்திரப் பாவைநன் னூர்தப்பினால்[ல்
தன்னாலு மாடிச்சலித்திடுமோ அந்தத் தன்மையைப்போ
உன்னா லியானுந் திரிவதல் லான்மற் றுனைப்பிரிந்தால்
என்னாலிங் காவதுண் டோவிறை வாகச்சி ஏகம்பனே. 4

நல்லா ரிணக்கமும் நின்பூசை நேசமும் ஞானமுமே, அல்லாது வேறு நிலையுளதோ அகமும்பொருளும், இல்லா ளுஞ் சுற்றமும் மைந்தரும் வாழ்வும் எழிலுடம்பும், எல் லாம் வெளிமயக் கேயிறை வாகச்சி ஏகம்பனே. 5

பொல்லா தவனெறி நில்லா தவனைப் புலன்கட மை
வெல்லா தவன்கல்வி கல்லா தவன்மெய் யடியவர்பால்
செல்லா தவனுண்மை சொல்லா தவனின் திருவடிக்கன்பு
இல்லா தவன்மண்ணில் ஏன்பிறந்தேன்கச்சி ஏகம்பனே.

பிறக்கும் பொழுது கொடுவந்ததில்லை பிறந்துமண்மேல்
இறக்கும் பொழுது கொடுபோவதில்லை இடைநடுவிர்
குறிக்குமிச் செல்வஞ் சிவன்றந்ததென்று கொடுக்கறியாது
இறுக்குந் துலாமருக் கென்சொல்லுவேன் கச்சி ஏகம்பனே.

அன்ன விசாரம் அதுவே விசாரம் அதுவொழிந்தாற்
சொன்ன விசாரந் தொலையா விசாரநற் றேமையரைப்
பன்ன விசாரம் பலகால் விசாரமிப் பாவிநெஞ்சுக்கு
என்ன விசாரம்வைத் தாயிறை வாகச்சி ஏகம்பனே. 8

கல்லாப் பிழையுங் கருதாப் பிழையுங் கசிந்துருகி, நில்லாப் பிழையும் நினையாப் பிழையுநின் அஞ்செழுத்தைச், சொல்லாப் பிழையுந் துதியாப் பிழையுந் தொழாப்பிழையும், எல்லாப் பிழையும் பொறுத்தருள் வாய்கச்சி ஏகம்பனே. 9

மாயநட் போரையும் மாயாமலமெனும் மாதரையும்
வீயவிட் டோட்டி வெளியே புறப்பட்டுமெய்யருளா ந்[ந்து
தாயுடன் சென்றுபின் தாதையைக் கூடிப்பின் தாயைமற
ஏயும தேநிட்டை யென்றுன் எழிற்கச்சி ஏகம்பனே. 10

வரிக்கோல வேல்விழி யாரனுராக மயக்கிற்சென்று [லம்
சரிக்கோது வேனெழுத் தஞ்சுஞ் சொல்லேன் தமியேனுட
நரிக்கோ கழுகு பருந்தினுக் கோவெய்ய நாய்தனக்கோ
எரிக்கோ இரையெதற் கோவிறை வாகச்சி ஏகம்பனே.

காதென்று மூக்கென்று கண்ணென்று காட்டியென் கண்ணெதிரே, மாதென்று சொல்லி வருமாயை தன்னை மறலிவிட்ட, தூதென்றெண் ணுமற் சுகமென்று நாடுமித் துர்ப்புத்தியை, ஏதென் றெடுத்துரைப் பேணிறை வாகச்சி ஏகம்பனே. 12

ஊருஞ் சதமல்ல உற்றார் சதமல்ல உற்றுப்பெற்ற
பேருஞ் சதமல்ல பெண்டிர் சதமல்ல பிள்ளைகளுஞ்
சீருஞ் சதமல்ல செல்வஞ் சதமல்ல தேசத்திலே
யாருஞ் சதமல்ல நின்றாள் சதங்கச்சி ஏகம்பனே. 13

சீறும் வினையது பெண்ணுரு வாகித் திரண்டுருண்டு
கூறும்முலையும் இறைச்சியுமாகிக் கொடுமையினல்
பீறும் மலமும் உதிரமுஞ் சாயும் பெருங்குழிவிட்டு
ஏறுங்கரைகண்டி லேனிறை வாகச்சி ஏகம்பனே. 14

பொருளுடையோரைச் செயலினும் வீரரைப் போர்க்களத்துந், தெருளுடையோரை முகத்தினுந் தேர்ந்து தெளிவதுபோல், அருளுடையோரைத் தவத்திற் குணத்தில் அருளிலன்பில், இருளறு சொல்லினுங் காணத்தகுங் கச்சி ஏகம்பனே. 15

பருத்திப் பொதியினைப் போலவே வயிறு பருக்கத்தங்கள்
துருத்திக் கறுசுவை போடுகின் றூர்துறந் தோர்தமக்கு
வருந்தி அமுதிட மாட்டா ரவரையிம் மாநிலத்தில்
இருத்திக்கொண் டேனிருந் தாயிறை வாகச்சிஏகம்பனே.

பொல்லா இருளகற் றுங்கதிர் கூகையென் புட்கண்ணிலுக்கு, அல்லா யிருந்திடும் ஆறெக்கு மேஅறி வோருளத்தில், வல்லார் அறிவார் அறியார் தமக்கு மயக்கங்கண்டாய் எல்லாம் விழிமயக் கேயிறை வாகச்சி ஏகம்பனே. 17

வாதுக்குச் சண்டைக்குப் போவார்வருவார் வழக்குரைப்
தீதுக்குதவியுஞ் செய் திடுவார் தினந்தேதியொன்று [பார்
மாதுக் களித்து மயங்கிடுவார் விதி மாளுமட்டும்
ஏதுக் கிவர்பிறந் தார் இறை வாகச்சி ஏகம்பனே. 18

ஓயாமற் பொய்சொல்வர் நல்லோரை நிந்திப்பர் உற்றுப்பெற்ற, தாயாரைவைவர் சதியா யிரஞ்செய்வர் சாத்திரங்கள், ஆயார் பிறக்குபகாரஞ்செய் யார்தமை அண்டினர்க்கொன்று, ஈயார் இருந்தென்ன போயென்ன காண் கச்சி ஏகம்பனே. 19

அப்பென்றும் வெண்மைய தாயினும் ஆங்கந்நிலத்தியல்பாய்த், தப்பின்றி யேகுண வேற்றுமை தான்பல சார்தலினல், செப்பில் அபக்குவம் பக்குவ மாயுள்ள சீவரிலும், இப்படியேநிற்பன் எந்தைபிரான்கச்சிஏகம்பனே.

நாயாய்ப் பிறந்திடின் நல்வேட்டையாடி நயம்புரியும்
தாயார் வயிற்றில் நரராய்ப் பிறந்தபின் சம்பன்னராய்க்
காயா மரமும் வறளாங் குளமுங்கல் லாவுமன்ன
ஈயா மனிதரை ஏன்படைத் தாய்கச்சி ஏகம்பனே. 21

ஆற்றிற் கரைத்த புளியாக்கி டாமலென் அன்பை
யெல்லாம். போற்றித் திருவுளம் பற்றுமை யாபுர மூன்
றெரித்துக் கூற்றைப் பணிகொளுந் தாளுடையாய்குன்ற
வில்லுடையாய். ஏற்றுக் கொடியுடையாய் இறைவா கச்சி
ஏகம்பனே. 22

பெண்ணாகி வந்தொரு மாயப்பிசாசம்பிடித்திட்டென்னைக்
கண்ணால் வெருட்டி முலையால் மயக்கிக் கடிதடத்துப் [க
புண்ணாங் குழியிடைத் தள்ளியென் போதப்பொருள்பறிக்
எண்ணாது உனைமறந் தேனிறை வாகச்சி ஏகம்பனே. 23

நாவாரவேண்டும் இதஞ்சொல்லுவார் உனைநான்
பிரிந்தாற், சாவேன் என்றேயிருந் தொக்கவுன்பார்கள்
கைதான் வறண்டாற், போய்வாரும் என்று நடுத்தலைக்
கேகுட்டும் பூவையருக்கு, ஈவார்தலைவிதி யோஇறை
வாகச்சி ஏகம்பனே. 24

கல்லார் சிவகதை நல்லோர் தமக்குக் கனவிலுமெய்
சொல்லார் பசித்தவர்க் கன்னங்கொடார் குருசொன்னபடி
நில்லார் அறத்தை நினையார் நின்னுமம்நினைவிற் சற்றும்
இல்லாற் இருந்தென் இறந்தென் புகல்கச்சி ஏகம்பனே.

வானமுதத்தின் சுவையறி யாதவர் வண்கனியின்
தானமு தத்தின்சுவையெண்ணல்போலத்தனித்தனியே
தேனமு தத்தின் தெளிவாய ஞானஞ் சிறிதுமில்லார்க்கு
ஊனமு தச்சுவை நன்றல்ல வோகச்சி ஏகம்பனே. 25

ஊற்றைச் சரீரத்தை ஆபாசக் கொட்டிலை ஊன்பொதிந்த
பீற்றற் றுருத்தியைச் சோறிடுந் தோற்பையைப் பேசரிய
காற்றிற் பொதிந்த நிலையற்ற பாண்டத்தைக் காதற்செய்
தேற்றுத் திரிந்துவிட்டேன் இறைவாகச்சி ஏகம்பனே. [தே

சொல்லால் வருங்குற்றம் சிந்தனை யால்வருந் தோடஞ்
[செய்
பொல்லாத தீவினை பார்வையிற் பாவங்கள்புண்ணிய நூல்
அல்லாத கேள்வியைக் கேட்டிடுந் தீங்குக ளாயவுமற்று
எல்லாப் பிழையும் பொறுத்தருள் வாய்கச்சி ஏகம்பனே.

முட்டற்ற மஞ்சளை எண்ணெயிற் கூட்டி முகமினுக்கி
மெட்டிட்டுப் பொட்டிட்டுப் பித்தளை ஓலை விளக்கிபிட்டுப்
பட்டப் பகலில் வெளிமயக் கேசெயும் பாவையர்மேல்
இட்டத்தை நீதவிர்ப் பாயிறை வாகச்சி ஏகம்பனே. 29

பிறந்துமண் மீதிற்பிணியே குடிகொண்டு பேரின்பத்தை
மறந்துசிற் றின்பத்தின் மேன்மய லாகிப்புன் மாதருக்குட்
பறந்துழன் றேதடு மாறிப்பொன் தேடியப் பாவையர்க்
இறந்திடவோபணித் தாயிறைவாகச்சி ஏகம்பனே.[கீந்து

பூதங்க ளற்றுப் பொறியற்றுச் சாரைம் புலன்களற்றுப்
பேதங் குணமற்றுப் பேராசை தானற்றுப்பின் முனற்றுக்
காதங் கரணங் களுமற்ற ஆனந்தக் காட்சியிலே
ஏதங் களைந்திருப் பேனிறை வாகச்சி ஏகம்பனே. 31

நல்லாய் எனக்கு மனுவொன்று தந்தருள் ஞானமிலாப்
பொல்லாஎனைக்கொன்றுபோடும்பொழுதியல்பூசை செபம்
சொல்லார்நற் கோயில்நியமம் பலவகைத் தோத்திரமும்
எல்லா முடிந்தபின் கொல்லு நண் டாய்கச்சி ஏகம்பனே.

சடக்கடத் துக்கிரை தேடிப் பலவுயிர் தம்மைக்கொன்று
விடக்கடித் துக்கொண் டிறுமாந் திருந்து மிகவெலிந்து
படக்கடித் தின்றுழல் வார்க டமைக்கரம் பற்றிநமன்
இடக்கடிக்கும்பொழு தேதுசெய் வார்கச்சி ஏகம்பனே. 33

நாறும் உடலை நரிப்பொதி சோற்றினை நான்தினமுஞ்
சோறும் கறியும் நிரப்பிய பாண்டத்தைத் தோகையர்தங்
கூறும் மலமும் இரத்தமுஞ் சோருங் குழியில்விழாது
ஏறும் படியருள் வாயிறை வாகச்சி ஏகம்பனே. 34,

சொக்கிட் டரண்மனைப் புக்குட் டிருடிய துட்டர்வந்து
திக்குற்ற மன்னரைக் கேட்பது போற்சிவ நிந்தைசெய்து
மிக்குக் குருலிங்க சங்கமம் நிந்தித்து வீடிச்சிக்கும்
எக்குப்பெருத்தவர்க் கென் சொல்லுவேன் கச்சிஏகம்பனே.

விருந்தாக வந்தவர் தங்களுக் கன்னம் மிகக்கொடுக்கப்
பொருந்தார் வளம்பெறவாழ்வார் நின்னுமைத்தைப்போற்றி
[நித்தம்
அருந்தா மூலைப்பங்கர் என்னாதை பாதகர் அம்புவியில்
இருந்தாவதேது கண் டாயிறை வாகச்சி ஏகம்பனே. 36

எல்லாம் அறிந்து படித்தே யிருந்தெமக் குள்ளபடி
வல்லான் அறிந்துளன் என்றுண ராது மதிமயங்கிச்
சொல்லால் மலைந்துறு சூழ்விதி யின்படி துக்கித்துப்பின்
எல்லாஞ் சிவன்செய லேயென்பர் காண்கச்சி ஏகம்பனே.

பொன்னை நினைந்து வெதுவாகத்தேடுவர் பூவையன்னாள்
தன்னை நினைந்து வெதுவாய் உருகுவர் தாரணியில்
உன்னை நினைந்திங் குனைப்பூசி யாத உலுத்தரெல்லாம்
என்னை யிருந்துகண் டாயிறை வாகச்சி ஏகம்பனே. 38

கடுஞ்சொலின் வம்பரை யீனரைக்குண்டரைக்காமுகரைக்
கொடும்பாவ மேசெயும் நிர்மூடர் தம்மைக் குவலயத்துள்
நெடும்பனை போல வளர்ந்துநல் லோர்தம் நெறியறியா
இடும்பரை ஏன்வகுத் தாயிறை வாகச்சி ஏகம்பனே. 39

கொன்றேன் அநேகம் உயிரை எல்லாம்பின்பு கொன்றுகொன்று, தின்றேன் அதன்றியுந் தீங்குசெய்தேன் அதுதீர்க்க வென்றே, நின்றேனின் சன்னிதிக் கேயதனுற்றுற்றம் நீபொறுப்பாய், என்றே உனைநம்பி னேன்இறை வாகச்சி ஏகம்பனே. 40

ஊரிருந் தென்ன நல் லோரிருந் தென்னுப காரமுள்ள [ள்
பேரிருந் தென்பெற்றதாயிருந் தென் படபப்பெண்கொடியா
சீரிருந் தென்னற் சிறப்பிருந் தென்ன வித் தேயத்தினில்
ஏரிருந் தென் வல்லவாவிறை வாகச்சி ஏகம்பனே. 41

வில்லால் அடிக்கச் செருப்பால் உதைக்க வெதுண் டொருவன், கல்லால் எறியப் பிறம்பால் அடிக்க களி வண்டுகூர்ந், தல்லார் பொழிற்றில்லை அம்பல வாணர்க் கோர் அன்னைபிதா, இல்லாத தாலல்ல வோவிறை வாகச்சி ஏகம்பனே. 42

எண்சீர் விருத்தம்

அன்னை யெத்தனை யெத்தனை அன்னையோ
அப்ப னெத்தனை யெத்தனை யப்பனோ
பின்னை யெத்தனை யெத்தனை பெண்டிரோ
பிள்ளை யெத்தனை யெத்தனை பிள்ளையோ
முன்னை யெத்தனை யெத்தனை சன்மமோ
மூடனாயடி யேனு மறிந்திலேன்
இன்ன மெத்தனை யெத்தனை சன்மமோ
என்செய் வேன்கச்சி ஏகம்ப நாதனே. 43

திருத்தில்லை

கட்டளைக் கலித்துறை

காம்பிணங் கும்பணைத் தோளார்க்கும் பொன்னுக் குங் காசினிக்கும், தாம்பிணங்கும்பல ஆசையும்விட்டுத் தனித்துச்செத்து, போம்பிணந் தன்னைத் திரளாகக் கூடிப் புரண்டினிமேற், சாம்பிணங் கத்துதையோ என் செய் வேன்றில்லைச் சங்கரனே. 1

சோறிடும்நாடு துணிதரும் குப்பைதொண் டன்புரைக் [கண்டு
ஏறிடுங்கைகள் இறங்கிடுந் தீவினை எப்பொழுதும்
நீறிடும் மேனியர் சிற்றம் பலவர் நிருத்தங் கண்டால்
ஊறிடுங் கண்கள் உருகிடும் நெஞ்சமென் உள்ளமே. 2

அழலுக்குள் வெண்ணெ யெனவே உருகிப்பொன் [னம்பலத்தார்
நிழலுக்குள் நின்று தவமுஞற் றுமல் நிட் டூரமின்னார்
குழலுக்கிசைந்த வகைமாலை கொண்டு குற்றேவல்செய்து
விழலுக்கு முத்துலை இட்டிறைத் தேனென் விதிவசமே. 3

ஓடாமற் டாழுக் குழையாமல் ஓரம் உரைப்பவர்பாற்
கூடாமல் நல்லவர் கூட்டம்விடாமல் வெங்கோபநெஞ்சில்
நாடாமல் நன்மைவழுவாமல் இன்றைக்கு நாளைக்கென்று
தேடாமற் செல்வந் தருவாய் சிதம்பர தேசிகனே. 4

பாராமல் ஏற்பவர்க் கில்லையென் னுமற் பழுதுசொல்லி
வாராமற் பாவங்கள் வந்தணு காமல் மனமயர்ந்து
பேராமற் சேவை பிரியாமல் அன்பு பெருதவரைச்
சேராமற் செல்வந்தருவாய் சிதம்பர தேசிகனே. 5

கொல்லாமற் கொன்றதைத் தின்னுமற் குத்திரங்கோள்க
கல்லாமற்கைதவரோடிணங்காமற்கனவினும்பொய் [ளவு
சொல்லாமற் சொற்களைக் கேளாமற் றோகையர் மாயையி
செல்லாமற் செல்வந் தருவாய் சிதம்பர தேசிகனே. [லே

முடிசார்ந்த மன்னரும் மற்றுமுள் ளோரும் முடிவிலொரு
பிடிசாம்ப ராய்வெந்து மண்ணுவ துங்கண்டு பின்னு
[மிந்தப்
படிசார்ந்தவாழ்வைநினைப்பதல்லாற்பொன்னினம்பலவர்
அடிசார்ந்து நாமுய்யவேண்டுமென்றேயறிவாரில்லையே

காலை யுபாதி மலஞ்சல மாமன்றிக் கட்டுச்சியிற்
சால வுபாதி பசிதாக மாகுமுன் சஞ்சிதமாம்
மாலையு பாதி துயில்காம மாமிவை மாற்றிவிட்டே
ஆலம் உகந்தருள் அம்பல வாவென்னை ஆண்டருளே. 8

ஆயும் புகழ்த்தில்லை அம்பல வாணர் அருகிற்சென்றுற்
பாயும் இடபம் கடிக்கும் அரவம்பின் பற்றிச்சென்றுற்
பேயுங் கணமும் பெருந்தலைப் பூதமும் பின்றொடரும்
போயென்செய் வாய்மன மேபிணக் காடவர்போமிடமே.

ஓடுமெடுத்தத ளாடையுஞ் சுற்றி உலாவிமெள்ள
வீடுகடோறும் பலிவாங்கி யேவிதி மற்றவர்போல் [னைத்
ஆடும் அருட்கொண்டிங் கம்பலத் தேநிற்கும்ஆண்டிதன்
தேடுங் கணக்கென்ன காண்சிவ காம சவுந்தரியே. 10

ஊட்டுவிப்பானும் உறங்குவிப் பானுமிங் கொன்ருெடொன்றை, மூட்டுவிப் பானும் முயங்குவிப் பானும் முயன்றவினை, காட்டுவிப் பானும் இருவினைப் பாசக்கயிற் றின்வழி, ஆட்டுவிப் பானும் ஒருவனுண்டேதில்லை அம்பலத்தே. 11

அடியார்க் கெளியவர் அம்பல வாணர் அடிபணிந்தால், மடியாமற் செல்வ வரம்பெற லாம்வையம் ஏழளந்த நெடியோனும் வேதனுங்காணுத நித்த நிமலரருட், குடி காணும் நாங்கள் அவர்காணு மெங்கள் குலதெய்வமே.

தெய்வச் சிதம்பர தேவாவுன் சித்தந் திரும்பிவிட்டாற், பொய்வைத்த சொப்பன மாமன்னர் வாழ்வும் புவியுமெங்கே, மெய்வைத்த செல்வமெங் கேமண்ட லீகர்தம் மேடையெங்கே, கைவைத்த நாடக சாலையெங்கே இது கண்மயக்கே. 13

உடுப்பானும் பாலன்னம் உண்பானும் உய்வித்தொருவர் தம்மைக், கெடுப்பானும் ஏதென்று கேள்விசெய் வானும் கெதியடங்கக், கொடுப்பானுந் தேகியென் றேற்பானும் ஏற்கக் கொடாமனின்று, தடுப்பானும் நீயல்லையோ தில்லை ஆனந்தத் தாண்டவனே. 14

வித்தாரம் பேசினும் சோங்கேறி னுங்கம்ப மீதிருந்து
தத்தாவென்ருேதிப் பரிவுகொண் டாடினுந் தம்முன்றம்பி
ஒத்தாசை பேசினும் ஆவதுண்டோ தில்லையுள் நிறைந்த
கத்தாவின் சொற்படி அல்லாது வேறில்லை கன்மங்களே.

பிறவா திருக்க வரம்பெறல் வேண்டும் பிறந்துவிட்டால்
இறவா திருக்க மருந்துண்டு காண் இது வெப்படியோ
அறமார் புகழ்த்தில்லை அம்பலவாணர் அடிக்கமலம்
மறவா திருமன மேஅது காணன் மருந்துனக்கே. 16

தவியா திருநெஞ்ச மேதில்லை மேவிய சங்கரனைப்
புவியார்ந் திருக்கின்ற ஞானகரனைப் புராந்தகனை

அவியா விளக்கைப் பொன்னம்பலத்தாடியை ஐந்தெழுத்
செவியால் நீசெபித்தாற் பிறவாமுத் தி சித்திக்குமே.[தாற்

நாலின் மறைப்பொருள் அம்பல வாணரை நம்பியவர்
பூாலில் ஒருதரஞ் சேவிக்கொ ணுதிருப் பார்களங்கல்
மேலில் எடுத்தவர் கைவிலங் கைத்தைப்பர்மீண்டுமொரு
காலில் நிறுத்துவர் கிட்டியுந் தாம்வந்து கட்டுவரே. 18

ஆற்றெடு தும்பை அணிந்தாடும் அம்பல வாணர் தமைப்
போற்று தவர்க்கடை யாள முண் டேயிந்தப் பூதலத்திற்
சோற்றுவி யற்றுச் சுகமற்றுச் சுற்றத் துணியுமற்றே
ஏற்றுலும் பிச்சை கிடையாம லேக்கற் றிருப்பர்களே. 19

அத்தனை முப்பத்து முக்கோடி தேவர்க் கதிபதியை
நித்தனை யம்மை சிவகாம சுந்தரி நேசனையெங் [கள்
கத்தனைப் பொன்னம் பலத்தா டும் ஐயனைக் காணக்கண்
எத்தனை கோடி யுகமோ தவஞ்செய் திருக்கின்றவே. 20

## திருச்செங்காடு

நெருப்பான மேனியர் செங்காட்டில் ஆத்தி நிழலருகே
இருப்பார் திருவுளம் எப்படி யோ இன்னம் என்னையன்னை
கருட்பா சயக்குழிக் கேதள்ளு மோகண்ணன் காணரிய
திருப்பாத மேதரு மோதெரி யாது சிவன்செயலே. 21

## திருவொற்றியூர்

ஐயுந் தொடர்ந்து விழியுஞ் செருகி அறிவழிந்து [ன்யான்
மெய்யும்பொய் யாகிவிடுகின்ற போதொன்று வேண்டுவ
செய்யுந் திருவொற்றி யூருடை யீர்த்திரு நீறுமிட்டுக்
கையுந்தொழப்பண்ணி ஐந்தெழுத் தோதவுங்கற்பியுமே.

கூடப்படு வாரறி யார்புர மூன்றையுஞ் சுட்டபிரான்
திடப்படு மாமதிற் றென்னொற்றி யூரன் தெருப்பரப்பில்
நடப்பவர் பொற்பதம் நந்தலை மேற்பட நன் குருண்டு
கிடப்பது காண்மன மேவிதி யேட்டைக் கிழிப்பதுவே.

## திருவிடைமருதூர்

காடே திரிந்தென்ன காற்றே புசித்தென்ன கந்தைசுற்றி
ஓடே எடுத்தென்ன உள்ளன்பிலாதவர் ஓங்குவிண்ணோர்
நாடே இடைமரு தீசர்க்கு மெய்யன்பர் நாரியர்பால்
வீடே யிருப்பினும் மெய்ஞ்ஞான வீட்டின்பம் மேவுவரே.

தாயும்பகைகொண்ட பெண்டீர்பெரும்பகை தன்னுடைய
சேயும் பகைஉற வோரும்பகை இச் செகமும்பகை
ஆயும்பொழுதில் அருஞ்செல்வம் நீங்கிலிங் காதலினால்
தோயுநெஞ் சேமரு தீசர்பொற் பாதஞ் சுதந்தரமே. 2

## திருக்கழுக்குன்றம்

காடோ செடியோ கடற்புற மோகன மேமிகுந்த
நாடோ நகரோ நகர்நடு வோநல மேமிகுந்த
வீடோ புறந்திண்ணை யோதமி யேனுடல் வீழுமிடம்
நீடோய் கழுக்குன்றி லீசா உயிர்துணை நின்பதமே. 1

## திருக்காளத்தி

பத்தும் புகுந்து பிறந்து வளர்ந்துபட் டாடைசுற்றி
முத்தும் பவளமும் பூண்டோடி யாடி முடிந்தபின்
செத்துக் கிடக்கும் பிணத்தரு கேயினிச் சாம்பிணங்கள்
கத்துங் கணக்கென்ன காண்கயி லாபுரிக் காளத்தியே. 1

பொன்னாற்பிரயோசனம் பொன்படைத்தார்க்குண்டு பொன்படைத்தோன், தன்னாற்பிர யோசனம்பொன்னுக் கங் கேதுண்டத் தன்மையைப்போல் உன்னாற்பிர யோசனம் வேணதெல்லாமுண்டு னைப்பணியும், என்னாற்பிர யோசனம் ஏதுண்டு காளத்தி ஈச்சரனே. 2

வாளால் மகவரிந் தூட்டவல் லேனல்லன் மாது சொன்ன, சூளால் இளமை துறக்கவல் லேனல்லன் தொண்டுசெய்து, நாளாறிற் கண்ணிடந் தப்பவல்லே னல்லன் நானினிச் சென்று, ஆளாவதெப்படி யோதிருக் காளத்தி யப்பனுக்கே. 3

முப்போதும் அன்னம் புசிக்கவுந் தூங்கவும்மோகத்தினுற்
செப்போ திளமுலை யாருடன் சேரவுஞ் சீவன்விடும்
அப்போது கண்கலக் கப்பட வும்மமைத் தாயையனே
எப்போது காணவல் லேன்றிருக் காளத்தி ஈச்சுரனே. 4

இரைக்கே இரவும் பகலுந் திரிந்திங் கிளைத்து மின்னார்
அரைக்கே அவலக் குழியரு கேயசும் பார்ந்தொழுதம்
புரைக்கே உழலுந் தமியேனை ஆண்டருள் பொன்முகலிக்
கரைக்கே கல்லால நிழற்கீ ழமர்ந்தருள் காளத்தியே. 5

நாறுங் குருதிச் சலதாரை தோற்புரை நாடொறுஞ்சீ
யூறும் மலக்குழி காமத் துவாரம் ஒளித்திடும்புண்
தேறுந் தசைப்பிளப் பந்தரங் கத்துள சிற்றின்பம்விட்டு
ஏறும் பதந்தரு வாய்திருக் காளத்தி ஈச்சுரனே. 6

## திருக்கைலாயம்

கான்சாயும் வெள்ளி மலைக்கர சேநின் கழல்நம்பினேன்
ஊன்சாயுஞ் சென்ம மொழிந்திடு வாய்கர வூரனுக்காய்
மான்சாயச் செங்கை மழுவலஞ் சாய வணிந்தகொன்றைத்
தேன்சாய நல்லதிருமேனி சாய்த்த சிவக்கொழுந்தே. 1

இல்லந் துறந்து பசிவந்த போதங் கிரந்துதின்று
பல்லுங் கரையற்று வெள்வா யுமாய்ஒன்றிற் பற்றுமின்றிச்
சொல்லும் பொருளு மிழந்து சுகானந்தத் தூக்கத்திலே
அல்லும் பகலும் இருப்பதென் றோகயி லாயத்தனே. 2

சினந்தனை யற்றுப் பிரியமுந் தானற்றுச் செய்கையற்று
நினைந்ததும் அற்று நினையா மையுமற்று நிர்ச்சிந்தனாய்த்
தனந்தனி யேயிருந் தானந்த நித்திரை தங்குகின்ற
அனந்தலில் என்றிருப் பேனத்த னேகயி லாயத்தனே. 3

கையார ஏற்றுநின் றங்ஙனந் தின்று கரித்துணியைத்
தையா துடுத்திநின் சன்னிதிக் கேவந்து சந்ததமும்
மெய்யார நிற்பணிந் துள்ளே யுரோமம் விதிர்விதிர்ப்ப
ஐயாவென் றோலம் இடுவதென் றோகயி லாயத்தனே. 4

நீருர்த்த மேனி யுரோமஞ் சிலிர்த்துளம் நெக்குநெக்குச் ,
சேருய்க் கசிந்து கசிந்தே யுருகிநின் சீரடிக்கே [ணீர்
மாருத் தியான முற் ருனந்த மேற்கொண்டு மார்பிற்கண்
ஆருய்ப் பெருகக் கிடப்பதென் ருேகயி லாயத்தனே. 5

செல்வரைப் பின்சென்று சங்கடம் பேசித் தினந்தினமும்
பல்லினைக் காட்டிப் பரிதவி யாமற் பரானந்தத்தின்
எல்லையிற் புக்கிட ஏகாந்த மாயெனக் காமிடத்தே
அல்லலற் றென்றிருப் பேன் அத்த னேகயி லாயத்தனே.

மந்திக் குருளையொத் தேனில்லை நாயேன் வழக்கறிந்தும்
சிந்திக்குஞ்சிந்தையையானென்செய்வேனெனைத் தீதகற்
புந்திப்பரிவிற் குருளையையேந்தியபூசையைப்போல்[றிப்
எந்தைக் குரியவன் காணத்த னேகயி லாயத்தனே 7

வருந்தேன் பிறந்தும் இறந்தும் மயக்கும்புலன் வழிபோய்
பொருந்தே னரகிற் புகுகின்றி லென்புகழ் வாரிடத்தில்[ப்
இருந்தே னினியவர் கூட்டம்வி டேனிய லஞ்செழுத்தாம்
அருந்தேன் அருந்துவன் நின்னருளாற்கயி லாயத்தனே.

## மதுரை

விடப்படு மோவிப் பிரபஞ்ச வாழ்க்கையை விட்டுமனம்
திடப்படு மோநின் னருளின்றி யேதின மேயகூயக்
கடப்படு மோஅற்யர் வாயிலிற் சென்றுகண் ணீர்ததும்பிப்
படப்படு மோசொக்க நாதா சவுந்தர பாண்டியனே.

## பொது

உடைகோ வணமுண் டுறங்கப் புறந்திண்ணை உண்டுணவிங்கு, அடைகா யிலையுண் டருந்தத்தண் ணீருண் டருந்துணைக்கே, விடையேறும்ஈசர் திருநாம முண்டிந்த மேதினியில், வடகோ டுயர்ந்தென்ன தென்கோடு சாய்ந்தென்ன வான்பிறைக்கே. 1

வீடு நமக்குத் திருவாலங் காடு விமலர்தந்த
ஓடு நமக்குண்டு வற்றாத பாத்திரம் ஓங்குசெல்வ
நாடு நமக்குண்டு கேட்டதெல் லாந்தர நன்னெஞ்சமே
ஈடு நமக்குச் சொலவே ஒருவரும் இங்கில்லையே. 2

நாடிக்கொண் டீசரை நாட்டமுற் ருயிலை நாதரடி, தேடிக்கொண் டாடித் தெளிந்தா யிலைசெகமாயைவந்து, மூடிக்கொண் டோமென்றுங் காமாயு தங்கள் முனிந்த வென்றும், பீடிப்பை யோநெஞ்ச மேஉனைப் போலில்லை பித்தர்களே. 3

கையொன்று செய்ய விழியொன்று நாடக் கருத் தொன்றெண்ணப், பொய்யொன்று வஞ்சக நாவொன்று பேசப் புலால்கமழும், மெய்யொன்று சாரச்செவியொன்று கேட்க விரும்புமியான், செய்கின்ற பூசையெவ் வாறு கொள் வாய்வினை தீர்த்தவனே. 4

கண்ணுண்டு காணக் கருத்துண்டு நோக்கக்கசிந்துருகிப்
பண்ணுண்டுபாடச் செவியுண்டுகேட்கப் பல்பச்சிலையால்
எண்ணுண்டு சாத்த எதிர் நிற்க ஈசன் இருக்கையிலே
மண்ணுண்டு போகுதை யோகெடு வீர்ந்த மானுடமே. 5

சொல்லிலுஞ் சொல்லின் முடிவிலும் வேதச் சுருதியிலும்
அல்லிலும் மாசற்ற ஆகாயந் தன்னிலும் மாய்ந்துவிட்
இல்லிலும் அன்பரிடத்திலும் ஈசனிருக்குமிடம் [டோர்
கல்லிலுஞ் செம்பிலு மோவிருப்பானெங்கள் கண்ணுதலே.

வினைப்போக மேயொரு தேகங்கண் டாய்வினை தானொழிந்தால், தினைப்போ தளவுநில் லாதுகண் டாய் சிவன் பாதநினை, நினைப்போரை மேவு நினை பாரை நீங் கிந் நெறியினின்ருல், உனைப்போ லொருவருண்டோமன மேஎனக் குற்றவரே. 7

பட்டைக் கிழித்துப் பருஊசி தன்னைப் பரிந்தெடுத்து
முட்டச்சுருட்டியென்மெய் தமலாள் கையில் முன்கொடுத்
கட்டி யிருந்த கனமாய்க் காரிதன் காமமெல்லாம் [துக்
விட்டுப் பிரியவென் ருேவிங்ஙனே சிவன் மீண்டதுவே. 8

சூதுற்ற கொங்கையும் மானார் கலவியுஞ் சூழ்பொருளும்
போதுற்ற பூசலுக்கென் செயலாம் செய்த புண்ணியத்தால்
தீதற்ற மன்னவன் சிந்தையி னின்று தெளிவதற்கோ
காதற்ற ஊசியைத் தந்துவிட் டானென்றன் கைதனிலே.

வாதுற்ற திண்புயர் அண்ணா மலையர் மலர்ப்பதத்தைப்
போதுற்றெப் போதும் புகலுநெஞ் சேஇந்தப் பூதலத்தில்
தீதுற்ற செல்வமென் தேடிப் புதைத்த திரவியமென்
காதற்ற ஊசியும் வாராது காணுங் கடைவழிக்கே. 10

வேதத்தி னுட்பொருள் மண்ணாசை மங்கையை விட்டுவிடப், போதித்த வன்மொழி கேட்டிலையோ செய்த புண்ணியத்தால், ஆதித்தன் சந்திரன் போலே வெளிச்சமதாம்பொழுது, காதற்ற ஊசியும் வாராது காணும் கடைவழிக்கே. 11

மனையாளும் மக்களும் வாழ்வுந் தனமுந்தன் வாயில்மட்
இனமான சுற்றம் மயானமட் டேவழிக் கேதுதுணை [டே
தினையாம் அளவெள் ளளவா கினுமுன்பு செய்ததவந்
தனையாள என்றும் பரலோகஞ் சித்திக்கும் சத்தியமே. 12

அத்தமும் வாழ்வும் அகத்துமட் டேவிழி அம்பொழுக
மெத்திய மாதரும் வீதிமட் டேவிம்மி விம்மியிரு
கைத்தலை மேல்வைத் தழுமைந் தருஞ்சுடு காடுமட்டே
பற்றித் தொடரும் இருவினைப் புண்ணிய பாவமுமே. 13

சீயுங் குருதிச் செழுநீர் வழும்புஞ் செறிந்தெழுந்து
பாயும் புடைவையொன் றில்லாத போது பகலிரவாய்
ஈயு மெறும்பும் புகுகின்ற யோனிக் கிரவுபகல்
மாயும் மனிதரை மாயாமல் வைக்க மருந்தில்லையே. 14

சீதப் பனிக்குண்டு சிக்கெனக் கந்தை தினமிரந்து
நீதுய்க்கச் சோறு மனைதோறு முண்டு நினைவெழுந்தால்
வீதிக்குள் நல்ல விலைமாதர் உண்டிந்த மேதினியில்
ஏதுக்கு நீசலித் தாய்மன மேஎன்றும் புண்படவே. 15

ஆறுண்டு தோப்புண் டணிவீதி யம்பலந் தானுமுண்டு
நீறுண்டு கந்தை நெடுங்கோ வணமுண்டு நித்தநித்தம்
மாறுண் டுலாவி மயங்குநெஞ் சேமனை தோறுஞ்சென்று
சோறுண்டு தூங்கிப்பின் சும்மா விருக்கச் சுகமுமுண்டே.

உடுக்கக் கவிக்கக் குளிர்காற்று வெய்யிலொடுங்கிவந் தால், தநிக்கப் பழைய ஒருவேட்டி யுண்டு சகமுழுதும், படுக்கப் புறந்திண்ணை யெங்கெங்கு முண்டு பசித்துவந் தாற், கொடுக்கச் சிவனுண்டு நெஞ்சே நமக்குக் குறை வில்லையே. 17

மாடுண்டு கன்றுண்டு மக்களுண் டென்று மகிழ்வ தெல்லாம், கேடுண்டெ னும்படி கேட்டுவிட்டோம் இனிக் கேள்மனமே, ஓடுண்டு கந்தையுண் டுள்ளே எழுத்தைந் தும் ஓதவுண்டு, தோடுண்ட கண்ட னடியார் நமக்குத் துணையுமுண்டே. 18

மாத் தானவத்தையும் மாயாபுரியின்மயக்கத்தையும்[ண்டு
நீத்தார்தமக்கொரு நிட்டையுண் டோ நித்தன் அன்புகொ
வேர்த்தாற் குளித்துப் பசித்தாற் புசித்து விழிதுயின்று
பார்த்தா லுலகத் தவர்போ லிருப்பர்பற் றற்றவரே. 19

ஒன்றென் றிருதெய்வம் உண்டென் றிருஉயர் செல்வ மெல்லாம்; அன்றென் றிருபசித் தோர்முகம் பார்நல்லறமு நட்பும், நன்றென் றிருநடு நீங்காம லேநமக் கிட்டபடி, என்றென் றிருமன மேஉனக் கேயுப தேசமிதே. 20

நாட்டமென் றேயிரு சற்குரு பாதத்தை நம்புபொம்ம
லாட்டமென் றேயிரு பொல்லா வுடலை அடர்ந்தசந்தைக்
கூட்டமென் றேயிரு சுற்றத்தை வாழ்வைக் குடங்கவிழ்நீர்
ஓட்டமென் றேயிரு நெஞ்சே உனக்குப தேசமிதே. 21

என்செய லாவ தியாதொன்று மில்லை இனித்தெய்வமே
உன்செய லேயென் றுணரப்பெற் றேனிந்த வூனெடுத்த
பின்செய்த தீவினை யாதொன்று மில்லை பிறப்பதற்கு
முன்செய்தீவினை யோவிங்ஙனேவந்து மூண்டதுவே 22

திருவேட மாகித் தெருவிற் பயின்றெனைத் தேடிவந்து
பரிவாகப் பிச்சை பகருமென் ருனைப் பதம்பணிந்தேன்
கருவாத மேதக் கடற்கரை மேவக் கருதுமென்னை
உருவாக்கிக் கொள்ளவல் லோவிங்ஙனே சிவனுற்றதுவே.

விட்டே னுலகம் விரும்பே னிருவினை வீணருடன், கிட்டேன் அவருரைகேட்டுமிரேன் மெய்கெடாதநிலை, தொட்டேன் சுகதுக்க மற்றுவிட்டேன் தொல்லைநான் மறைக்கும். எட்டே னெனும்பர மென்னிடத் தேவந்திங் கெய்தியதே. 24

அட்டாங்கயோகமும் ஆதாரமாறும் அவத்தையைந்தும்
விட்டேறிப்போன வெளிதனிலேவியப் பொன்றுகண்டே
வட்டாகிச் செம்மதிப் பாலூறலுண்டு மகிழ்ந்திருக்க [ன்
எட்டாத பேரின்பம் என்னை விழுங்கி யிருக்கின்றதே. 25

எரியெனக்கென்னும் புழுவோ எனக்கெனும் இந்த மண்ணும், சரியெனக் கென்னும் பருந்தோ எனக்கெனும் தான்புசிக்க, நரியெனக் கென்னும் புன்னாயெனக் கென்னுமிந் நாறுடலைப், பிரியமுடன்வளர்த் தேனிதனு லென்ன பேறெனக்கே. 26

அண்ணல்தன் வீதி யரசிருப் பாகும் அணிபடையோர்[ர்
நண்ணொரு நாலொன்பதாம் அவரேவலும் நண்ணுமிவ்வூ
துண்ணென் பசிக்கு மடைப்பள்ளி யான சுகமெல்லாம்
எண்ணவி காலம் அவமே விடுத்தன மெண்ணரிதே. 27

என்பெற்ற தாயாரு மென்னைப் பிணமென் றிகழ்ந்து விட்டார், பொன்பெற்றமாதரும் போவென்று சொல்லிப் புலம்பிவிட்டார், கொன்பெற்ற மைந்தரும்பின்வலம் வந்து குடமுடைத்தார், உன்பற் றொழிய ஒருபற்றுமில்லை உடையவனே. 28

கரையற்ற பல்லுங் கரித்துணி யாடையுங் கள்ள மின்றிப், பொறையுற்ற நெஞ்சமும் பொல்லாதவூணும் புறந்திண்ணையும், தரையிற் கிடப்பும் இரந்துண்ணு மோடுஞ் சகமறியக், குறைவற்ற செல்வமென் றேகோல மாமறை கூப்பிடுமே. 29

எட்டுத் திசையும் பதினறு கோணமும் எங்குமொன்ருய்
முட்டித் ததும்பி முளைத்தோங்கு சோதியை மூடரெல்லாங்
கட்டிச்சுருட்டித்தம்கக்கத்தில்வைப்பர் கருத்தில் வையார்
பட்டப் பகலை யிரவென்று கூறிடும் பாதகரே. 30

வாய்நாறு மூழல் மயிர்சிக்கு நாறிடும் மையிடுங்கண்
பீநாறும் அங்கம் பிணவெடி நாறும் பெருங்குழிவாய்ச்
சீநாறும் யோனி அழனுறும் இந்திரியச் சேறுசிந்திப்
பாய்நாறும் மங்கையர்க் கோவிங்ங னேமனம் பற்றியதே.

உரைக்கைக்கு நல்ல திருவெழுத்தைந்துண் டுரைப் படியே, செருக்கித் தரிக்கத் திருநீறு முண்டு தெருக்குப் பையில், தரிக்கக்கரித்துணியாடையுமுண் டெந்தச் சாதியிலும், இரக்கத்துணிந்து கொண்டேன் குறை வேதும் எனக்கில்லையே. 32

ஏதப்பட் டாயினி மேற்படுர் பாட்டையி தென்றறிந்து
போதப்பட் டாயில்லை நல்லோரிடஞ்சென்று புல்லறிவால்
வாதைப்பட் டாய்மட மானுர் கல்வி மயக்கத்திலே
பேதப்பட் டாய்நெஞ்சமேஉனைப் போலில்லை பித்தருமே.

சுரப்பற்று வல்வினை சுற்றமு மற்றுத் தொழில்களற்றுக்
கரப்பற்று மங்கையர் கையிணக் கற்றுக் கவலையற்று
வரப்பற்று நாதனை வாயார வாழ்த்தி மனமடங்கப்
பரப்பற் றிருப்பதன் ருேபர மாபர மானந்தமே. 34

பேய்போற் றிரிந்து பிணம்போற் கிடந்திட்டபிச்சை யெல்லாம், நாய்போ லருந்தி நரிபோலுழன்று நன்மங்கையரைத், தாய்போற் கருதித்தமர்போ லனைவர்க்குந் தாழ்மைசொல்லி, சேய்போ லிருப்பர்கண் டீருண்மை ஞானந் தெளிந்தவரே. 35

விடக்கே பருந்தின் விருந்தே கமண்டல வீணனிட்ட
முடக்கே புழுவந் துறையிட மேநல முற்றுமிலாச்
சடக்கே கருவி தளர்ந்துவிட்டார்பெற்ற தாயுந்தொடாத்
தொடக்கே உனைச்சுமந் தேனின்னி மேனது சுகமெனக்கே.

அழுதாற்பயனென்ன நொந்தாற்பயனென்ன ஆவதில்லை
தொழுதாற் பயனென்ன நின்னை யொருவர் சுடவுரைத்த
பழுதாற் பயனென்ன நன்மையுந் தீமையும் பங்கயத்தோ
எழுதாப் படிவரு மோசலியாதிரென் ஏழைநெஞ்சே. [ன்

செல்வரைப் பின்சென் றுபசாரம் பேசித் தினந்தினமும்
பல்லினைக் காட்டிப் பரிதவி யாமற் பரமானந்தத்தின்
எல்லையிற் புக்தநல் லேகாந்த மாயெனக் காமிடத்தே
அல்லலற் றென்றிருப் பேன் ஆல நீழல் அரும்பொருளே.

ஊரீ ருமக்கோ ருபதேசங் கேளும் உடம் படங்கப்
போரீர் சமணைக் கழுவேற்று நீற்றைப் புறந்திண்ணையிற்
சாரீர் அனந்தலைச் சுற்றத்தை நீங்கி சகம்நகைக்க
ஏரீ ருமக்கவர் தாமே தருவ ரிணையடியே. 39

நீற்றைப் புனைந்தென்ன நீராடப்போயென்ன நீமனமே
மாற்றிப் பிறக்க வகையறிந் தாயில்லை மாமறைநூல்
ஏற்றிக் கிடக்கும் எழுகோடி மந்திர மென்ன கண்டாய்
ஆற்றிற் கிடந்தும் முறையறி யாமல் அலைகின்றையே. 40

ஓங்கார மாய்நின்ற வத்துவி லேயொரு வித்துவந்து
பாங்காய் முளைத்த பயனறிந் தாற்பதி னாலுலகம்
நீங்காமல் நீங்கி நிறையாய் நிறைந்து நிறையுருவாய்
ஆங்கார மானவர்க் கெட்டாக் கனிவந் தமர்ந்திடுமே. 41

விதியார் படைப்பும் அரியார் அளிப்பும் வியன்கயிலைப்
பதியார் துடைப்பும்நம் பாலணு காபர மானந்தமே
கதியாகக் கொண்டுமற் றெல்லாந் துயிலிற் கனவெனநீ
மதியா திருமண மேஇது காணன் மருந்துனக்கே. 42

நாய்க்குண்டு தொண்டுநமக் குண்டுபிச்சை நமனைவெல்ல
வாய்க்குண்டு மந்திர மஞ்சாட் சரம்மதி யாமல்வரும்
பேய்க்குண்டுநீறு திகைப்புண்டு நின்ற பிறவிப்பிணி
நோய்க்குண்டு தேசிகன் றன்னருணேக்கங்க ணேக்கு
[தற்கே. 43

நேமங்கள் நிட்டைகள் வேதங்கள் ஆகம நீதிநெறி
ஓமங்கள் தர்ப்பணஞ் சந்தி செபமந்த்ர யோகநிலை
நாமங்கள் சந்தனம் வெண்ணீறு பூசி நலமுடனே
சாமங்க டோறு மிவர்செய்யும் பூசைகள் சர்ப்பனையே. 44

நானெத் தனைகத்தி சொன்னாலுங் கேட்கிலை நன்னெஞ்சமே
ஏனிப் படிக்கேட் டுழலுகின் றாய்இனி யேதுமில்லா [மே
வானத்தின் மீனுக்கு வன்றூண்டி லிட்டவகையதுபோற்
போனத்தை மீள நினைக்கின் றனைஎன்ன புத்தியிதே.45

அஞ்சக் கரமெனுங் கோடாரி கொண்டிருந்த ஐம்புலனும்
வஞ்சப் புலக்கட்டை வேரற வெட்டி வளங்கள் செய்து
விஞ்சத் திருத்திச் சதாசிவ மென்கின்ற வித்தையிட்டுப்
புன்செய்க் களைபறித் தேன்வளர்த் தேன்சிவ போகத்
[தையே. 46

தாயாருஞ் சுற்றமும் பெண்டிருங் கைவிட்டுத் தாழ்ந்திடு
நீயா ரியானார் எனப்பகர் வார்அந்த நேரத்திலே [நாள்
நோயாரும் வந்து குடிகொள்வரேகொண்ட நோய்மொரு
பாயாரும் நீயுமல் லாற்பின்னை யேதுநட் பாமுடலே. 47

ஆயும்பொழுது மயிர்க்கால்க டோறும் அருங்கிருமி
நோயும் மலக்கட்டை யாகிய காயத்தைச் சுட்டுவிட்டாற்
பேயும் நடன மிடுங்கட மாமென்று பேசுவதை
நீயும் அறிந்திலை யோபொருள் தேட நினைந்தனையே.

பூணும் பணிக்கல்ல பொன்னுக்குத் தானல்ல பூமிதனைக்
காணும் படிக்கல்ல மங்கையர்க் கல்லநற் காட்சிக்கல்ல
சேணும் கடந்த சிவனடிக் கல்லவென் சிந்தைகெட்டுச்
சாணும் வளர்க்க அடியேன் படுந்துயர் சற்றல்லவே. 49

வெட்டாத சக்கரம் பேசாத மந்திரம் வேறொருவர்க்கு
எட்டாத புட்பம் இறையாத தீர்த்தம் இனிமுடிந்து
கட்டாத லிங்கம் கருதாத நெஞ்சம் கருத்தினுள்ளே
மூட்டாத பூசையன் றோகுரு நாதன் மொழிந்ததுவே. 50

எருமுட்டை பிட்கின் உதிர்ந்திடுஞ் செல்லுக்கெவிரழுவர்
கருமுட்டை புக்குக் கழலகன் றீர்கன துக்கமதாய்ப்
பெருமுட்டுப் பட்டவர் போலழும் பேதையீர் பேத்துகிறீர்
ஒருமுட்டும் வீட்டும் அரனும மென்றைக்கும் ஓதுமினே.

மையாடு கண்ணியு மைந்தரும் வாழ்வும் மனையுஞ் செந்தீ, ஐயா நின் மாயை யுருவெளித் தோற்றம் அகிலத்துள்ளே, மெய்யாய் இருந்தது நாட்செல நாட்செலவெட்ட வெறும், பொய்யாய்ப் பழங்கதை யாய்க்கன வாய்மெல்லப் போனதுவே. 52

ஆயாய் பலகலை ஆய்ந்திடுந் தூய அருந்தவர்பாற்
போயா கிலு முண்மை யைத்தெரிந் தாயில்லை பூதலத்தில்
வேயார்ந்த தோளியர் காமவி காரத்தில் வீழ்ந்தழுந்திப்
பேயாகி விழிக்கின் றனைமன மேஎன்ன பித்துனக்கே. 53

அடியா ருறவும் அரன்பூசை நேசமும் அன்புமன்றிப்
படிமீதில் வேறு பயனுள தோபங் கயன்வகுத்த
குடியான சுற்றமுந் தாரமும் வாழ்வுங் குயக்கலங்கள்
தடியா லடியுண்ட வாறெக்கு மென்றினஞ் சார்ந்திலரே.

ஆங்காரப் பொக்கிசம்கோபக் களஞ்சியம் ஆணவந்தான்
நீங்கா அரண்மனை பொய்வைத்த கூடம்வின் ணீடிவளர்
தேங்கார் பெருமதிற் காம விலாசமித் தேகங்கந்தல்
பாங்காய் உனைப்பணிந் தெப்படி ஞானம்பலிப்பதுவே. 55

ஒழியாப் பிறவி எடுத்தேங்கி ஏங்கி உழன்றநெஞ்சே
அழியாப் பதவிக் கவுடதங் கேட்டி அனுதியனை
மழுவான் கரத்தனை மால்விடை யானை மனத்திலுன்னி
விழியாற்புனல்சிந்திவிம்மி யழுநன்மைவேண்டுமென்றே.

நாய்க்கொருசூலும் அதற்கோர் மருத்துவம் நாட்டிலுண்டோ, பேய்க்கொரு ஞானம் பிடிபடு மோபெருங் காஞ்சிரங்காய், ஆக்குவ ரார்அஃ தருந்துவ ரார் அதுபோலுடம்பு, தீக்கிரை யாவதல் லாலேதுக் காம்இதைச் செப்புமினே. 57

கச்சிற் கிடக்துங் கனதனத் திற்கடைக் கண்கள்பட்டே
இச்சித் திருக்கின்ற ஏழைநெஞ் சேஇம வான் பயந்த
பச்சைப் பசுங்கொடி உண்ணாமுலை பங்கர் பாதத்திலே
தைச்சுக் கிட மன மேஒரு காலுந் தவறில்லையே. 58

மானார் விழியைக் கடந்தேறி வந்தனன் வாழ்தருவும் [லை
கோனாகியென்னைக் குடியேற்றிக் கொண்டனன் குற்றமில்
போனாலும் பேறிருந் தாலுநற் பேறிது பொய்யன்று காண்
ஆனாலும் இந்தவுடம்போ டிருப்ப தருவருப்பே. 59

சற்றா கிலுந்தன்னைத் தானறி யாய்தனை யாய்ந்தவரை
உற்றா கிலுமுரைக் கப்பொருந் தாய்உனக் கானநிலை [ன்
பற்றய் குருவைப்பணியாய் பரத்தையர் பாலிற்சென்றே
பெற்றாய் மடநெஞ்ச மேஉனைப் போலில்லை பித்தனுமே.

உளியிட்ட கல்லையும் ஒப்பிட்ட சாந்தையும் ஊத்தை யறப், புளியிட்ட செம்பையும் போற்றுகி லேன்உயர் பொன்னெனவே, ஒளியிட்ட தாளிரண் டுள்ளே யிருத்துவ துண்மையென்று, வெளியிட் டடைத்துவைத் தேனினி மேலொன்றும் வேண்டிலனே. 61

கல்லா லெறியுண்டுங் காலாலுதையுண்டுங் காலைகையில்
வில் லாலடி யுண்டும் முன்னாள் விட முண்டும் மேலளித்துப்
பல்லாற் புர மெரி யேகம்ப வாணர் பதாம்புயத்தின் [யே.
சொல்லாற் செவியினிற் கேளாதிருந்ததென் தொல்வினை

ஒருநான்கு சாதிக்கும் மூவகைத் தேவர்க்கும் உம்பருக்குந்
திரு நாளுந் தீர்த்தமும் வேறுள்ளவோ அத் திசைமுகனால்
வருநாளில்வந்திடும் அந்தக்கண்ணாளன் வகுப்பொழியக்
குருநாத னுணகண் டீர்பின்னை யேதிக் குவலயத்தே. 63

கலித்துறை

பாரோ நீரோ தீயோ வலியோ படர்வானோ
ஆரோ நானென் றுய்வுறு கின்றேன் அறிவில்லேன்
யாரோ நீரோ தீயோ வளியோ படர்வானோ
ஆரோ நானென் றுய்வுறு கின்ற அதுநீயே. 64

### எண்சீர் விருத்தம்

நாப்பிளக்கப் பொய்யுரைத்து நன்னிதியந் தேடி
நலமொன்று மறியாத நாரியரைக் கூடிப்
பூப்பிளக்க வருகின்ற புற்றீசல் போலப்
புலபுலெனக் கலகலெனப் புதல்வர்களைப் பெறுவீர்
காப்பதற்கும் வகையறியீர் கைவிடவு மாட்டீர்
கவர்பிளந்தமரத்தொளையிற்கால் நுழைத்துக்கொண்
ஆப்பதனை யசைத்துவிட்ட குரங்கதனைப் போல [டே
அகப்பட்டீர் கிடந்துழல அகப்பட்டீரே. 65

### அறசீர் விருத்தம்

மத்தளை தயிருண் டானும் மலர்மிசை மன்னி னானும்
நித்தமும் தேடிக் காணு நிமலனே நீஇன் றேகிச்
செய்த்தலைக் கயல்பாய் நாங்கூர் சேந்தனைவேந்தனிட்ட
கைத்தளை நீக்கி யென்முன் காட்டுவெண்காட்டு ளானே.

---

## தாயாருக்குத் தகனக் கிரியை செய்கையிற் பாடியது

### நேரிசை வெண்பா

ஐயிரண்டு திங்களாய் அங்கமெலாம் நொந்துபெற்றுப்
பையலென்ற போதே பரிந்தெடுத்துச்—செய்யவிரு
கைப்புறத்தி லேந்திக் கனகமுலை தந்தாளை
எப்பிறப்பிற் காண்பேன் இனி. 1

முந்தித் தவங்கிடந்து முந்நூறு நாட்சுமந்தே
அந்திபக லாச்சிவனை ஆதரித்துத்—தொந்தி
சரியச் சுமந்துபெற்ற தாயார் தமக்கோ
எரியத் தழன்மூட்டு வேன். 2

வட்டிலிலுந் தொட்டிலிலும் மார்மேலும் தோள்மேலுங்
கட்டிலிலும் வைத்தென்னைக் காதலித்து—முட்ட
சிறகிலிட்டுக் காப்பாற்றிச் சீராட்டுந் தாய்க்கோ
விறகிலிட்டுத் தீமூட்டு வேன். 3

நொந்து சுமந்துபெற்று நோவாமல் ஏந்திமுலை
தந்து வளர்த்தெடுத்துத் தாழாமே—அந்திபகல்
கையிலே கொண்டென்னைக் காப்பாற்றுந் தாய்தனக்கோ
மெய்யிலே தீமூட்டுவேன். 4

அரிசியோ நானிடுவேன் ஆத்தாள் தனக்கு
வரிசையிட்டுப் பார்த்து மகிழாமல்—உருசியுள்ள
தேனே அமிர்தமே செல்வத் திரவியப்பூ
மானே எனவழைத்த வாய்க்கு. 5

அள்ளி யிடுவ தரிசியோ தாய்தலைமேற்
கொள்ளிதனை வைப்பேனோ கூசாமல்—மெள்ள
முகம்மேல் முகம்வைத்து முத்தாடி என்றன்
மகனே எனவழைத்த வாய்க்கு. 6

**கலி விருத்தம்**

முன்னை யிட்டதீ முப்பு ரத்திலே
பின்னை யிட்டதீ தென்னி லங்கையில்
அன்னை யிட்டதீ அடிவ யிற்றிலே
யானும் இட்டதீ மூள்க மூள்கவே. 7

**நேரிசை வெண்பா**

வேகுதே தீயதனில் வெந்து பொடிசாம்பல்
ஆகுதே பாவியேன் ஐயகோ—மாகக்
குருவி பறவாமற் கோதாட்டி யென்னைக்
கருதி வளர்த்தெடுத்த கை. 8

வெந்தாளோ சோணகிரி வித்தகா நின்பதத்தில்
வந்தாளோ என்னை மறந்தாளோ—சந்ததமும்
உன்னையே நோக்கி உகந்து வரம்கிடந்தென்
தன்னையே யீன்றெடுத்த தாய். 9

வீற்றிருந்தாள் அன்னை வீதி தனிலிருந்தாள்
நேற்றிருந்தாள் இன்றுவெந்து நீருனாள்—பாற்றெளிக்க
எல்லீரும் வாருங்கள் ஏதென் றிரங்காமல்
எல்லாஞ் சிவமயமே யாம். 19

---

## வெளிப்பட்டபின் பாடியது

### திருவிடைமருதூர்

மென்று விழுங்கி விடாய்கழிக்க நீர்தேடல்
என்று விடியுமெனக் கென்கோவே—நன்றி
கருதார் புரமூன்றுங் கட்டழலாற் செற்ற
மருதா உன் சந்நிதிக்கே வந்து. 3

### பொது

சிற்றம் பலமுஞ் சிவனும் அருகிருக்க
வெற்றம் பலந்தேடி விட்டோமே—நித்தம்
பிறந்திடத்தைத் தேடுதே பேதைமட நெஞ்சம்
கறந்திடத்தை நாடுதே கண். 2

தோடவிழும் பூங்கோதைத் தோகையுனை யிப்போது
தேடினவர் போய்விட்டார் தேறியிரு—நாடிநீ
என்னை நினைத்தா லிடுப்பி லுதைப்பேனுன்
உன்னை நினைத்தா லுதை. 3

வாசற் படிகட ந்து வாராத பிச்சைக்கிங்
காசைப் படுவதில்லை அண்ணலே—ஆசைதனைப்
பட்டிருந்த காலமெல்லாம் போதும் பரமேட்டி
சுட்டிறந்த ஞானத்தைச் சொல். 4

## திருவொற்றியூர்

கண்டங் கரியதாம் கண்மூன் றுடையதாம்
அண்டத்தைப் போல அழகியதாம்—தொண்டர்
உடலுருகத் தித்திக்கும் ஓங்குபுகழ் ஒற்றிக்
கடலருகே நிற்குங் கரும்பு. 5

ஓடுவிழுந்து சீப்பாயும் ஒன்பதுவாய்ப் புண்ணுக்
கிடுமருந்தை யானறிந்து கொண்டேன்—கடுவருந்தும்
தேவாதி தேவன் திருவொற்றி யூர்த்தெருவிற்
போவார் அடியிற் பொடி. 6

வாவியெல்லாந் தீர்த்தம் மணலெல்லாம் வெண்ணீறு
காவணங்க ளெல்லாங் கணநாதர்—பூவுலகில்
ஈது சிவலோகம் என்றென்றே மெய்த்தவத்தோர்
ஓதுந் திருவொற்றி யூர். 7

## பொது

நச்சரவம் பூண்டானை நன்றாய்த் தொழுவதுவும்
இச்சையிலே தானங் கிருப்பதுவும்—பிச்சைதனை
வாங்குவதும் உண்பதுவும் வந்துதிரு வாயிலிலே
தூங்குவதுந் தானே சுகம். 8

இருக்கு மிடந்தேடி யென்பசிக்கே யன்னம்
உருக்கமுடன் கொண்டுவந்தா லுண்பேன்—பெருக்க
அமைத்தாலும் போகேன் அரனே என்தேகம்
இளைத்தாலும் போகேன் இனி. 9

விட்டுவிடப் போகுதுயிர் விட்டவுட னேயுடலைச்
சுட்டுவிடப் போகின்றார் சுற்றத்தார்—பட்டதுபட்
டெந்நேர முஞ்சிவனை யேத்துங்கள் போற்றுங்கள்
சொன்னே னதுவே சுகம். 10

ஆவியொடு காய மழிந்தாலும் மேதினியிற்
பாவியென்று நாமம் படையாதே—மேவியசீர்
வித்தார மூங்கடம்பும் வேண்டா மடநெஞ்சே
செத்தாரைப் போலே திரி. 11

### திருவாரூர்

ஆரூர ரிங்கிருக்க அவ்வூர்த் திருநாளென்
றூரூர்க டோறு முழலுவீர்—நேரே
உளக்குறிப்பை நாடாத வூமர்காள் நீவிர்
விளக்கிருக்கத் தீத்தேடு வீர். 12

### திருக்காஞ்சி

எத்தனையூர் எத்தனைவீ டெத்தனைதாய் பெற்றவர்கள்
எத்தனைபே ரிட்டழைக்க ஏனென்றேன்—நித்தம்
எனக்குக் களையாற்றாய் ஏகம்பா கம்பா
உனக்குத் திருவிளையாட் டோ. 13

### திருவையாறு

மண்ணுந் தணலாற வானும் புகையாற
எண்ணரிய தாய ரிளைப்பாறப்—பண்ணுமயன்
கையா றவுமடியேன் காலா றவுங்கண்பார்
ஐயா திருவையா று. 14

### பொது

இப்பிறப்பை நம்பி பிருப்பையோ நெஞ்சமே
தைப்பிருக்க வாயில் மனையிருக்கச்—சொப்பனம்போல்
விக்கிப்பற் கிட்டக்கண் மெத்தப்பஞ் சிட்டப்பைக்
கக்கிச்செத் துக்கொட்டக் கண்டு. 15

மேலு மிருக்க விரும்பினையே வெள்விடையோன்
சீல மறிந்திலையே சிந்தையே—கால்கைக்குக் [டல்
கொட்டையிட்டு மெத்தையிட்டுக் குத்திமெத்தப்பட்டவு
கட்டையிட்டுச் சுட்டுவிடக் கண்டு. 16

ஒன்பதுவாய்த் தோற்பைக் கொருநாளைப் போலவே
அன்புவைத்து நெஞ்சே அலைந்தாயே—வன்கழுக்கள்
தத்தித்தத் திச்சட்டை தட்டிக்கட் டிப்பிட்டுக்
கத்திக்குத் தித்தின்னக் கண்டு. 17

இன்னம் பிறக்க இசைவையோ நெஞ்சமே
மன்னரிவ ரென்றிருந்து வாழ்ந்தவரை—முன்னம்
எரிந்தகட்டை மீதி லிணைக்கோ வணத்தை
உரிந்துருட்டிப் போட்டது கண்டு. 18

முதற்சங் கமுதூட்டும் மொய்குழலா ராசை
நடுச்சங்கம் நல்விலங்கு பூட்டும்—கடைச்சங்கம்
ஆம்போ ததுஊதும் அம்மட்டோ இம்மட்டோ
நாம்பூமி வாழ்ந்த நலம். 19

## திருக்காளத்தி

பொய்யை யொழியாய் புலாலைவிடாய் காளத்தி
ஐயரே என்னுய் அறஞ்செய்யாய்—வெய்ய
சினமே ஒழியாய் திருவெழுத்தைந் தோதாய்
மனமே உனக்கென்ன மாண்பு. 20

## திருவாரூர்

எருவாய்க் கிருவிரன்மே லேறுபுழுக் கூண்டுக்
கருவாய்க்கோ கண்கலக்கப் பட்டாய்—திருவாரூர்த்
தேரோடும் வீதியிலே செத்துக் கிடக்கின்ருய்
நீரோடுந் தாரைக்கே நீ. 21

## திருவிருப்பையூர்

மாதா வுடல்சலித்தாள் வல்வினையேன் கால்சலித்தேன்
வேதாவுங் கைசலித்து விட்டானே—நாதா
இருப்பையூர் வாழ்சிவனே இன்னமோர் அன்னை
கருப்பையூர் வாராமற் கா. 22

## திருக்கச்சிக்காரோணம்

அத்தி முதலெறும்பீ றனவுயிர் அத்தனைக்குஞ்
சித்த மகிழ்ந்தளிக்குந் தேசிகா—மெத்தப்
பசிக்குதையா பாவியேன் பாழ்வயிற்றைப் பற்றி
இசிக்குதையா காரோண ரே. 23

## பொது

எத்தனை நாள் கூடி யெடுத்த சரீரமிவை
அத்தனையு மண்தின்ப தல்லவோ—வித்தகனார்
காலைப் பிடித்துமெள்ளக் கந்தல்பக லற்றிடத்தே
மேலைக் குடியிருப்போ மே. 24

எச்சிலென்று சொல்லி இதமகிதம் பேசாதீர்
எச்சி லிருக்கு மிடமறியீர் —எச்சில்தனை
உய்த்திருந்து பார்த்தால் ஒருமை வெளிப்படும்பின்
சித்தம் நிராமயமா மே. 25

## திருக்குற்றாலம்

காலன் வருமுன்னே கண்பஞ் சடைமுன்னே
பாலுண் கடைவாய் படுமுன்னே – மேல்விழுந்தே
உற்றா ரழுமுன்னே ஊரார் சுடுமுன்னே
குற்றாலத் தானையே கூறு. 26

எத்தனைபேர் நட்டகுழி எத்தனைபேர் தொட்டமுலை
எத்தனைபேர் பற்றி இழுத்தவிதழ் – நித்தநித்தம்
பொய்யடா பேசும் புவியின்மட மாதரைவிட்
டுய்யடா வுய்யடா வுய். 27

இருப்பதுபொய் போவதுமெய் என்றெண்ணி நெஞ்சே
ஒருத்தருக்குந் தீங்கினையுன் னாதே—பரித்தவுடல்
நம்மதென்று நா மிருக்க நாய்நறிகள் பேய்கழுகு
தம்மதென்று தாமிருக்குந் தான். 28

எத்தொழிலைச் செய்தாலும் ஏதவத்தைப் பட்டாலும்
முத்தர் மனமிருக்கும் மோனத்தே — வித்தகமாய்க்
காதிவிளை யாடியிரு கைவீசி வந்தாலுந்
தாதிமனம் நீர்க்குடத்தே தான். 29

மாலைப் பொழுதில்நறு மஞ்சளரைத் தேகுளித்து
வேலைமினுக் கிட்டு விழித்திருந்து — சூலாகிப்
பெற்றாள் வளர்த்தாள் பெயரிட்டாள் பெற்றபிள்ளை
பித்தானு லென்செய்வாள் பின். 30

வான்றேடு மறையேயோ மறைதேடும் பொருளேயோ
ஊன்றேடு முயிரேயோ வுயிர்தேடு முணர்வேயோ
தான்றேட நான்றேடச் சகலமெலாந் தனைத்தேட
நான்றேடி நான்காண நானுரோ நானுரோ. 31

---

## உடற்கூற்று வண்ணம்

குறிப்புச் சந்தம்

தன தன தான தன தன தான
 தந்ததனந்தன தந்ததனந்தன
தனன்தனந்த தனனதனந்த
 தானன தானன தானனதந்த
  தந்ததனதான தனதானனு.

ஒருமடமாது மொருவனுமாகி இன்பசுகந்தரு
மன்புபொருந்தி உணர்வுகலங்கி யொழுகியவிந்து
 ஊறுசுரோணித மீதுகலந்து—
பனியிலோர்பாதி சிறுதுளிமாது பண்டியில்வந்து
புகுந்து திரண்டு பதும அரும்பி கமடமிதென்று
 பார்வைமெய்வாய்செவி கால்கைகளென்ற—

உருவமுமாகி வுயிர்வளர்மாதம் ஒன்பதுமொன்று
நிறைந்துமடந்தை உதரமகன்று புவியில்விழுந்து
யோகமும்வாரமு நாளுமறிந்து

மகளிர்சேனே தரவணையாடை மண்மடவுந்தியு
தைந்துகவிழ்ந்து மடமயில்கொங்கை யமுதமருந்தி
ஓரறிவீரறி வாகிவளர்ந்து —

ஒளிநகையூற லிதழ்மடவாரு வந்துமுகந்திட
வந்துதவழ்ந்து மடியிலிருந்து மழலைபொழிந்து
வாவிருபோவென நாமம்விளம்ப —

உடைமணியாடை யரைவடமாட உண்பவர்தின்பவர்
தங்களொடுண்டு தெருவிலிருந்து புழுதியளைந்து
தேடியபாலரோ டோடி நடந்து—
அஞ்சுவயதாகி விளையாடியே.

உயர்தருஞான குருவுபதேச முத்தமிழின்கலை
யுங்கரைகண்டு வளர்பிறையென்று பலரும்விளம்ப
வாழ்பதினாறு பிராயமும்வந்து —

மயிர்முடிகோதி யறுபதநீலவண்டிமிர் தண்டொடை
கொண்டைபுனைந்து மணிபொனிலங்கு பணிகளணிந்து
மாகதர்போகதர் கூடிவணங்க—

மதனசொரூப னிவனெனமோக மங்கையர்கண்டு
மருண்டுதிரண்டு வரிவிழிகொண்டு சுழியவெறிந்து
மாமயில்போலவர் போவதுகண்டு—

மனதுபொரும லவர்பிறகோடி மங்கலசெங்கல
சந்திகழ்கொங்கை மருவமயங்கி இதழமுதுண்டு
தேடியமாமுதல் சேரவழங்கி—

ஒருமுதலாகி முதுபொருளாயி ருந்ததனங்களும்
வம்பிலிழந்து மதனசுகந்த விதனமிதென்று
வாலிபகோலமும் வேறுபிரிந்து—

வளமையுமாறி யிளமையுமாறி வன்பல்விழுந்திரு
கண்களிருண்டு வயதுமுதிர்ந்து நரைதிரைவந்து
வாதவிரோத குரோதமடைந்து—
செங்கையினிலோர் தடியுமாகியே. ½

வருவதுபோவ தொருமுதுகூனு மந்தியெனும்படி
குந்திநடந்து மதியுமழிந்து செவிதிமிர் வந்து
வாயறியாமல் விடாமன்மொழிந்து—

துயில்வருநேர மிருமல்பொருது தொண்டையுநெஞ்சு
முலர்ந்துவறண்டு துகிலுமிழந்து சுணையுமழிந்து
தோகையர்பாலர்கள் கோரணிகொண்டு—

கலியுகமீதி லிவர்மரியாதை கண்டிடுமென்பவர்
சஞ்சலமிஞ்ச கலகலவென்று மலசலம்வந்து
கால்வழிமேல்வழி சாரநடந்து—

தெளிவுமிராம லுரைதடுமாறி சிந்தையுநெஞ்சமு
லைந்துமருண்டு திடமுமுலைந்து மிகவுமலைந்து
தேறிநலாதர வேதெனநொந்து

மறையவன்வேத னெழுதியவாறு வந்தது கண்டமும்
என்றுதெளிந்து இனியெனகண்ட மினியெனதொந்த
மேதினிவாழ்வுநி லாதினிநின்ற—

கடன்முறைபேசு மெனவுரை நாவு றங்கிவிழுந்துகை
கொண்டுமொழிந்து கடைவழிகஞ்சி யொழுகிடவந்து
பூதமுநாலு சுவாசமுநின்று—
நெஞ்சுதடுமாறி வருநேரமே. ¾

வளர்பிறைபோல் எயிறுமுரோம முஞ்சடையுஞ்சிறு
குஞ்சியும்விஞ்ச மனதுமிருண்ட வடிவுமிலங்க
மாமலைபோல்யம தூதர்கள்வந்து—

வலைகொடுவீசி யுயிர்கொடுபோக மைந்தரும்வந்து
குனிந்தழநொந்து மடியில்விழுந்து மனைவிபுலம்ப
மாழ்கினரேயிவர் காலமறிந்து—

பழையவர்காணு மெனுமயலார்கள் பஞ்சுபறந்திட
நின்றவர்பந்தர் இடுமெனவந்து பறையிடமுந்த
வேபிணம்வேக விசாரியுமென்று—

பலரையுமேவி முதியவர்தாமி ருந்தசவங்கழு
வுஞ்சிலரென்று பணிதுகில்தொங்கல் களபமணிந்து
பாவகமேசெய்து நாறுமுடம்பை—

வரிசைகெடாம லெடுமெனவோடி வந்திளமைந்தர்
குனிந்துசுமந்து கடுகிநடந்து சுடலையடைந்து
மானிடவாழ்வென வாழ்வெனநொந்து—

விறகிடைமூடி யழல்கொடுபோட வெந்துவிழுந்து
முறிந்துநிணங்கள் உருகியெலும்பு கருகியடங்கி
ஓர்பிடிநீறுமி லாதவுடம்பை—
நம்புமடியேனை யினியாளுமே. 1

---

## முதல்வன் முறையீடு

---

### கண்ணிகள்

கன்னி வனநாதா கன்னி வனநாதா

மூலம் அறியேன் முடியும் முடிவறியேன்
ஞாலத்துட் பட்டதுயர் நாட நடக்குதடா. 1

அறியாமை யாமலத்தால் அறிவுமுதற் கெட்டனடா
பிரியா வினைப்பயனாற் பித்துப் பிடித்தனடா. 2

தனுவாதியநான்குந் தானாய் மயங்கினண்டா
மனிவாதி சத்தி வலையிலகப் பட்டனடா. 3

மாமாயை யென்னும் வனத்தில் அலைகிறண்டா
தாமா யுலகனைத்துந் தாது கலங்கிறண்டா. 4
கன்னி வன நாதா கன்னி வன நாதா

மண்ணாசைப் பட்டேனே மண்ணுண்டு போட்டதடா
பொன்னாசை பெண்ணாசை போகேனே யென்குதே. 5

மக்கள் சுற்றத்தாசை மறக்கேனே யென்குதே
திக்கரசா மாசையது தீரேனே யென்குதே. 6

வித்தைகற்கு மாசையிது விட்டொழியே னென்குதே
சித்துகற்கு மாசையது சிதையேனே யென்குதே. 7

மந்திரத்தி லாசை மறக்கேனே யென்குதே
சுந்தரத்தி லாசை துறக்கேனே யென்குதே 8
கன்னி வன நாதா கன்னி வன நாதா

கட்டுவர்க்கத் தாசை கழலேனே யென்குதே
செட்டுதனி லாசை சிதையேனே யென்குதே. 9

மாற்றுஞ் சலவை மறக்கேனே யென்குதே
சோற்றுக் குழியுமின்னுந் தூரேனே யென்குதே. 10

ஐந்து புலனும் அடங்கேனே யென்குதே
சிந்தை தவிக்கிறதுந் தேறேனே யென்குதே. 11

காமக் குரோதங் கடக்கேனே யென்குதே
நாமே யரசென்று நாடோறு மெண்ணுதே. 12
கன்னி வன நாதா கன்னி வன நாதா

அச்சமாங் காரம் அடங்கேனே யென்குதே
கைச்சுமின்னு மானங் கழலேனே யென்குதே. 13

நீர்க்குமிழி யாமுடலை நித்தியமா யெண்ணுதே
ஆர்க்கு முயராசை யழியேனே யென்குதே. 14

கண்ணுக்குக் கண்ணெதிரே கட்டையில்வே கக்கண்டும்
என்றுந் திரமா யிருப்போமென் றெண்ணுதே. 15

அநித்தியத்தை நித்தியமென் றுதரவா யெண்ணுதே
தனித்திருக்கே னென்குதே தனைமறக்கே னென்குதே. 16
கன்னி வனநாதா கன்னி வனநாதா

நரகக் குழியுமின்னும் நான்புசிப்பே னென்குதே
உரகப் படத்தல்குல் உனைக்கெடுப்பே னென்குதே. 17

குரும்பை முலையுங் குடிகெடுப்பே னென்குதே
அரும்பு விழியுமென்ற னுவியுண்பே னென்குதே. 18

மாத ருருக்கொண்டு மறலிவஞ்ச மெண்ணுதே
ஆதரவு மற்றிங் கரக்கா யுருகிறண்டா. 19

கந்தனை யீன்றருளும் கன்னி வனநாதா
எந்த விதத்தில்நான் ஏறிப் படருவண்டா. 20
கன்னி வனநாதா கன்னி வனநாதா

புல்லாகிப் பூடாய்ப் புலர்ந்தநாள் போதாதோ
கல்லாய் மரமாய்க் கழிந்தநாள் போதாதோ. 21

கீரியாய்க் கீடமாய்க் கெட்டநாள் போதாதோ
நீரியாய் ஊர்வனவாய் நின்றநாள் போதாதோ. 22

பூதமொடு தேவருமாய்ப் போனநாள் போதாதோ
வேதனைசெய் தானவராய் வீந்தநாள் போதாதோ. 23

அன்னை வயிற்றில் அழிந்தநாள் போதாதோ
மன்னவனாய் வாழ்ந்து மரித்தநாள் போதாதோ. 24
கன்னி வனநாதா கன்னி வனநாதா

தாயாகித் தாரமுமாய்த் தாழ்ந்தநாள் போதாதோ
சேயாய்ப் புருடனுமாய்ச் சென்றநாள் போதாதோ. 25

நோயுண்ண வேமெலிந்து நொந்தநாள் போதாதோ
பேயுண்ணப் பேயாய்ப் பிறந்தநாள் போதாதோ. 26

ஊனவுடல் கூன்குருடாய் உற்றநாள் போதாதோ
ஈனப் புசிப்பில் இளைத்தநாள் போதாதோ. 27

பட்ட கஙளயும் பரிதவிப்பும் போதாதோ
கெட்ட நாள் கெட்டேனென்று கேளாதும் போதாதோ.
கன்னி வன நாதா கன்னி வன நாதா

நில்லாமைக் கேயமுது நின்றநாள் போதாதோ
எல்லாரு மென்பார மெடுத்தநாள் போதாதோ. 29

காமன் கணையாற் கடைபட்டல் போதாதோ
ஏமன் கரத்தி லிடியுண்டல் போதாதோ. 30

நான் முகன் பட்டோலை நறுக்குண்டல் போதாதோ
தேன்றுளபத் தானேமி தேக்குண்டல் போதாதோ. 31

உருத்திரனார் சங்காரத் துற்றநாள் போதாதோ
வருத்த மறிந்தையிலை வாவென்ற ழைத்தையிலை. 32
கன்னி வன நாதா கன்னி வன நாதா

பிறப்பைத் தவிர்த்தையிலை பின்னாகக் கொண்டையிலை
இறப்பைத் தவிர்த்தையிலை என்னென்று கேட்டையிலை.

பாச மெரித்தையிலை பரிதவிப்பைத் தீர்த்தையிலை
பூசிய நீற்றைப் புனையென் றளித்தையிலை. 34

அடிமையென்று சொன்னையிலை அக்கமணி தந்தையிலை
விடுமுலகம் போக்கியுன்றன் வேடம் அளித்தையிலை. 35

உன்னில் அழைத்தையிலை ஒன்றுக்கிக் கொண்டையிலை
நின்னடியார் கூட்டத்தில் நீயழைத்து வைத்தையிலை. 36
கன்னி வன நாதா கன்னி வன நாதா

ஓங்கு பரத்துள் ஒளித்தவடி யார்க்கடியாள்
ஈங்கோ யடியா னெமக்கென் றுரைத்தையிலை. 37

நாமந் தரித்தையிலை நன்னெறிய நின்றையிலை
சேம அருளிலெனைச் சிந்தித் தழைத்தையிலை. 38

முத்தி யளித்தையிலை மோனங் கொடுத்தையிலை
சித்தி யளித்தையிலை சீராட்டிக் கொண்டையிலை. 39

அற்ப சுகமறிந்தே அறிவையறி வாலறிந்து
கெர்ப்பத்தில் வீழ்ந்துகொண்ட கோளறுப்ப தெக்காலம்.

கருப்படுத்தி என்னையமன் கைப்பிடித்துக் கொள்ளாமுன்
உருப்படுத்தி யாள உடன்படுவ தெக்காலம். 25

தூண்டு விளக்கணையத் தொடர்ந்திருள்முன் சூழ்ந்தாற்
மாண்டு பிழைத்துவந்த வகைதெரிவ தெக்காலம். [போல்

தூரியினில் மீன்போற் சுழன்றுமனம் வாடாமல்
ஆரியனைத் தேடி அடிபணிவ தெச்காலம். 27

எண்ணூ றுகமிருந்தும் எய்தாத விடுபெற
வெண்ணீறு பூசி விளங்குவது மெக்காலம். 28

அவவேடம் பூண்டிங் கலைந்து திரியாமற்
சிவவேடம் பூண்டு சிறந்திருப்ப தெக்காலம். 29

அண்டருக்கா நஞ்சருந்தி அம்பலத்தி லாடுசிவன் [காலம்
தொண்டருக்குத்தொண்டனெனத் தொண்டுசெய்வதெக்

பன்றி வடிவெடுத்துப் பாரிடந்து மால்காணுக்
குன்றில் விளக்கொளியைக் கூறுவது மெக்காலம். 31

தித்திக்குந் தெள்ளமிர்தைத் சித்தாந்தத் துட்பொருளை
முத்திக்கு வித்தை முதனினைப்ப தெக்காலம். 32

வேதாந்த வேதமெல்லாம் விட்டொழிந்தே நிட்டையிலே
ஏகாந்தமாக இருப்பதினி யெக்காலம். 33

மற்றிடத்தைத் தேடியென்றன் வாழ்நாளைப் போக்காமல்
உற்றிடத்தைத் தேடி யுறங்குவது மெக்காலம். 34

இன்றுளோர் நாளை இருப்பதும் பொய்யெனவே
மன்றுளோர் சொல்லும் வகையறிவ தெக்காலம். 35

கஞ்சா அபினியுடன் கள்ளுண்டு வாடாமற்
பஞ்சாமிர் தத்தைப் பருகுவது மெக்காலம். 36

செஞ்சலத்தி ஞற்றிரண்ட செனனமோட் சம்பெறவே
சஞ்சலத்தை விட்டுன் சரணடைவ தெக்காலம். 37

கும்பிக் கிரைதேடிக்கொடுப்பா ரிடந்தோறும்
வெம்பித் திரிகை விடுப்பதினி எங்காலம். 38

ஆடுகின்ற சூத்திரந்தான் அறுமளவுமே திரிந்து
போடுகின்ற நாள்வருமுன் போற்றுவது மெக்காலம். 39

நவசூத் திரவீட்டை நானென் றலையாமல்
சிவசூத்திரத்தைத் தெரிந்தறிவ தெக்காலம் 40

மறந்து மலசலங்கள் மாயும்புழுக் கூட்டைவிட்டுக்
கரந்துன் அடியிணைக்கீழ்க்கலந்துநிற்ப தெக்காலம். 41

இம்மைதனிற் பாதகனுய் இருவினைக்கீ டாயெடுத்த
பொம்மைதனைப் போட்டுன்னைப் போற்றிநிற்ப
[தெக்காலம். 42

உப்பிட்ட பாண்டம் உடைந்துகருக் கொள்ளுமுன்னே
அப்பிட்ட வேணியனுக் காட்படுவ தெக்காலம். 43

சேவைபுரிந்து சிவரூபக் காட்சிகண்டு
பாவை தனைக்கழித்துப் பயனடைவ தெக்காலம். 44

காண்டத்தை வாங்கிக் கருமேகம் மீண்டதுபோல்
பாண்டத்தை நீக்கிப் பரமடைவ தெக்காலம். 45

சோற்றுத் துருத்திதனைச் சுமந்தலைந்து வாடாமல்
ற்றைச் சடம்போட் டுனையடைவ தெக்காலம். 46

தொடக்கைச் சதமெனவே சுமந்தலைந்து வாடாமல்
உடக்கைக் கழற்றி உனையறிவ தெக்காலம். 47

ஆசைவலைப் பாசத் தகப்பட்டு மாயாமல்
ஓசைமணி தீபத்தி லொன்றி நிற்ப தெக்காலம். 48

கூறரிய நால்வேதங் கூப்பிட்டுங் காணுத
பார ரகசியத்தைப் பார்த்திருப்ப தெக்காலம். 49

புல்லாய் விலங்காய்ப் புழுவாய் நரவடிவாய்
எல்லாப் பிறப்பி னிருளகல்வ தெக்காலம். 50

தத்தும்வகைக் கோர்பொருளும் சாராமலே நினைவில்
பக்குவம்வந் துன்னருளைப் பார்த்திருப்ப தெக்காலம். 51

பருவத் தலைவரொடும் புல்கியின்பங் கொள்வதற்குத்
தெரிவைப் பருவம்வந்து சிக்குவது மெக்காலம். 52

தெரிவையுறும் பக்குவத்தின் சீராட்டெல் லாமறிந்து
குருவையறிந் தேநினைத்துக் கும்பிடுவ தெக்காலம். 53

வம்படிக்கு மாதருடன் வாழ்ந்தாலும் மன்னுபுளி
யம்பழமும் ஓடும்போல் ஆவதினி எக்காலம். 54

பற்றற்று நீரிற் படர்தா மரையிலைபோல்
சுற்றத்தை நீங்கிமனந் தூர நிற்ப தெக்காலம். 55

சல்லாப லீலையிலே தன்மனைவி செய்தசுகம்
சொல்லாரக் கண்டெனக்குச் சொல்வதினி எக்காலம். 56

மருவும் அயற்புருடன் வருநேரங் காணுமல்
உருகுமனம் போலெனுளம் உருகுவது மெக்காலம். 57

தன்கணவன் தன்சுகத்திற் றன்மனம்வே றானதுபோல்
என்கருத்தி லுன்பதத்தை ஏற்றவது மெக்காலம். 58

கூடிப் பிரிந்துவிட்ட கொம்பனையைக் காணுமல்
தேடித் தவிப்பவன்போல் சிந்தைவைப்ப தெக்காலம். 59

எவ்வனத்தின் மோகம் எப்படியுண் டப்படிபோல்
கவ்வனத் தியானம் கருத்துவைப்ப தெக்காலம். 60

கண்ணா லருவி கசிந்துமுத்துப் போலுதிர
எண்ணும் பரம்பொருளை எண்ணுவது மெக்காலம். 61

ஆகம் மிகவுருக அன்புருக என்புருகப்
போக வநுபூதி பொருந்துவது மெக்காலம். 62

நீரிற் குமிழிபோல் நிலையற்ற வாழ்வைவிட்டுன்
பேரின்பக் கருணைவெள்ளம் பெருக்கெடுப்ப தெக்காலம்.

அன்பை யுருக்கி அறிவை யதன் மேற்புகட்டித்
துன்பவலைப் பாசத் தொடக்கறுப்ப தெக்காலம். 64

கருவின் வழியறிந்து கருத்தைச் செலுத்தாமல்
அருவி விழிசொரிய அன்புவைப்ப தெக்காலம். 65

தெளியத் தெளியத் தெளிந்தசிவா னந்தத்தேன்
பொழியப் பொழியமனம் பூண்டிருப்ப தெக்காலம். 66

ஆதார மூலத் தடியிற் கணபதியைப்
பாதார விந்தம் பணிந்துநிற்ப தெக்காலம். 67

மண்வளைந்த நற்கீற்றில் வளைந்திருந்த வேதாவைக்
கண்வளர்த்துப் பார்த்துள்ளே கண்டிருப்ப தெக்காலம்.

அப்புப் பிறைநடுவே அமர்ந்திருந்த விட்டுணுவை
உப்புக் குடுக்கையுள்ளே உணர்ந்தறிவ தெக்காலம். 69

மூன்று வளையமிட்டு மூளத்தெழுந்த கோணத்தில்
தோன்றும் உருத்திரனைத் தொழுதுநிற்ப தெக்காலம். 70

வாயுவறு கோணத்தில் வாழும் மகேச்சுரனைத்
தோயும்வகை கேட்கத் தொடங்குவது மெக்காலம். 71

வட்டவழிக் குள்ளே மருவுஞ் சதாசிவத்தைக்
கிட்டவழி தேடக் கிருபைசெய்வ தெக்காலம். 72

உச்சிக் கிடைநடுவே ஓங்குங் குருபதத்தை
நிச்சயித்துக் கொண்டிருந்து நேர்வதினி எக்காலம். 73

பாராகிப் பார்மீதிற் பஞ்சவன்னந் தானாகி
வேராகி நீமுளைத்த வித்தறிவ தெக்காலம். 74

கட்டறுக்க வொண்ணாக் கருவிகர ணாதியெல்லாஞ்
சுட்டறுத்த நிட்டையிலே தூங்குவது மெக்காலம். 75

கள்ளக் கருத்தையெல்லாங் கட்டோடு வேரறுத்திங்
குள்ளக் கருத்தை யுணர்ந்திருப்ப தெக்காலம். 76

அட்டகா சஞ்செலுத்தும் அவத்தைதச்சட லத்துடனே
பட்டபா டத்தனையும் பகுத்தறிவ தெக்காலம். 77

அறிவுக் கருவியுட னவத்தைபடும் பாட்டையெல்லாம்
பிறியவுடன் நிறுத்திப் பெலப்படுவ தெக்காலம். 78

பூதம் பொறிகரணம் போந்தவிந்து நாதமுமாய்ப்
பேதம் பலவிதமும் பிரித்தறிவ தெக்காலம். 79

தோன்றுசை மூன்றுந் தொடர்ந்துவந்து சுற்றுமல்
ஊன்றுசை வேரையடி யுடறுப்ப தெக்காலம். 80

புன்சனனம் போற்றுமுன்னே புரியட்டம் போக்கியினி
என்சனன மீடேறு மென்றறிவ தெக்காலம். 81

நட்ட நடுவினின்று நற்றிரோ தாயியருள்
கிட்ட வழிகாட்டிக் கிருபைசெய்வ தெக்காலம். 82

நானே நானென்றிருந்தேன் நடுவினின்ற கட்டழகி
தானே வெளிப்படுத்தித் தருவளென்ப தெக்காலம். 83

அடர்ந்த மனக்காட்டை அஞ்செழுத்தாம் வாளாலே
தொடர்ந்து தொடர்ந்து வெட்டிச் சுடுவதினி எக்காலம்.

ஐந்து பொறிவழிபோய் அலையுமிந்தப் பாழ்மனத்தை
வெந்து விழப்பார்த்து விழிப்பதினி எக்காலம். 85

தினமாண்டு சேர்ந்திருந்தோ ரெல்லாருந் தாமாண்டு
சினமாண்டு போகவருள் சேர்ந்திருப்ப தெக்காலம். 86

அமையா மனமமையும் ஆனந்த வீடுகண்டங்
கிமையாமல் நோக்கி யிருப்பதினி எக்காலம். 87

கொண்டுவிடுஞ் சீவன்மெள்ளக் கோட்டாவி கொண்டாற்
[போல்
மாண்டுவிடு முன்னேநான் மாண்டிருப்ப தெக்காலம். 88

ஊனிறைந்த காயமுயிரிழந்து போகுமுன்னம்
நானிறந்து போகவினி நாள்வருவ தெக்காலம். 89

கெட்டு விடுமாந்தர் கெர்விதங்கள் பேசிவந்து
சுட்டுவிடு முன்னென்னைச் சுட்டிருப்ப தெக்காலம். 90

தோலேணி வைத்தேறித் தூரநடந் தெய்க்காமல்
நூலேணி வைத்தேறி நோக்குவது மெக்காலம். 91

வாயோடு கண்மூடி மயக்கமுற்று நில்லாமல்
தாயோடு கண்மூடித் தழுவிநிற்ப தெக்காலம். 92

காசினியெ லாநடந்து காலோய்ந்து போகாமல்
வாசி தனிலேறி வருவதினி யெக்காலம். 93

ஒலிபடருங் குண்டலியை உன்னியுணர் வாலெழுப்பிச்
சுழுமுனையின் தாள்திறந்து தூண்டுவது மெக்காலம். 94

இடைபிங் கலைநடுவே இயங்குஞ் சுழுமுனையில்
தடையறவே நின்று சலித்திருப்ப தெக்காலம். 95

மூல நெருப்பைவிட்டு மூட்டுநிலா மண்டபத்தில்
பாலை யிறக்கியுண்டு பசியொழிவ தெக்காலம். 96

ஆக வெளிக்குள்ளே அடங்காப் புரவிசெல்ல
ஏக வெளியி லிருப்பதினி எக்காலம். 97

பஞ்சரித்துப் பேசும் பல்கலைக்கெட் டாப்பொருளில்
சஞ்சரித்து வாழ்ந்து தவம்பெறுவ தெக்காலம். 98

மலமுஞ் சலமுமற்று மாயையற்று மானமற்று
நலமுங் குலமுமற்று நானிருப்ப தெக்காலம். 99

ஓடாம லோடி உலகைவலம் வந்துசுற்றித்
தேடாம லென்னிடமாய்த் தெரிசிப்ப தெக்காலம். 100

அஞ்ஞானம் விட்டே அருண்ஞானத் தெல்லைதொட்டு
மெய்ஞ்ஞான வீடுபெற்று வெளிப்படுவ தெக்காலம். 101

வெல்லுமட்டும் பார்த்து வெகுளியெலாம் விட்டகன்று
செல்லுமட்டுஞ் சிந்தை செலுத்துவது மெக்காலம். 102

மேலாம் பதந்தேடி மெய்ப்பொருளை யுள்ளிருத்தி
நாலாம் பதந்தேடி நான்பெறுவ தெக்காலம். 103

எண்ணாத தூரமெல்லாம் எண்ணியெண்ணிப் பாராமல்
கண்ணாடிக் குள்ளொளிபோற் கண்டறிவ தெக்காலம். 104

என்னை அறிந்துகொண்டே எங்கோமா னோடிருக்குந்
தன்மை யறிந்து சமைந்திருப்ப தெக்காலம். 105

ஆறுதா ரங்கடந்த ஆனந்தப் பேரொளியைப்
பேருகக் கண்டுநான் பெற்றிருப்ப தெக்காலம். 106

ஆணவ மாயத்தா லழிந்துடலம் போகாமுன்
காணுதலா லின்பமுற்றுக் கண்டறிவ தெக்காலம். 107

மும்மலமுஞ் சேர்ந்து முளைத்தெழுந்த காயமிதை
நிர்மலமாய்க் கண்டுவினை நீங்கிநிற்ப தெக்காலம். 108

முன்னை வினைகெடவே மூன்றுவகைக் காட்சியினால்
உன்னை வெளிப்படுத்தி உறுவதினி எக்காலம். 109

கண்ணினொளி பாய்ந்ததுவுங் கருத்தறிந்து கொண்டதுவு
விண்ணினொளி கண்டதுவும் வெளிப்படுவதெக்காலம்.[ம்

கனவுகண்டாற் போலெனக்குக் காட்டிமறைத் தேயிருக்க
நினைவைப் பரவெளியில் நிறுத்துவது மெக்காலம். 111

ஆரென்று கேட்டதுவும் அறிவுவந்து கண்டதுவும்
வாரென்று சொன்னதுவும் பகுத்தறிவ தெக்காலம். 112

நினைக்கும் நினைவுதொறும் நிறைந்தபரி பூரணத்தை[ம்.
முனைக்குமேற் கண்டுகண்ணில் முளைத்தெழுப்ப தெக்கால

முப்பாழும் பாழாய் முதற்பாழுஞ் சூனியமாய்
அப்பாழும் பாழாய் அன்புசெய்வ தெக்காலம். 114

சீரென் றெழுந்து தெளிந்து நின்ற வான்பொருளை
நீயென்று கண்டு நிலைபெறுவ தெக்காலம். 115

வவ்வெழுத்தும் மவ்வெழுத் தும்வாளாகுஞ் சிவ்வெழுத்தும்
யவ்வெழுத்தி லுள்ளே அடங்கிநிற்ப தெக்காலம். 116

எழுத்தெல்லாம் மாண்டிறந்தே ஏகமாய் நின்றதிலே [ம்
அழுத்தமாய்ச் சிந்தையை வைத் தன்பு கொள்வ தெக்கால

அருவாய் உருவாகி ஆதியந்த மாகிநின்ற
குருவாகி வந்தென்னை யாட்கொண் டருள்வ தெக்காலம். 118

நானென் றறிந்தவனை நானறியாக் காலமெல்லாந்
தானென்று நீயிருந்த தன்னை யறிவ தெக்காலம் 119

என்மயமாய்க் கண்டதெல்லாம் எண்ணியெண்ணிப்
[பார்த்தபின்பு
தன்மயமாய்க் கொண்டதிலே சார்ந்துநிற் பதெக்காலம்.

ஒளியி லொளியாம் உருப்பிறந்த வாறதுபோல்
வெளியில் வெளியான விதமறிவ தெக்காலம் 121

ஒளியிட்ட மெய்ப்பொருளை உள்வழியி லேயடைத்து
வெளியிட்டுச் சாத்திவைத்து வீடுறுவ தெக்காலம் 122

காந்தம்வலித் திரும்பைக்கரத் திழுத்துக்கொண்ட துபோல்
பாய்ந்து பிடித்திழுத்துன் பதத்தில்வைப்ப தெக்காலம்.

பித்தாயங் கொண்டு பிரணவத்தை யூடறுத்துச்
செத்தாரைப் போலே திரிவதினி யெக்காலம் 124

ஒழிந்தகருத் தினைவைத் துள்ளெலும்பு வெள்ளெலும்பாய்க்
கழிந்தபிணம் போலிருந்து காண்பதினி யெக்காலம். 125

ஆதி கபிலர்சொன்ன ஆகமத்தின் சொற்படியே
சாதிவகை யில்லாமற் சஞ்சரிப்ப தெக்காலம். 126

சூதுங் களவுந் தொடர்வினையுஞ் சுட்டிடக்காற்
றூதுந் துருத்தியைப்போட் டுனையடைவ தெக்காலம்.

ஆசை வலைப்பாசத் தகப்பட்டு மாயாமல்
ஓசை மணித்தீபத்தி லொன்றிநிற்ப தெக்காலம். 128

கல்லாய் மரமாய்க் கயலாய்ப் பறவைகளாய்ப்
புல்லாய்ப் பிறந்தசென்மம் போதுமென்ப தெக்காலம்.

தக்கும்வகைக் கோர்பொருளும் சாராம லேநினைவில்
பக்குவமாய் நின்னருளைப் பார்த்திருப்ப தெக்காலம். 130

தூரோ டிசைந்து சுழன்றுவரு நந் தத்துவத்தை
வேரோ டிசைந்து விளங்குவது மெக்காலம் 131

பாக நடுவேறிப் பயந்தெழுந்த சித்திரத்தை
ஏக நடுமூலத் திருத்துவது மெக்காலம். 132

ஓரின்பங் காட்டும் உயர்ஞான வீதிசென்று
பேரின்ப வீடுகண்டு பெற்றிருப்ப தெக்காலம். 133

காரணமாய் வந்தென் கருத்தில் உரைத்ததெல்லாம்
பூரணமா கக்கண்டு புகழ்ந்திருப்ப தெக்காலம். 134

ஆயுங் கலைகளெல்லாம் ஆராய்ந்து பார்த்ததற்பின்
நீயென்று மில்லா நிசங்காண்ப தெக்காலம். 135

குறியாகக் கொண்டு குலமளித்த நாயகனைப்
பிரியாமற் சேர்ந்து பிறப்பறுப்ப தெக்காலம். 136

மத்தடுத்து நின்று மருளாடு வார்போலே
பித்தடுத்து நின்னருளைப் பெற்றிருப்ப தெக்காலம். 137

சாவாமல் செத்திருந்து சற்குருவின் பொன்னடிக்கீழ்
வேகாமல் வெந்திருக்க வேண்டுவது மெக்காலம். 138

என்னை யறியாம லிருந்தாட்டுஞ் சூத்திரநின்
றன்னை யறிந்து தவம்பெறுவ தெக்காலம். 139

உள்ள மறியா தொளித்திருந்த நாயகனைக்
கள்ள மனந்தெளிந்து காண்பதினி யெக்காலம் 140

வாசித்துங் காணுமல் வாய்விட்டுப் பேசாமல்
பூசித்துந் தோன்ருப் பொருள்காண்ப தெக்காலம். 141

பன்னிரண்டு காற்புரவி பாய்ந்துசில்லந் தப்பாமல்
பின்னிரண்டு சங்கிலிக்குட் பிணிப்பதினி யெக்காலம்.

நாட்டுக்கா லிரண்டும்விட்டு நடுவுக்கா லூடேபோய்
ஆட்டுக்கா லிரண்டினுள்ளே அமர்ந்திருப்ப தெக்காலம்.

பாற்பசுவை பூட்டிப் பதியில்வந்து சீராட்டிக்
காற்பசுவை ஓட்டியதிற் கட்டிவைப்ப தெக்காலம். 144

பலவிடத் தேமனத்தைப் பாயவிட்டுப் பாராமல்
நிலவரையி னூடேபோய் நேர்படுவ தெக்காலம். 145

காமக் கடல்கடந்து கரையேறிப் போவதற்கே
ஓமக் கனல்வளர்த்தி யுள்ளிருப்ப தெக்காலம். 146

உதயச் சுடர்மூன்றும் உள்வீட்டிலே கொளுத்தி
இதயத் திருநடன மினிக்காண்ப தெக்காலம். 147

வேதாந்த வேதமெல்லாம் விட்டேறி யேகடந்து
நாதாந்த மூல நடுவிருப்ப தெக்காலம் 148

பட்டமற்றுக் காற்றிற் பறந்தாடுஞ் சூத்திரம்போல்
விட்டு வெளியாக விசுவசித்த லெக்காலம். 149

அட்டாங்க யோகமதற் கப்பாலுக் கப்பாலாய்க்
கிட்டாப் பொருளதனைக் கிட்டுவது மெக்காலம். 150

ஒட்டாம லொட்டிநிற்கும் உடலுமுயி ரும்பிரித்தே
எட்டாப் பழம்பதிக்கிங் கேணிவைப்ப தெக்காலம். 151

பாசத்தை நீக்கிப் பசுவை பதியில்விட்டு
நேசத்தி னுள்ளே நினைந்திருப்ப தெக்காலம். 152

ஆசார நேச அனுட்டான மும்மறந்து
பேசா மெய்ஞ் ஞானநிலை பெற்றிருப்ப தெக்காலம். 153

பல்லாயி ரங்கோடிப் பகிரண்ட மும்படைப்பே
அல்லாது வேறில்லையென் றறிவதினி எக்காலம். 154

ஆதிமூத லாகிநின்ற அரியென்ற அச்சரத்தை
ஓதி யறிந்துளே உணர்வதினி எக்காலம். 155

சாத்திரத்தைச் சுட்டுச் சதுர்மறையைப் பொய்யாக்கிச்
சூத்திரத்தைக் கண்டு துயரறுப்ப தெக்காலம். 156

அல்லும் பகலுமென்றன் அறிவையறி வாலறிந்து
சொல்லும் முறைமறந்து தூங்குவது மெக்காலம் 157

இயங்குஞ் சராசரத்தில் எள்ளு மெண்ணெ யும்போல
முயங்குமந்த வேத முடிவறிவ தெக்காலம். 158

ஊனாகி யூனில் உயிராகி எவ்வுலகுந்
தானாகி நின்ற தனையறிவ தெக்காலம். 159

என்னைவிட்டு நீங்காமல் என்னிடத்து நீயிருக்க
உன்னைவிட்டு நீங்கா தொருப்படுவ தெக்காலம். 160

இன்னதென்று சொல்லவொண்ணு எல்லையற்றவான் [பொருளைச்
சொன்னதென்று நானறிந்து சொல்வதினி எக்காலம்.

மனதையொரு வில்லாக்கி வான்பொறியை நாணாக்கி
எனதறிவை அம்பாக்கி எய்வதினி எக்காலம். 162

என்னை இறக்கவெய்தே என்பதியை யீடழித்த
உன்னை வெளியில்வைத்தே ஒளித்துநிற்ப தெக்காலம்.

கடத்துகின்ற தோணிதனைக் கழைகள்குத்தி விட்டாற் [போல்
நடத்துகின்ற சித்திரத்தை நானறிவ தெக்காலம்.

நின்றநிலை பேராமல் நினைவிலொன்றும் சாராமல்
சென்றநிலை முத்தியென்று சேர்ந்தறிவ தெக்காலம். 165

பொன்னும் வெள்ளியும் நீண்டபொற்பதத்தை யுள்ளமைத்து
மின்னுமொளிவெளியே விட்டடைப்ப தெக்காலம்.

கூட்டிலடைப் பட்டபுழுக் குளவியுருக் கொண்டதுபோல்
வீட்டிலடை பட்டருளை வேண்டுவது மெக்காலம். 167

கடலில் ஒளித்திருந்த கனலெழுந்து வந்தாற்போல்
உடலிற் ஒளித்தசிவம் ஒளிசெய்வ தெக்காலம். 168

அருணப் பிரகாசம் அண்டமெங்கும் போர்த்ததுபோல்
கருணைத் திருவடியில் கலந்து நிற்ப தெக்காலம். 169

பொன்னிற் பல விதமாம் பூரண முண் டானதுபோல்
உன்னிற் பிறந்ததுன்னில் ஒடுங் குவது மெக்காலம். 170

நாயிற் கடைப்பிறப்பாய் நான்பிறந்த துன் பமற
வேயிற் கனலொளிபோல் விளங் குவது மெக்காலம். 171

சூரிய காந்தியொளி சூழ்ந்துபஞ்சைச் சுட்டதுபோல்
ஆரியன் தோற்றத் தருள்பெறுவ தெக்காலம். 172

இரும்பிற் கனல்மூட்டி இவ்வுருப் போய் அவ்வுருவாய்க்
கரும்பிற் சுவைரசத்தைக் கண்டறிவ தெக்காலம். 173

கருக்கொண்ட முட்டைதனைக் கடலாமை தானினைக்க
உருக்கொண்ட வாறதுபோல் உனையடைவ தெக்காலம்.

வீடுவிட்டுப் பாய்ந்து வெளியில் வருவார்போல்
கூடுவிட்டுப் பாயுங் குறிப்பறிவ தெக்காலம். 175

கடைந்தவெண்ணெய் மோரிற் கலவாத வாறதுபோல்
உடைந்து தமியேன் உனைக்காண்ப தெக்காலம். 176

இருளை ஒளிவிழுங்கி ஏகவுருக் கொண்டாற்போல்
அருளை விழுங்குமிருள் அகன்றுநிற்ப தெக்காலம். 177

பின்னெழுத்து மின்னெடுங்க் விண்ணில் உறைந்தாற்போல்
என்னுணின்ற தென்னுள்ளே யானறிவ தெக்காலம் [ல்

கண்ட புனற்குடத்திற் கதிரொளிகள் பாய்ந்தாற்போல்
கொண்ட சொரூபமதைக் கூர்ந்தறிவ தெக்காலம். 178

பூணுகின்ற பொன்னணிந்தாற் பொன் சுமக்கு மோவுடலை
காணுகின்ற என்கருத்திற் கண்டறிவ தெக்காலம். 180

செம்பிற் களிம்புபோற் சிவத்தை விழுங்கிமிக
வெம்பிநின்ற மும்மலத்தை வேறுசெய்வ தெக்காலம். 181

ஆவியுங் காயமும்போல் ஆத்துமத்தில் நின்றதனைப்
பாவி யறிந்துமனம் பற்றிநிற்ப தெக்காலம். 182

ஊமைக் கனுக்கண் டுரைக்கறியா இன்பமதை
நாமறிந்து கொள்வதற்கு நாள்வருவ தெக்காலம். 183

சாகாச் சிவனடியைத் தப்பாதார் எப்போதும்
போகா உடலகன்று போவதென்ப தெக்காலம். 184

நிட்டை தனைவிட்டு நினைவறிவு தப்பவிட்டு
வெட்ட வெளியில் விரவிநிற்ப தெக்காலம். 185

வெட்டவெளி தன்னில் விளைந்த வெறும்பாழைத்
திட்டமுடன் கண்டு தெளிவ தினி எக்காலம். 186

எங்கும் பரவடிவாய் என்வடிவு நினைவடிவாய்
சங்குல்பக லின்றியுனைக் கண்டிருப்ப தெக்காலம். 187

உண்டதுவும் மாத நுடன்கூடிச் சேர்ந்தின்பங்
கண்டதுவு நீயெனவே கண்டுகொள்வ தெக்காலம். 188

சுமென்று கேட்டதுவும் என்னுள்ளே நின்றதுவும்
ஓமென்று சொன்னதுவும் உற்றறிவ தெக்காலம். 189

சத்தம் பிறந்தவிடம் தன்மயமாய் நின்றவிடம்
சித்தம் பிறந்தவிடம் தேர்ந்தறிவ தெக்காலம். 190

போக்கும் வரவும் புறம்புமுள்ளு மாகிநின்றும்
தாக்கும் ஒருபொருளைச் சந்திப்ப தெக்காலம். 191

நானெனவும் நீயெனவும் நாமிரண்டு மற்றொன்றும்
நீயெனவே சிந்தைதனில் நேர்படுவ தெக்காலம். 192

அறிவையறி வாலறிந்தே அறியும் அறிவுதனில்
பிறிவுபட நில்லாமல் பிடிப்ப தினி எக்காலம். 193

நீடும் புவனமெல்லாம் நிறைந்துசிந் தூரமதாய்
ஆடும் திருக்கூத்தை அறிவதினி எக்காலம். 194

தித்தியென்ற கூத்தும் திருச்சிலம்பி னோசைகளும்
பக்தியுடனே கேட்டுப் பணிவதினி எக்காலம். 195

நயனத் திடைவெளிபோய் நண்ணும் பரவெளியில்
சயனித் திருந்து தலைப்படுவ தெக்காலம். 196

அருவி மலைநடுவே ஆயிரக்கால் மண்டபத்தில்
திருவிளையா டற்கண்டு தெரிசிப்ப தெக்காலம். 197

மீனைமிக வுண்டுகக்கி விக்கிநின்ற கொக்கதுபோல்
தேனைமிக வுண்டு தெவிட்டுநிற்ப தெக்காலம். 198

பொல்லாத காயமதைப் போட்டு விடுகுமுன்னே
கல்லாவின் பால்கறப்பக் கற்பதினி எக்காலம். 199

வெட்டவெளிக் குள்ளே விளக்குங் சதாசிவத்தைக்
கிட்டிவரத் தேடக் கிருபைசெய்வ தெக்காலம். 200

பேரறிவி லேமனத்தைப் பேராம லேயிருத்தி
ஓரறிவி லெந்நாளும் ஊன்றிநிற்ப தெக்காலம். 201

அத்துவிதம் போலுமென்றன் ஆத்துமத்தின் உள்ளிருந்து
முத்திதர நின்ற முறையறிவ தெக்காலம். 202

நானின்ற பாசமதில் நானிருந்து மாளாமல்
நீநின்ற கோலமதில் நிரவிநிற்ப தெக்காலம். 203

எள்ளும் கரும்பும் எழில்மலரும் காயமும்போல்
உள்ளும் புறம்புநின்ற துற்றறிவ தெக்காலம். 204

அன்னம் புனலைவகுத் தமிர்தத்தை யுண்பதுபோல்
என்னைவகுத் துன்னை இனிக்காண்ப தெக்காலம். 205

அந்தரத்தில் நீர்பூத் தலர்ந்தெழுந்த தாமரைபோல்
சிந்தைவைத்துக் கண்டு தெரிசிப்ப தெக்காலம். 206

பிறப்பும் இறப்புமற்றுப் பேச்சுமற்று மூச்சுமற்று
மறப்பும் நினைப்புமற்று மாண்டிருப்ப தெக்காலம். 207

மன்னும் பரவெளியை மனவெளியில் அடைத்தறிவே
என்னு ளொருநினைவை எழுப்பிநிற்ப தெக்காலம். 208

ஆசைகொண்ட மாதர் அடைகனவு நீக்கியுன்மேல்
ஓசைகொண்டு நானும் ஒடுங்குவதும் எக்காலம். 209

தன்னுயிரைக் கொண்டு தான்றிரிந்த வாறதுபோல்
உன்னுயிரைக் கொண்டிங் கோங்குவது மெக்காலம். 210

சேற்றிற் கிளைநாட்டுந் திடமாம் உடலையினிக்
காற்றிலுழல் சூத்திரமாய்க் காண்பதினி யெக்காலம். 211

என்வச முங் கெட்டிங் கிருந்தவச மும்மழிந்து
தன்வசமுங் கெட்டருளைச் சார்ந்திருப்ப தெக்காலம். 212

தன்னை மறந்து தலத்தி நிலைமறந்து
கன்மம் மறந்து கதிபெறுவ தெக்காலம். 213

என்னையென்னி லேமறந்தே இருந்தபதி யும்மறந்து
தன்னையுந்தா னேமறந்து தனித்திருப்ப தெக்காலம். 214

தன்னையுந்தா னேமறந்து தலைவாசற் றுழ்போட்டே
உன்னைநினைந் துள்ளே உறங்குவது மெக்காலம். 215

இணைபிரிந்தபோதலறிஇன் பமுறும் அன்றிலைப்போல் [லம்.
துணைபிரிந்த போதருள்நூல் தொடர்ந்துகொள்வ தெக்கா

ஆட்டமொன்று மில்லாமல் அசைவுசற்றுங் காணுமல்
தோட்டமற்ற வான்பொருளைத் தேடுவதுமெக்காலம். 217

முன்னைவினை யாலறிவு முற்றுமற் பின்மறைந்தால்
அன்னை தனைத்தேடி அமுதுண்ப தெக்காலம். 218

கள்ளுண் டவர்போற் களிதருமா னந்தமதால்
தள்ளுண்டு நின்ருடித் தடைப்படுவ தெக்காலம். 219

தானென்ற ஆணவமுந் தத்துவமுங் கெட்டொழிந்தே
ஏனென்ற பேச்சுமிலா திலங்குவது மெக்காலம். 220

நானவனைக் காண்பதெல்லாம் ஞானவிழி யாலறிந்து
தானவனாய் நின்று சரணடைவ தெக்காலம். 221

தானந்த மில்லாத் தற்பரத்தி னூடுருவி
ஆனந்தங் கண்டே அமர்ந்திருப்ப தெக்காலம். 222

உற்ற வெளிதனிலே உற்றுப்பார்த் தந்தரத்தே
மற்ற மறமாய்கை மாள்வதினி எக்காலம். 223

ஏடலர்ந்த பங்கயமும் இருகருணை நேத்திரமுந்
தோடணிந்த குண்டலமுந் தோன்றுவது மெக்காலம். 224

ஐயாறும் ஆறும் அகன்று வெறுவெளியில்
மையிருளில் நின்றமனம் மாள்வதினி எக்காலம். 225

காட்டும் அருள்ஞானக் கடலிலன்புக் கப்பல்விட்டு
மூட்டுகரு ணைக்கடலில் மூழ்குவது மெக்காலம். 226

நானுரோ நீயாரோ நன்றும் பரமான
தானுரோ என்றுணர்ந்து தவமுடிப்ப தெக்காலம். 227

எவரெவர்க ளெப்படிக்கண் டெந்தப் படிநினைத்தார்
அவரவருக் கப்படிநின் ருயென்ப தெக்காலம். 228

உற்றுற்றுப் பார்க்க ஒளிதருமா னந்தமதை
நெற்றிக்கு நேர்கண்டு நிலைப்பதினி எக்காலம். 229

விளங்குகின்ற தாரகையை வெய்யோன் மறைத்தாற்போ
களங்கமற வுன்காட்சி கண்டறிவ தெக்காலம். [ல்

என்னையே யானறியேன் இந்தவண்ணஞ் சொன்னதெல்
முன்னையோர் கைக்கொள்ள முன்பணிவ தெக்காலம். [லாம்

மாயத்தை நீக்கி வருவினையைப் பாழாக்கிக்
காயத்தை வேருக்கிக் காண்பதுவே எக்காலம். 232

அஞ்சு கரத்தானை அடியிணையைப் போற்றிசெய்து
நெஞ்சிற் பொருந்தி நிலைபெறுவ தெக்காலம். 233

பத்திரகிரியார் மெய்ஞ்ஞானப் புலம்பல் முற்றிற்று.

---

# திருவள்ளுவர் ஞானம்

## காப்பு

### எண்சீர் விருத்தம்

அண்டபிண்டம் நிறைந்துநின்ற அயன்மால் போற்றி
அகண்டபரி பூரணத்தின் அருளே போற்றி
மண்டலஞ்சூழ் இரவிமதி சுடரே போற்றி
மதுரதமி ழோதும் அகத் தியனே போற்றி
எண்டிசையும் புகழுமெந்தன் குருவே போற்றி
இடைகலையின் சுழுமுனையின் கமலம் போற்றி
குண்டலிக்குள் அமர்ந்துநின்ற குகனே போற்றி
குருமுனியின் தாளிணையைப் போதும் போற்றி.

### கட்டளைக் கலித்துறை

அன்னை யெனுங்கர்ப்ப மதனில்வந் தும்மதிலேயிருந்தும்
நன்னய மாய்ப்பத்துத் திங்களு நானகத் தேயிருந்தேன்
என்ன அதிசயங் காணிவ் வுலகி லேய மைந்த
உன்னதமெல் லாயமைத்தேன் உண்மையைக்
[காண்கிலரே. 1

அம்புவி தன்னி லேயுதித் தாய்ந்தறி பாடைதன்னை
வம்புல கத்தார் வசியமாய்க் கைபிடித் தேயிரிந்து
கும்மி தனிலே யுமூன்றுமடக் குண்டிலி பொற்கமலம்
நம்பி யிருந்தேன் சிலநாள் ரகசியங் காண்கிலனே. 2.

### தரவு கொச்சகம்

அண்டரண்ட வான்புவியும் ஆகமத்தி னுட்பொருளும்
கண்டிதமா யான்விளங்குங் காயமதி லேயறியும்
வண்டரெனை நீசனென்ற வாறுதனை யேயொழித்தேன்
விண்டரக சியந்தன்னை விளக்கமது காண்கிலரே. 3.

வையமதி லேயுதித்த மாண்பர்களே யுங்களுயிர்
மெய்யென் றிருந்தசைவு வெளிப்படுவ தென்னவிதம்
அய்யமில்லா வாழ்ந்துலகி லாண்மையாய்ப் பூண்டமதிப்
பொய்யெனுமிவ் வாழ்க்கையது போகுஞ்சுடு காடுளதே.

கட்டளைக் கலித்துறை

வீடான மூலச் சுழிநாத வீட்டில் விளங்கும்விந்து
நீடாழி லோகந் தழைத்துப் பெருகிபு நின்றிலகுந்
தேடாத ழித்த பொருளான பொக்கிடந் தேடியென்ன
காடான நாடு சுடுகாடு சேர்வதுங் கண்டிலரே. 5

எழுவகைத் தோற்றமும் நால்வகை யோனியி லெய்திடி
[னும்
பொழியச் சுரோணிதம் நாதவிந்துப்பொருள் போகத்தா
கழியக் கழியக் கடலுயிர் தேய்பிறை கண்டுமிருந் [ல்
தழியப் பெருந்தரை யெந்நா ளிருந்தும் அனித்தியமே. 6

எந்நா ளிருந்தென்ன முன்னு ளனுப்படி யிந்தவுடல்
தன்னு லழிவதுந் தானறி யாதெனத் தந்தைவிதி
உன்னு லழிவ துடலுயிர் காயமொழிவ துங்கண்
டந்நா ளனுப்படி கண்டு மிருந்தறி யாதவரே. 7

யோனிக்கு ளாசை யொழியா தனித்திய முங்களுயிர்
தேனிக்கு ளின்பஞ் சுகாதீத மோவநஞ் சிற்றின்பத்தில்
ஊனற்றுங் காய முடலற்றுப் போம்பொழு தொன்றறியா
ஞனர்க்தச் சொர்க்கஞ் சுடுகா டொழிய இனியில்லையே. 8

நேரிசை வெண்பா

இந்தவுடல் காயம் இறந்துவிடு மிவ்வுலகில்
வந்தவழி தானறிபா வாழ்க்கை— இந்தவுடல்
அற்பக் குழியி லரவ மிருப்பதெனும்
கற்பகத்தை யாண்டிடுயோ காண். 9

ஞானமறிந் தோர்க்கு நமனில்லை நாள்தோறும்
பானமதை யுண்டு பசியினால்—ஞானமது
கண்டா லுடலுயிருங் காயம் வலுவாகும்
உண்டா லமிர்தரச முண். 10

சுழியறியார்க் கென்ன சுகமறியார்க் கென்ன
வழியறியார்க் கென்னெய்து மாறு—சுழியறியா
மூலமறிந் தவ்வழியில் முத்தியடை யார்க்குநமன்
காலனவர்க் கேமரணங் காண். 11

வேத மறைஞான மெய்யுணர்வு தானாகில்
நாதனரு ளால்பதவி நாடுமே—வேதமறை
நாலுபொருளுள் நற்பொருளின் ஆறறியப்
பாலுமது நெய்யெனவும் பார். 12

முதலிருந்த ஊழ்வினையை முப்பாழைச் சுட்டுப்
பதரு மதிபாடு பட்டேன்—முதலிருந்த
நல்வினையுந் தீவினையு நாடாம லும்பிறந்து
வல்வினையிற் போக்கிவிட்டேன் வாழ்வு. 13

காயசித்தி யாலெனது கன்மவினை போக்கியபின்
மாயசித்தி மூலசுழி வாய்க்குமே—காயசித்தி
மூலப் புளியால் முதல்தீட்சை யாச்சுதினிக்
காலமென்னி ரண்டாண்டில் காண். 14

கல்லுப்பின் வாருங் கருத்தறியா துண்டுமனு
வல்வினைக்குள் ளாகி மரணமார்—கல்லுப்பு
வெள்ளைக்கல் லுப்பு வெகுவிதமாய் வந்தாலும்
உள்ளமதி லுண்டென்றே உன். 15

என்றுமிந் துப்பாகும் எண்சா ணுடலிருக்கக்
கண்டுமறி யாதென்ன காரணமோ—என்றுமதி
வாரி யமூரியதை வன்னிவிட்டுக் காய்ச்சியபின்
வீரியமா யானுணரு மெய். 16

உப்பின் கட்டுதான் ஊறலது மாறினதால்
மூப்புகன்ன மாவதற்கு முன்னமே—உப்பதனால்
கற்பாந்தங் கோடி காய மிதுவலுத்துச்
செற்பாயும் வாசியில்தே கம். 17

அஞ்சுபஞ்ச பூதம் அறிந்தால் அனித்தியம்போம்
அஞ்சு வசப்படுவ தாண்ட தனில் அஞ்சினையும்
கண்டறி வோர்ஞானக் காட்சி யதினினைவு
விண்டறிய லாமே விதி. 18

எண்சாணுந் தேக மெடுத்தாலென் ஞண்டையே
பெண்சாரல் நீக்கியே பேரின்பம்—கண்காணத்
தேக மொழியாமல் சித்தி பெறஞானம்
யோகசித்தி பூசைவிதி யுன். 19

திருவள்ளுவர் ஞானம் முற்றிற்று.

———

# சட்டை முனி ஞானம்-4

## பூசை செய்யும் முறை

### எண்சீர் விருத்தம்

காணப்பா பூசைசெய்யும் முறையைக் கேளாய்
கைம்முறையாய்ச் சுவடிவைத்துப் பூசை செய்வார்
பூணப்பா சிலபேர்தான் தீபம் வைத்துப்
புகழாகப் பூசைசெய்வார் பெண்ணை வைத்தும்
நாளப்பா சக்கரத்தைப் பூசை செய்வார்
நம்முடைய பூசையென்ன மேருப் போலே
ஓதப்பா நாற்பத்துமுக் கோணம் வைத்தே
உத்தமனே பூசைசெய்வார் சித்தர் தானே. 1

தானென்ற மேருவைத்தான் பூசை செய்வார்
சாபமிட்டால் அண்டரண்டம் தீயா வேகும்
தேனென்ற மேருவுக்குத் தீட்சை வேண்டும்
சிறுபிள்ளை யாமொருவன் தீண்டப் போகா
வாவென்ற மேருவைத்தான் பூசை செய்தோர்
வாய்திறந்தே உபதேசஞ் சொன்னு ராகிற்
கோனென்ற வாதசித்தி சுவன சித்தி
கொள்ளையிட்டான் அவன்சீடன் கூறி னானே. 2

கூறியதோர் வாலையின்மூன் றெழுத்தைக் கேளாய்
குறியறிந்து பூசைசெய்து பின்பு கேளாய்
மாறியதோர் திரிபுரையெட் டெழுத்தைக் கேளாய்
மைந்தனே இவளைநீ பூசைபண்ணத்

தேரியதோர் புவனைதனின் எழுத்தைக் கேளாய்
திரமாகப் புவனையைநீ பூசைபண்ணு
அரியதோர் யாமளையா றெழுத்தைக் கேளாய்
அவளுடைய பதம்போற்றிப் பூசை பண்ணே. 3

பண்ணியபின் யாமளையைந் தெழுத்தைக் கேளாய்
பண்பாகத் தீட்சையைந்தும் முடிந்த பின்பு
வண்ணியதோர் வாசியென்ற யோகத் துக்கு
மைந்தனே வைத்துப்ராணு யாமந் தீரும்
கண்ணியதோர் இத்தனையும் அறிந்தி ருந்தாற்
காயசித்தி விக்கினங்கள் இல்லையில்லை
உண்ணியதோர் உலகமென்ன சித்த ரென்ன
உத்தமனே விட்டகுறை எடுக்கும் காணே. 4

சட்டைமுனி ஞானம் 4 முற்றிற்று.

———

# பாம்பாட்டி சித்தர் பாடல்

## கடவுள் வணக்கம்

### கண்ணிகள்

தெளிந்து தெளிந்துதெளிந் தாடுபாம் பேசிவன்
சீர்பாதங் கண்டுதெளிந் தாடு பாம்பே
ஆடுபாம் பேதெளிந் தாடும்பாம் பேசிவன்
அடியிணை கண்டோமென் றாடு பாம்பே. 1

நீடுபதம் நமக்கென்றுஞ் சொந்த மென்றே
நித்தியமென் றேபெரிய முத்தி யென்றே
பாடுபடும் போதுமாதி பாதம் நினைந்தே
பன்னிப் பன்னிப் பரவிநின் றாடுபாம்பே. 2

பொன்னிலொளி போலவெங்கும் பூரணமதாய்ப்
பூவின்மணம் போலத்தங்கும் பொற்புடையதாய்
மன்னும்பல உயிர்களில் மன்னிப் பொருந்தும்
வள்ளலடி வணங்கிநின் றாடு பாம்பே. 3

எள்ளிலெண்ணெய் போலவுயி ரெங்கு நிறைந்த
ஈசன்பத வாசமலர் எண்ணி யெண்ணியே
உள்ளபடி அன்புபத்தி ஓங்கி நிற்கவே
ஒடுங்கிய டங்கித்தெளிந் தாடு பாம்பே. 4

அண்டபிண்டந் தந்தவெங்கள் ஆதிதேவனை
அகலாமலேநினைத்தே அன்பு டன்பணிந்
தெண்டிசையும் புகழ்ந்திட ஏத்தி யேத்தியே
ஏகமன மாகநாடி யாடு பாம்பே. 5

சோதிமயு மானபரி சுத்த வத்துவைத்
தொழுதழு தலற்றித்தொந் தொந்தோ மெனவே
நீதிதவ ருவழியில் நின்று நிலையாய்
நினைந்துநி னைந்துருகி யாடு பாம்பே. 6

அருவாயும் உருவாயும் அந்தி யாயும்
அந்தமாயும் ஒளியாயும் ஆகம மாயும்
திருவாயுங் குருவாயுஞ் சீவனுயும்
செறிந்தவத் துவைப்போற்றி யாடு பாம்பே. 7

சுட்டிக்காட்ட ஒண்ணாதபாழ்ச் சூனி யந்தன்னைச்
சூட்சமதி யாலறிந்து தோட மறவே
எட்டிப்பிடித் தோமென்ற னந்த மாகப்பை
எடுத்து விரித்துநின் றாடு பாம்பே. 8

எவ்வுயிரும் எவ்வுலகும் ஈன்று புறம்பாய்
இருந்து திருவிளையாட் டெய்தி யும்பின்னர்
அவ்வுயிரும் அவ்வுலகும் ஆகியு நின்ற
ஆனந்த வெள்ளங்கண் டாடு பாம்பே. 9

## குரு வணக்கம்

சாற்றுமுடல் பொருளாவி தத்த மாகவே
தானம்வாங்கி நின்றவெங்கள் சற்கு ருவினைப்
போற்றிமனம் வாக்குக்காயம் மூன்றும் பொருந்தப்
புகழ்ந்துபு கழ்ந்துநின் றாடாய் பாம்பே. 10

பொய்ம்மதங்கள் போதனைசெய் பொய்க்கு ருக்களைப்
புத்திசொல்லி நன்னெறியிற் போக விடுக்கும்
மெய்மதந்தான் இன்ன தென்றும் மேவ விளம்பும்
மெய்க்குருவின் பதம்போற்றி ஆடாய் பாம்பே. 11

வேதப்பொருள் இன்னதென்று வே தங் கடந்த
மெய்ப்பொருளைக் கண்டுமனம் மேவி விரும்பிப்
போதப்பொருள் இன்னதென்றும் போ தனை செய்யும்
பூரணசற் குருதாள்கண் டாடு பாம்பே. 12

உள்ளங்கையிற் கனிபோல உள்ள பொருளை
உண்மையுடன் காட்டவல்ல உண்மைக் குருவைக்
கள்ளமனந் தன்னைத்தள்ளிக் கண்டு கொண்டன்பாய்க்
களித்துக்க ளித்துநின் றாடாய் பாம்பே. 13

அங்கையிற்கண் ணாடிபோல ஆதி வத்துவை
அறிவிக்கும் எங்களுயி ரான குருவைச்
சங்கையறச் சந்ததமுந் தாழ்ந்து பணிந்தே
தமனியப் படமெடுத் தாடாய் பாம்பே. 14

காயம்நிலை யழிகையைக் கண்டு கொண் டுபின்
கற்புநிலை யுள்ளிற்கொண் டெக்கால மும்வாழும்
தூயநிலை கண்டபரி சுத்தக் குருவின்
துணையடி தொழுதுநின் றாடாய் பாம்பே. 15

கூடுவிட்டுக் கூடுபாயுங் கொள்கை யுடைய
குருவின் வல் லபமெவர் கூற வல்லவர்
வீடுபெறும் வகையையென் மேலுங் காட்டும்
மெய்க்குருவைப் பணிந்துநின் றாடாய் பாம்பே. 16

அட்டதிக்கும் அண்டவெளி யான விடமும்
அடக்கிய குளிகையோ டாடி விரைவாய்
வட்டமிட்டு வலம்வரும் வல்ல குருவின்
மலரடி தஞ்சமென் றாடாய் பாம்பே. 17

கற்பகாலம் கடந்தாதி கர்த்தா வோடுங்
கடமழி யாதுவாழும் கார ணக்குரு
பொற்பதமே தஞ்சமென்றே போற்று தல்செய்து
பூரணச் சிந்தையோ டாடாய் பாம்பே. 18

வச்சிரத்திற் கோர்பழுது வாய்க்கு மாயினும்
வல்லுடம்புக் கொரு தவறு வாய்த்தி டாது
மெச்சுகட முள்ளவெங்கள் வேத குருவின்
மெல்லடி துதித்துநின் றாடாய் பாம்பே. 19

## பாம்பினது சிறப்பு

நாதர்முடி மேலிருக்கும் நாகப் பாம்பே
நச்சுப்பையை வைத்திருக்கும் நல்ல பாம்பே
பாதலத்திற் குடிபுகும் பைகொள் பாம்பே
பாடிப்பாடி நின்றுவிளை யாடு பாம்பே. 20

வளைபுகும் போதேதலை வாங்கும் பாம்பே
மண்டலமிட் டுடல்வளை வண்ணப் பாம்பே
நனைக்கஞ்சி நின்றிடுஞ் சத்தியப் பாம்பே
தலையெடுத் தேநீவிளை யாடு பாம்பே. 21

குற்றமற்ற சிவனுக்குக் குண்டல மானாய்
கூறுந்திரு மாலினுக்குக் குடையானாய்
கற்றைக்குழல் பார்வதிக்குக் கங்கண மானாய்
கரவாமல் உளங்களித் தாடு பாம்பே. 22

மண்டலத்தைத் தாங்குமிக வல்லமை கொண்டாய்
மாயனுக்குப் படுக்கைக்கு வண்ணப் பாயானாய்
கண்டபடை நடுங்கிடக் காட்சியும் பெற்றாய்
கண்ணேசெவி யாகக்கொண்டாய் ஆடு பாம்பே. 23

சந்திரனைச் சூரியனைத் தாவித் தீண்டினாய்
சங்கரனுக் காபரணந் தானு மாகினாய்
மந்திரத்துக் கடங்கினாய் மண்டல மிட்டாய்
வளைந்து வளைந்து நின் றாடு பாம்பே. 24

## சித்தர் வல்லபங் கூறல்

எட்டுநாகந் தனைக்கையா லெடுத்தே யாட்டுவோம்
இந்திரனார் உலகத்தை இங்கே காட்டுவோம்
கட்டுகடங் காதபாம்பைக் கட்டி விடுவோம்
கடுவிடந் தனைக்கக்கி யாடு பாம்பே. 25

ஆதிசேடன் ஆயினுமெம் மங்கையி னலே
ஆட்டிவிடு வோமெங்கள் ஆக்கி னைக்குள்ளே
நீதியோடு மடங்கியே நின்றிடச் செய்வோம்
நின்றநிலை தவறும லாடு பாம்பே. 26

தூணைச்சிறு துரும்பாகத் தோன்றிடச் செய்வோம்
துரும்பைப் பெருந்தூணாகத் தோற்றச் செய்துவோம்
ஆணைப்பெண்ணும் பெண்ணையாணும் ஆகச்செய்து
ஆரவாரித் தெதிராய்நின் ருடு பாம்பே. [வோம்

எட்டுமலை களைப்பந்தாய் எடுத்தெ றிகுவோம்
ஏழுகட லையுங்குடித் தேப்ப மிடுவோம்
மட்டுப்படா மணலையும் மதித்து விடுவோம்
மகாராசன் முன்புநீநின் ருடு பாம்பே. 28

மண்டலமுற் றுமெங்கையால் மறைத்து விடுவோம்
வானத்தையு மேவில்லாக வளைத்து விடுவோம்
தொண்டருக்குச் சூனியஞ் சொல்லிச் காட்டுவோம்
தோன்றலுக்கு முன்புநீநின் ருடு பாம்பே. 29

மூண்டெரியும் அக்கினிக்குள் மூழ்கி வருவோம்
மூந்நீருள் இருப்பினும் மூச்ச டக்குவோம்
தாண்டி வரும் வன்புலியைத் தாக்கி விடுவோம்
தார்வேந்தன் முன்புநீநின் ருடு பாம்பே. 30

செப்பரிய மூன்றுலகுஞ் செம்பொன் னுக்குவோம்
செங்கதிரைத் தண்கதிராய்ச் செய்து விடுவோம்
இப்பெரிய உலகத்தை இல்லாமற் செய்வோம்
எங்கள்வல்ல பங்கண்டுநீ யாடு பாம்பே. 31

வேதன்செய்த சிருட்டிகள்போல் வேறு செய்குவோம்
வேதனையு மெங்கள்கீழே மேவச் செய்குவோம்
நாதனுடன் சமமாக நாங்களும் வாழ்வோம்
நாங்கள் செய்யும் செய்கையிதென் ருடு பாம்பே. 32

அறுபத்து நாலுகலை யாவு மறிந்தோம்
அதற்குமே லொருகலை யான தறிந்தோம்
மறுபற்றுச் சற்றுமில்லா மனமு முடையோம்
மன்னனே யாசானென் றாடு பாம்பே. 33

சீறுபுலி யானையாளி சிங்க முதலாய்ச்
சிற்றடிக்குக் குற்றேவல் செய்யச் சொல்லுவோம்
வீறுபெருங் கடவுளை எங்க ளுடனே
விளையாடச் செய்குவோமென் றாடு பாம்பே. 34

## சித்தர் சம்வாதம்

வாசுகியை ஒருபக்கம் மன்ன நிறுத்தி
மகத்தான பதுமனை மறுபக் கம்வைத்தே
தேசுலவு தக்கனைத்தன் திக்கினிற் சேர்த்துச்
செய்யபது மனைக்கொள்ளும் சித்த னாரே. 35

அனந்தனை யொருபக்க மாக நிறுத்தி
அதன்பக்கங் குளிகனை யண்டச் சேர்த்துக்
கனங்கொண்ட கார்க்கோடகன் காணக் காட்டுங்
கடுஞ்சங்க பாலனைத்தான் சித்த னாரே. 36

அட்டதிக்குஞ் சக்கரங்க ளாகக் கீறி
அக்கோண நிலைகளி லக்கரஞ் சேர்த்துத்
திட்டமுடன் மந்திரத்தைச் செபித்து நில்லும்
சித்தந்தடு மாறாதே சித்த னாரே. 37

அட்டதிக்குஞ் சக்கரங்க ளமைத்து விட்டோம்
அவ்வவற்றிற் சக்கரங்க ளமைத்து விட்டோம்
எட்டுநாக மிருக்கின்ற இடத்தில் விட்டோம்
இனியென்ன செய்வஞ்சொல்லும் சித்த னாரே. 38

நடுவாக ஆதிசேடன் றன்னை நாட்டும்
நான்குதிக்கும் மந்திரித்த நீறு தூவும்
கடுவிடங் கக்கவேயக் கட்செ விகளைக்
கையிலெடுத் தாடுங்கள் சித்த னாரே. 39

## பொருளாசை விலக்கல்

நாடுநகர் வீடுமாடு நற்பொரு ளெல்லாம்
நடுவன்வ ரும்பொழுது நாடி வருமோ
கூடுபோன பின்பவற்றுற் கொள்பய னென்றே
கூத்தன்பதங் குறித்துநின் றூடாய் பாம்பே. 40

யானைசேனை தேர்பரி யாவு மணியாய்
யமன்வரும் போதுதுணை யாமோ அறிவாய்
ஞானஞ்சற்று மில்லாத தாய்கட் குப்புத்தி
நாடிவரும் படிநீநின் றூடாய் பாம்பே. 41

மாணிக்கமா மணிமுடி வாகு வலயம்
மார்பிற்றெங்கும் பதக்கங்கள் மற்றும் பணிகள்
ஆணிப்பொன் முத் தாரமம்பொன் அந்தக் கடகம்
அழிவான பொருளென நின் றூடாய் பாம்பே. 42

மாடகூட மாளிகைகள் வண்ண மண்டபம்
மதில்சூழ்ந்த அரண்மனை மற்று முள்ளவை
கூடவாரா வென்றவந்தக் கொள்கை யறிந்தோர்
குலவாமல் வெறுப்பாரென் றூடாய் பாம்பே. 43

மலைபோன்ற செம்பொற்குவை வைத்தி ருப்பவர்
மறலிதான் வருகையில் வாரிச் செல்வரோ
அலையாமல் அகத்தினை அத்தன் பால்வைத்தோர்
அழியாரென் றேநீதுணிந் தாடாய் பாம்பே. 44

பஞ்சணையும் பூவணையும் பாய லும்வெறும்
பாழ்சுடு காடதிலே பயன் பெறுமோ
மஞ்சள்மணம் போய்ச்சுடு நாறு மணங்கள்
வருமென்று தெளிந்துநின் றூடாய் பாம்பே. 45

முக்கனியுஞ் சர்க்கரையும் மோத கங்களும்
முதிர்சுவைப் பண்டங்களும் நிந்தி யுண்டவாய்
மிக்கவுயிர் போனபின்பு மண்ணை விழுங்க
மெய்யாகக் கண்டோமென் றூடாய் பாம்பே. 46

வண்ணப்பட்டும் வாசனையும் வாய்த்த கோலமும்
வண்கவிகை ஆலவட்டம் மற்றுஞ் சின்னமும்
திண்ணமுடன் யமபுரஞ் செல்லுங் காலத்தில்
சேரவர மாட்டாவென் றாடாய் பாம்பே. 47

மக்கள்பெண்டிர் சுற்றமரு மக்கள் மற்றவர்
மாளும்போது கூடவவர் மாள்வ தில்லையே
தக்கவுல கனைத்தையுந் தந்த கர்த்தனைத்
தாவித்தாவித் துதித்துநின் றாடாய் பாம்பே. 48

கானலைமான் நீரெனவே கண்டு செல்லல்போல்
காசினிவாழ் வினைமூடர் கண்டு களிப்பார்
மேனிலைகண் டார்கள்வி ணாய் வீம்பு பேசிடார்
மெய்யன்பதம் நாடுவாரென் றாடாய் பாம்பே. 49

## பெண்ணாசை விலக்கல்

வெயில்கண்ட மஞ்சள்போன்ற மாத ரழகை
விரும்பியே மேல்விழுந்து மேவு மாந்தர்
ஓயில்கண்டே இலவுகாத் தோடுங் கிளிபோல்
உடல்போனால் ஓடுவாரென் றாடாய் பாம்பே. 50

செண்டுமுலை வண்டுவிழி கொண்ட தோகையைச்
சித்தப்பால் விழுங்கியே சீயென் றெறுத்தோம்
குண்டுகட்டெ ருமையேறுங் கூற்றுப் பருந்தைக்
கொன்றுதின்று விட்டோநாமென் றாடாய் பாம்பே. 51

வட்டமுலை யென்றுமே வற்றுந் தோலை
மகமேரு என்றுவமை வைத்துக் கூறுவார்
கெட்டநாற்ற முள்ளயோனிக் கேணியில் வீழ்ந்தார்
கெடுவரென் றேநீதுணிந் தாடாய் பாம்பே. 52

மலஞ்சொரி கண்ணைவடி வாளுக் கொப்பாக
வருணித்துச் சொல்வார்மதி வண்மை யில்லாதார்
குருநலம் பேசுகின்ற கூகை மாந்தர்கள்
கும்பிக்கே யிரையாவரென் றாடாய் பாம்பே. 53

சிக்குநாறுங் கூந்தலையே செழுமை மேகமாய்ச்
செப்புவார்கள் கொங்கைதனைச் செப்புக் கொப்பதாய்
நெக்குநெக்கு ருகிப்பெண்ணை நெஞ்சில் நினைப்பார்
நிமலனை நினையாரென் றாடாய் பாம்பே. 54

நாறிவரும் எச்சில்தனை நல்லமு தென்றும்
நண்ணுஞ்சளி நாசிதனை நற்கு மிழென்றும்
கூறுவர்கள் புத்தியில்லாக் கூகை மாந்தர்கள்
கோனிலையை யறியாரென் றாடாய் பாம்பே. 55

மயிலென்றுங் குயிலென்றும் மாணிக்க மென்றும்
மானேயென்றும் தேனேயென்றும் வானமு தென்றும்
ஒயிலான வன்னமயிற் கொத்தவ ளென்றும்
ஓதாமற் கடிந்துவிட் டாடாய் பாம்பே. 56

மின்னற்கொடி யென்றுஞ்சோதி விளக் கென்றும்
மெல்லியென்றும் வல்லியென்றும் மேனகை யென்றும்
கன்னற்கட்டி யென்றுஞ்சீனிக் கற்கண் டென்றும்
கழருமற் கடிந்தோமென் றாடாய் பாம்பே. 57

பூவையென்றும் பாவையென்றும் பொன்னே யென்றும்
பூந்திருவே என்றுமென்றன் பொக்கிட மென்றும்
கோவையென்றுங் கோதையென்றுங் கோகில மென்றும்
கூருமற் றுறந்தோம்நாமென் றாடாய் பாம்பே. 58

மலக்குடம் மீதினிலே மஞ்சள் பூச்சென்றும்
மல்கும்புழுக் கூட்டின்மேல் வண்ணத் தோலென்றும்
சலக்குழிக் குள்ளேநாற்றஞ் சார்ந்த சேறென்றும்
தானறிந்து தள்ளினோமென் றாடாய் பாம்பே. 59

## சரீரத்தின் குணம்

ஊத்தைக் குழிதனிலே மண்ணை யெடுத்தே
உதிரப்புனலினிலே யுண்டை சேர்த்தே
வாய்த்தகுய வனாரவர் பண்ணும் பாண்டம்
வறகோட்டுக்கு மாகாதென் றாடாய் பாம்பே. 60

இருவர்மண் சேர்த்திட ஒருவர் பண்ண
ஈரைந்து மாதமாய் வைத்த சூளை
அருமையா யிருப்பினு மந்தச் சூளை
அரைக்காசுக் காகாதென் றாடாய் பாம்பே. 61

பரியாசம் போலவே கடித்த பாம்பு
பலபே ரறியவே மெத்த வீங்கிப்
பரியார மொருமாது பார்த்த போது
பையோடே கழன்றதென் றாடாய் பாம்பே. 62

சீயுமல முஞ்செறிசெந் நீரும் நிணமுஞ்
சேர்ந்திடுதுர் நாற்றமுடைக் குடமது உடைந்தால்
நாயுநரி யும்பெரிய பேயுங் கழுகும்
நமதென்றே தின்றிடுமென் றாடாய் பாம்பே. 63

நீரிலெழும் நீர்க்குமிழி நிலைகெ டல்போல
நில்லாதுடல் நீங்கிவிடும் நிச்சய மென்றே
பாரிற்பல வுயிர்களைப் படைத்த வன்றனைப்
பற்றவேநீ பற்றித்தொடர்ந் தாடாய்ப் பாம்பே. 64

நாறுமீனைப் பலதரம் நல்ல தண்ணீரால்
நாளுங்கழு வினுமதன் நாற்றம் போமோ
கூறுமுடல் பலநதி யாடிக் கொண்டதால்
கொண்டமலம் நீங்காதென் றாடாய் பாம்பே. 65

காய்த்தமர மதுமிக்க கல்ல டிபடும்
கன்மவினை கொண்டகாயம் கண்டனை பெறும்
வாய்த்ததவ முடையவர் வாழ்பவ ரென்றே
வத்துத்திரு வடிதொழு தாடாய் பாம்பே. 66

பேசரிய நவவாயிற் பீற்றல் துருத்தி
பெருங்காற்று புகுந்ததாற் பேச்சுண் டாச்சே
ஈசனிலே அறியாருக் கிந்தத் துருத்தி
எரிமண்ணிற் கிரையாமென் றாடாய் பாம்பே. 67

மரப்பாவை போல வொரு மண்ணுருச் செய்து
வளமான சீவனென்னுஞ் சூத்திரம் மாட்டித்
திரைக்குள்ளி ருந்தசைப்போன் தீர்ந்த பொழுதே
தேகம்விழு மென்றுதெளிந் தாடாய் பாம்பே. 68

தசநாடி தசவாயு சத்த தாது
சார்ந்தமரக் கப்பலது தத்தி விழுமே
இசைவான கப்பலினை ஏக வெள்ளத்தில்
எந்நாளும் ஓட்டத்துணிந் தாடாய் பாம்பே. 69

## அகப்பற்று நீக்கல்

தாமரையி னிலையிலே தண்ணீர் தங்காத
தன்மைபோலச் சகத்தாசை தள்ளி விட்டெங்கும்
தூமணியாய் விளங்கிய சோதி பதத்தைத்
தொழுது தொழுதுதொழு தாடாய் பாம்பே. 70

கள்ளங்கொலை காமமாதி கண்டித்த வெல்லாம்
கட்டறுத்து விட்டுஞானக் கண்ணைத் திறந்து
தெள்ளிதான வெட்டவெளி சிற்சொ ரூபத்தைத்
தேர்ந்துபார்த்துச் சிந்தைதெளிந் தாடாய் பாம்பே. 71

சொல்லும்புளி யம்பழத்தின் வோடு போலவே
சுற்றத்திருந் தாலுமவர் தொந்தங் களற்று
நில்லுமன மேநீபர நின்ம லத்திலே
நின்றுணை தான் வெறும்பாழென் றுடாய் பாம்பே. 72

சேற்றிற்றிரி பிள்ளைப்பூச்சி சேற்றை நீக்கல்போல்
தேசத்தோ டொத்துவாழ்வார் செய்கை கண்டபின்
சாற்றுபர வெளிதனைச் சாரும் வழியே
தானடக்க வேணுமென் றுடாய் பாம்பே 73

எண்ணெய்க்குந்தண் ணீர்க்குந்தொந்தம் இல்லா வாறு
எப்போதும் இப்புவியி லெய்த வேண்டும் [போல்
கண்ணுக்குக்கண் ணனவொளி கண்டு கொள்ளவே
கட்டறுத்து வாழ்ந்திடநின் றுடாய் பாம்பே. 74

கக்கிவிட்ட சோறுகறி கந்தமூ லங்கள்
கண்களுக்கு சுத்தமான காட்சி போலவே
சிக்கிக்கொண்ட சகத்தினைச் சீயென் றெறுத்துச்
சீர்பாதங் காணத்தெளிந் தாடாய் பாம்பே. 75

கோபமென்னும் மதயானை கொண்ட மதத்தைக்
கூர்கொள்யுத்தி அங்குசத்தாற் கொன்று விட்டேங்காண்
தீபமென்னுஞ் சிற்சொரூபச் செய்ய பொருளைக்
சேர்ந்துறவு கொண்டோமென் றுடாய் பாம்பே. 76

நித்தியமென் னுமலையில் நின்று கொண்டோம்யாம்
நினைத்தபடி யேமுடித்து நின்மல மானோம்
சத்தியமா யெங்கள்கடந் தானழி யாதே
சந்ததமும் வாழ்வோமென் றுடாய் பாம்பே. 77

மனமென்னுங் குதிரையை வாகன மாக்கி
மதியென் னுங் கடிவாளம் வாயினிற் பூட்டிச்
சினமென்னுஞ் சேனியின்மேற் சீரா யேறித்
தெளிவிடஞ் சாரிவிட் டாடாய் பாம்பே. 78

ஆசையென்னுஞ் செருப்பின்மேல் அடிமை வைத்தே
ஆங்கார முட்காட்டை அறவே மிதித்தே
காசையெனுந் துர்க்குணத்திற் கனலைக் கொளுத்திக்
காலாகாலங் கடந்தோமென் றுடாய் பாம்பே. 79

காலனெனுங் கொடிதான கடும்ப கையைநாம்
கற்பமெனும் வாளினலே கடிந்து விட்டோம்
தாலமதிற் பிறப்பினைத் தானும் கடந்தோம்
தற்பரங் கண்டோமென் றுடாய் பாம்பே. 80

தேனில்வீழ்ந்த ஈயைப்போலச் சிந்தை குலைந்து
திகையாமற் சிற்சொரூப தெரிசனை கண்டு
வானிற்பறந் கிடச்சூத வான்மணிதீர்ந்து
வாயிற்போட் டேகநீநின் றுடாய் பாம்பே. 81

தூக்கியநற் பாதங்கண்டேன் சோதியுங் கண்டேன்
சுத்தவெளிக் குள்ளேயொரு கூத்தனைக் கண்டேன்
தாக்கிய சிரசின்மேல் வைத்த பாதம்
சற்குருவின் பாதமென் றுடாய் பாம்பே. 82

ஆலடிப் பொந்தினிலே வாழ்ந்த பாம்பே
அரசடிப் பொந்தினிலே புகுந்து கொண்டாய்
வாலடி தன்னிலே பார்த்துப் பார்த்து
வாங்கியே தூங்கிநின் றுடாய் பாம்பே. 83

நாலு தெருவினிலே நாலு கம்பம்
நடுத்தெரு வினிலேயோர் பொன்னுக் கம்பம்
போலும் விளங்குபொன்னுக் கம்பத்தி னுக்கே
பூமாலை சூடியேநின் றுடாய் பாம்பே. 84

ஆழிபெயர்ந் தாலுமேரு மட்டே யலையும்
அடியோடு பெயர்ந்தாலு மன்றிக் கால
ஊழிபெயர்ந் தாலுமதி யுண்மைப் படிக்கே
உறுதி பெயராது நின் றுடாய் பாம்பே. 85

வாயுவினை யிரையாக வாங்கி யுண்டே
வருடிக்த நீரினை வாயுள் மடுத்தே
தேயுபிறை குளிர்காய்ந்து வெட்ட வெளியில்
திகைப்பறச் சேர்ந்துநின் றுடாய் பாம்பே. 86

மாசில்கதி வனையிலே மண்டல மிட்டே
மதியான பெரும்பட மடலை விரித்தே
ஆசில்பரா பரமான ஆதி பாதத்தை
அடுத்தடுத் தேதுதித் தாடாய் பாம்பே. 87

காடுமலை நதிபதி காசி முதலாய்க்
கால்கடுக்க ஓடிற்பலன் காண லாகுமோ
வீடுபெறும் வழிநிலை மேவிக் கொல்லவே
வேதாந்தத் துறையினின் றுடாய் பாம்பே. 88

எள்ளளவும் அன்பகத்தில் இல்லா தார் முத்தி
எய்துவது தொல்லுலகில் இல்லை யெனவே
கள்ளப்புலன் கட்டறுத்துக் கால காலனைக்
கண்டு தொழுதேகளித் தாடாய் பாம்பே. 89

சூரியனைக் கண்டபனி தூர வோடல்போல்
சொந்தபந்தஞ் சிந்தபரி சுத்த தலத்தில்
ஆரியனைக் கண்டுதரி சித்தே யன்புடன்
அகலாமற் பற்றித்தொடர்ந் தாடாய் பாம்பே. 90

காந்தம்வலி யிரும்புபோல் காசில் மனத்தைக்
காட்சியான வத்துவுடன் கலக்கச் சேர்த்துச்
சாந்தமுடன் தோண்டியும் தாம்பும் போலச்
சலியாமற் றொடர்ந்து நின் றாடாய் பாம்பே. 91

உளியிட்ட கற்சிலையில் உண்டோ வுணர்ச்சி
உலகத்தின் மூடர்களுக் குண்டோ வுணர்ச்சி
புளியிட்ட செம்பிற்குற்றம் போமோ அஞ்ஞானம்
போகாது மூடருக்கென் றாடாய் பாம்பே. 92

திரளான போரிலூசி தேடல் போல்முத்தி
சிக்காது தேசாசார தேசிகர் தம்மால்
அருளான மூலகுரு வையர் செயலால்
ஆனந்தங் கண்டோமென் றாடாய் பாம்பே. 93

ஏட்டுச்சுரைக் காய்கறிக்கிங் கெய்தி டாதுபோல்
எண்டிசைதி ரிந்துங்கதி யெய்த லிலையே
நாட்டுக்கொரு கோயிற்கட்டி நாளும் பூசித்தே
நாதன்பாதங் காணார்களென் றாடாய் பாம்பே. 94

தன்னையறிந் தொழுதவோர் தன்னை மறைப்பார்
தன்னையறி யாதவரே தன்னைக் காட்டுவார்
பின்னையொரு கடவுளைப் பேண நினையார்
பேசொளியைப் பேணுவாரென் றாடாய் பாம்பே. 95

பாலிற்சுவை போலுமெங்கும் டாய்ந்த வொளியைப்
பற்றுப்பொன் பற்றவைத்த பான்மை போலே
காலிற்சுழு முனை நின்று கண்டு கொண்டு
களித்துக் களித்துநின் ருடாய் பாம்பே. 96

தேக்கெடுத்தே ஓடும்வானத் தேனை யுண்டபின்
தேகபந்தம் கொண்டனமித் தேச வாழ்வினை
ஓக்காளமென் றெண்ணிமிகு மோகை யுடனி
உள்ளந் தெளிந்துநின் ருடாய் பாம்பே. 97

சதுர்வேதம் ஆறுவகைச் சாத்தி ரம்பல
தந்திரம் புராணங்கலை சாற்று மாகமம்
விதம்வித மாவ வான வேறு நூல்களும்
வீணான நூல்களேயென் ருடாய் பாம்பே. 98

சமயபேதம் பலவான சாதி பேதங்கள்
சகத்தோர்க்கே யல்லாதுசற் சாதுக் களுக்கோ
சிமயத்தி லேறினபேர் சித்த மாறுமோ
சித்தர்சித் தாந்தந்தேர்ந் தாடாய் பாம்பே. 99

பூசைசெய்த தாலேசுத்த போதம் வருமோ
பூமிவலஞ் செய்ததனாற் புண்ணிய முண் டோ
ஆசையற்ற காலத்திலே ஆதி வத்துவை
அடையலா மென்றுதுணிந் தாடாய் பாம்பே. 100

மூல வேர றிந்துகொண் டால் மூன்று லகமும்
முன்பாகவே கண்டுநித்ய முத்தி சேரலாம்
சால வேர றிந்தாலே தான்பய னுண் டோ
சகத்தைப்பொய் யென்றுதெளிந் தாடாய் பாம்பே. 101

சகத்தனாதி யென்றிடாது தான னாதியாற்
சமைந்ததென் றுரைப்பார்கள் சத்தை யறியார்
மலகத்துவ நிலைகற்ப வன்மை யல்லாது
மற்றும்வன்மை யில்லையேயென் ருடாய் பாம்பே. 102

ஆயிரத்தெட்டி தழ்வீட்டி லமர்ந்த சித்தன்
அண்டமெல்லாம் நிறைந்திடும் அற்புதச் சித்தன்
காயமில்லா தோங்கிவளர் காரணச் சித்தன்
கண்ணுளொளி யாயினனென் றுடாய் பாம்பே. 103

நாற்பத்துமுக் கோணநிலை நாப்ப ணதாக
நாடுமக்க ரச்சொரூ ப நாய கன்றனை
மேற்படுத்திக் கொண்டாலந்த மேலு லகமெலாம்
மெல்லடிக்குத் தொண்டேயாமென் றுடாய் பாம்பே. 104

கண்டவர்கள் ஒருக்காலும் விண்டி டார்களே
விண்டவர்கள் ஒருக்காலும் கண்டி டார்களே
கொண்டகோல முள்ளவர்கள் கோனிலை காணுர்
கூத்தாடிக்கூத் தாடியேநீ யாடாய் பாம்பே. 105

ஆறுகலைக் குச்சுக்குள்ளே ஆடு மொருவன்
அயல்வீடு போகுமுன்னே அரண் கோ லிக்கொள்ளு
வேறுபட்டால் அவன்றனை மீட்ட லரிதே
மேவிமுன்னே விடாதுகொண் டாடாய் பாம்பே. 106

எண்ணரிய புண்ணியங்கள் எல்லாஞ் செய்துமென்
ஏகனடி நெஞ்சமதி லெண்ணு விடிலே
பண்ணரிய தவப்பயன் பத்தி யில்லையேற்
பாழ்படு மென்றுதுணிந் தாடாய் பாம்பே. 107

எவ்வுலகுஞ் சொந்தமதாய் எய்தும் பயனென்
எங்களாதி பதாம்புயம் எண்ணுக் காலையில்
இவ்வுலக வாழ்வுதானு மின்றே யறுமென்
றெண்ணிக்கர்த்தன் அடிநினைந் தாடாய் பாம்பே. 108

மணக்கோலங் கொண்டுமிக மனம கிழ்ந்துமே
மக்கள்மனை சுற்றத்தோடு மயங்கி நின்ருய்
பிணக்கோலங் கண்டுபின்னுந் துறவா விட்டால்
பிறப்புக்கே துணையாமென் றுடாய் பாம்பே. 109

பிறப்பையும் இறப்பையும் அறுத்து விடயான்
பெருமருந் தொன்றுசொல்வேன் பெட்புடன் கேளாய்
திறப்புடன் மனப்பூட்டுஞ் சிந்தைக் கதவும்
திறந்திடும் வகையறிந் தாடாய் பாம்பே. 110

இறந்தவர் ஐவரவர் இட்ட மானவர்
எய்தும்அவ ரிறந்தாரென் றெல்ல வர்க்குஞ்சொல்
மறந்தவர் ஒருவரென்றே மண்ணினி லுள்ளோர்
வகையறிந் திடவேநின் ருடாய் பாம்பே 111

எண்சீர் விருத்தம்

ஆகார முதலிலே பாம்ப தாக
ஆனந்த வயலிலே படம்வி ரித்தே
ஊகார முதலிலே யொத்தொ டுங்கி
ஓடி வகா ரத்தி னுவை நீட்டிச்
சீகாரங் கிடந்ததோர் மந்திரத்தைச்
சித்தப்பி டாரனுர் போதஞ் செய்ய
மாகாரப் பிறப்பையும் வேர றுத்து
மாயபந்தங் கடந்தோமென் ருடாய் பாம்பே. 112

தந்திரஞ் சொல்லுவார் தம்மை யறியார்
தனிமந்தி ரஞ்சொல்லுவார் பொருளை யறியார்
மந்திரஞ் செபிப்பார்கள் வட்ட வீட்டினுள்
மதிலினைச் சுற்றுவார் வாயில் காணுர்
அந்தரஞ் சென்றுமே வேர்பி டுங்கி
அருளென்னும் ஞானத்தால் உண்டை சேர்த்தே
இந்த மருந்தினைத் தின்பீ ராகில்
இனிப்பிறப் பில்லையென் ருடாய் பாம்பே. 113

களிமண்ணி னுலொரு கப்பல் சேர்த்தே
கனமான பாய்மரங் காண நாட்டி
அளிபுலந் தன்னையே சுக்கா ணுக்கி
அறிவென்னு மாதரைச் சீனி தூக்கி

வெளியென்னும் வட்டத்தே யுள்ள டக்கி
வேதாந்தக் கடலினை வெல்ல வோட்டித்
தெளிவுறு ஞானியா ரோட்டுங் கப்பல்
சீர்பாதஞ் சேர்ந்ததென் றாடாய் பாம்பே. 114

உள்ளத்துக் குள்ளேயே யுணர வேண்டும்
உள்ளும் புறம்பையு மறிய வேண்டும்
மெள்ளக் கனலை யெழுப்ப வேண்டும்
வீதிப் புனலிலே செலுத்த வேண்டும்
கள்ளப் புனலை கடிந்து விட்டுக்
கண்ணுக்கு மூக்குமேற் காண நின்று
தெள்ளு பரஞ்சோதி தன்னைத் தேடிச்
சீர்பாதங் கண்டோமென் றாடாய் பாம்பே. 115

ஓங்காரக் கம்பத்தின் உச்சி மேலே
உள்ளும் புறம்பையு மறிய வேண்டும்
ஆங்காரக் கோபத்தை யறுத்து விட்டே
ஆனந்த வெள்ளத்தைத் தேக்கிக் கொண்டே
சாங்கால மில்லாமற் றானு வோடே
சட்டதிட்ட மாய்ச்சேர்ந்து சாந்த மாகத்
தூங்காமல் தூங்கியே சுக மடைந்து
தொந்தோம் தொந்தோமென் றாடாய் பாம்பே. 116

விரகக் குடத்திலே பாம்ப டைப்போம்
வேதாந்த வெளியிலேவிட்டே யாட்டுவோம்
கரணங்க ளைப்பிடுங்கி இரைகொ டுப்போம்
காலக் கடுவெளிநின் றோட்டு விப்போம்
துரகந் தனிலேறித் தொல்லுல கெங்கும்
சுற்றிவலம் வந்துநித்ய சூட்சங் காண்டும்
உரையற்ற மந்திரஞ் சொல்லி மீட்போம்
ஒருநான்கும் பெற்றோமென் றாடாய் பாம்பே. 117

காயக் குடத்திலே நின்ற பாம்பைக்
கருணைக் கடலிலே தியங்க விட்டு
நேயச் சுழுமுனை நீடு பாய்ச்சி
நித்யமான வஸ்துவை நிலைக்க நாடி
மாயப் பெருவெளி தன்னி லேறி
மாசற்ற பொருளினை வாய்க்கத் தேடி
ஆயத் துறைகடந் தப்பாற் பாழின்
ஆனந்தஞ் சேர்ந்தோமென் றுடாய் பாம்பே. 118

மூலத் தலத்திலே நின்ற கருத்தை
முற்றுஞ் சுழு முனை தன்னி லூடே
மேலத் தலத்திலே விந்து வட்டம்
வேலை வழியிலே மேவி வாழும்
பாலத் திருத்தாய்க் கருணை யதனால்
பரகதி ஞானசொ ரூபமாகி
ஆலச் சயனத்து மாலுட னின்றே
ஆனந்தஞ் சேர்ந்தோமென் றுடாய் பாம்பே. 119

புலனைந்து வீதியில் வையாளி பாயும்
புரவி யெனுமனத்தை ஒருமைப் படுத்தி
மலபந்த வுலகங் கடந்த தாலே
மன்னுகுரு பாதத்தி னிலையை நாடித்
தலமைந்து பூலோகங் கடந்த தாலே
சந்திர மண்டலமுங் கடந்த தாகும்
அலமந்து பூலோகக் கடலை நீக்கி
ஆனந்த மாகிநின் றுடாய் பாம்பே. 120

குருவென்னும் ஆசானி னுருவெ டுத்துக்
குறியான ஞானந்துப் பாக்கி யாக்கி
அருளென்னு மருளையே யுண்டை யாக்கி
ஆனந்த மாகவே யதைக்க டந்தே

மருளென்னு மாதர்மன நெறியைத் தொட்டு
வாங்காம லெரிந்திட நெட்டை யிட்டுப்
பருவளைக் குள்ளேயே பட்ட தென்றே
பற்றுனைப் பற்றிநின் ருடாய் பாம்பே. 121

கன்னுன் துகையிலே கான்ம றிப்போம்
கருயா னுலையிலே தீயை மூட்டுவோம்
சொன்னுர் தலையிலே பொன்னை யாக்குவோம்
சுருதி யருங்கல்வி ஒப்பஞ் செய்வோம்
மின்னுர்கள் பாசத்தை விட்டே யெரிப்போம்
மெய்ப்பொருட் குறிகண்டு விருப்பை யடைவோம்
பன்னுதே பன்னுதே சும்மா விருந்து
பராபரஞ் சேர்ந்தோமென் ருடாய் பாம்பே. 122

சாதிப் பிரிவினிலே தீயை மூட்டுவோம்
சந்தை வெளியினிலே கோலை நாட்டுவோம்
வீதிப் பிரிவினிலே விளையா டுடுவோம்
வேண்டாத மனையினி லுறவு செய்வோம்
சோதித் துலாவியே தூங்கி விடுவோம்
சுகமான பெண்ணையே சுகித்தி ருப்போம்
ஆதிப் பிரமர்கள் ஐந்து பேரும்
அறியார்க ளிதையென் ருடாய் பாம்பே. 123

நெட்டெழுத் ததனிலே நிலைபி டித்து
நீங்கா வெழுத்திலே வாலை முறுக்கி
விட்டவ் வெழுத்திலே படம்வி ரித்து
விண்ணின் வழியிலே மேவி யடிப்
பட்ட வெழுத்தையும் பதிந்தி ருப்போம்
பன்னிரண் டாமெழுத்திற் பன்னிக் கூடித்
திட்டமுட னெமக்கருள் தேசிக னுர்தம்
சீர்பாதஞ் சேர்ந்தோமென் ருடாய் பாம்பே. 124

ஊசித்துளைக் குடத்தினிற் பாம்பை யடைப்போம்
உலகெலாம் சுற்றியே யுலாவி வருவோம்
மாசுள்ள பிறவியை மறந்தி ருப்போம்
மனமொத்த வெளியிலே விட்டே யாட்டுவோம்
மாசுப் பலன்களை இரைகொ டுப்போம்
மனமுற்ற உச்சியிலேறி யாடுவோம்
பேசு மெழுத்தையும் விழுங்கி விடுவோம்
பிறப்பிறப் பற்றேமென் றுடாய் பாம்பே. 125

ஆணிக் குடத்திலே பாம்ப டைப்போம்
அக்கினிக் கோட்டைமேலேறிப் பார்ப்போம்
மாணிக்கத் தூணின்மேல் விட்டோ யாட்டுவோம்
மனம்வாக்குக் காயத்தை இரைகொ டுப்போம்
நாணிக் கயிற்றையும் அறுத்து விடுவோம்
நமனற்ற நாதன்பதம் நாடியே நிற்போம்
ஏணிப் படிவழிகண் டேறி விடுவோம்
யாருமிதை யறியாரென் றுடாய் பாம்பே. 126

வடக்குங் கிழக்குமாக நூலை யிழைப்போம்
மற்றுஞ் சுழலிலே பாவு பூட்டுவோம்
நடக்கும் வழியினிலே யுண்டை சேர்ப்போம்
நடவா வழியினிலே புடவை நெய்வோம்
குடக்குக் கரையினிலே கோலைப் போடுவோம்
கொய்தததை யெங்குமே விற்று விடுவோம்
அடக்கியே யேகத்துள்ளே வைக்கவும் வல்லோம்
ஆதிபதங் கண்டோமென் றுடாய் பாம்பே. 127

சூத்திரக் குடத்திலே பாம்பை யடைப்போம்
சுழுமுனைக் குள்ளேயே சுகித்தி ருப்போம்
பாத்திரங் கொண்டுமே பலியி ரப்போம்
பத்தெட்டு மூன்று படிக டந்தோம்

ஊத்தைச் சடத்தினைப் புடமே யிடுவோம்
உளவ னெமக்குநல் லுறுதி சொல்லப்
பார்த்துரை யிதன்மெய் பலிக்க வெண்ணிப்
பதனம் பதனமென் றுடாய் பாம்பே. 128

மவ்வக் குடத்திலே பாம்ப டைப்போம்
மணிவட்ட வாசியை வாரி யுண்போம்
வவ்வக் குடங்களைத் தள்ளி விடுவோம்
வக்கிர சொப்பனந் தாண்டி விடுவோம்
பவ்வ வெளியிலே விட்டே வாட்டுவோம்
பஞ்ச கருவியைப் பலிகொ டுப்போம்
சிவ்வுரு வாகியே நின்றோ மென்றே
சீர்பாதங் கண்டுதெளிந் தாடாய் பாம்பே. 129

பாம்பாட்டி சித்தர் பாடல் முற்றிற்று.

———

# இடைக்காட்டுச் சித்தர் பாடல்

## காப்பு

### கலி விருத்தம்

ஆதி யந்தமில் லாதவ னாதியைத்
தீது றும்பவத் தீப்படு பஞ்சுபோல்
மோதுறும்படி முப்பொறி யொத்துறக்
காத லாகக் கருத்திற் கருதுவாம்.

## தாண்டவராயக்கோனார் கூற்று

### கண்ணிகள்

எல்லா வுலகமு மெல்லா வுயிர்களும்
எல்லாப் பொருள்களு மெண்ணரிய
வள்ளாள னாதி பரம சிவனது
சொல்லா லாகுமே கோனாரே. 1

வானியல் போல வ்யங்கும் பிரமமே
சூனிய மென்றறிந் தேத்தாக்கால்
ஊனிய லாவிக் கொருகதி யில்லையென்
றோர்ந்துகொள் ளுவீர்நீர் கோனாரே. 2

முத்திக்கு வித்தான மூர்த்தியைத் தொழுது
முத்திக் குறுதிகள் செய்யாக்கால்
சித்தியும் பத்தியுஞ் சத்தியு முத்தியுஞ்
சேரா வாகுமே கோனாரே. 3

தொல்லைப் பிறவியின் தொந்தமுற் றறவே
சோம்பலற் றுத்தவஞ் செய்யாக்கால்
எல்லையில் கடவு ளெய்தும் பதமுமக்கு
இல்லையென் றெண்ணுவீர் கோனாரே. 4

ஆரண மூலத்தை அன்புட னேபர
மானந்தக் கோலத்தைப் பண்புடனே
பூரணமாகவே சிந்தித்து மெய்ஞ்ஞானப்
போதத்தைச் சார்ந்திடும் கோனாரே. 5

காலா காலங் கடந்திடு சோதியைக்
கற்பனை கடந்த அற்புதத்தை
நூலாற் பெரியவர் சொன்னநுண் பொருளை
நோக்கத்திற் காண்பது கோனாரே. 6

சொல்லருஞ் சகல நிட்கள மானதைச்
சொல்லினாற் சொல்லாமற் கோனாரே
அல்லும் பகலு மகத்தி லிருந்திடிற்
அந்தகன் கிட்டுமோ கோனாரே. 7

சூரியன் வாள்பட்ட துய்ய பனிகெடுந்
தோற்றம்போல் வெவ்வினை தூள்படவே
நாரியிடப்பாகன் தான் நெஞ்சிற் போற்றியே
நற்கதி சேர்ந்திடுங் கோனாரே. 9

மும்மலம் நீக்கிட முப்பொறிக் கிட்டாத
முப்பாழ் கிடந்ததா மப்பாழைச்
செம்மறி யோட்டிய வேலை யமயத்துஞ்
சிந்தையில் வைப்பீரே கோனாரே. 9

பஞ்ச விதமாய்ச் சஞ்சலம் பறக்கப்
பற்றற நின்றதைப் பற்றி யன்பாய்
நெஞ்சத் திருத்தி யிரவு பகலுமே
நேசித்துக் கொள்ளுவீர் கோனாரே. 10

## நாராயணக்கோனார் கூற்று

### தரவு கொச்சகம்

சீரார் சிவக்கொழுந்தைத் தெள்ளமுதைச் செந்தேனைப்
பாராதி வான்பொருளைப் பஞ்சவுரு வானவொன்றைப்
பேரான விண்ணொளியைப் பேரின்ப வாரிதியை
நேராக எந்நாளும் நெஞ்சிருத்தி வாழ்வேனே. 11

கண்ணுள் கருமணியைக் கற்பகத்தைக் காஞ்சனத்தைப்
பெண்ணுருவப் பாதியனைப் பேசரிய முப்பொருளை
விண்ணின் அமுதை விளக்கொளியை வெங்கதிரைத்
தண்ணளியை யுள்ளில்வைத்துச் சாரூபஞ் சாருவனே.

**கண்ணிகள்**

மனமென்னும் மாடடங்கிற் றுண்ட வக்கோனே-முத்தி
வாய்த்ததென் றெண்ணேடா தாண்ட வக்கோனே. 13

சினமென்னும் பாம்பிறந்தாற் றுண்டக்கோனே-யாவுஞ்
சித்தியென்றே நினையேடா தாணட வக்கோனே. 14

ஆசையெனும் பசுமாளின் தாண்ட வக்கோனே-இந்த
அண்டமெல்லாங் கண்டறிவாய் தாண்ட வக்கோனே.

ஓசையுள்ள டங்குமுன்னந் தாண்ட வக்கோனே-மூல
ஓங்காரங் கண்டறிநீ தாண்ட வக்கோனே. 16

மூலப் பகுதியறத் தாண்ட வக்கோனே-உள்ளம்
முளைத்தவேர் பிடுங்கேடா தாண்ட வக்கோனே. 17

சாலக் கடத்தியல்பு தாண்ட வக்கோனே-மலச்
சாலென்றே தேர்ந்தறிநீ தாண்ட வக்கோனே. 18

பற்றே பிறப்புண்டாக்குந் தாண்ட வக்கோனே-அதைப்
பற்று தறுத்துவிடு தாண்ட வக்கோனே. 19

சற்றே பிரமத்திச்சை தாண்ட வக்கோனே-உன்னுள்
சவியாமல் வைக்கவேண்டுந் தாண்ட வக்கோனே. 20

அவித்தவித்து முளையாதே தாண்ட வக்கோனே-பத்தி
அற்றவர் கதியடையர் தாண்ட வக்கோனே. 21

செவிதனிற்கே ளாதமறை தாண்ட வக்கோனே-குரு
செப்பில்வெளி யாமல்லவோ தாண்ட வக்கோனே. 22

கட்டளைக் கலித்துறை

மாடும் மனைகளும் மக்களுஞ் சுற்றமும் வான்பொருளும்
வீடும் மணிகளும் வெண்பொன்னுஞ் செம்பொன்னும் [வெண்கலமும்
காடுங் கரைகளுங் கல்லாம் பணியும் கரிபரியும்
தேடும் பலபண்டம் நில்லா சிவகதி சேர்மின்களே. 23

நேரிசை வெண்பா

போகம்போம் போக்கியம்போம்போசனம்போம் புன்மை [போம்
மோகம்போம் மூர்க்கம்போம்மோசம்போம்—தாகம்போம்
வேதமுத லாகமங்கள் மேலான தென்றுபல்கால்
ஓதுபிர மத்துற்றக் கால். 24

## தாண்டவராயக்கோனார் கூற்று

தாந்தி மித்திமி தந்தக்கோனாரே
தீந்தி மித்திமி திந்தக்கோனாரே
ஆநந்தக் கோனாரே—அருள்
ஆநந்தக் கோனாரே.

ஆயிரத்தெட்டு வட்டமுங் கண்டேன்
அந்தவட் டத்துள்ளே நின்றதுங் கண்டேன்.
மாயிரு ஞாலத்து நூற்றெட்டும் பார்த்தேன்
மந்த மனத்துறுஞ் சந்தேகந் தீர்த்தேன். (தாந்)

அந்தக் கரணமெனச்சொன்ன லாட்டையும்
அஞ்ஞான மென்னு மடர்ந்தவன் காட்டையும்
சந்தத் தவமென்னும் வாளினல் வெட்டினேன்
சாவா திருந்திடக்கோட்டையுங் கட்டினேன். (தாந்)

மெய்வாய்கண் மூக்குச் செவியெனு மைந்தாட்டை
வீறுஞ் சுவையொளி யூறோசை யாங்காட்டை
எய்யாம லோட்டினேன் வாட்டினேனட்டினேன்
ஏக வெளிக்குள்ளே யோகவெளிக்குள்ளே. (தாந்)

அட்டமா வின்வட்டம் பொட்டிலி லேரண்டு
அம்புலி நிற்குது தேர்மேலே
திட்டமாய் வந்து அடிக்குதில் லேதேகம்
செந்தண லானதே வாலைப்பெண்ணே. 59

மூக்கோண வட்டக் கிணற்றுக்குள் ளேமூல
மண்டல வாசிப் பழக்கத்திலே
அக்கோண வட்டச் சக்கரத் தில்வாலை
அமர்ந்தி ருக்கிருள் வாலைப்பெண்ணே. 60

இரண்டுகாலாலொரு கோபுர மாம்நெடு
நாளா யிருந்தே அமிழ்ந்துபோகும்
கண்டபோ துகோபு ரமிருக் கும்வாலை
காணவு மெட்டாள் நிலைக்கவொட்டாள் 61

அஞ்சு பூதத்தை யுண்டுபண் ணிக்கூட்டில்
ஆரா தாரத்தை யுண்டுபண்ணிக்
கொஞ்சு பெண்ணாசை யுண்டுபண்ணி வாலை
கூட்டுருள் காலனை மாட்டுகிருள். 62

காலனைக் காலா லுதைத்தவ ளாம்வாலை
ஆலகா லவிட முண்டவாளம்
மாளாச் செகத்தைப் படைத்தவ ளாமிந்த
மானுடன் கோட்டை யிடித்தவளாம். 63

மாதாவாய் வந்தே அமுதந்தந் தாள்மனை
யாட்டியாய் வந்து சுகங்கொடுத்தாள்
ஆதர வாகிய தங்கையா னுள்நமக்
காசைக் கொழுந்தியு மாமியானுள். 64

சிரித்து மெல்லப் புரமெரித் தாள் வாலை
செங்காட்டுச் செட்டியைத் தானுதைத்தாள்
ஒருத்தியாகவே சூரர்த மைவென்ருள்
ஒற்றையாய்க் கஞ்சனைக் கொன்றுவிட்டாள். 65

இப்படி யல்லோ இவள்தொழி லாமிந்த
ஈனு மலடி கொடுஞ்சூலி
மைப்படுங் கண்ணியர் கேளுங்கடி அந்த
வயசு வாலை திரிசூலி. 66

கத்தி பெரிதோ யுறைபெரி தோவிவள்
கண்ணு பெரிதோ முகம்பெரிதோ
சத்தி பெரிதோ சிவம்பெரி தோநீதான்
சற்றே சொல்லடி வாலைப்பெண்ணே. 67

அன்னம் பெரிதல்லால் தண்ணீர் பெரிதல்ல
அப்படி வாலை பெரிதானால்
பொன்னு பெரிதல்லால் வெள்ளி பெரிதல்ல
பொய்யாது சொல்லுகிறேன் கேளுங்கடி. 68

மாமிச மானு லெலும்புமுண் டுசதை
வாங்கி யோடு கழன்றுவிடும்
ஆமிச மிப்படிச் சத்தியென் றேவிளை
யாடிக் கும்மி அடியுங்கடி. 69

பண்டு முளைப்ப தரிசியே யானாலும்
விண்டுமி போனால் விளையாதென்று
கண்டுகொண் டுமுன்னே அவ்வைசொன் னதுண்டு
வுண்டோ வில்லையோ வாலைப்பெண்ணே. 70

மண்ணுமில் லாமலே விண்ணுமில் லைகொஞ்சம்
வாசமில் லாமலே பூவுமில்லை
பெண்ணுமில் லாமலே யாணுமில் லையிது
பேணிப் பாரடி வாலைப்பெண்ணே. 71

நந்தவனத்திலே சோதியுண் டுநிலம்
நத்திய பேருக்கு நெல்லுமுண்டு
விந்தையாய் வாலையைப் பூசிக்க முன்னாளில்
விட்ட குறைவேணும் வாலைப்பெண்ணே. 72

வாலையைப் பூசிக்கச் சித்தரா னூர்வாலைக்
கொத்தாசை யாய்ச்சிவ கர்த்தரானார்
வேலையைப் பார்த்தல்லோ கூலிவைத் தாரிந்த
விதந்தெரியுமோ வாலைப்பெண்ணே. 73

வாலைக்கு மேலான தெய்வமில் லைமானங்
காப்பது சேலைக்கு மேலுமில்லை
பாலுக்கு மேலான பாக்கியமில் லைவாலைக்
கும்மிக்கு மேலான பாடலில்லை. 74

நாட்டத்தைக் கண்டா லறியலா குமந்த
நாலாறு வாசல் கடக்கலாகும்
பூட்டைக் கதவைத் திறக்கலா கும்மிது
பொய்யல்ல மெய்யடி வாலைப்பெண்ணே. 75

ஆணும்பெண் ணுங்கூடி யானத னாற்பிள்ளை
ஆச்சுதென் றேநீரும் பேசுகின்றீர்
ஆணும்பெண் ணுங்கூடி யானதல் லோபேதம்
அற்றொரு வித்தாச்சு வாலைப்பெண்ணே. 76

இன்றைக் கிருப்பதும் பொய்யல்ல வேவீடே
என்வாழ்க்கை யென்பதும் பொய்யல்லவே
அன்றைக் கெழுத்தின் படிமுடி யும்வாலை
ஆத்தாளைப் போற்றடி வாலைப்பெண்ணே. 77

வீணாசை கொண்டு திரியாதே யிது
மெய்யல்ல பொய்வாழ்வு பொய்க்கூடு
காணாத வாலையைக் கண்டுகொண் டாற்காட்சி
காணலா மாகாய மாளலாமே. 78

பெண்டாட்டி யாவதும் பொய்யல்ல வோபெற்ற
பிள்ளைக ளாவதும் பொய்யல்லவோ
கொண்டாட்ட மான தகப்பன்பொய் யேமுலை
கொடுத்த தாயும் நிசமாமோ. 79

தாயும் பெண்டாட்டியுந் தான்சரியே தன்யம்
 தாமே யிருவருந் தாங்கொடுத்தார்
காயும் பழமுஞ் சரியாமோ உன்றன்
 கருத்தைப் பார்த்துக்கொள் வாலைப்பெண்ணே. 80

பெண்டாட்டி மந்தைமட்டும் வருவாள்பெற்ற
 பிள்ளை மசானக் கரையின் மட்டும்
தெண்டாட்டுத் தர்மம் நடுவினிலேவந்து
 சேர்ந்து பரகதி தாள்கொடுக்கும். 81

பாக்கிய மும்மகள் போக்கிய மும்ராச
 போக்கிய மும்வந்த தானுக்கால்
சீக்கிரந் தருமஞ் செய்யவேண்டுங்கொஞ்சந்
 திருப்பணிகள் முடிக்கவேண்டும். 82

திருப்பணி களைமுடித்தோருஞ்செத்துஞ்
 சாகாத பேரிலொருவரென்றும்
அருட்பொலிந்திடும் வேதத்திலேயவை
 அறிந்து சொன்னளே வாலைப்பெண்ணே. 83

மெத்தை தனிலே படுத்திருந்து நாமும்
 மெல்லிய ரோடு சிரிக்கும்போது
யுத்தகாலன்வந்து தான்பிடித்தால்நாமும்
 செத்த சவமடி வாலைப்பெண்ணே. 84

ஏழை பனுதிக ளில்லையென்றுலவர்க்
 கிருந்தாலன்னங் கொடுக்கவேண்டும்
நாளையென்றுசொல்லலாகாதேயென்று
 நான்மறை வேத முழங்குதடி. 85

பஞ்சை பனுதி யடியாதே யந்தப்
 பாவந் தொலைய முடியாதே
தஞ்சமென்றோரைக் கெடுக்காதேயார்க்கும்
 வஞ்சனை செய்ய நினையாதே. 86

கண்டதுங் கேட்டதுஞ் சொல்லாதே கண்ணில்
காணாத வுத்தரம் விள்ளாதே
பெண்டாட்டிக் குற்றது சொல்லாதே பெற்ற
பிள்ளைக் கிளப்பங் கொடுக்காதே. 87

சிவன்ற னடியாரை வேதிய ரைச்சில
சீர்புல ஞானப் பெரியோரை
மவுன மாகவும் வையா தேயவர்
மனத்தை நோகவும் செய்யாதே. 88

வழக்க ழிவுகள் சொல்லா தேகற்பு
மங்கையர் மேல்மனம் வையாதே
பழக்க வாசியைப் பார்த்துக்கொண் டுவாலை
பாதத்தைப் போற்றடி வாலைப்பெண்ணே. 89

கூடிய பொய்களைச் சொல்லாதே பொல்லாக்
கொலைக ளவுகள் செய்யாதே
ஆடிய பாம்பை யடியா தேயிது
அறிவு தானடி வாலைப்பெண்ணே. 90

காரிய னாகிலும் வீரியம் பேசவும்
காணா தென்றவ்வை சொன்னாளே
பாரினில் வம்புகள் செய்யா தேபுளிப்
பழம்போ லுதிர்ந்து விழுந்தானே. 91

காசார் கள்பகை செய்யா தேநடுக்
காட்டுப் புலிமுன்னே நில்லாதே
தேசாந்தி ரங்களுஞ் செல்லா தேமாய்கைத்
தேவடி யாள்தனம் பண்ணாதே. 92

தன்வீ டிருக்க அசல்வீடு போகாதே
தாயார் தகப்பனை வையாதே
உன்வீட்டுக் குள்ளேயே யூக மிருக்கையில்
ஓடித் திரிகிறாய் வாலைப்பெண்ணே. 93

சாதி பேதங்கள் சொல்லுகி றீர்தெய்வம்
தானென் றெருவுடல் பேதமுண்டோ
ஓதிய பாலதி லொன்ருகி யதிலே
உற்பத்தி நெய்தயிர் மோராச்சு. 94

பாலொடு முண்டிடு பூனையு முண்டது
மேலாகக் காணவுங் காணுதில்லை
மேலந்த வாசையைத் தள்ளிவிட் டுள்ளத்தில்
வேண்டிப் பூசையைச் செய்திடுங்கள். 95

கோழிக் காறுகாலுண் டென்றுசொன் னேன்கிழக்
கூனிக்கு மூன்றுகா லென்று சொன்னேன்
கூனிக்கி ரண்டெழுத் தென்றுசொன் னேன்முழுப்
பானைக்கு வாயில்லை யென்றுசொன்னேன். 96

ஆட்டுக் கிரண்டுகா லென்றுசொன் னேனம்
மானைக்குப் பானைக்கு நிற்குமேல்சூல்
மாட்டுக்குக் காலில்லை யென்றுசொன் னேன்கதை
வகையைச் சொல்லடி வாலைப்பெண்ணே. 97

கோயிலு மாடும் பறித்தவ னுங்கன்றிக்
கூற்று மேகற் றிருந்தவனும்
வாயில்லாக் குதிரை கண்டவ னுமாட்டு
வகைதெ ரியுமோ வாலைப்பெண்ணே. 98

இத்தனை சாத்திரந் தாம்படித் தோர்செத்தார்
என்று லுலகத்தோர் தாம்சிரிப்பார்
செத்துப்போய்க் கூடக் கலக்கவேண் டுமவன்
தேவர்களுடனே சேரவேண்டும். 99

உற்றது சொன்னக்கா லற்றது பொருந்தும்
உண்டோ உலகத்தி லவ்வைசொன்னுள்
அற்றது பொருந்து முற்றது சொன்னவன்
அவனே குருவடி வாலைப்பெண்ணே. 100

பூரண நிற்தம் நிலையறி யான்வெகு
பொய்சொல் வான் கோடிமந் திரஞ்சொல்வான்
காரண குருஅ வனுமல் லவிவன்
காரிய குருபொ ருள்பறிப் பான். 101

எல்லா மறிந்தவ ரென்றுசொல் லியிந்தப்
பூமியி லேமுழு ஞானியென்று
உல்லாச மாக வயிறு பிழைக்கவே
ஓடித் திரிகிறார் வாலைப் பெண்ணே. 102

ஆதிவா லைபெரி தானா லும்மவள்
அக்காள் பெரிதோ சிவன்பெரிதோ
நாதிவா லைபெரி தானா லும்மவள்
நாயக னல்ல சிவம்பெரிது. 103

ஆயுசு கொடுப்பாள் நீரிழி வுமுதல்
அண்டாது மற்ற வியாதியெல்லாம்
பேயும் பறந்திடும் பில்லிவி னுடியிச்
பத்தினி வாலைப்பெண் பேரைச்சொன்னால். 104

நித்திரை தன்னிலும் விற்றிருப் பாளெந்த
நேரத்தி லும்வாலை முன்னிற்பாள்
சத்துரு வந்தாலும் தள்ளிவைப் பாள்வாலை
உற்றகா லனையுந் தானுதைப்பாள். 105

பல்லாயி ரங்கோடி யண்டமு தல்பதி
னுன்று புவனமும் மூர்த்திமுதல்
எல்லாந் தானாய்ப் படைத்தவ ளாம்வாலை
எள்ளுக்கு ளெண்ணெய்போல் நின்றவளாம். 106

தேசம் புகழ்ந்திடும் வாலைக்கும் மித்தமிழ்
செய்ய எனக்குப தேசஞ்செய்தாள்
நேசவான் வீரப் பெருமாள் குருசாமி
நீள்பதம் போற்றிக்கொண் டாடுங்கடி. 107

ஆறு படைப்புகள் வீடு கடைசூத்ர
அஞ்செழுத் துக்கும் வகையறிந்து
கூறு முயர்வல வேந்த்ரன் துரைவள்ளல்
கொற்றவன் வாழக்கொண் டாடுங்கடி. 108

ஆடுங்கள் பெண்டுக ளெல்லோ ருமந்த
அன்பான கொங்கணர் சொன்னதமிழ்
பாடுங்கள் சித்தர்க ளெல்லோ ரும்வாலை
பாதத்தைப் போற்றிக்கொண் டாடுங்கடி. 109

சித்தர்கள் வாழி சிவன்வா ழிமுனி
தேவர்கள் வாழி ரிஷிவாழி
பத்தர்கள் வாழி பதம்வா ழிதரு
பாரதி வாலைப்பெண் வாழியவே. 110

வாலைக்கும்மி முற்றிற்று.

---

# உரோமரிஷி ஞானம்

**எண்சீர் விருத்தம்**

மூலவட்ட மானகுரு பாதங் காப்பு
முத்திக்கு வித்தான முதலே காப்பு
மேல்வட்ட மானபரப் பிரமங் காப்பு
வேதாந்தங் கடந்துநின்ற மெய்யே காப்பு
காலவட்டந் தங்கிமதி யமுதப் பாலைக்
கண்டுபசி யாற்றிமனக் கவடு நீக்கி
ஞாலவட்டஞ் சித்தாடும் பெரியோர் பாதம்
நம்பினதா லுரோமனென்பேர் நாயன் றானே. 1

கண்ணாடி சில்மூடித் தனுப்பி னாலே
கருவதனை யறியாமல் மாண்டு போனான்
விண்ணாடிப் பாராத குற்றம் குற்றம்
வெறுமண்ணாய்ப் போச்சுதவன் வித்தை யெல்லாம்
ஒண்ணான மவுனமென்றே யோகம் விட்டால்
ஒருபோதுஞ் சித்தியில்லை வாதந் தானும்
பெண்ணார்தம் ஆசைதன்னை விட்டு வந்தால்
பேரின்ப முத்திவழி பேசு வேனே. 2

பேசுவேன் இடைகலையே சந்த்ர காந்தம்
பின்கலைதா னுதித்த நாதி யாச்சு
நேசமதாய் நடுவிருந்த சுடர்தான் நீங்கி
நீங்காம லொன்றான லதுதான் முத்தி
காதலாய்ப் பார்த்தோர்க்கிங் கிதுதான் மோட்சம்
காணாத பேர்க்கென்ன காம தேகஞ்
சோதனையாய் இடைகலையி லேற வாங்கிச்
சுழுமுனையில் கும்பித்துச் சொக்கு வீரே. 3

வாங்கியந்தப் பன்னிரண்டி னுள்ளே ரேசி
வன்னிநின்ற விடமல்லோ சூரியன் வாழ்க்கை
ஓங்கியிந்த இரண்டிடமு மறிந்தோன் யோகி
உற்றபர மடிதானே பதினு ருகும்
தாங்கிநின்ற காலடிதான் பன்னிரண்டு
சார்வான பதினறில் மெள்ள வாங்கி
ஏங்கினதைப் பன்னிரண்டில் நிறுத்தி யூதி
எழுந்தபுரி யட்டமடங் கிற்றுப் பாரே. 4

பாரையா குதிரைமட்டம் பாய்ச்சல் போச்சு
பரப்பிலே விடுக்காதே சத்தந் தன்னை
நேரையா இரண்டிதழி னடுவே வைத்து
நிறைந்தசதா சிவனரைத் தியானம் பண்ணு
கூரையா அங்குலத்தா னுலுஞ் சென்ருல்
குறிக்குள்ளே தானடக்கிக் கொண்ட தையா
ஆரையா உனக்கீடு சொல்லப் போறேன்
அருமையுள்ள என்மகனென் றழைக்க லாமே. 5

அழைப்பதும் நல்லபிள்ளை யானல் நன்றே
ஆகாத சீடர்களைச் சேர்த்தல் தோடம்
பிழைப்பதற்கு வழிசொன்னல் பார்க்க மாட்டான்
பெண்டாட்டி மனங்குளிர பேசு மாடு
உழைப்பதற்குச் செனனமெடுத் தானே யல்லால்
உதவிதனக் கெவ்வளவு முண்டோ வில்லை
இளப்பமிவன் பேச்சையடிக் கடிதா னுது
மேதுக்குச் சொல்லுகிரு மினிமேல் தானே. 6

மேலென்ன இருக்கையிலும் நடக்கும் போதும்
வேறுரையால் சாரங்கள் விடாம லேற்று
நாலென்ன எட்டென்ன வெல்லா மொன்று
நவமான் அட்டாங்க மப்பிய சித்துக்.

காலென்னப் பிராணாய மூன்னே செய்யில்
கணக்காகப் பூரகங்கும் பகமே நாலு
கோலென்ன ரேசகந்தா னென்று மூன்று
குறையாமற் சரபீசங் கூட்டித் தீரே. 7

கூட்டியே பழகினபின் சரபீ சத்தில்
குறையாமல் சாதித்தால் பிரம ரந்த்ரம்
காட்டுவிக்கு மல்லால்விழிக் குறியி னாலே
கண்மூக்கு மத்தியிலே கண்டு பாரு
மூட்டுவிக்கு மாதார மாறுந் தானே
மூலவட்டக் கணபதிநான் முகத்தோன் மாயன்
நாட்டிகமா மணிபூரங் கையன் வட்டந்
தனலான ருத்திரனுந் தணலு மாமே. 8

தணலாகும் விசுத்தியறு கோண வட்டஞ்
சதாசிவனார் வட்டமல்லோ குருபீ டந்தான்
அணியான பதியினிலே குறித்துப் பார்க்க
மத்யமுதல் கரிகொண்டு தூங்குந் தூங்கும்
கனலேறிக் கொண்டிருந்தா லெல்லா முண்டு
காற்றைவெளி விட்டக்கால் கருமந் தீதான்
புனலூறும் வழிபாதை யிந்த மார்க்கம்
பொல்லாத துரோகிக்குப் பொய்யா மன்றே. 9

செலுத்துவது முண்ணாக்கி லண்ணாக் கையா
சென்றேறிப் பிடரிவழித் தியானந் தோன்றும்
அலுத்ததடா நாலுமுனக் கமுத மாச்சு
மவுனமென்ற நிருவிகற்ப வாழ்க்கை யாச்சு
சொலித்திருக்கும் பன்னிரண்டி லிருத்தி யூது
சோடசமாம் சந்த்ரகலை தேய்ந்து போச்சு
களித்ததடா யோகசித்தி ஞான சித்தி
பருவமாய் நாடிவைத்துப் பழக்கம் பண்ணே. 10

மூடாமல் சிறிதுமனப் பாடம் பண்ணி
முழுதுமன் வந்ததுபோல் பிரசங் கித்து
வீடேதிங் குடலேது யோக மேது
வீண்பேச்சாச் சொல்லி யல்லோ மாண்டு போனார்
காடேறி மலையேறி நதிக ளாடிக்
காய்கிழங்கு சருகுதின்று காமத் தீயால்
சூடேறி மாண்டவர்கள் கோடா கோடி
சொருபமுத்தி பெற்றவர்கள் சுருக்க மாச்சே. 11

சொருபமுத்திக் கடையாள மேதென் றக்கால்
சுடர்போலக் காணுமடா தூல தேகம்
அருபமுத்தி யிடமல்லோ பிரம ஞானம்
அபராட்ச மென்றுசொல்லுஞ் சிரவ ணந்தான்
பருபதத்தை அசைப்பனெனச் சிற்றெ றும்பின்
பழங்கதைபோ லாச்சுதிந்த யோகம் விட்டால்
வெறுங்கடத்தி லீப்புகுந்த வாறுபோல
வேதாந்த மறியாத மிலேச்சர் தாமே. 12

ஓமென்ற கெட்டபுத்தி மாறு கேளே
உலகத்தில் மானிடர்க்காம் ஆண்டு நூறே
ஆமென்றே இருபத்தோ ராயிரத்தோ
டறுநூறு சுவாசமல்லோ ஒரு நாளைக்குப்
போமென்று போனதனால் நாள்கு றைந்து
போச்சுதுபோ காவிட்டால் போவ தில்லை
தாமொன்று நினைக்கையிலே தெய்வமொன்று
தானினைந்த தன்மையல்லோ விதிகள் தாமே. 13

உரோமரிஷி ஞானம் முற்றிற்று.

---

# திருமூல நாயனர் ஞானம்

எண்சீர் விருத்தம்

அடியாகி யண்டரண்டத் தப்பா லாகி
அகாரமெனு மெழுத்ததுவே பாத மாகி
முடியாகி நடுவாகி மூலந் தன்னில்
முப்பொருளுந் தானுகி முதலு மாகிப்
படியாய்மூப் பாழற்றுப் படிக்கு மப்பாற்
படிகடந்த பரஞ்சோதிப் பதியு மாகி
அடியாகு மூலமதே அகார மாகி
அவனவளாய் நின்றநிலை யணுவ தாமே. 1

அதுவாகி யவனவளா யெல்லா மாகி
அடிநடுவு முடிவாகி யகண்ட மாகி
பொதுவாகி பல்லுயிர்க ளனைத்துக் கெல்லாம்
புகலிடமா யெப்பொருட்கு மூல மாகி
மதுவாகி வண்டாகிச் சுவையு மாகி
மலராகி மணமாகி மதிக்க வொண்ணு
அதுவாதம் அகாரமதே மூல மாகி
அண்டமெல்லாந் தாங்கிநின்ற அம்மூல மாமே. 2

மூலமெனு மாதார வட்டந் தானே
முச்சுடரு முக்கோண மூன்று நாடிச்
சீலமெனுஞ் சிவலிங்க பாத தீர்த்தந்
திருவடியுந் திருமேனி நடமு மாதும்
கோலமுட னண்டமெல்லாந் தாங்கிக் கொண்டு
கொழுந்துவிட்ட கம்பமதாய் மேலே நோக்கி
ஆலமுண்ட கண்டமெலாந் தானுய் நின்ற
அகார முதல் அவ்வெழுத்தை அறிந்து பாரே. 3

அறிந்ததுவுந் தற்பரமே அகார மாகும்
அறிவுடைய உகாரம்சிற் பரம தாகும்

பிறந்ததுவு மூலகமெல்லாஞ் சமயந் தானும்
 பேதமெனுங் கருவிவகை யெல்லா மாகும்
அறிந்ததுவும் அகார மெனும் பாதந் தன்னை
 அடிமுடியென் றனுதினமு மறிந்து நோக்கே. 4

நோக்கமுடன் மூலமெனும் பாதந்தன்னை
 நுண்பொருளாஞ் சிற்பரத்தி னூடே நோக்குந்
தீர்க்கமுட னுதார வகையுந் தாண்டித்
 திருநயனம் நாசிநெற்றி நடுவே பார்த்துப்
போக்கறிந்திங் கிந்தநிலை நோக்க வல்லார்
 புரிசடையோன் தன்னுடைய புதல்வ ராவார்
ஆக்கமுட னருட்சுடர்போற் குருவைத் தானே
 அனுதினமு நோக்கிநிற் பார் ஆசா னுமே. 5

ஆசானு மீசானு மொன்றே யாகும்
 அவனவளு மொன்றுதும் அதுதா னுகும்
பேசாத மந்திரமு மிதுவே யாகும்
 பேரொளியின் வடிவாதும் பேரு மாகும்
நேசாருங் கலைகளெலாந் தானே யாதும்
 நிலையான ஓங்கார பீட மாகும்
ஈசானை ஆசானைக் காணும் பேர்க்கிங்
 கின்பமுடன் கயிலாச மெய்த லாமே. 6

எய்தரிய பரசிவத்தின் மூலந் தன்னில்
 இருசுடரு முதித்தொடுங்கு மிடமே யென்று
மெய்தொழியுஞ் சுழுமுனையே கம்ப மாகி
 மெய்ப்பொருளாஞ் சோதியென மேவி நிற்கும்
இவ்வகையே மூலமெனும் பாதந் தன்னை
 இருநேர மற்றிதிடத்தே யிறைஞ்சிக் காணே. 7

காண்பதுதான் பேரொளியின் காட்சி யாகும்
 காணரிய பொருளாதும் காட்டும் போதே
ஆண்பெண்ணாய் அலியாகி அடியு மாகி
 அப்பாலைக் கப்பாலாய் அமர்ந்த சோதி

விண்பயிலும் வேதமெல்லாந் தேடிக் காணு
  வெறும்பாழ தாகியே மேவி நின்றார்
சேண்பயிலும் செகசோதி மூலந் தன்னைத்
  தேடரிய பாதமென்றே தெளிந்து நோக்கே. 8

தெளிவரிய பாதமது அகார மாகிச்
  சிற்பரமுந் தற்பரமுந் தானே யாகி
அழிவரிய சோதியது தானே யாகி
  அடி நடுவு முடியாகி யமர்ந்து நின்று
மொழிவரிய முதலாகி மூல மாகி
  முச்சுடருந் தானாகி முடிராத சோதி
சுழியினிலே முனையாகிக் கோப மாகிச்
  சொல்லரிய வெழுத்தென்றே தொகுத்துப் பாரீர். 9

தொகுப்பதுந்தாம் மந்திரங்கள் கருவி நூல்கள்
  சொல்லரிய தத்துவங்கள் தம்மை யெல்லாம்
வகுத்துடனே யிவற்றையெலாங் கண்டு நீங்கி
  வாகான உடலுயிரை வகையாற் கண்டு
பகுப்புடனே சீராமற் பாதந் தன்னைப்
  பரகதிக்கு வழியெனவே பற்றிக் கொண்டு
விகற்பமிலா மூலமதில் நின்ற சோதி
  மேலான பாதமென்றே மேவி நில்லே. 10

மேவியதோர் சற்குருவின் பாதந் தன்னை
  மெய்ஞ்ஞான மென்றதனை மேவிக்கொண்டு
ஆவியுடல் கயமெல்லா மறிந்து பார்த்தே
  அத்தனார் வடிவமென்றே அறிந்துகொண்டு
பாவனையு மானவெல்லாம் விட்டு நீங்கிப்
  பகலிரவு மற்றிடத்தே கருத்தை வைத்துச்
சிவனையுஞ் சிந்தனையு மொன்றாய்த் தானே
  திருமூலர் பாதமொன்றித் திடமாய்க் காணே. 11

திருமூலநாயனார் ஞானம் முற்றிற்று.

———

# கருவூரார் பூஜா விதி

—

## காப்பு

எண்சீர் விருத்தம்

தெளிவுதனில் தெளிவுதரு மருளுங் காணும்
க்ஷணத்திலே சிவமயமுஞ் சேரத் தோணும்
வழியதனில் நல்லவழி ஞானங் கூடும்
மகத்தான வேதாந்தஞ் சித்தி காட்டும்
ஒளிவுதனி லொளிவுதரு முறுதி சொல்வார்
உற்பனத்தி லுற்பனமா யுறுதி தோணும்
வெளியதனில் வெளியாகி நாதத் துள்ளே
விளங்கிநின்ற வாலைப்பெண் ணாதி காப்பே.

## நூல்

ஆதியந்தம் வாலையவ ளிருந்த வீடே
ஆச்சரியம் மெத்தமெத்த அதுதான் பாரு
சோதியந்த நடுவீடு பீட மாகிச்
சொகுசுபெற வீற்றிருந்தால் துரைப்பெண்ணாத்தாள்
வீதியந்த ஆறுதெரு அமர்ந்த வீதி
விளையாடி நின்றதிரு மாளி கண்டாய்
பாதிமதி சூடியே பிருந்த சாமி
பத்துவய தாகுமிந்த வாமி தானே. 1

வாமியிவள் மர்மம் வைத்துப் பூசை பண்ண
மதியுனக்கு வேணுமடா அதிக மாக
காமிவெகு சாமிசிவ காம ரூபி
காணரிது சிறுபிள்ளை கன்னி கன்னி

ஆமிவளை யறிந்தவர்கள் சித்தர் சித்தர்
அறிந்தாலு மனமடக்க மறிய வேணும்
நாமிவளைப் பூசைபண்ண நினைத்த வாறு
நாட்டிலே சொல்லவென்ருல் நகைப்பார் காணே. 2

காணப்பா இவளுடைய கற்பு மெத்த
கண்டவர்க்குப் பெண்ணரசு நானே யென்பாள்
ஊணப்பா வமிர்த மிவ ளூட்டி வைப்பாள்
உள்வீட்டுக் தள்ளிருந்து மேலே யேறப்
பூணப்பா மனமுறைந்து வாவா வென்பாள்
புத்திரனே யென்மகனே யென்று சொல்லி
வேணப்பா வேணதெல்லாந் தருவே னென்பாள்
வேதாந்த சூட்சமெலாம் விளங்குந் தானே. 3

தானென்ற வாலையிவள் ரூபங் காணச்
சமர்த்துண்டோ ஆண்பிள்ளை தானுமுண்டோ
பானென்ற வாமத்துக் குள்ளே யப்பா
பராபரையாள் பலகோடி விதமு மாடித்
தேனென்ற மொழிச்சியிவள் சித்தர்க் கெல்லாம்
சிறுபிள்ளை பத்துவய துள்ள தேவி
ஊனென்ற வுடலுக்குள் நடுவு மாகி
உத்தமியாள் விற்றிருந்த வுண்மை தானே. 4

உண்மையிவர் நாணமில்லா திருந்த வீடே
ஊருக்குள் நடுவீடே உற்றுப் பாரு
செம்மையாய்க் கண்டவர்க ளுண்டோ அப்பா
செகசால வித்தையிவ ளாடும் வித்தை
உண்மையடா பஞ்சவண்ண மாகி நின்ற
உலகதனி லலைந்தவர்கள் கோடா கோடி
நின்மலமாய்க் கண்டவர்கள் சொல்லா ரப்பா
நேசமுட னெனக்குரைத்த நிசங்கண் டேனே. 5

கண்டதொரு பூரணத்தின் மகிமை கேளு
கால்மேலுந் தலைகீழும் நடுவு மாகி
அண்டரொடு முனிவர்களுங் கண்டு போற்ற
ஆதவனு மம்புலியு மதிலே நின்று
தொண்டுபண்ணு மவர்களிலே நாலு பேர்கள்
சுகம்பெறலா மென்றுசொன்ன வாசல் நாலு
கொண்டவர்கள் கண்டுவந்த தொண்ணூற் ருறு
கொள்கையெனக் காத்திருந்த குறிப்பைப் பாரே. 6

பார்த்தவர்கள் செய்தொழிலும் மனமும் வேருய்ப்
பலநூலைப் படித்துப்படு குழியில் வீழ்வார்
ஏற்றபடி மனம்போனுற் புத்தி போச்சே
ஏழைமதி போகாதே என்தாய் பாதம்
போற்றுதற்கே ஐவரையு மனத்தி லொன்ருய்ப்
புத்திசித்த மோர்நிலையில் நிறுத்தி வாசம்
பூத்தமல ரெடுத்துதிருப் பாதம் போற்ற
பொறியைந்து கருவிகர ணுதி போமே. 7

போச்சுதடா மனமாய்கை வீறு போச்சு
பொறியைந்து கருவிகர ணுதி போச்சு
ஏச்சுதடா வென்றுமன மிறக்க லாச்சு
எனக்கொருவ ரிணையில்லை யென்ற பேச்சு
வாய்ச்சுதடா மனமடங்க வங்கென் ருேர்சொல்
வாய்பேசா மவுனத்தை யதிலே சேர்க்கக்
காய்ச்சுதடா பூத்தமலர் கருத்தை யூன்று
கனியாகு மக்கனியைக் கண்டு கொள்ளே. 8

கொள்ளுதற்கிங் கின்னமொரு குறிப்பைக் கேளு
கோடியிடி மின்முழங்குங் கண்ணை மூடு
விள்ளுதற்கு மனமடங்காப் பூதங் காணும்
விள்ளாதே யுள்ளபடி சிங்கென் ருேர்சொல்

விள்ளவுமே வுபாயமதால் நடுவே நில்லு
வேகமெல்லா மொடுங்குமடா சத்தம் போச்சு
கள்ளரைப்போல் மயங்காதே மவுனத் துன்று
கண்ணிணையுந் திறக்காதே கருதிப் பாரே. 9

பாரேது புலனேது அனலுமேது
பாங்கான காலேது வெளியுமாகும்
நாரேது பூவேது வாசமேது
நல்லபுட்பந் தானேது பூசையேது
ஊரேது பேரேது சினமுமேது
ஓகோகோ அதிசயந்தா னென்ன சொல்வேன்
ஆறேது குளமேது கோயிலேது
ஆதிவஸ்தை யறிவதனு லறிய லாமே. 10

ஆமெனவும் ஊமெனவு மிரண்டுங் கூட்டி
அப்பனே ஓமென்ற மூன்று மொன்ருய்
நாமெனவுந் தாமெனவு மொன்றே யாகும்
நல்லவர்க ளறிவார்கள் காமி காணுன்
வாமம்வைத்துப் பூசைபண்ண இந்த மார்க்கம்
வந்தவர்க்குச் சத்திசிறு பிள்ளைவாலை
சோமநதி யமுதமுண்ண வா வாவென்பாள்
சுகமுனக்குப் பரமசுக மருள்செய் வாளே. 11

செய்குவாய் பூசையது செய்யும் போது
செய்குறிகள் தவருமல் நடக்க வேண்டும்
உய்குவாய் பெண்ணரவர் கடியா வண்ணம்
ஊமையென்ற நடுத்தீயை யதிகங் கொண்டால்
பைகுவாய் அரவுவிடம் பொசுங்கிப் போகும்
பங்கமுனக் கில்லையடா அங்கமீதில்
ஐகுவா யுள்ளடங்கிப் பேச்சை விட்டே
அழைத்திடவே யஞ்சுமது கொஞ்சுங் காணே. 12

காணாத காட்சியெல்லாங் கண்ணிற் காணும்
கலங்காதே மெய்ம்மயக்கம் மெத்த வாகும்
பூணாத பணிபூண்டு சிறுபெண் ணாகப்
போதமெனும் பொருள் பறிக்க வருவாய் கண்டாய்
வாணளை மடக்கியிவள் ரூபங் கண்டு
மயங்காதே மவுனத்தில் நில்லு நில்லு
கோணாத முக்கோணக் குறியைப் பாரு
கூசாதே கண் கூசுங் கூசுங் காணே. 13

கூச்சமற்றுப் பார்க்கையிலே இநள்போல் மூடும்
கொள்ளிகொண்டு கொளுத்தியதைவெளிச்சம்போடு
வாய்ச்சமர்த்துப் பேசாதே மவுனத் தூன்று
வாவாவென் றேநீயும் வாநந்தக் கூவச்
சூட்சமது விருந்தவிடஞ் சொல்ல லாமோ
சொல்லுதற்கு வாய்விட்டுச் சொல்ல லாமோ
தாய்ச்சமர்த்துப் பாராதே தாயைப் போற்று
சற்குருபோ லுற்பனத்தைத் தாய்சொல் வாளே. 14

சொல்வதற்கிங் கிவளையலால் சுகம்வே றுண்டோ
சூட்சமெல்லா மிவளேவிடச் சூட்ட முண்டோ
நல்லவர்க்கு நடுவில்விளை யாடும் வல்லி
நாதவிந் தோங்கார நிலையுங் காட்டி
வல்லவர்க்கும் வல்லவளும் நானே யென்பாள்
வரமவர்க்கு வேணதெல்லாம் வழங்கு ரூபி
புல்லருக்கிங் காயுதமும் புல்லே யாகும்
புத்திகெட்ட லோபிகட்குப் புகலொ ணாதே. 15

புகலுவார் வேதமெல்லாம் வந்த தென்று
பொய்பேசிச் சாத்திரங்கள் மிகவுங் கற்றே
அகலுவார் பெண்ணாசை விட்டோ மென்றே
அறிவுகெட்டே ஊர்தோறுஞ் சுற்றிச் சுற்றிச்

சகலமுமே வந்தவர்போல் வேடம் பூண்டு
சடைமூடியுங் காசாயந் தன்னைச் சாற்றி
இகலுமன மடங்காமல் நினைவு வேறாய்
எண்ணமெலாம் பெண்ணாசை பூசை தானே. 16

பூசையது செய்வமென்று கூட்டங் கூடிப்
புத்திகெட்டுக் கைமுறையின் போக்கை விட்டுப்
பாசையது மிகப்பேசி பாட்டுப் பாடிப்
படிப்பார்கள் மந்திரத்தின் பயனைக் காணார்
ஆசையிலே பெண்ணாசை மயக்கத் தாலே
அங்கிருந்த வாமத்தைப் பங்கு போட்டுப்
பேசையிலே மனம்வேறாய் நினைப்பான் பாவி
புரட்டுருட்டாய் நினைவுதப்பிப் பேசு வானே. 17

பேச்சென்றால் வாய்ச்சமர்த்தாய்ப் பேசிப் பேசிப்
பின்னுமுன்னும் பாராமல் மதமே மீறி
நீச்சென்றும் நினைப்பென்றும் ஏதுங் காணார்
நிர்மூட ரனேகவித சாலங் கற்றே
ஆச்சென்று லதனாலே வருவதேது
ஆத்தாளைப் பூசித்தோ னவனே சித்தன்
மூச்சென்ன செய்யுமடா நரகிற் றள்ளும்
மோசமது போகாதே முக்கால் பாரே. 18

முக்காலும் பொருந்துமென்று சொன்ன போதே
மோசமில்லை சூட்சமது மொழிந்து கூடும்
தக்காமற் போனபே ரனேக ருண்டு
சமர்த்தறிந்தா லவன்வாமி யவனே சித்தன்
எக்காலும் நடந்திருநீ காலு முன்னி
இருந்தடங்கி யுள்ளிருந்து வெளியிற் போன
அக்காலைக் காணும லலைந்தே போடி
அழிந்துகெட்டுப் போனவர்கள் அறிந்துகொள்ளே.

அறிந்தகுறி யடையாளங் காண வேண்டும்
அக்குறியிற் சொக்கிமனந் தேற வேண்டும்
அறிந்தவன்போ லடங்கிமன மிறக்க வேண்டும்
அலகையது வழிபாதை அறிய வேண்டும்
மறைந்தவரை நிறைந்தவரை நீதான் காண
மயக்கத்தைக் கண்டுனையு மதிக்க வேண்டும்
நிறைந்தமதி குறைந்தவகை அறிய வேண்டும்
நிச்சயத்தை யறிவார்க்கு முத்தி தானே. 20

முத்திதரு மென்றுமனம் புத்தி யற்று
மோசமது போகாதே பாசங் கையில்
சித்தமதில் சந்திரனை நிறுத்திக் கொண்டு
செந்தீயி லுன்தீயை நடுவில் வாங்கிச்
சுத்தியுடன் ஆதியந்த மனத்தில் வைத்துச்
சொல்லாத மந்திரத்தின் தீயை மூட்டி
நித்யமல ரர்ச்சனைசெய் பாதம் போற்றி
நீயுமதி மதியுமதி லதிக மாமே. 21

மதிபெருங் கதிபெருகும் வாதம் வாதம்
வருந்தாதே யந்தமுறை யாகா திப்போ
நிதிபெருகு மிவள்குறியே வாத மாகும்
நிர்மூட ரறியாமல் வகாரம் பேசி
நதிகள்தனை யறியாமல் சலத்தில் மூழ்கி
நானேநா னென்றுவாய் மதங்கள் பேசி
உரியபொரு ளுள்ளதெல்லாஞ் சுட்டுச் சுட்டே
உட்பொருளைப் பாராம லழிந்திட் டாரே. 22

இட்டகுறி நாதவிந்து ரூபங் காண
இயலறியாச் சண்டாளர் சுட்டு மாய்வார்
விட்டகுறை வந்ததென்றால் தானே யெய்தும்
விதியில்லார்க் கெத்தனைதான் வருந்தி னாலும்

பட்டுமன மாய்தலல்லால் வேறொன் றில்லை
    பத்தியிலார்க் குரைத்தானர் பாழ்போக் காதே
திட்டாதாய்ப் பாணம்வைத்துத் தேவி பூசை
    சீர்பெற்றார் பதினெட்டுச் சித்தர் தாமே. 23

எட்டிரண்டு மொன்றுமது வாலை யென்பார்
    இதுதானே பரிதிமதி சுழுமுனை யென்பார்
ஒட்டிமுறிந் தொழுந்ததுமுக் கோண மென்பார்
    உதித்தெழுந்த மூன்றெழுத்தை யறியா ரையோ
கொட்டுமொரு தேனூறுவாய் நிற்கும் பாரு
    கூட்டமிட்டுப் பாராதே குறிகள் தோன்றும்
சுட்ட சுடு காடுமது வெளியு மாகும்
    சொல்லுதற்கு வாய்விளங்காச் சூட்சந் தானே. 24

சூட்சமிதன் வாசமது நிலைத்த வீடு
    சொல்லுதற்கே எங்குமாய் நிறைந்த வீடு
தேசமதில் போய்விளங்கு மிந்த வீடு
    சித்தாந்த சித்தரவர் தேடு வீடு
ஓசைமணிப் பூரமதி லுதிக்கும் வீடு
    ஓகோகோ அதிசயங்க ளுள்ள வீடு
ஆசுகவி மதுரமது பொழியும் வீடு
    அவனருளுங் கூடி விளை யாடும் வீடே. 25

வீடுமது தலைவாசல் அதுமேல் வாசல்
    வெளியான சுழிக்கதவு அடைக்கும் வாசல்
தேடுகிற மூவருமே வணங்கும் வாசல்
    திரமான பன்னிருவர் காக்கும் வாசல்
ஆடுகிற புலியாகி நின்ற வாசல்
    அரகர சிவசிவா வாசி வாசல்
கூடுகிற முக்கோணப் பரங்க ளாகிக்
    குறுகுமதி பெருகுமது கூறொண் ணாதே. 26

ஒன்ருகி இரண்டாகி விளைவு மாகி
    உத்தமியா ளுட்கருத்தை யறியப் போமோ
தின்ருத விடக்கொடுத்துத் தின்னச் சொன்ருள்
    செத்தசவம் போலிருந்து செபிக்கச் சொன்ருள்
பண்ணுத பணக்கோடிப் பண்ணி வைத்தான்
    பார்த்திருந்து கழுத்தறுக்கப் பார்த்தான் பாவி
எண்ணுது மெண்ணிமனம் ஏங்கி நாளும்
    எனக்கபய மேதெனவே யெழுந்திட்டேனே. 27

எழுந்திட்ட திவள்பார்த்துத் தொடர்ந்து கூடி
    என்னையுமே யிழுத்துமடி பிடித்துக் கொண்டு
கொழுந்துவிட்டு வளர்ந்தெரிபு மணலை மூட்டிக்
    குடிகேடி சத்துருப்போல் கூச்ச லிட்டாள்
அழுதேனே முர்த்தியினி யந்த வூரில்
    அரகரா துணையெனக்கே யாரு மில்லை
எழுந்திட்டா ரெல்லோரு மோடிப் போனர்
    என்னசெய்வேன் தனித்திருந்தே ஏங்கி னேனே. 28

ஏங்கினேன் கூடழிந்தேன் வீடும் அற்றேன்
    என்னைத்தான் கண்டவர்கள் சீசீ யென்னத்
தூங்கினேன் காலறிந்து மடக்க மாட்டேன்
    துணையெனக்கு யாருமில்லை சூழ்ச்சியாக
வாங்கினேன் காலறிந்து மடக்க வேண்டும்
    வகையான வெனக்கொருத்தி யுறுதி சொன்ருள்
தேங்கினேன் முன்னுமவள் பின்னு மாகத்
    திடமெனக்குச் சொன்னதிந்தத் தெளிவு தானே. 29

தெளிவதற்குச் சூட்சமிது தெளிவாய்ப் பாரு
    சிவனிருந்து விளையாடுந் தெருவைப் பாரு
மொழிவதற்கிந் நூலைவிட வேருென் றில்லை
    மூன்ருதி யந்தமொடு நடுவுஞ் சொன்னேம்

சுழியதற்குள் சுழியிருந்த சூட்சம் சொன்னோம்
சொல்லாத மவுனமுதற் கருவுஞ் சொன்னோம்
ஒளிபிறக்கு முறுதியிந்த வுறுதி சொன்னோம்
உற்பனமாய்ப் பார்த்தவர்கள் சித்தர் தாமே. 30

கருவூரார் பூஜா விதி முற்றிற்று.

---

சங்கரனார் திருவுளம் மகிழ்ந்து
உமாமகேஸ்வரிக்கு அருளிச்செய்த

# ஞானசர நூல்

## மூலமும் உரையும்

---

### காப்பு

நேரிசை வெண்பா

வாழ்த்துவாம் உள்ளம் வருவிருப்பாம் நெஞ்சமுன்பிற்
சூழ்த்துவாம் மேன்மேல் துதிசெய்வாம்—தாழ்த்த
பரநூலை முற்றும்பா லித்தருள் கூட்டுஞ்
சரநூலை யோதமுன்னோன் தாள்.

### நாமகள் துதி

உமைமாதுக் கீசன் உரைத்தசர நூலில்
அமையாப் பொருளும் அமையும்—எமையாள்
புவிமடந்தை பூமடந்தை போதமெய்ஞ் ஞானக்
கவிமடந்தை யிக்கலைக்கோர் காப்பு.

### அவை யடக்கம்

செய்ய மனந்துணிந்து சீர்முன்னோர் சொற்சரநூல்
ஐயமற வோத அருள்புரியையங்—கையரென்றன் [தோர்
முன்னிற்பா ரென்று மொழிந்தேன்போற் கற்றுணர்ந்
மன்னிப்பா ரென்று மனு.

## நூற்பயன்

*எண்சீர் விருத்தம்*

சந்திரபா னிலக்கணமுங் கோளும் நாளும்
தயங்கியபக் கங்கரணம் யோகம் வாரம்
வந்துசொல்லுஞ் சோதிடத்தை அறியா தார்கள்
மனநினைவால் அறியும்வகை யுளதோ என்ன
இந்தவுடல் உயிர்நிலையை அறியா தாருக்
கியாமறிய இயம்புவகை யாதோ என்னிற்
பைந்தொடியே யாம்சொல்லுஞ் * சர நூல் தன்னைப்
பரிந்துநீ பார் என்று பரமன் சொல்வான்.

(உரை.) 'சந்திரன், சூரியன், கோள், நாள், பக்ஷம், கரணம், யோகம், வாரம் இவை முதலாகச் சொல்லப் பட்ட சோதிட இலக்கணத்தை அறியாதவர்கள், தத்தம் மன நினைவினாலே அறிந்துகொள்ளும் மார்க்கம் உள்ளதோ? உண்டாயின் அருளிச்செய்ய வேண்டும்,' என்று உமையவள் கேட்க, சங்கரனார், 'அழகிய வளையல்கள் பூண்ட கைகளையுடைய பெண்ணே! யாஞ்சொல்லுஞ் சர நூலாகிய இந்தச் சாஸ்திரத்தை பரிவுடன் பார்ப்பாயாக; பார்க்கில், நன்கு உணர்வை,' என்று சொல்லுகிறார். 1

சொல்லாரும் நெடுங்கயிற்றின் வருண மான
சூத்திருற் றுவக்கெனுமாச் சிரமந் தன்னில்
கல்லாரு மூக்கணாங் கயிறு கோத்து
நலந்திங்காய் வருகின்ற நஞ்சுட் கொண்டு
பொல்லாத காலப்பாம் புண்டு மிழ்ந்து
பூதலத்திற் பிறந்திறந்து போவ ரேனும்
எல்லாரும் யாஞ்சொல்லுஞ் சர நூல் தன்னை
இகழாதார் சுரர்மூகர் இகழ்வோர் தாமே.

---

* சரம் என்பது — சாரம், மனம், வேன், சுவாசம், மூச்சு, பிராணன், ஆவி, உயிர், உயிர்ப்பு இவை முதலாகச் சொல்லப் பட்டது.

(உரை) சொல்லப்பட்ட நாற்புரிகூடிய நீண்ட கயிற்றைப்போலப் பரம்பரையாய் விருத்தியாகி வருகின்ற பிரம, க்ஷத்திரிய, வைசிய, சூத்திராதி வருணாச்சிரமம் பெற்ற இந்த மானிட தேகத்தில் இச்சரம் நாசியின் வழியாய் நின்று, எருதுக்கு ஒரு மூக்கணாங்கயிறிருந்து ஆட்டுவிப்பதுபோல, நன்மை தீமையென்னும் நஞ்சினையூட்டுவிக்கும். அப்படிப்பட்ட நஞ்சினை ஊட்டங்கொண்டு, கொடிய காலனென்னும் பாம்பனது உண்ணவும் உமிழவுந் தாமுட்பட்டு இருவினைக்கிசைந்தவராய்ப் பிறந்தும், இறந்தும் போவார்கள். ஆயினும், நான் சொல்லிவருஞ் சரநூலை இகழாமல் குருமுகாந்திரத்தில் அறிந்து அனுபவித்து அந்நெறியில் நிற்பவர் யாரேனும், ஓருங்கே தேவராவார்கள். அப்படி அறியமாட்டாதவர்கள், ஊமைகளுக்குச் சரியாவார்கள். 2

## சரம் பார்க்க ஆசன விதி

மூங்கிற்பாய் மிடிகல்லு நோய்மண் துக்கம்
  முரிபலகை நன்மையிலை மூடைந்த புல்லு
நீங்கிவிடுங் கீர்த்திதழை மனநடுக்கம்
  நிகரில்கலைத் தொல்ஞானம் நிறைபுலித்தோல்
ஓங்கியசெல் வம்வீடு மூன்குசைப்புல்
  ஒளிர்தூசு நன்மையுயர் படந்தாவென்று
தூங்கியதூக் கம்போக்கும் நன்மை பாகத்
  துலங்கியவா தனத்திருந்து தோகை சொல்வாம்.

(உரை) மயில் போன்றவளே, மூங்கில் தடுக்கு ஆசனம்-வறுமை; கல்-வியாதி; மண்-(ஆதனமில்லாமல் வெறுமணலில் உட்கார்ந்து கொள்ளுதல்) துக்கம்; உடைந்த அல்லது அறுபட்ட பலகை மணை நன்மையில்லை; கோரைப்பாய் முதலிய புற்பாய்கள்-கீர்த்திநாசம்; பச்சிலைத்தழை-மனநடுக்கம்; மான்தோல்-ஞானம்; புலித்தோல்-செல்வம், தர்ப்பாசனம்-மோக்ஷம்; வெள்ளை வஸ்

திரம்-தீமையில்லை; சித்திராசனம் அல்லது இரத்தின கம்பளம்-நன்மை. இவைகளில் நன்மையாய் விளங்கும் ஆசனத்திலிருந்து சரம் பார்க்கவேண்டும். மற்றுஞ் சொல்லுகிறோம்; கேள். 3

## சரம் பார்க்கும் மார்க்கம்

சொல்லியவா தனங்கள்பல அவற்றுள் நன்றில்
துய்யபங்க யாதனமா யிருந்து தோன்றும்
அல்லலறுத் தேகமன மாக்கி ஓட்டி
யாணபந்த பிராணுயா மங்கள் பண்ணி
எல்லையிலுந் திபின்கீழா மெழுத்தைப் பற்றி
எழுபத்தி ராயிரநா டியிலீ ரைந்து
நல்லனவாம் அதில்மூன்று நாடி யோடும்
நலம்தரும்பே ரவ்வெழுத்தை நவ்வி பாரே.

(உரை.) மான்போலுங்கண்களையுடையபெண்ணே! முன் கூறப்பட்ட ஆசனங்கள் பலவுண்டு. அவற்றுள் தீங்கில்லாத ஓர் ஆசனத்திற் பதுமாசனமென்னப் பட்ட அங்கமாயிருந்து (பார்க்கும்போது) மனத்துக்கு மிகவும் நினைவினுல் அல்லல் வரும். அப்படிவரும் அல்லல் களை நீக்கி, வேறு நினைவில்லாமல், ஒரே மனமாக்கி, ஓட்டியாண பந்தம் என்று சொல்லும் பிராணுயாமஞ் செய்து, அதன்மேற் பார்க்கில். எல்லையில்லாத திருவருளுக்கிடமாகிய உந்திபின் கீழிருக்கு மெழுத்தைத் தொடங்கி, எழுபத்தீராயிரம் நாடிகள் இந்தத் தேகத்தி லுண்டானவை தெரியும். அந்நாடிகளுள் பத்து நாடிகள் நல்லனவாம். அப்பத்து நாடிகளுள் மூன்றுநாடி நல்லன. அம்மூன்றின் வழியாய்த்தான் சரம் எளிதிற்காண ஓடும். இவையறியப் பெரிதாகிய நன்மையினை அளிக்கும் அவ்வெழுத்தைப் பார்.

குறிப்பு:—இதன் விவரத்துக்கு மற்றும் வருவனவற்றுள் 25-ஆம் கவியைப் பார்க்க. 4

நவ்விவிழி யாய்இதய கமலந் தன்னில்
நன்ருக அசுவையுயிர் நடக்கும் போதுஞ்
செவ்வையுடன் மீளும்போ திருபத் தோரா
யிரத்தறுநூ றதுசெப்பி லொருநா ளாகும்
அவ்வியல்மூ லாதாரஞ் சுவாதிட் டானம்
மணிபூரகம் அனகதம்வி சுத்தி ஆஞ்ஞை
பவ்வமற யாஞ்சொல்லுஞ் சரநூல் தன்னைப்
பார்ப்பவரே பராபரத்தின் பயன்பார்ப் பாரே.

(உரை.) மான்போலும் விழிகளையுடைய பெண்ணே இருதய கமலத்தின் வழி ஊடுருவிக்கொண்டு யாதொரு தீங்குமில்லாமல் அசுவையுயிரென்னப்பட்ட இச்சரம், நாசியின் வழியாய்ப் போகும்போது (4 அங்குலங்கள் போக மற்றவை) செவ்வையாய்த் திரும்பி வரும்போது (கணித்துப் பார்க்கில்) இருபத்தோராயிரத்தறுநூறு தரம் நடக்கும், அது 60 நாழிகை சேர்ந்த ஒரு நாளாகும். அப்பரிசெல்லாம் மூலாதாரம், சுவாதிட்டானம், மணிபூரகம், அனகதம், விசுத்தி, ஆஞ்ஞை என்று சொல்லப்பட்ட பரநிலையின் பரிசு தான் (அங்கிருந்து உண்டாயின எனுங் கருத்து) இதனைக் காணும் வழி யாதெனில், யான்சொல்லுஞ் சரநூலை மயக்கமறப் பார்ப்பதுதான். அப்படிப் பார்ப்பவர், பரமாகவும் அபரமாகவும் விளங்குகின்ற ஒரு வஸ்துவினாலுண்டாகும் பிரயோசனத்தை அறிந்து கொள்வர்.

## சந்திர சூரியர் சுழுமுனை இலக்கணமும் யாத்திரைப் பலனும்

பார்க்கிலிடை யிடமதுவே திங்க ளாகும்
பகலவனும் பிங்கலையே வலம தாகும்
ஏற்கவுரை சுழுமுனைதா னடுவாம் அங்கி
இடையான சந்திரனே அமுத மாகும்

தீர்க்கமுடன் பொருள்விளைக்கும் கரிய வண்ணம்
திரராசி யாமவனை செப்புங் காலை
வேற்றடங்கண் மடமாதே விரும்பிக் கேளாய்
விரிவாக இவையனைத்தும் விளங்கச் சொல்வாம்.

(உரை.) வேல்போலுங் கண்ணிணையுடைய பெண்ணே, ஆராய்ந்து பார்க்கில் 'இடைகலை' என்பதுவே இடதுபக்க நாசியில் வருஞ் சுவாசம்; அதுவே 'சந்திரகலை' என்னப்படும் பிங்கலை' என்பதுவே வலதுபக்க நாசியில் வருஞ் சுவாசம்; அதுவே 'சூரியகலை' என்னப்படும். யாவருக்கும் ஒக்கச் சொல்லுங்காலத்தில், சுழுமுனை என்பது நடுவாகும் அக்கினி என்னப்படும்; பின்னும் அந்தச் சந்திரனைச் சொல்லுமிடத்தில், அமுதம் தீர்க்கமாக, எப்பொருள்களையும் உண்டாக்குவன. நிறம் கறுத்த தன் ராசியில் திர ராசி, மற்றுமுண்டாகிய அனைத்தும், பகிஷ்காரமாகச் சொல்ல, நீ விருப்பமுற்றுக் கேட்பாயாக.

குறிப்பு:— அச்சுழுமுனை இரண்டு நாசியிலும் பரவியோடும். அதற்குப் பூரணம் என்பது பெயர் 6

## இதுவும் அது

சொல்லுங்காற் கதிரவனுஞ் சகவியாபி
சுத்தநிறம் வெண்மைசர ராசியாகும்
கொல்லுமெலாக் கருமங்கள் கொடிய வன்னி
கூறுங்கால் நிறஞ்சிவப்பாம் உபய ராசி
நல்லவிடை தெரிந்துணரிற் றிங்கள் பெண்ணாம்
நலம்பயில்பிங் கலைகதிரோன் புருடனாகும்
செல்லுமிரு பதின்காத வழிக்கப் பாலாந்
திசைக்கிடமாய்ச் செல்வலமூர் சேரக் கேளே.

(உரை.) சூரியனுடைய தணங்குறிகளைச் சொல்லுமிடத்து, அந்தச் சூரியன் உலகத்தில் வியாபக

முற்றவன்; பரிசுத்தமான வெண்மை நிறத்தையுடையவன், ராசியில் சரராசி. சுழுமுனை யென்னும் அக்கினியைச் சொல்லவென்றால், சகல கருமங்களையும் அழிக்கும்; பொல்லாது; நிறம் அக்கினி; சிவப்பு ராசியில் மேற்சொல்லிய இரண்டு ராசியுங் கூடியது. இன்னமும் நன்றாய்த் தெரிந்து பார்க்கில், இடைகலை யென்று சொல்லப்பட்ட சந்திரன் பெண்பால்; பிங்கலை யென்று சொல்லப்பட்ட அந்தச் சூரியன் ஆண்பால். சுழுமுனை யெனப்பட்ட அந்த உபய ராசியானது அலிபாலையொப்பால் அல்லது அலியாகும். அன்றியும், இருபதின்காத வழிகத மேற்பட்ட தொலைவான தேசத்துக்குப் போகும்போது, சந்திரகலை ஓடும்போது புறப்பட்டுச் சூரியகலை ஓடும்போது அத்தேசத்தில் போய்ச் சேரவேண்டும். இன்னமுஞ் சொல்லுகிறேன்; கேள்:

### சந்திரனிலக்கணமும் அச்சந்திரன் நடக்கும்போது இன்னவை செய்யலாம் என்பதும்

கேட்கிலிடந் தூதாடை யணிபொன் பூணல்
கிளருமணம் அடிமைகொளல் கீழ் நீர் கிண்டல்
வாழ்க்கைமனை யெடுத்தல்குடி புகுதல் விற்றல்
மன்னவரைக் காணலுண்மை மருவல் சாந்தி
வேட்கைதெய்வப் பதிட்டைசுரம் வெறுப்புத் தீர்த்தல்
வித்தைபெறல் தனம்புதைத்தல் மிகவும் ஈதல்
நாட்கமல மலர்முகத்தாய் நரகந் தீர்த்தல்
நன்றேயா மிவையெல்லாம் நயந்து பாரே.

(உரை.) அன்று மலர்ந்த தாமரைப்பூப்போலு முகத்தினையுடைய பெண்ணே, சந்திரகலை இடது நாசியில் நடக்கும்பொழுது எந்தெந்தக் காரியங்களைச் செய்யலாம்? என்று வினவினால், அந்த இடைகலையில் ஒருவரைத் தூதனுப்புதல். தானே தூது போதல், புதிய வஸ்திரந் தரித்தல், ஆபரணாதிகள் பூண்டு கொள்ளல், விவாகஞ்

செய்து கொள்ளுதல் (தாலி கட்டல்) ஒருவனை அடிமை யாகப் பெற்றுக்கொள்ளல், கிணறு குளம் ஏரி முதலி யன வெட்டுதல், வாழும் வீடு மனை வாங்குதல், ஒரு வீட்டிற் குடி போதல், ஒரு வஸ்துவை விற்றல், நூதன மாய் அரசரைக் காணல், தனக்கு ஒரு படி மேற்பட்டவ ராலுலுஞ் சரி, தான் உண்மையாகிய வஸ்துவைச் சார் தல், சாந்தி கழித்தல், இஷ்ட தெய்வப் பிரதிஷ்டை செய் தல், சுரந்தீர்த்தல், வெறுப்புத் தீர்த்தல் (ஒருவனைச் சமா தானஞ் செய்தல்), கல்வி கேட்டுக் கொள்ளுதல், தனந் தானிய முதலிய ஆஸ்தி சேர்த்து வைத்தல், தியாகங் கொடுத்தல், பாப விமோசனஞ் செய்தல் ஆகிய இவை யெல்லாம் நன்மையாகும் மற்றக் காரியங்கள் மத்திமம் என்றறிக.

குறிப்பு:—இன்னமும் இதிற்செயலறிய வென்றால், 47-ஆம் கவியையும், 48-ம் கவியையும் பார்க்க. 8

## சூரியனிலக்கணமும் சூரியன் நடக்கும்போது இன்னவை செயலாகும் என்பதும்

பார்க்கில்வலம் உபதேசம் வித்தை சேவை
    படையோட்டல் பயிர்செட்டுக் களவு சூது
பேர்க்கவொண்ணு வழக்குக்கரி பரிதேரூர்தல்
    பிறங்குமெழுத் திடுதல்சங் கீதம் பாடல்
வார்த்தைபகை பங்கங்கோள் பசாசு தீர்த்தல்
    மந்திரஞ்சா தித்தல்மருந் துணலு றங்கல்
கோத்தபுன லாடல்கொல் விடங்கள் தீர்த்தல்
    கொடும்பிணிதம் பனமோகங் குறிக்குங் காலே.

(உரை.) 'வலது நாசியில் சரமோடும்போது எவை செய்யத்தக்கவை?' என்று விசாரித்துப் பார்க்கும்போது, குருவுபதேசம் பெறல், தாமொருவருக்கு உபதேசம் பண் ணல், வித்தை பாராயணஞ் செய்தல், வித்தை ஒருவருக் கோதல், ஒருவனை வணங்கல், எதிரியின் படை துரத்தல்,

பயிர் விளைத்தல், வியாபாரம் செய்தல், திருடல், சூதாடல், ஒருவனாலுந் தீர்த்தற்கரிதாகிய வழக்குப்பேசல், யானை குதிரை தேர் இவைகளிலேறிச் சவாரி போதல், விளங்கி வரும்படியான எழுத்தெழுதல், சங்கீதம் பாடல், பேசத் தொடங்கல், பகைமையுண்டாக்கல், ஒருவனைப் பங்கப் பண்ணல், கோள் சொல்லுதல், பசாசு ஓட்டுதல், மந்திர நிட்டை சாதித்தல், மருந்து சாப்பிடுதல், போசனம் புசித்தல், நித்திரை செய்தல், ஸ்நானஞ் செய்தல், கொடிய வியாதியைத் தீர்த்தல், தம்பனயோக சாதனஞ் செய்தல், இவைகளை யெல்லாங் குறித்தனுபவித்துப் பார்க்கில் நன்மையாகும்.

குறிப்பு:—மற்றிச் சூரிய சந்திரர் இருவருக்கும் விவரத்திற்கு 46-ஆம் கவியையும் 48-ஆம் கவியையும் பார்க்க.

௯

## சுழுமுனை பூரண சூனிய பலன்

காலிரண்டு மொத்தக்காற் சமாதி நன்றாம்
கருதியதொன் றாகாது காணு காணு
சீலமிகுந் தவமுடையாய் நன்மை இல்லை
தீயவா குங்கருமஞ் சேரக் கூடும்
சாலநிறை பூரணத்தில் வழக்கு வாது
தர்க்கம்போ ரரங்கமன்னர் தம்மைக் கண்டால்
மூலமறுஞ் சூனியத்தி னிறுத்தில் வெல்வன்
முயல்வதெல்லாங் கயல்விழியாய் முயல லாமே.

(உரை.) சேல் மீன்போலும் கண்களையுடைய பெண்ணே, சுழுமுனையாய் இரண்டு சரமும் ஒத்தோடுகையில் என்ன செய்யலாம்? என்றால், சமாதி யோகஞ் செய்தல் (கருவி கரணங்களோயச் சும்மாவிருத்தல்) நன்மை; நினைத்த காரியம் ஒன்றேனுமாகாது. அப்போது ஒருவன் வந்து, 'இப்பொருள் அகப்படுமா?' என்றால்,

அஃது அகப்படாது சீலம் பொருந்திய தவமுடைய பெண்ணே, இந்தச் சுழுமுனை நடக்கும்போது நன்மை இல்லை: கெட்ட காரியங்களெல்லாம் பலிக்கும். இது இங்ஙனம் நிற்க, (சரம்) மூக்கில் எந்தப் புழையில் ஓடுகின்றதோ, அந்தப் பக்கம் பூரணமென்றும், சரம் ஓடாத பக்கம் சூனியமென்றும் பேர் பெறும். இப்படியான குறைவில்லாத பூரண பக்கத்தில் நின்று வழக்குப் பேசுகிறவர்களை, தர்க்கம் பண்ணுகிறவர்களை, சண்டை பண்ணுகிறவர்களை ஒருவன் போய்க் காணும் அரசனை (அல்லது) தனக்கு மேற்பட்டவனை, இவ்வாறு கூறப் பட்டவர்களை இதனால் காணலாமென்று ஒரு சாட்சியும் இல்லாதபடி சரமோடாத பக்கமாகிய சூனிய பக்கத்தில் நிறுத்தினால், பூரணபக்கத்திலிருக்கின்றவன் வெல்வான். அல்லாமலும், ஒருவன், இப்படிப்பட்டவர்களைத் தனக்குச் சரமோடாத சூனிய பக்கத்தில் நிறுத்தினால், அவன் பேச்சே மேலாய் வெல்வன். எவ்வெவற்றை எவ்வெவ் வாறு நாட்டமுற்று அறிய வேண்டுமோ, அவ்வவ்வாறே யறியலாம். 10

### யாத்திரை பிரயாணம் போகும்போது சரம் இசைவு பிசகாய் இருந்தால் அநர்த்த உபசாந்தம்

முயலுங்காற் பூரணத்தி லிடத்தி ரண்டு
முன்வலமேல் மூன்றடி போம் மொழியும் யாத்ரை
கயலடருங் கண்மடவாய் கருமம் முற்றுங்
கருதுவடக் குங்கிழக்கும் இடத்தே போகில்
இயலுமொரு பகையுண்டாம் மீள மாட்டார்
இசைந்தவலந் தெற்குமேற் கேக வென்னிற்
புயலடரும் புனல்புகுந்து மரண மாவார்
புணர்முலைக்கச் சிறுமிடையாய் போற்றிக் காணே.

(உரை.) கச்சினால் இறுகி நெருங்கிய தனங்களையும் இப்போதுதான் அற்றுப்போவது போலத் தோன்றுகின்ற

இடையிணையுமுடைய பெண்ணே, பின் 19- ஆம் கவியில் சொல்லியபடி மேற்றிசையும் தென்றிசையும், சந்திரன் றிசை; வடக்கும் கிழக்குஞ் சூரியன்றிசை. இஃது இங்ஙனம் நிற்க, சொல்லப்பட்டயாத்திரைபோக நாடியவன், சந்திரனில் சந்திரதிசையே போகவேண்டும்; சூரியனில் சூரிய திசையே போகவேண்டும்; அல்லாமலும், முன் ஏழாம் கவியிற் சொல்லியபடி, இருபதின் காதவழிக் கப்புறமான தலங்களுக்கும் சந்திரனில் புறப்பட்டுச் சூரியனில் ஊர் போய்ச் சேரவேண்டும். அப்படிச்சேரத் தருணபேதமாய்ச் சரமும் இசைவுபிசகாய் மாறியோடினால், (அதற்கு உபசாந்தம் யாதெனில்) சூரிய கலையிற் போகவேண்டிய திக்கின் யாத்திரைக்குச் சந்திரகலையாயிருந்தால், அந்தச் சந்திரன் சுவாசத்தை ஏறவுள்ளே இழுத்துப் பூரணமாகி, இந்தக் காலையே இரண்டுதரம் முன்னிட்டு வைத்துப் பின்பு, சுதாவாய் நடந்து வழியில் சிறிது தூரம் நிற்காமல் போகவேண்டும். (இது சாந்தி.) சந்திரன் பலன் கெட்டுப் போகும்; தீமையில்லை. சந்திரகலையிற் போகவேண்டிய திசையின் மாத்திரைக்குச் சூரிய கலையாயிருந்தால், சூரியன் சுவாசத்தை ஏற உள்ளே யிழுத்து, அக்காலையே மூன்றடி முன்னிட்டு வைத்துப் பின்பு சுதாவாய் நடந்து, வழியில் சிறிதுதூரம் நிற்காமல் போகவேண்டும். (இது சாந்தி.) சூரிய பலன் கெட்டுப்போகும்; தீமையில்லை. போகிற காரியம் ஜெயமாகும். இப்படியல்லாமல், வடக்குத் திசையும் கிழக்குத் திசையும், சந்திரன் நடக்கும் போது (யாத்திரை) போனால், போகிறவிடத்தில் ஒருவருக் கொருவர் விரோதப்பட்டுப் போவார்; திரும்பமாட்டார். மேற்குத் திசையும், தெற்குத் திசையும் சூரியகலையாயும்போது யாத்திரை போனால், சலத்தினால் அல்லது மழையினால் இறந்துபோவார். இதை நீ விசுவாசித்திடப்பார். 11

## ஒருவனுக்கு நன்மை தீமை சொல்லும் மார்க்கம்

காணவொரு கருமத்தைக் குறித்து வந்தோன்
கருதிபமூன் னும்மிடமும் மேலும் இந்து
பேணுவல முங்கீழும் பின்னும் வெய்யோன்
பேசியசொல் லெழுத்திரட்டை சோம னாகும்
மானுமெழுத் தொற்றையேற் கதிரோ னாகும்
மதிக்குமவன் பூரணத்தில் வந்து கேட்கிற்
பூலை வுரைத் தனவெல்லாம் நன்றே யாகும்
பொல்லாது சூனியத்திற் புகலு வோர்க்கே.

(உரை.) 'நாம் விழையுங் காரியம் நன்றோ தீதோ, கண்டறிவோம்!' என்று வந்தவன், முன் 10-ஆம் கவியிற் சொல்லியபடி சூரியகலை நடக்கும்போது, அவன் அப் பூரண பக்கமாகவே இருந்தானாகில், அவன் பொருந்தச் சொன்ன காரியங்களெல்லாம் அவனுக்குச் சித்தியாகும். அப்படியல்லாமல், வலப்பக்கத்தில் நின்றாலும் சரம்பார்க் கிறவன் மேலிருக்க வந்தவன் கீழிருந்து கேட்டாலும், நேர் நேரே பின்னிருந்து கேட்டாலும், அச்சூரிய கலைக் குரிய பலிதமே சொல்க. சந்திரகலை நடக்கும்போது அவன் அப்பூரண பக்கமாகவே யிருந்து வினவினனாகில், அவன் சொன்ன காரியங்களெல்லாம் அவனுக்குப் பலிக் கும். அப்படியில்லாமல் இடப்பக்கத்தில் நின்றாலும், நேர் நேரே முன்னே நின்றாலும் மேலிடத்திலிருந்தாலும், அச் சந்திர கலைக்குரிய குணமே சொல்க. இது தவிர, சரம் ஓடாத சூனிய பக்கத்தில் நின்று கேட்பானாகில், அவன் கேட்ட காரியம் பொல்லாததாகும்; பலிக்க மாட்டா தென்க. அல்லாமலும், அவன் முதல் வாய்திறந்து சொன்ன வார்த்தையின் எழுத்தை எண்ணிப் பார்த்து, ஒற்றைப்பங்காகில், சூரியனுடைய குணஞ்சொல்க. இரட் டையாகில், சந்திரனுடையகுணஞ்சொல்க. மேல்கீழ்என் றது, மெத்தை விட்டையும், கிணறு முதலிய பள்ளக்

குழிகளையும் குறித்ததென்றறிக. 'இப்படியாக 5, 6 வகை யிற் சொல்லி யிருக்கின்றதே! இவை யெல்லாம் ஏக காலத்தில் ஒத்திருக்க வேண்டும் என்பதில்லை. ஏதாவது ஒன்றைப் பார்த்துச் சொல்லலாம்' என்பது கருத்து. மற்றும் வருவனவற்றுற் காண்க. இன்னமும் விரித்துச் சொல்லுமளவில், சந்திரனுடைய திசையும் பக்கமும் அது பூரணமானாலுஞ் சரிதான், கிஞ்சித்து மத்திமம். சூரியனுடைய திசையும் பக்கமும். அது சூனியமானு லுஞ் சரிதான், திரணமாயினும் நன்மையுண்டே யல்லது வியர்த்தமாகாது. இதற்குப் பிரமாணமாக, 6-ஆம் கவி யிலும் 7-ஆம் கவியிலும் சந்திரனைத் திரராசி யென்று செப்பியிருப்பதனை யறிக. இக் கவிகளில் உரி, பண்பு, அல்லது அடைமொழிகளைச் சேரவிடாமல் பதவுரை யாய்ச் சொல்லி வருவோமென்றுல், விரிவுரைக்கு இசைவு பட்டு வருவதரிது; ஆயினும் அவ்வுரிகளை மாத்திரம் சேர்த்துக்கொண்டு வருவோமென்றல், ஒரு பெண்ணுன வள் தன் புருஷனுக்கு அமளியிற் சம்போக காலத்தில் கால் கை படுதல் முதலிய கற்புடைமை தவறுதல் கூடா தென்று அங்கும் அவைகளை இருக்கக் காண்பிக்கப் புகு வாள். புகுந்தால் அச்சதிபதிகள் கொண்ட கருத்து ஒரு மித்துத் தடையின்றி நிறைவேறுமோ? நிறைவேருதது போல, இங்கும் விகாரமில்லாமல் உரை புணர்வுமாட்டா தாதலால் சமயோசிதமாய் நேர்படுத்தவும் நிராகரிக்கவு மாயிற்று. 12

### இதுவும் அது
### முன் 10-ஆம் கவியிற் சொல்லிய பூரண சூனியங்களின் விகற்பம்

கேடென்றேன் பறிகொடுத்தோன் நஞ்சு தின்றேன்
கிடையினிற் சாவென்றேன் கிளர்நோய் கொண்
பாடொன்று மில்லைசூ னியத்தே யாகிற் [டோன்
பலித்துவிடும் பூரணத்திற் பகர்ந்த வெல்லாம்

ஆடும்பை யரவன்ன அல்கு லாளே
அடுத்தொரு வன் வந்ததிசை சோம ஞகி
நீநஞ்சொல் இரவியாய் நிற்கு மாகில்
நினைத்தமொழி யாகாது நின்று பாரே.

(உரை) ஆடும் பையரவு அன்ன அல்குலையுடைய பெண்ணே! ஒருவன் வந்து, 'நானின்னதனுல் கெட்டுப் போனேன்' என்ருலும், 'நானின்னதைப் பறி கொடுத்தேன்,' என்ருலும், 'விடங்கடித்தது அல்லது விடமுண்டேன்,' என்ருலும், 'இதோபடுக்கையிற்ருனே பிராணன் போகின்றது,' என்ருலும், அல்லது இவை முதலாகச் சொல்லப்பட்ட அபாய குணங்குறிகள் எவையாயினுஞ் சரி, சரம் ஓடாத சூனிய பக்கமாய் வந்து நின்ருனுகில், 'ஒரு வருத்தமுமில்லை நிவர்த்தியாகிப் போகும்,' என்க. அப்படியல்லாமல், சரம் ஓடுகிற பக்கமாகிய பூரணபக்கத்தில் வந்து நின்று சொல்லுவானுகில், வந்தவன் எப்படியெப்படிச் சொன்னுனே, அப்படி யப்படியே லபித்துப் போகும். பறிபோன பொருள் வராது; நஞ்சு மீளாது; படுக்கையில் நோயாளி தேருன். அன்றியும், சூனியத்தில் எவனுவது வந்து எதையாவது சொன்னுனுகில், அஃது ஒரு காலத்தில் அபத்தமான வார்த்தையானுலுமாகும். பூரணத்திற் சொன்னசொல் உண்மையா யிருக்கும். இது வல்லாமலும், வந்தவனுடைய திசையையும், 12-ஆம் கவியிற் சொல்லியபடி எழுத்தையும் எண்ணிப் பார்க்கில், அவன் திசை சந்திரன் கூருகவும், முதற்சொன்ன சொல் சூரியன் கூருகவுமிருந்தால், மேற்சொல்லிய காரியங்களுக்குக் கிஞ்சித்து மத்திமமாயினும், முழுமோசமன்று; இன்னமுஞ் சொல்லுகிறேன் கேள். 13

## கருப்பக் குறி

கேட்டவரு ருயிர் தன்னி லேறி நிற்றல்
கிளர்கையி லுயிருளவை பிடித்து நிற்றல்

வாட்டமற வருமதலை யிடத்திற் பெண்ணும்
வலமாகி நின்றுரைத்தால் மைந்தனுதும்
ஈட்டமில் சூனியத்துரைக்கில் கேடே யாகும்
இருஞ்சுழு முனை மேலுரைக்கில் அலியே யாகும்
நாட்டுமொழி சூனியம்பூ ரணத்தே யாகி
நடுக்கமுடன் மகவுயிர்க்கக் கிடைக்கும் அன்றே.

(உரை.) ஒருவன் கருப்பத்தைக் குறித்துக் கேட்கும் காலத்தில், வந்தவன் ஒரு சீவன்மேல் ஏறிக்கொண்டிருந்தானுனாலும், உயிருள்ள யாதொன்றைக் கைப்பிடித்துக் கொண்டிருந்தானுனாலும் ஒரு சீவனைத்தொட்டு நின்றுனாலும், அவன் நின்ற பக்கம் வலமாகில், அதிலும் பூரணமானுற்ருன் ஆண்பிள்ளை பிறக்குமென்க; இடமாகில், பூரணமானுற்ருன் பெண்ணென்க. அப்படிப் பூரணபக்கமல்லாமல் சூனிய பக்கமாயிருந்து எதனைத் தொட்டு நின்ருலும் சும்மா நின்ருலும், வலமாகில் ஆண்தான்; இடமாகில் பெண்தான்; ஆனுல், பிறக்கிற பிள்ளை சாகும். அப்போது சரம் பார்க்கிறவனுக்குச் சுழுமுனையா யிருந்தால், பிள்ளை ஆணுருவினதல்லாமலும், பெண்ணுருவினதல்லாமலும், அலியாகுமென்க. இப்படியாக வந்தவன் முன் வலத்தில் நின்று அவன் வந்த காரியத்தைச் சொல்லிக்கொண்டே பின் இடத்தில் வந்து நிற்கில், தாய் வயிற்றிலிருக்கிற பிள்ளை வருத்தப்பட்டுப் பின்பு பிறக்குமென்க. அன்றே- அசை. 14

## கருப்பக் குறியும் போர் வெல்லும் குறியும்

கிடக்கின்ற மைந்தனுஞ்சூ னியத்திற் கேடாம்
கெடாதிருவர் பொருவதசூ னியத்தி லோது
வடுக்கின்ற மொழியின் முதற் சொன்னேன் தோற்பன்
மருவியபூ ரணத்தின்பின்பு சொன்னேன் தோற்பன்

நடக்கின்ற சுழுமுனையில் வேட்ட பேர்கள்
நட்பாகும் வலத்தியங்க நடப்போன் வெல்வன்
இடத்தியங்கி லைந்தடிபோ யெதிர்த்தோன் வெல்வன்
இருஞ்சுழு முனை நிற்கிலிட ரில்லை பாரே.

(உரை.) முன் கவியில் சூனியத்திற்கேட்ட பிள்ளை யிருக்குமென்றாலும், போர் வழக்கு வாதைக்குறித்து ஒருவன் வந்து இன்னவன் இன்னவன் எவன் வெல்வானென்றால், வந்தவன் சூனிய பக்ஷத்திலிருந்து சொன்னானாகில், முன் சொல்லப்பட்ட பெயரையுடையவன் தோற்பன். பூரணமாகில், பின்பு சொல்லப்பட்ட பெயரையுடையவன் தோற்பன். அப்போது சரம் பார்க்கிறவனுக்குச் சுழுமுனை நடந்தால், அவ்விருவரும் ஒருமித்துப் போவார். இதல்லாமலும், சண்டை வாது வழக்கு நேர்கிறவனுக்கு அப்போது சூரிய கலையாயிருந்தால் வெல்வன்; சந்த்ர கலையா யிருக்கிறவன் தோற்பன். சுழுமுனையாகில், ஒருமித்துப் போவார்கள். அப்படிச் சந்திரகலை நடக்கப் பெற்றவன் முன் 11-ஆம் கவியிற் சொல்லியபடி சரத்தை உள்ளிழுத்துப் பூரணமாக்கி அச்சரம் நடக்கிற காலையே முன்னிட்டு ஐந்தடி போய்ப் பின்பு நேர் நடந்தால் வெல்வன். 16

## சரத்தின் ஸ்பரிசம்

பார்க்குங்கா லிடமெனினும் வலமு மொக்கும்
பஞ்சபூ தத்தியக்கம் பகருங் காலை
சாற்றியதண் டுடன்சேரிற் பிருதிவி யாகும்
தப்பாமல் அப்பினுக்குத் தாழ வோடும்
மேற்றிசையை நோக்கியெழும் அங்கி வாயு
மெய்யுணர்ந்தோர் புறத்தோடும் மேன்மை குன்றா
நேர்த்துறையா நாற்றிசையுஞ் சிதறி யோடில்
நெடுவானென் றுரைத்திடுநீ நிலத்து ளோர்க்கே.

(உரை) இடைகலை பிங்கலை சுழுமுனை என்று சொல்லப்பட்ட இம்மூன்று கலைகளையும் இவற்றின் பயன்களனுபவத்தையும் பரீக்ஷித்துப் பார்க்குங் காலத்தில் ஒத்து வரும் அந்தந்த நாடிகளுக்குள் பஞ்ச பூதியங்கள் நடப்பதுண்டு. அவற்றைத் தேர்ந்தறிந்து அனுபவிப்பதே அரியதாகும். யாதெனில், மூக்கிலிருந்து வருகிற சரம் அம்மூக்குத் தண்டைச் சார்ந்து வந்தால், பிருதிவியின் கூறென்றறிக; கீழ் நோக்கியோடில், அப்புவின் கூறென்றறிக; மேலாகப் பாய்ந்தால், தேயுவின் கூறென்றறிக; அத்தண்டிற்கு நேராகிய மற்றொரு புறத்தைச் சார்ந்து வீசினால், வாயுவின் கூறென்றறிக. இப்படி நான்கு பக்கங்களுள் ஒரு பக்கமில்லாமல் அந்நான்கு பக்கமும் கலந்து நடந்தால், அஃது ஆகாயத்தின் கூறென்றறிந்து, உலகத்துள்ளவர்களுக்குச் சொல்க. (இப்பஞ்ச பூதியம் இடத்திற்கும் வலத்திற்கும் ஒன்றுதான்.) 16

## சரத்தின் வடிவமும் நிறமும் இரகசியமும்

நிலம்பொம்மை யிரதநெடுங் கோண நான்காம்
நீளம்பன் னிருவிரலாம் நீர்தான் வெண்மை
இலகுபிறை வடிவுகண்டந் துவர்த்திருக்கும்
எட்டிரண்டு விரலோடு மெரிதான் செம்மை
நலங்கொண்ட முக்கோணம் அழற்சி மேலாய்
நாலிரண்டு விரலோடு நளிர்கா னீலம்
துலங்குபுளி யறுகோண மொருபக்கத்தில்
துய்யநால் விரலோடும் சொல்லுங் காலே.

(உரை.) பஞ்சபூதிய சரம் நடப்பதை இன்னமெப்படிக்கண்டு தெளியலாமெனில், பிருதிவி சரம் பொன்மை; அப்புச்சரம் வெண்மை; தேயுச்சரம் செம்மை; வாயுச்சரம் கருமையாயிருக்கும். (அப்போது கண்டத்தில் எவ்வித உணர்ச்சியாகுமெனில்) பிருதிவிக்குக்கண்டந்தித்திக்கும்.

அப்புவிற்குத் துவர்க்கும்; தேயுவுக்கு உவர்க்கும், அல்லது அழற்சியாயிருக்கும்; வாயுவுக்குப் புளிக்கும். (எவ்வடிவாயிருக்குமெனில்) பிருதிவி எண்கோணம்; அப்பு எட்டு நாள் பிறைபோல இருக்கும்; தேயு முக்கோணம்; வாயு அறுகோணம். அன்றியும், அவை ஓடுகின்ற நீட்சியைச் சொல்லுங்கால், பிருதிவி 12 அங்குலம்; அப்பு 16 அங்குலம்; தேயு 8 அங்குலம்; வாயு 4 அங்குலமென்றறிக. இதல்லாமலும், இக்கவியில் இரதமென்று தனியே போட்டபடியினால் முதல் இரசமாகவே வைத்துக் கொள்ளலாயிற்று. உலகத்தவருக்குச் சொல்லுங்காலத்தில் இப்பேதங்களை அவர்களறிவது அரியதென்று ஒரு பூதியத்திற்கு நான்கு குறி சொல்லியிருக்கின்றார். ஒன்றில்லாவிட்டாலும் மற்றொன்றிலாவது தெரிய வேண்டும். 17

## அப்பூதியம் நடக்கையில் செய்கருமங்களின் குணாகுணம்

சொல்லியவான் வடிவதுதான் வட்டமாதம்
துய்யதொரு விரணசியெல்லாஞ் சுற்றும்
ஒல்லைநிறம் படிகம்கைப் பிரதம் வாயும்
ஓடிவரும் பூதங்கட் குளதோ சொல்க
மல்லல்நில நீர்க்குமிகு பயனாய் செந்தி
மத்திமமாம் பகர்காலும் வானுந் தீதாம்
பல்வளையாய் சரம்பார்ப்போன் தன்னைப் போற்றிப்
பாசிலையென் றோதியிட்டுப் பணிந்து பாரே.

(உரை) பலவளையல்களைத் தரித்த கரத்தையுடைய பெண்ணே! ஆகாசபூதியம் நடக்கும்போது நிறம் படிகம் இரசம், கணடங்கசக்கும்; வடிவு, வட்டம்; நீட்சி ஓரங்குலம். இப்படியாகப் பூதிசங்களின் குணாகுணங்களைச் சொல்லவெனில், பிருதிவிக்கும், அப்புவுக்கும் உத்தமம்;

தேயு மத்திமம்; வாயுவும் ஆகாசமும் தீதாம். சரம் பார்த்துக் குறிசொல்லுகிறவனுக்குத் தாம்பூலம் முதலானவைகள் கொடுத்து உபசாராதிகள் செய்து பின்பு கேள். 18

[இஃது இங்ஙனம் நிற்க. முன் 7, 8- ஆம் கவியிற் சொல்லியபடி சூரிய சந்திரகலையிற் செய்யவேண்டிய கருமங்களுக்கும் இக்கவியை அனுசரிக்க வேண்டும். 48 49- ஆம் கவியைப் பார்க்கவேண்டும் அதிலும் சரம் பார்க்கிறவன் தாம்பூலந் தரித்துக்கொள்ளுகையில் வினவிக் கேட்கிறவனுக்குஞ் சொல்லுகிறவனுக்கும் நன்று. ஒருவன் பேரைக் குறித்து வினவில், அவனுக்குரியவைகளைக் கூறுகின்றார்.]

பாராகும் முதுகுநீர் காலதாகும்
பைந்தழல்மா ரனிலங்கை படர்வான் சென்னி
பேராமல் வினவிலபோ துதித்த பூதம்
பேர்படைத்த இடங்களிலே பிழையில் லாமல்
ஏராகும் பூரணமாம் பக்கந் தன்னில்
ஏறிவெட்டுங் கோல்படுக விசைந்த தெல்லாம்
கூராழி மால்வந்து விலக்கி னாலும்
குறையாமல் வடுப்படுங்காண் குறிக்குங் காலே.

(உரை.) முன் 15- ஆம் கவியிற் சொல்லியபடி இருவரைச் சுட்டிக் காட்டாமலும், சூனிய பக்கத்திலிராமலும், பூரண பக்கமாயிருந்து சண்டைக்குப் போகிறவன் என்னுவானெனில், ஆயுதங்களினால் காயம்பட்டு வருவானென்று சொல்க; அதிலும் அப்போது பிருதிவி நடந்தால், முதுகில் படுமென்க; அப்புவாகில், காலில்; தேயு, மார்பு; வாயு, கை; ஆகாயமாகில், தலையில் படுமெனச் சொல்க. விஷ்ணுதேவன் வந்து விலக்கினாலும் தப்பித்துக்கொண்டு வரமாட்டானென்க. 19

## இந்த இந்தப் பூதியத்துக்கு இந்த இந்த ஆயுதம் எடுத்துப் போக; இவ்விடத்தில் நிற்கவென்பது

காலமூலை தொடங்கியழல் மூலை யேறக்
கயிறெனவே கீறிமதி கதிரோ னாகிக்
கோல்மேற்குந் தெற்குமாய் நிலமாக் கொள்க
கொழுங்கதிரோன் கிடக்குவடக் காகக் கொள்க
சேல்போலும் நெடுங்கண்ணாய் புவிக்குக் கத்தி
சேர்ந்தசலம் வாள் அழற்குச் சிலைகாலுக்கு
மேற்றண்டாம் வானுக்கா யுதங்கல் அந்த
அந்தநிலத் திற்பொருதல் வெற்றி யாமே.

(உரை) சேல்மீன்போலும் கண்களையுடைய பெண்ணே! மேற்கூறியபடி சமர் செய்யவேண்டிய வாயு மூலை தொடங்கி அக்கினி மூலையளவாக ஒரு கயிறு பிடித்தாற் போலச் சரியாய் பாவனை செய்து, அதன் மேற்கையும் தெற்கையும் சந்திரன் கூறாகவும், வடக்கையும் கிழக்கையும் சூரியன் கூறாகவுங்கொண்டு, போர் செய்கிறவனுக்கு அப்போது சூரியகலை இயங்கில், தான் அச்சூரியன் திசையிற்றனே நின்று எதிரியைச் சந்திரன் திசையில் நிறுத்திச் சமர் செய்யவேண்டும். அப்படிச் செய்கையில் சந்திரனானலுஞ் சரி, சூரியனானலுஞ் சரி, எடுத்தெறியும் ஆயுதங்கள் அவையெனில், பிரிதிவியாகில், கத்தி; அப்புவாகில் வாள்; தேயுவாகில், வில்; வாயுவாகில் தண்டு; ஆகாயமாகில், கல்; இப்படியாக அந்த அந்த ஆயுதங்களேந்தி விதிப்படி அந்தந்த நிலத்தில் நின்று சண்டை செய்தால் வெற்றி யடைவன். 20

## நோய்க்குறி

ஆகியநோய் புருடர்க்குப் புருடர் கேட்கில்
ஆறுமென்க மாதருக்கு மாதர் கேட்கில்
சோகமிலிம் முறைதப்பிற் பொல்லா தென்க
தொலையாது நாட்சென்று மீளுமென்க

தோகைசில நாட்செலு நீர் கடுகு மீளும்
சுடுதழல்நாள் மூன்றுதப்பிற் றுஞ்சப் பண்ணும்
ஏகிடுங்கா னிரண்டின் மிகுந்தாற் கொல்லும்
எழில்வான மன்றுதப்பி லிறக்கும் பின்னே.

(உரை.) புருடன் கொண்ட பிணிக்காகப் புருடனே வந்து சரம் பார்க்கிறவனைக் கண்டு, 'இந்நோய் இலகுவாகுமா?' என வினவிலும் அந்நோய் இலகுவாகும். சரம் பார்க்கிறவனுக்கு வலப்பக்கத்தில் நின்று கேட்கிலும், நிவர்த்தியாகும்; ஐயமில்லை. ஸ்திரி கொண்ட நலிக்காக ஸ்திரியே வந்து வினவினுலுங் சுணமாகும். வந்தவள் அவனுக்கு இடப்புக்கத்தில் நின்று கேட்கில், மீளும்; சந்தேகமில்லை. (முன் பதின்மூன்ரும் கவிபிற் சொல்லிபடி சூனிய பக்கமாகவே இருந்தாலு முத்தமம்). இப்படியல்லாமல், ஆணுக்குப் பெண் வந்தாலும், பெண்ணுக்கு ஆண் வந்தாலும், அவ்வியாதி தீர்வது துர்லபம் அன்றியும், ஒருவன் வலப்பக்கத்தினின்று குறி கேட்டுக் கொண்டே இடப்பாகத்தில் வந்து நின்ருலும், ஒருத்தி இடப்பக்கத்தினின்று குறி கேட்டுக் கொண்டே வலப்பக்கத்தில் வந்து நின்ருலும், நோய் போக்குக் கடினம். ஆயினும், மெல்லென நாட்சென்று சொஸ்தப்படும். அப்படியப்படியே சரியாய் வந்து கேட்கில் அவன் நோய் நீங்குமென்க. அதிலும் 'எப்போது தீரும்?' எனில், அந்நேரம் பூதியம் பிருதிவியாகில், சில நாட் செல்லுமென்க; அப்புவாகில், விரைவிலென்க; அக்கினியாகில், மூன்று நாட்களில் விமோசன மென்க. மிகுந்தாற் கொல்லும் வானமாகில், அன்றைக்கே நோய் பிரிந்து காணும்; மிஞ்சில், மறுநாள் மரிக்குமென்க. 21

[இதன் முன் கவியிற் சொல்லிய இயல்பும், அதன் மேற் கவிகளிற் செப்பிய பூதியங்களின் குணமும், முன் 9-ஆம் கவியிற் கூறியபடி சரம் பார்க்கிறவன் ஓரிடத்

துக்குப் போக வேண்டுவது இத்தருண மென்பதும், பேச வேண்டுவது இத்தருணமென்பதுங் கூறுகின்ருர்.]

இறக்குமுப யந்தனக் கைந்து நாளில்
ஏகினக்காற் சாவில்லை யிதுவுண் மையே
பிறக்குமொரு பூதத்தி லைந்து பூதம்
பிரிந்தோடு மதுவுடனே பேசக் கேட்டுச்
சிறப்புடைய பயனறிவ தெல்லாம் நூலின்
செயலதனல் தேவர் களுந் தெரிய மாட்டார்
நிறக்குமதிக் கிருந்தழைத்தால் வந்து கேட்டால்
நீள் வெயிலாச் செல்சொல்க நினைந்து கேளே.

(உரை.) இதற்கு முன் கவியிற்கூறிய பூதியங்களின் இயற்கையாகிய குணங்களுக் குரியவை சொல்லக் கூடாது. அதற்கு முன் 10- ஆம் கவியிற் சொல்லியபடி சுழுமுனை நடக்கில், ஆகுமென்பது ஆகாது; ஆகாதென் பது ஆகும். அதுபோல் இப்போதும் ஒருவன் நோயைக் குறித்துக் கேட்கும்போது சுழுமுனை நடந்தால், அந் நோயாளி ஐந்து தினங்களுள் மரிப்பான். அப்படி மரிக்கா மல் தப்பினல், அவனுக்கினி ஒரு விபத்து வருமளவுஞ் சாகான். இது உண்மை. அன்றியும், முன் 14- ஆம் கவி யிற் சொல்லிய வண்ணம் ஒரு பக்க மோடுகிற சரத்தில் ஐந்து வகைப்பட்ட பூதியங்களுண்டு. அப்பூதியம் ஒவ் வொன்றிற்குள் ஐந்து பிரிந்து நடப்பனவுண்டு. அவை எவையெனில், பிருதிவியிற் பிருதிவி, பிருதிவியிலப்பு, பிருதிவியில் தேயு, பிருதிவியில் வாயு, பிருதிவியில் ஆகாயம். இப்படி இவ்வைந்துக்குள் ஐந்தாயோடும். இதனையும் மற்றிந் நூற்பயன் யாவையும் தரு முகாந் தரத்திலறிந்து கொள்வதல்லால், தேவர்களேயாகு லும், தனியே சுருதியைக் கொண்டு குருவைத் தள்ளிச் சுயானுபவத்தால் இந்நூலைக் கொண்டே அறிவது கூடாது. அல்லாமலும், சரம் பார்க்கிறவனை ஒரு வன் வந்தழைத்தால், அவன் சூரியகலை இயங்கும்

[அறிவு கூறுதல்]

உறுதிகொண்ட பிள்ளையென்றால் ஆசான்வைத்த
உபதேசங் கேட்டளவி லுறுதி கொண்டே
இருதயத்தில் நாட்டினது நழுவிடாமல்
எப்போதும் குருபத்தி தவறிடாமல்
மறுகவலை சாராம லூன்றப் பெற்றால்
வழங்குநூல் பேசுகின்ற வன்மைக் கொக்கும்
கிருபைதரும் மூத்தியே அடைய லாகும்
கிட்டினவர்க் கெதுகுறை? கேடில் நெஞ்சே. 35

[மனம் கேட்குதல்]

'ஆனால், ஞானனுபவம் ஒருவர் பெற்றிருந்தால், பெருதவர்கள் அந்த அனுபவத்தைச் சொல்லென்றும் காட்டென்றும் சொன்னால், அவர்களுக்கு ஒத்துக் கொள்ளும்படி சொல்லலாமோ? இப்படி இப்படி யென்றுங் காட்டலாமோ? ஆகிலும், மெய்ப்பொருளின் பிரகாசத்தைப் பேசினால், மனமொத்துக் களிப்பார்களோ?' என்று மனம் கேட்க, அறிவு கூறுகின்றது.

[அறிவு கூறுதல்]

ஒருவர்தின வொருவர்சொரிந் துற்ற போதே
உற்றவர்க்கோ சொரிந்தவர்க்கோ வுற்றுப் பாராய்
மருவுமந்தச் சொப்பனத்திற் கண்ட காட்சி
மகிழ்ந்தவர்க்கோ கேட்டவர்க்கோ மதித்துப் பாராய்
உருசியுடன் அறுசுவைகொண் டுண்ட வர்க்கோ
உவகையுடன் கண்டவர்க்கோ வூன்றிப் பாராய்
தெரிசனமுங் கண்டுசிந்தை யற்ற பேர்க்குச்
சிவஞானம் அவரவர்க்கே தெளியுந் தானே. 36

[மனம் கேட்குதல்]

'ஆனால், மெய்ப் பொருளினுடைய பிரகாசம் அவரவர்கள் கண்டு களிக்கப்பட்டதுதானே?' என்று மனம் கேட்க, அறிவு கூறுகின்றது.

[அறிவு கூறுதல்]

நீதானே அறிந்தல்லோ நினைக்க வேண்டும்
நிட்டூரர் சொல்லுகின்ற நெறியிற் சென்றால்
போதாது போதாது பொந்துக் குள்ளே
புலியிருக்கு மென்னவதிற் புகுந்து பார்த்தால்
வேதாள மென்றதொரு மயக்கந் தீரும்
மெய்யடியார் மனங்களிக்க மேவி வாழ்வாய்
வாதாடி முத்தர்களை விட்டி டாதே
மனமேநீ யுள்ளபடி வணங்கு வாயே. 37

[மனம் கேட்குதல்]

'ஆனால், தனித்தனியே சுகமடைவதா யிருக்க பெரியோர்கள் ஒருவரோடொருவர் கூடிக்கொண்டு ஆனந்தம் மிகுந்து உறவாடுகின்றார்களே! அஃதெவ்விதக் காரணம் பற்றி?' என மனம் கேட்க, அறிவு கூறுகின்றது.

[அறிவு கூறுதல்]

மறப்பான மூன்றுடலும் இழந்த முத்தர்
மனவெளியாம் பெருவெளியில் மருவ லாலே
துறப்பான ஆகாச மொன்றுந் தன்னில்
சூரியன்றன் பிரகாசத் தோற்றம் போல
சிறப்பாகத் தேகத்தி லிருந்த முத்தர்
திருட்டியினாற் கலந்தொன்றாய்த் தியானிப் பார்கள்
மறைப்பான தில்லைநெஞ்சே கண்ம ணிக்குள்
வன்னியொளி மருவுமந்த வண்மை பாரே. 38

[மனம் கேட்குதல்]

'ஆனால், சந்திரன் சரியை, கிரியை, யோகம், ஞான மென்று சாற்றுகின்றதே! அவற்றுள் முன் சொல்லிய முத்தொழிலுஞ் செய்து முடிந்த பின்னரன்றோ ஞானம்

அறியவேண்டும்? அப்போதன்றோ ஞானசாரியார் கிருபா கடாட்சம் வேண்டும்?' என்று மனம் கேட்க, அறிவு கூறுகின்றது.

[அறிவு கூறுதல்]

சரியை முதல் முத்தொழிலுஞ் செய்கின்றோர்கள்
சாயுச்சிய முத்திரையைப் பணிய வேண்டும்
உருசியுடன் அமுதளித்துப் பாத பூசை
உண்மையுட னுபசாரஞ் செய்ய வேண்டும்
பரிசைகொண்டு சோதித்து நிந்தை சொல்லிப்
பகைத்துவிடின் நசித்திடுவர் பலனே பாழாம்
விரிவுகொண்டு மயங்காதே உற்றுப் பாராய்
வீணருடன் கேள்விவிட்டு மெய்யைப் பாரே. 39

[மனம் கேட்குதல்]

'ஆனால், அவ்வளவு மகத்துவம் இருக்கிறபடியினாலே அம் முத்தொழிலானது இலாபமுஞ் சுளுவிலே முடித்துக் கொள்ளலாகாதோ?' என மனம் கேட்க, அறிவு கூறுகின்றது.

[அறிவு கூறுதல்]

சாயுச்சிய முத்திரையை அடுத்துக் காத்துச்
சங்கையற்றுத் திருவுளத்துப் பாங்குக் கொத்தால்
நீயுச்சிய மாகவென்று கிருபை நோக்கில்
நேரான முத்தொழிலி னிலாபம் நேர்ந்து
மாயுச்சிய மாகவே அம்பலத்தான்
மலரடிக்கே அன்பாகச் செல்வாய் நெஞ்சே
பரயுச்சிய மாகவே பெற்றோருண்டு
பராபரத்தை அடைந்ததன் பண்பிஃதாமே. 40

[மனம் கேட்குதல்]

'ஆனால், இத்தகைய அனுபவத்தை இல்லறத்தி னின்று பெற்றுளார் எவரேனு முண்டுகொல்லோ?. அன்

றேல் துறவறம்பூண்டு, சந்நியாசியாய்ப் பற்பல விரத வைராக்கியமும் சர்வ சங்க நிவர்த்தியுஞ் செய்து, ஜெகத் சஞ்சாரத்தை விட்டகன்று, ஆரணிய சஞ்சார முற்று வருபவர்களின் ஞான மென்னும் அறிவு பிரகாசமாகிய ஸ்பஷ்டப் பட்டுளரோ? இவர்களிலுந் தன் மனத்துட் குடிகொண்ட அஞ்ஞானந்தகாரத்தையோட்டும் வன்மையிலராகி, மூடராதலுமுண்டோ?' என்று மனம் கேட்க, அறிவு கூறுகின்றது.

[அறிவு கூறுதல்]

சன்னியாசி யானவருள் மூடருண்டு
சமுசாரஞ் செய்பவருள் ஞானி யுண்டு
முன்னாலே ஏதுவாம் பிராரத் வங்கள்
மூட்டிவிட்டு ஞானிக்கு முறை தப்பாது
பின்னாலே இருவினையுந் தொடரச் செய்து
பெற்றிடுவார் ஆசான்றன் கிருபை கொண்டு
பின்னுபின் னங்களா லென்றெண் ணாதே
பெருஞ்சோதி முத்திரையைப் பேணிக் கூடே.

[மனம் கேட்குதல்]

'ஆனால், இல்லறத்திலேயிருந்தும் ஞானம் பெற்றுக் கொள்ளலாமென்கிறது சுளுவாய் இருக்கிறதே! உலகத்தி லுள்ள பலரும் ஞானாசிரியரிடத்து அனுக்கிரகம் பெற்றுக் கொண்டு முத்தியை அடைவது அருமையாயிருக்கிறதே! அதிலென்ன பிரயாசை?' என்று மனம் கேட்க, அறிவு கூறுகின்றது

[அறிவு கூறுதல்]

யாவர்களும் பெரியோரை அடுத்துக் காத்தே
அவரடிக்கே பணிந்துமிக அன்பே செய்தே
ஆவலுடன் பன்னிரண்டு வருடங் காத்தும்
அப்போது பக்குவத்தை அறச்சோதித்துத்

தேவர் முதல் மூவர்களுந் தேடிக் காணுத்
திருவடியும் முடி நடுவுந் தெரிசிக் கத்தான்
நாவதனு லுபதேசஞ் செய்வார் நெஞ்சே
நல்லறிவால் வெகுபூசை நவின்ற தாமே. 42

[மனங் கேட்குதல்]

ஆனால், புண்ணியம் மிகுந்து, சிவாசார பத்தி, நேயம், சிவார்ச்சனை வெகு காலஞ்செய்து, பின்னே நல்லறிவு பிரகாசித்திருக்கும் பேர்களுக்குப் பெரியவர்கள் தரிசனம் கிட்டும். அப்பேர்ப்பட்டவர்கள் ஆசான் திருவுளத்துப் பாங்குக் கொத்து நடந்து பரகதியடைவார்கள் என்று சொன்னதும் அறியலானேன். ஆகிலும், பெரியவர்களை அடுத்து, அவர்கள் திருவுளத்துப் பாங்குபோல நடந்து, தீக்ஷையும்பெற்றுக்கொண்டு, சாத்திரத்திலுள்ள பூட்டை அனுபவத்துக்கும் ஒப்பும்படி தெரியவுங் கேள்விப்பட்டுக்கொண்டு ஆசாரியரைக் கவனியாமல், மதங்கொண்டு ஆசாரியர் திருவடி சூட்ட மகிழ்ச்சியில்லாமலும் பூரண தீக்ஷையாகாமலும்; தட்டிப் போகிறதுண்டோ?' என்று மனம் கேட்க, அறிவு கூறுகின்றது.

[அறிவு கூறுதல்]

அடியருக்குத் தொண்டாவ தருமை நெஞ்சே
அவரவர்க்கு விட்ட குறை அடுத்த காலம்
பிடியாம லிருப்பாரோ தொட்டுக் கொள்வார்
பேதைமைக ளாலுலகப் பிணக்கு வந்து
குடியாகும் அதனாலே நழுவிப் போவார்
குற்றமறச் சற்குருவைக் குறிக்கச் சொல்லும்
விடியாத காலத்தி லிருளே யாகும்
விடிந்தபின்பு கண்ணுக்கு வெளிச்ச மாமே. 43

[மனம் கேட்குதல்]

'நீ உலக விபரீதம் வருகிறதாகவும், அதனாலே ஆசானை விட்டு நழுவும்போது ஆசானைக் குற்றமாகக் குறித்துக்கொண்டு போகிறதாகவும் சொன்னாய். அறியலானேன். ஆகிலும் இவ்வளவிலே நழுவினாலும், இன்னொரு தேகம் புண்ணியம் மிகுந்த மானிடமா யெடுத்து, சடுதியிலே விட்ட குறை முடியும்படி ஞான சாத்திரியார் கிருபை யடைந்து, முத்தி யடைவார்களோ?' என்று மனம் கேட்க, அறிவு கூறுகின்றது.

[அறிவு கூறுதல்]

இவ்வளவுந் தொட்டேகும் போது மீண்டும்
இகபோக விபரீதம் வந்தா லுந்தான்
அவ்வளவுந் தான்குருவின் திருவு ளத்துக்
கன்புதவ ருமலே அகன்று ணுகில்
தெவ்வளவாய் விட்டகுறை தாக்குஞ் சேர்க்குந்
தேசிகனைக் குற்றமென்னில் தெளிந்து மேலாம்
நவ்வளவா யிழிந்துவிடும் பின்னு மந்த
ஞானகுருத் துரோகமுற்று நரகெய் வாரே. 44

[மனம் கேட்குதல்]

'ஆனால், ஞானசாரியரிடத்தில் ஒத்தாற்போலிருந்து தெரிந்துகொண்டு, ஞானகுருத் துரோகி தானே தான் தெளிந்தவன் போலப் பேசுகிறானே! உலகத்தார்களுஞ் சிலபேர்கள் அதைக் கேட்டு மயங்கி, ஒத்து வணங்குகிறார்களே! அவர்களுக்கும் இவர்களுக்கும் என்ன இலாபங் கிடைக்கும்?' என்று மனங் கேட்க, அறிவு கூறுகின்றது.

[அறிவு கூறுதல்]

புலித்தோலைப் பசுவுரித்துப் போர்த்துக் கொண்டு
புலியென்றாற் புலியாமோ இன்னங் கேளாய்
பலிப்பாகப் பெண்போலப் புருடன் வேடம்
பகட்டினால் அவனுருவம் பாவை யாமோ

சலிப்பான நரகத்தில் வீழு மாண்பர்
சற்குருவின் றன்னிடத்திற் கற்றுக் கொண்டு
நலிப்பாகப் புலிப்பாயு மியல்பு போல
நானிலத்தோர் வணங்கினதா லீன மாச்சே. 45

[மனம் கேட்குதல்]

'ஆனால், அவன்ருனுங் குருத் துரோகியானபடியி னுலே எவ்வளவு தெளிவாய்ப் பேசினுலும் முத்தி விலக்க னென்பது சரியே. அவன் நிச்சயவானென்று நேசிக்கிற வர்கட்கு என்ன இலாபம்?' என்று மனம் கேட்க, அறிவு கூறுகின்றது.

[அறிவு கூறுதல்]

மரப்பசுவின் முலையதனிற் பாலுண் டாமோ
மலடிக்குச் சுதனுடைய மகிழ்ச்சி யுண்டோ
துரத்தறியாத் தண்ணீர்ப்பாம் பதன்த லையில்
துலங்குமணி யிரத்தினமுந் தோன்று மோசொல்
பரத்தினுடைய நிலையதனைக் குருமுன் பாகப்
பதியாத மூடனையே பணிந்த தாலே
விருத்தமே யல்லாம லுதவி செய்ய
மெய்ஞ்ஞான முண்டாமோ விளம்பு நெஞ்சே. 46

[மனம் கேட்குதல்]

'ஆனல், அறியலானேன், பெண்டிர்க்கு ஞானம் வாராதென்றும், புருடர்க்கு மாத்திரம் ஞானமுண்டென் றும் கூறுதல் எதனுலோ? அது விளங்குமாறு சொல்க' என்று மனம் கேட்க, அறிவு கூறுகின்றது.

[அறிவு கூறுதல்]

அஞ்சுகின்ற பெண்ணென்றும் ஆணென் றுந்தான்
அஞ்சுபஞ்ச பூதத்திற் பிரிந்த துண்டோ
நெஞ்சிலுள்ள வஞ்சகங்கள் வேறு முண்டோ
நிறம்வேறு குணம் வேறு தேசம் வேறு

மிஞ்சுகின்ற உயிர்தானுண் பெண்ணென் றுண்டோ
மெய்கண்ட நூலதிலே பிரித்த துண்டோ
சஞ்சலத்தாற் சொற்கேட்டு மயங்கி டாதே
சங்கையற முன்னூலைச் சார்ந்து பாரே. 47

[மனம் கேட்குதல்]

'ஆனால், 'பேதைமை யென்பது மாதர்க்கு அணிகலம்,' என்று ஔவையார் கூறியதென்னால்?' என்று மனம் வினவ, அறிவு கூறுகின்றது.

[அறிவு கூறுதல்]

ஆணுக்கும் பெண்ணுக்கும் அறிவொன் றேயாம்
ஆனாலும் பேதைதுணம் பெண்ணுக் குண்டு
வீணுக்கே எடுத்தசன்மம் அனந்தம் கோடி
விவேகமுத்தி யடைந்தவர்கள் அவருளுண்டு
ஊணுக்குத் தேடியுண்டே உறங்கிச் செத்த
உலுத்தருண்டு புருடரிலே யனந்தங்கோடி
தானுக்கே ஏகசரா சரந்தாம் நெஞ்சே
சற்குருவுக் கப்படியே சார்ந்து பாரே. 48

[மனம் கேட்குதல்]

'ஆனால், அதுவுமறியலானேன், நான் கேட்ட சங்கைக்குச் சரியென்னும்படி சமாதானங் கூறி நன்றாக அருமையாய்த் தெளிவுடனே யார் சொல்லப் போகிறார்கள்? இனிமேல் நடக்க வேண்டுவதென்ன?' என்று குதூகலங் கொண்டு மனம் கேட்க, அறிவு கூறுகின்றது.

[அறிவு கூறுதல்]

இன்னமின்னம் பிறவிதனிற் பிறத்தல் நன்றோ
இனிமேலும் பிறவாம லிருக்கை நன்றோ

உன்னுகின்ற நினைவேது கருத்தங் கேதோ
ஓதுகின்ற வாக்கேது செவிதா னேது
பன்னுகின்ற கலையேது பண்தா னெங்கே
பாடுகின்ற சத்தந்தான் தொனித்த தெங்கே
முன்னிலையாய் ஞானகுரு மொழிந்த தேது
முத்திநெறி யாய்மனமே முனைந்து பாரே. 49

[மனம் கேட்குதல்]

'ஆனால், எவ்விதத்திலேயும் பார்க்குமளவில் இந்தக் குடும்பச்சேற்றில் உழைத்துக்கொள்ளுகிறதும், அதற்கொத்தாசையாய் உலகத்தார் சொல்லை விசுவாசமாய் ஒத்துக்கொள்ளுகிறதும் துக்கமேயொழிய, உள்ளபடி குடும்பத்தார் என்மேல் பிரியமாயிருக்கிறதேயில்லை. எப்படியெனில், நான்சில நாள் சம்பாதனையில்லாமலும், தேக சௌக்கியமில்லாமலும், ரோகஸ்தனாய் இருக்கும்போது சர்வத்திர பேர்களும் என்மேல் மனம் சலிப்புற்றிருந்தது கண்டேன்; ஏவல் பணிவிடையில் வெறுப்பானதுங் கண்டேன்; சாலவும் பிரஞ்ஞை தப்பியிருக்கும்போது பெண்டு பிள்ளைகளை எதிர்வீட்டார் ஆஸ்தியைக் கேட்கச் சொன்னதுங் கண்டேன்; அவரவர்களழும்போது ஒப்பாரி சொல்லி அழுகிற வயணமுங் கண்டேன்; எல்லாம் பொருளை இச்சித்திருப்ப தென்பதையும் அறியலானேன்; எனக்கு உரிமையான பேர் ஒருவரையும் காணேன்; அல்லது சில நாளுழைத்து மக்கள் முதலாகிய பேர் சம்பாதிக்கச் சாமர்த்தியம் வருந்தனையும் உழைத்துப் போட்டு அதன்பின் சும்மா இருப்போமென்றாலும், எண்ணிச்சைப்படி நடக்கவு மாட்டாது. அதுவுமறியலானேன். ஆகையால், சத்துருவாகிய இந்தப் பேய்க்கூட்டங்களை விட்டுக் காயம் தளராமுன் சிவன்றிருவடி அடைவதற்கு நீ சொன்னபடி சத்தியமாய் நடப்பேன்,' என்று மனம் சொல்ல அறிவு கூறுகின்றது.

[அறிவு கூறுதல்]

அறுசீர் விருத்தம்

பொன்னின் நெஞ்சமே சொற்படி கேட்கவும்
பொருந்தியே நன்றுக
இன்ன மின்னமும் பேதைமை கொள்வையோ
இல்லறந் தனைவிட்டுத்
தன்னைத் தானறி யாமலுஞ் சிவனடி
சார்வது மிழந்தக்கால்
பின்னம் பின்னமாய் இரண்டுங்கெட் டானென்றே
பேதைமை கொள்வாயோ. 50

[மனம் கேட்குதல்]

'இதனால், நான் தெளிந்த விதத்திலே பேதைமை என்பதிருக்குமிடமுங் காணேன்; சர்வ பணியு மறுத்து விட்டேன். ஆனால், தெளிவாய்க் கேட்டதற்குத் தெரியும் படி செய்யு முதவி வேண்டும்,' என்று மனம் கேட்க, அறிவு கூறுகின்றது

[அறிவு கூறுதல்]

சுத்த நெஞ்சமே சற்குரு
மலரடி தொழவகை கேட்பாயேல்
பத்த னாகியே மானாபி
மானமும் பற்றற விட்டேநீ
குற்ற மேதுமற் றெவ்விடங்
காண்கிலுங் கூறுடற் களிப்புற்றுப்
பற்று மாகியே திருவடி
கதியெனப் பணிவுடன் பணிவாயே. 51

[மனம் கேட்குதல்]

'ஆனால், மானாபிமானம் விட்டு, குருவை எவ்விடங் காண்கிலும் மனோவாக்குக்காயம் ஒத்து அன்பு களி கூர்ந்து எண்சாண் தேகத்தை இரு கையாக்கி நன்

மலரை அவர் திருவடிக்குச் சாத்தி, தீர்க்க தண்டம் பண்ணச் சொன்னுய்; அதிற் சந்தேகமில்லை; இவ்வளவும் இழந்து நான் இதற்கு அஞ்சுவேனே? அப்படியே செய்வேன். ஆனல், அதிகமாக உலகத்தார் இகழத்தக்கவராகக் குரு மிகுந்த அசங்கிய ரூபமா யிருந்தால், நான் பணியுமளவிலே நிந்திப்பார்களே! அல்லது அவ்வாறிருக்கிலும், அப்படித்தான் செய்தல் முறைமையோ?' என்று மனம் கேட்க, அறிவு கூறுகின்றது.

[அறிவு உறுதல்]

எண்சீர் விருத்தம்

குவலயத்தோர் சொல்கின்ற கேள்வி யாலே
கூசுகின்ற நெஞ்சமே கூறக் கேளாய்
அவலமாய் கடலுக்கு ளாழு மாண்பர்
அபிமானம் வந்துன்னை அண்டிற் ருனல்
சவலையாய் நழுவிடுவாய் மூத்தி மார்க்கந்
தான்கிடைப்ப தருமையதைச் சார்ந்தே நீதான்
சிவனடியை யடைவதற் குச் சற்கு ருத்தாள்
திருவுளத்துக் கொத்தவழி செல்லு வாயே. 52

[மனம் கேட்குதல்]

'ஆனல், சற்குருவின் திருவடியில் சரணஞ் செய்வதற்கு மார்க்கமுண் டோ?' என்று மனம் கேட்க, அறிவு கூறுகின்றது.

[அறிவு உறுதல்]

ஓம்நமசி வாயவென்ற அட்சரத்தை
உச்சிகண் புருவம் வாய் மூக்கு நாசி
தாமதங்க ளில்லாமல் முக்கா லுந்தான்
சற்குருவின் றிருவடியில் தான மூத்தி

நேமமா யிப்படியுஞ் செய்வ துந்தான்
நேரான சரணத்தின் தீட்சை யாகும்
ஆம்பின்னே யென்றெண்ணி யிருந்தி டாதே
ஐயனுள்ளங் களித்திடவே யாசை வைப்பாய். 53

[மனம் கேட்குதல்]

'ஆனால், சரண தீட்சையுமறிந்தேன்; செய்யவுந் துணிந்தேன்; கருத்தில் செய்யும்படி குறித்தால் போதாதோ? காயத்தினாலும் மிகுதியாய் வணங்கிக் கொள்ள வேண்டுமோ?' என்று மனம் கேட்க, அறிவு கூறுகின்றது.

[அறிவு கூறுதல்]

காயமன வாக்கினால் அடைந்த கன்மம்
காயமன வாக்கினாற் கடக்க வேண்டும்
காயமன வாக்கினா லொன்றொ ளித்தால்
கடமெடுக்க ஏதுவாங் கண்டு பாராய்
நேயமுள ஐம்புலனாற் சூழ்ந்த துன்பம்
நீக்குதற்கு முறையிதுதான் நிலைத்துப் பார் நீ.
மாயவித்தை யாமென்று நழுவி டாதே
வஞ்சகத்தை நீவிட்டு வணங்கு வாயே. 54

[மனம் கேட்குதல்]

'ஆனால், அப்படியே செய்கிறேன்; இன்னஞ் சற்குரு திருவுளத்துக்குப் பாங்காய் நடக்கும் மார்க்கங்கள் சொல்லுக,' என்று மனம் கேட்க, அறிவு கூறுகின்றது.

[அறிவு கூறுதல்]

வஞ்சனைபொய் சூதுகப டங்கள் நீக்கி
மானவபி மானமுதற் பெருமை நீக்கி
அஞ்சுகின்ற கோபமாங் காரம் நீக்கி
ஆசையதைப் பாதியடி போடே நீக்கித்

அஞ்சவே சோதித்துப் பார்த்தா லுந்தான்
துணிவாகித் திருவடியே கதியென் றெண்ணித்
தஞ்சமென்றே ஐயனது நிழல்போற் காத்துச்
சரணத்தி னேவல்செய்து தழைத்தி டாயே. 55

[மனம் கேட்குதல்]

'அப்படியே தொண்டு செய்கிறதற்கும் ஆளானேன். எந்தொழிலுமில்லாமல் சர்வ ஆசையுமிழந்து, நிரந்தரமாய் இருக்கிற பெரியோர்களிடத்தில் தொண்டுபட்டிருந்தால் வயிற்றுப் பசிக்கு அன்னம் வேண்டியிருக்குமே! அதற்கென்ன வயணம்?' என்று மனம் கேட்க, அறிவு கூறுகின்றது.

[அறிவு கூறுதல்]

அறசீர் விருத்தம்

இச்சையுடன் எத்தனைநாள் இவ்வுலகில்
வாழ்ந்தாலும் இடரே சொல்வார்
நச்சைவரு மித்துலே தெளிவுற்ற
மனமென்று நல்லோர் சொல்வார்
கச்சடியை விட்டுவிடு மும்பொருளை
ஓர்பொருளாய் தனித்துப் பாராய்
பிச்சையென்ன விசாரமென்ன தலைமேலே
சுமந்துவரப் பெருமா னுண்டே. 56

[மனம் கேட்குதல்]

'அப்படியிருக்கச் சிவ சொரூபத்தைப் பெற்றிருக்கின்ற பேர்கள், ஆகாரத்துக்காகப் பலவிதங்களான தொழில் செய்கிறதும், சித்துகள் வித்தைகள் செய்கிறதும்; பொய் சொல்லுகிறதும், சிவசின்ன வேடத்தைக் கபடமாகத் தரித்துக் கொள்ளுகிறதும் என்ன?' என்று மனம் கேட்க, அறிவு கூறுகின்றது.

[அறிவு கூறுதல்]

ஆனை முதல் எறும்புகடைக் கழதளித்துக்
காக்குமொரு வனே யல்லால்
சேனைவித மாகவிந்த மானிடர்கள்
செய்வதெல்லாஞ் செகத்தின் மாயை
ஊனை முதல் சுமந்தவராய் உண்டபின்பு
களித்தவரார் உற்றுப் பார்க்கில்
தேனையுண்டு ருசிகண்ட திருடனைத்தான்
கண்டவர்க்குத் தெரியுந் தானே. 57

[மனம் கேட்குதல்]

'ஆனால், அறியலானேன்; பெரியோர்களிடத்தில் பத்தி வைராக்கியத்துடனே நிமிட நேரமாகிலும் பிரியாமல் சரணடைந்து ஏவலுஞ் செய்துகொண் டிருக்கிறவர்களுக்கு எந்தப் பதவி கிட்டும்?' என்று மனம் கேட்க அறிவு கூறுகின்றது.

[அறிவு கூறுதல்]

வேறு

ஆசான் கிருபை மிகுந்ததனால் அந்த வுடல்போய் மறுவுடலில்; கூசா திருந்துந் தன்னண்டைக்குறைவொன் றில்லா நிறைவாகத் தேசா நேசர் சூழ்ந்திருக்கத் திருவோலக்கஞ் சேவிக்க, ஈசா வென்றே மறைபோற்ற எய்தும் பரம பதம் நெஞ்சே. 58

[மனம் கேட்குதல்]

'ஆனால், நிழல்போலப் பிரியாமல் சரணத்து ஏவலுஞ் சலியாமற் செய்கிறேன்; ஐயோ! எத்தனைபிறவியோ எடுத்துவந்து நொந்திருக்கிற நான், இன்னுமொரு பிறவி பிறப்பேனோ! முழுதும் பிறவாமலிருக்கிற மார்க்கம் உண்டோ? அதைச் சொல்லுக,' என்று மனம் கேட்க, அறிவு கூறுகின்றது.

[அறிவு கூறுதல்]

எண்சீர் விருத்தம்

உடல்பொருளும் ஆவியுஞ்சற் குருநா தற்கே
உண்மையுடன் உதகத்தால் தாரை வார்த்து
நடமாடு மிம்மூன்று மெனவென் றெண்ணி
நாயகனுஞ் சீவனையே யடிமை யாக்கு
திடவாக்குத் தவறாமல் நிலைத்து நெஞ்சே
தேகந்தா னொழியளவும் உதவி செய்தால்
படமாடும் அரவத்தை அணிந்த ஈசன்
பதம்பெறுவாய் உள்ளபடி பகர்ந்திட்டேனே. 59

[மனம் கேட்குதல்]

'ஆனால், நல்லதாயிற்று! இது வரைக்கும் நானே உடல், பொருள், ஆவி, மூன்றுக்கு முடையவனென்று நீ சொன்னபடி கேட்டுச் சருவ சங்கையுமிழந்து நிருவிகாரியாய் என்னகதியென்று கேட்குமளவிலே சீவனுண்டென்றும், சீவனுக்கு உடல் பொருளாவி தொந்தமென்றும், அவற்றைக் குருவுக்குத் தத்தஞ் செய்து சீவனை அடிமையாக்கி ஆசான் சொற்படி நடந்து சீவேசனாகிறதாய்ச் சொன்னாய்; மகா சந்தோஷமாயிற்று. அப்படியே சீவன் முத்தி யடைகிறதானால், நானித்தனை பிரயாசைப்பட வேண்டியதென்ன? நான்—நீ யார்? இவ்வளவு நாள் சந்தேகமற்றுத் தெளிவு கொண்ட இலாப மென்னவாகப் போகிறது?' என்று மனம் கேட்க, அறிவு கூறுகின்றது.

[அறிவு கூறுதல்]

சீவனே நீயாகும் அறிவும் நீயாம்
சிவன்றானே நீயாகும் பரமு நீயாம்
தாவுகின்ற செயலுடனே மனமென் றுன்னைச்
சாற்றியதோர் நாமமாஞ் சர்வ சங்கை

மேவவே மொழிகிறது முனதால் நெஞ்சே
மெல்லமெல்லச் சொற்படியே மேவினக்கால்
நாவுதனிற் பிரிக்கின்ற பேதமற்று
நாம்சிவமாய் வாழலாம் நாடிப் பாரே. 60

[மனம் கேட்குதல்]

'ஆனால், அறியலானேன். இனி உடல் பொருளாவி மூன்றும் குருவுக்குத் தத்தம் பண்ணச் சொன்னாய்; இந்த மூன்றையுந் தெரியப்படுத்துக,' என்று மனம் கேட்க, அறிவு கூறுகின்றது.

[அறிவு கூறுதல்]

உடலென்றுற் சடாதார உடலே யாகும்
உயிரான பிராணனே யாவி யாதம்
திடமாக இரண்டையுந்தானெனென் றுற்ற
சீவனே சிற்றம்பலப் பொருள தாகும்
அடைவாக இம்மூன்றுங் கொடுத்துத் தன்னை
அடிமையெனச் சத்தியா யிருந்தால் நெஞ்சே
இடமான கதிபெறவே உபதே சிப்பார்
இப்படியே குருபதத்தில் இட்டம் வையே. 61

[மனம் கேட்குதல்]

'அப்படியே செய்யலுற்றேன்; இனித் தீட்சையென்பதும் நூலென்பதும், குருசொல்லென்பதும், சாதகமென்பதும், முத்தி வீடு என்பதும் தெரியச்சொல்லுக,' என்று மனம் கேட்க, அறிவு கூறுகின்றது.

[அறிவு கூறுதல்]

தீக்கையது நூலாகும் நூல்விளக்காம்
திறமான சற்குருசொல் உபாய மாகும்
தாக்குகின்ற சாதகந்தானேணி யாகும்
சபையென்ற வெளிதானே வீடதாகும்

மார்க்கமென்ற திதுநெஞ்சே முன்னோர் கூட
வாழ்ந்தவரும் இப்படியே மருவிப் பாராய்
நோக்கையிலே இதிலொன்று நழுவிற் ருனல்
நொந்துநொந்து பிறவியினில்நுழைக்கும்பாரே.

[மனம் கேட்குதல்]

'எல்லாம் உள்ளபடியென்று அறிந்துகொண்டேன்; இனிமேல் சற்குருவினுடைய திருவுளம் மகிழ்ந்து நான் நடைத்தேறும் பொருட்டு உபதேசஞ் செய்யும்படி சொல்லுக,' என்று மனங் கேட்க, அறிவு கூறுகின்றது.

[அறிவு கூறுதல்]

அப்படியே செய்விட்போம் அழகு நெஞ்சே
ஆசான்றன் திருவடிக்கே அன்பதாக
எப்படியா கிலுமுன்னை மாயை கிட்டி
இதம்போலாம் செனனமதற் கிடங்கொ டாதே
செப்படிபோல் வந்ததொரு செனனம் நீங்கிச்
சிவானந்த போதகமாய்த் தெளிவாய் நீயும்
மைப்படியுங் கண்ணிபங்கன் குருவாய் வந்து
வாதனையைத் தீர்த்திடுவான் வணங்கு வாயே.

## போதுக் கவனிப்பு

இது வரையிலுஞ் சீவனைப் பின்னிட்டு மனத்தை முன்னிட்டு, சற்குருவைப் பின்னிட்டு அறிவு முன்னிட்டுக் கொண்டு மனத்தினுடைய பணியறுத்துச் சற்குரு கடாட்சம் பெற்றுக்கொள்ளும் வகை கூறினது. இனி மனத்தைப் பின்னிட்டு ஜீவனை முன்னிட்டு ஜீவனுக்குள் மனமொடுங்கி முத்தியடையத் தக்கதாக அறிவைச் சீவனுக்குப் போதித்து நீ நானென்று இரண்டில்லாத பரிபூரணமாய் ஆக்கும்பொருட்டுச் சீவனுக்குக் குரு சிவானந்தம் போதிக்கும் மார்க்கம் கூறுகின்றது.

[ஜீவன் சொல்லுதல்]

எண்சீர் விருத்த

ஆதியே அந்தமே அருமை யான
அருட்கடலே ஐயனே அகண்ட முற்ற
சோதியே சொரூபமே சுகத்தைக் காட்டும்
சுத்தனே சித்தனே சுயம்பிற் பொங்கும்
பாதியே பரமனே பாரின் மீதே
பரம்போகச் சுந்தரமா யெழுந்து வந்த
நீதியே என்னுடைய பிறவி நீக்கு
நிச்சயமே திருவடிக் தச் சரணென் றேனே. 64

[குரு சொல்லுதல்]

தீக்கைமுறை யாகவே சரணஞ் செய்த
செவ்வனே ஞானமென்ற தீரம் பெற்றுப்
பாக்கியமாய் மெய்ப்பொருளை கொள்ள வேண்டிப்
பாரினிலே வெகுபேர்கள் பதைத்து வந்தார்
பாக்கியத்தாற் சிதறினர் சிலராம் பேர்கள்
பாழ்மனத்தாற் சிதறினர் சிலராம் பேர்கள்
தாக்கியதோர் சாதகத்தில் தாளா மற்றுந்
தவறுண்டே போயினுற் சங்கை யுற்றே 65

சங்கையது விட்டாற்போல் தொண்டு பட்டுச்
சாத்திரத்தின் பூட்டுகளைத் தெரிந்து கொண்டு
மங்களமாய்த் தீட்சைதனைப் பெற்று நன்றாய்
வையகத்தின் சூழலினிலே மயங்கிச் சென்று
பங்கமாய் அபிமானத் தொழிலே செய்து
பதுங்கினர் குருமுகத்துக் காகா மற்றுந்
திங்களணி சடையார்தம் பாதஞ் சேராத்
தீவினையில் மெலிந்திட்டார் சிலராம் பேர்கள். 66

அப்படியே நீநழுவித் தடத்தை விட்டே
அம்பலத்திற் கேகாமற் காலன் பாசத்
தப்பவகை யறியாமற் பிறவி தன்னிற்
சாருவையோ நிலைகொண்டு சாதிப் பாயோ
ஒப்பவோ யுடற்பொருளு மாவி மூன்றும்
உதகத்தால் தாரை விட்டே யுனைநா னென்று
செப்பவுந்தா னுவிழந்தே அடிமை யாகிச்
சிந்தையற்றுச் சிவமாகி வாழ்க நீயே. 67

[ஜீவன் சொல்லுதல்]

பாக்கியங்கள் பெறவேண்டிக் குருவடிக்குப்
பதறியே வந்ததோர் பாரிலுள்ளோர்
வாக்கினல் மனத்தாலுஞ் சாதகத்தின்
வருத்தத்தாற் சிதறினபே ராரா லரையா
நோக்கினதிற் றவருமற் பிடித்து முத்தி
நுண்ணறிவாற் பூரணத்தை அடைந்த தாரோ
தாக்கியதோர் மைந்தர்களை யறியச் சொல்லும்
தயாபரனே குருமூர்த்தி சொல்வாய் நாதா. 68

[குரு சொல்லுதல்]

எத்தனையோ மைந்தர்களைப் பெற்றேனப்பா
எடுத்துரைப்பேன் மதலையே யின்ப மாகப்
பத்திவை ராக்கியமும் நழுவிடாமல்
பாரிலுள்ளோர் தங்களுக்குச் சொந்தமாக
முத்திபெறு மனக்கண்ணும் பிரகாசித்து
மூதறிவால் தத்துவத்தை முழுது மாளச்
சத்துசித்தா னந்தமுமாய்ப் பூரணத்தைச்
சார்ந்திட்டான் குழந்தையென்ற தர்க்கந் தானே. 69

ஆமென்றே வந்தவர்க ளின்ன முண்டிங்
கவரவர்க்குத் தீட்சைவைத்தோம் அன்பதாக
ஓமென்ற முத்திநெறிக் கொவ்வு வாரோ
ஒதுங்கியே பதுங்கியே யோடு வாரோ

நாமென்ற அகங்கொண்ட நழுவிப் போனார்
நாதனையே தூஷித்து நலம்பெறாமல்
போமென்றே தள்ளிவில்லை அவர்கள் தாமே
பொல்லாங்கைக் குறித்தல்லோ போய்விட் டாரே.()

நிலைக்கவென்று வந்தவரில் தவறிப் போன
நெஞ்சினரைச் சொல்லக்கேள் நினைவாய் நீயும்
மூலைகருதிக் கைப்பிடித்துப் பாலுண் ணாமல்
மூடத்தால் நானென்னு மகந்தை யுற்றுக்
கலைகருதி நில்லாமல் சாதிக் காமல்
கற்றபொருள் போதுமென்றே பெருமை கொண்டு
கொலைகளவாம் வஞ்சகத்தை விடாமற் றானே
குலைந்திடான் வைத்யுலிங்கன் குருநான் றானே. 71

[ஜீவன் சொல்லுதல்]

அப்பனே மைந்தர்கள்தம் திறத்தைக் கேட்டேன்
அறிந்திட்டேன் முத்திபெற் றோர்க் கடியேன் றானே
செப்பமாஞ் சரணங்கள் கோடி செய்தேன்
சிதறினவர் பால்மன முஞ் செல்ல ஒட்டேன்
கொப்பெனவே எனையாள இங்கு வந்த
கொற்றவனே உனைப்போலத் துலக்கங் காணேன்
இப்பொழுதே யடிமைகொண்டு காக்க வேண்டி
இரங்கியே யருள்புரிவாய் என்றன் கோவே. 72

அறிவாள னாகியே பணிய றுத்தே
அச்சங்க ளெல்லாந்தான் அறுத்துப் போட்டுக்
குறியாள னாகவேதுணிந்து வந்த
கொடும்பாவி யெனையாளக் கூச்ச மென்னோ
தறியாள னாகி நின்ற வுலகத் தேதான்
சங்கையது வந்தாலுந் தாள மாட்டேன்
முறியாள வந்தகுரு நாதா உன்றன்
முகிழ்மலர்த்தாள் கதியென்று முனைந்திட்டேனே.

[குரு சொல்லுதல்]

நிலமதனைச் சலத்தினாற் சுத்தி செய்து
நிராமயமாய்க் கணபதியை நாட்டி வைத்துப்
பலமுடைய சோதிமலர் சாத்தி மிக்க
பரிவான புகைதூபங் காட்டிப் பின்னுந்
தலமுடைய வெளியதனை நிவேத னஞ்செய்
சரணஞ்செய் என்மகனே உபதேசிப்போம்
பிலமுடனே இடம்வலமாய்ச் சுற்றி வந்து
பெருவிரலைப் பற்றிக்கொள் பேரின் பத்தே. 74

அன்புடனே யுடல்பொருளும் ஆவி மூன்றும்
அறுதியாய் அளித்துவிட்டு நீதானையா
தென்புடனே அடிமையெனச் சத்தியஞ்செய்
சிதறுமல் நில்லப்பா தீட்சை வைப்போம்
பின்புன்றன் செவிதானே யோனியாகப்
பேசுமென்றனுவுதா னிலிங்க மாச்சே
இன்பமுடன் அனுபோகத் திருக்க வென்றே
இருசெவியி லுபதேச மேற்று வேனே. 75

[ஜீவன் சொல்லுதல்]

அப்படியே பஞ்சசத்தி பூசை செய்தேன்
அழகாகச் சரணம்பிர காரஞ் செய்தேன்
செப்பினதோர் பெருவிரலைப் பற்றிக் கொண்டேன்
தேகமுடன் பொருளாவி தத்தந் தந்தேன்
ஒப்பதுவா யானுமே யடிமை யானேன்
உலகமுழுகத் தடைவரினும் அசையா நிற்பேன்
தற்பரனே தீட்சைசெய்வாய் கருணை வைத்துச்
சற்குருவே திருவடியிற் சரணென் றேனே. 76

[குரு சொல்லுதல்]

அறசீர் விருத்தம்

ஞான மென்பதில் நால்வகை யுண்டவை
நாமுரைத் திடக்கேளாய்
தான முற்றனர் சரியையுங் கிரியையுஞ்
சாருமே சிவயோகம்
மோன முற்றமெய்ஞ் ஞானமே நான்கதா
முடிவதைப் பெறுவாயே
ஈன மற்றவென் மைந்தனே உன்னுடை
இன்பமே துரைப்பாயே. 77

[ஜீவன் சொல்லுதல்]

தேசி காஇந்த நால்வகை யென்றவை
தெரியவும் உரைத்திட்டால்
மோச மாயின்ப முற்றிருப் பதுதனை
மொழிந்திடுகெனக் கேட்பேன்
ஆசை யற்றதா யிருந்திடி லுழைத்திட
அதிசயங் கொள்வேனன்
நேச முற்றதிற் பத்தியே யுரைத்திடில்
நிலைத்திடு மையாவே. 78

[குரு சொல்லுதல்]

அங்க சுத்தியும் ஆலயந் தொழுவதுஞ்
சரியையென் றறைவார்கள்
மங்க ளத்துடன் அட்டமா சித்தியும்
வரையுஞ்சக் கரபூசை
பொங்க மானது கிரியையாம் வாயுவைப்
புரண்டிடா திழுத்திட்டுத்
தங்கி நின்றதோர் யோகமென் றிதனையோ
சாற்றிடும் மறைதானே. 79

ஞான மேதெனக் கேட்டிடின் தத்துவம்
நானென வுணர்ந்திந்த
வூனே நானென வுரைத்திதை யகன்றுபின்
னுழிவரத் தனைக்கண்டு
மானம் வெட்கமுந் துக்கமுங் கவலையும்
வஞ்சனை தான்போக்கி
ஈன மற்றுநான் சிவமெனத் துணிந்தது
மிழந்தது முடிவாமே. 80

[ஜீவன் கேட்கக் குரு சொல்லுதல்]

இந்த நாளினில் இன்பமுற் றிருக்கையி
லிச்சடம் விழுந்திட்டால்
தொந்த மானதோர் பலனென்ன தெரிந்திடச்
சொல்லுவாம் குருமூர்த்தி
சொந்த மாகவே கேள்மக னேமதன்
சுகமதை யறிவிப்போம்
தந்த னங்களாய் விடாமலே கேட்பது
சரியென மகிழ்ந்தேனே. 81

சரியை யென்பது குறைவறச் செய்துமே
தன்கடம் விழுந்திட்டால்
கிரியை செய்யவே எடுத்திடுங் கடமது
கிரியையும் முடிந்தேகில்
உரிசை யாகிய யோகமே செய்யவு
முடலெடுத் துழைக்குங்காண்
பரிகொள் யோகமு முற்றவு முடிந்துடற்
பாரினி லுறவாமே. 82

ஞான மேபெற எடுத்திடும் அவ்வுடல்
நழுவிடா துரைத்திட்டால்
ஈன மாகிய செனனமும் போக்கிடும்
ஈசனே தானாகி

வான முற்றதோர் சச்சிதா னந்தமாய்
வாக்குரைக் கெட்டாத
மோன முற்றுதான் எங்குமாய் நிறைந்தது
முத்தியென் றுணர்வாயே. 83

[ஜீவன் சொல்லுதல்]

அப்ப னேஎனே அடி மையாய்க் கொண்டவோர்
அழ தள்ள குருமூர்த்தி
தப்ப வேகதி வேறெனக் கில்லைநின்
ருளது கதியென்றே
ஒப்ப வேசிவ ஞானமும் உணர்ந்திடி
லுகந்ததி லூன்றிக்கொண்
டிப்ப வேபர வீடதி லேகுவன்
ஈசனே அருள்வாயே. 84

[குரு சொல்லுதல்]

வேறு

தத்துவ மேயுடல் தானெனு மானது தன்னை யறிந் திடுநீ, சித்தது வாகிப் பிராணனிரானதில் திரண்டதைக் கண்டிடுநீ, கற்றுமே காணுக் கண்மணி யானதைக் கண்டு தெளிந்திடுநீ, முற்று சிவானந்த போதக மானது முத்தியு மிதுதானே. 85

எண்சீர் விருத்தம்

அறிவுபோ தகமென்ற நூலைப் பாராய்
அதற்குமுன்னே உடலறியும் விளக்கம் பாராய்
பிறிவின்றி மேவின்றி மறைப்பு மின்றிப்
பேரின்ப அமுதமழை பெய்த நூல்தான்
நெறிகொண்ட அந்நூலை நினைந்து பாராய்
நிலைக்கவே அப்படியே தீட்சை வைப்போம்
பொறிவிட்டுச் சபைபுகுவாய் புக்கோ வில்லை
பெரும் பொருளைக் கைக்கொண்டு பிழைத்துக்
[கொள்ளே. 86

[ஜீவன் சொல்லுதல்]

அப்படியே போதித்த முத்தி பெற்றேன்
அரியயனுங் காணாத வடிவுங் கண்டேன்
தப்பியே யிளைக்காமற் பிழைத்துக் கொண்டேன்
சஞ்சலத்தை இழந்துநான் சுகத்தைப் பெற்றேன்
ஒப்புவமை சொல்லவொரு வரையுங் காணேன்
உனைப்போலே தெளிவுரைக்குங் குருவுங் காணேன்
செப்பவே நாவிழந்தேன் பரமா னந்தத்
தீவிதிலே சேர்ந்திட்டேன் வாழ்ந்திட் டேனே. 87

ஞானியென்று பெயர்களையே கண்டு கொள்ள
நல்லதொரு கண்பெற்றேன் பேச வென்றால்
ஈனமறச் சொற்கற்றேன் சிரவ ணத்தால்
ஏகாந்த பரகவனம் எய்த லானேன்
மானமற்ற அடியருட னுசை கொண்டேன்
மருவுமுடல் குருவுக்கே வணங்கிப் பெற்றேன்
தான முற்றேன் சிவானந்தந் தனிலே நின்றேன்
சச்சிதா னந்தமென்றே தழைத்திட் டேனே. 88

வாழ்வுமுதற் சம்பத்தை மதித்தி டாமல்
மலைமேலே ஏறினதோர் பறவை யானேன்
தாழ்வுகளாய் உலகோர்சொல் நிந்தை யெல்லாம்
சகாயமென்றே எண்ணிச்சந் தோட மானேன்
வீழ்வதரு நரகிலுள்ள மாண்பர்க் கெல்லாம்
வீழாம லேமனிதர் மேலு மானேன்
ஏழுலகும் மேலேழும் நானே யானேன்
ஏகாந்தத் தீவினிலே இறங்கி னேனே. 89

[குரு சொல்லுதல்]

மைந்தனே உனைப்போல ஒடி மெள்ள
வாதனையே தீர்ந்துமதி மயங்கி டாமல்
யந்தமறுத் தேபின்பு குருவைத் தேடிப்
பரமாகி வாழ்ந்தவர்க ளுண்டோ அப்பா

சிந்தையற்ற பெரியோரை வணங்கிக் கொள்வாய்
சிவஞானி தன்னுடனே நேசஞ் செய்தே
என்றன்னைப் பெற்றவனே அப்பா அப்பா
எடுத்தணைத்தே அம்பரத்தில் இருப்போம் யாமே.

[ஜீவன் சொல்லுதல்]

நேரிசை வெண்பா

மறந்தேனோர் வார்த்தை மகிழ்ஞான மூர்த்தி
துறந்தே னினித்தெரியச் சொல்வாய்—சிறந்திலகு
பத்திசெய் வோர்க்குப் பலனே தனைக்கெடுக்கும்
குத்திரருக் கென்ன குணம் 91

[குரு சொல்லுதல்]

எண்சீர் விருத்தம்

எண்ணிலாத் தவங்கள் யாகங்கள் செயினும்
ஈசுர விஷ்ணுவா லயங்கள்
பண்ணுலாங் கவிதை பாடினும் அனேகம்
பாரினில் வருபல னேது
கண்ணுலா வீயநற் கருதிமெய்ப் பொருளைக்
கண்டர னடியவர் தமக்கிங்
குண்ணலா மமுத மளித்தவ ளிடையும்
பலனுரைக் கவுமுடி யாதே. 92

வேதமா கமசாத் திரபுரா ணங்கள்
விரிந்தநூ லறிந்திடா விந்து
நாதமே யுருவாய் அத்விதா னந்த
ஞானமே பெற்றிட வேண்டி

ஓதவல் லவர்சத் துச்சித்தா னந்த
முற்றநல் லடியவர் தமக்குப்
பாதபூ சனைக ளடங்கலுஞ் செய்தார்
பலனெம துரைக்கடங் காதே. 93

கட்டளைக் கலித்துறை

அன்ன மளிப்பவ ரைக்கலைப் பாரிவ் வவனிமிசை
இன்ன லவர்க்குப் புரிவார் நினைப்பா ரிகழ்ந்திடுவார்
மன்னவ ராயிருந் தேமரிப் பாரை மறலியினி
என்னென்ன வேதனை செய்வான் முடிவி லியம்பரிதே.94

சிவனருள் பெற்றுயர் மேலோர் தமக்குஞ் சிவனையுன்னித்
தவஞ்செயன் பர்க்குஞ் சிவவேடம் பூண்டிடு தன்னியர்க்[கும்
உவந்தே பணிபுரி வார்மே லுலகவ ருண்மையதாய்
அவஞ்செய் தவரை யிகழ்வோ ரடைவர் அருநரகே. 95

பெரியோர்க்குத் தொண்டுசெய் வாரைத் தடுத்திடும்
[பேதையரும்
சரியா நடுநிலை சார்ந்தவர்க் கல்லல் சமைப்பவரும்
பரிவான தீட்சைகொண் டாரை மறிக்குமப் பாதகரும்
எரிவாய் நரகத்தி லெண்ணில் துயரி லிருப்பரன்றே. 96

நேரிசை வெண்பா

இந்நூலைப் பார்ப்போர் எடுப்போர் படிப்பவர்
நன்னூ லெனமனத்தி னுடுவோர்—பொன்னூற்
படியேறித் தாண்டிப் பவசாக ரத்தைக்
கடவுளர்க்கு முன்னிற்பர் காண். 97

சந்தேக மாதிகளைச் சாராம லேயகற்றிப்
பந்தபா சங்களைப் பாழாக்கும்—இந்த நூல்
எந்தநா ளும்பழியா தேகாந்த வீடதனைச்
சொந்தமாக் கும்மெனவே சொல். 98

நாவு கொச்சகம்

அரனங் கிரிவாழி அம்மைதாள் வாழி
பெருமான் பதம்வாழி பிள்ளைசர ணம்வாழி
பரமேட்டி யடிவாழி பாரதிபா தம்வாழி
கரிமுகவன் கழல்வாழி கந்தனடி வாழியவே. 99

வான்வாழி வாணியளி மாத வநம்வாழி
கோன்வாழி குருவாழி குவலயத் தோர்வாழி
ஆன்வாழி அமரர்முத விருடிசித் தர்வாழி
நான்நீ யெனலகற்று நாதாக்கள் வாழியவே. 100

சிவானந்த போதம் முற்றிற்று.

---

## சேஷாத்திரி சிவனூர் அருளிய

# நாநாசீவவாதக் கட்டளை

### சாற்றுக்கவி

இப்பியினிடையே யெழுமிரசதம்போ
லென்றுமா யிலகியின்பாகி
யொப்பிடவேது மின்றியபிரமத்
துற்றிடும் பகுதிமூன்றாய்
வப்பிரபஞ்ச முறைமையைத்தூல
வருந்ததி நியாயமேயென்னச்
செப்பினன்யாருந் தெளிவுறச்சேஷாத்
திரிசிவ னென்னுமாதவனே.

### காப்பு

ஆனைமுக னாறு முக னம்பிகைபொன் னம்பலவன்
ஞானகுரு வாணியையு ணாடு.

சுத்தப்பிரமமா யிருக்கின்ற சர்வசாக்ஷியினிடத்திலே அக்கினியிற் சூடுபோல அபின்னமாக ஒருசத்தி உண்டு; அந்தச்சத்தி அவ்வதீதப் பிரமத்தில் அடங்கி யிருக்கும் போது அதற்குச் சுத்தப்பிரமமென்று பெயர். இந்தச் சத்தி விசிரிம்பித்துச் சுத்தப்பிரமத்தை வியாபிக்கும் போது அப் பிரமம் பரைவியாபகத்துள் இருந்தபடியினாலே அதற்குப் பரப்பிரமமென்று பெயராம்.

இலக்ஷண சூன்யமாயிருக்கின்ற இந்தச் சத்திக்குப் பிரமத்தினுடையசந்நிதானத்தில், புருடசமுகத்திலேஸ்திரீக்கு இன்பஞ் சனித்தாற்போல அவிகிர்த சத்துவரஜஸ் தமோகுணங்கள் உண்டாயின. இவற்றில் சுத்தசத்துவத்

திற்கு ஆனந்தரூபசத்தி என்று பெயர். சுத்தரஜஸிற்குச் சித்ரூபாசத்தி என்று பெயர். சுத்ததமஸிற்குச் சத்ரூப சத்தி என்று பெயர். இவற்றில் காரணமான ஆனந்தரூப சத்தியுடனே பரப்பிரமம் கூடிச் சர்வானந்த மென்னும் சுழுத்தியவஸ்தையை யடைகின்றபோது பரப்பிரமமென் கின்ற பெயர் போய்ப் பரமானந்தரென்கிற பெயர்வந்தது. இந்தப் பரமானந்தர் சித்ரூப சத்தியுடனே கூடிச் சர்வப் பிரகாசமென்னுஞ் சொப்பனவஸ்தையை யடைகின்ற போது பரமானந்தரென்னும் பெயர் போய்த் தேசோமய ரென்னும் பெயர் வந்தது. இந்தத் தேசோமயர் சத்ரூப சத்தியுடனே கூடிச் சர்வ வியாபகமென்னுஞ் சாக்கிரா வஸ்தையை யடைகின்றபோது தேசோமயமென்னுஞ் பெயர் போய்ப் பரிபூரணமென்னும் பெயர் வந்தது.

இந்த அகண்ட பரிபூரண சச்சிதாநந்தப் பிரமத்தி னிடத்திலே * சுத்தியில் ரஜிதம்போல் மூலப் பிரகிருதி யென்னும் ஒரு சத்தி உண்டு. அந்த மூலப் பிரகிருதியும் விகிர்த குணமாகிய முக்குணத்தோடு கூடியிருக்கும் அந்தப் பிரகிருதியின் சத்துவ குணத்தை மாயையென் றும், சர்வக்ஞவுபாதியென்றும், ஈசுரகாரண சரீரமென் றுஞ் சொல்லப்படும். இந்த மாயையினிடத்திலே நிர்மல சலப்பிரதிபிம்பம்போலப் பிரமம் சுலட்சணமாகப் பிரதி பிம்பிக்கும். இந்தப் பிரதிபிம்ப சைதன்னியத்தைச் சர்வக்ஞனாகிய ஈசுரனென்று சொல்லப்படும்.

இந்தச் சத்துவகுண மாயையினிடத்திலே சத்துவத் தில் சத்துவம், சத்துவத்தில் ரஜஸு, சத்துவத்தில் தமஸு

---

* புருடனிடத்துச் சாமர்த்திய ரூபசத்தி போலப் பிரமத்தின் கண் அநாதிசித்தமா யிருக்கிற மூலப் பிரகிருதியென்னுஞ் சத்திக் குச் சுத்திரஜிதத்தை உபமானமாகச் சொன்னது அநிர்வசனியத் தன்மையென்னும் பொருள் தோன்ற என்க.

என மூன்று குணங்கள் உண்டு. இவைகளில் சத்துவத்தில் சத்துவம் பிரதானமாகும்போது அதில் பிரதிபிம்பித்த ஈசுரன் ஜகத்தை இரக்ஷிக்கையினுல் விஷ்ணுவென்றும், சத்துவத்தில் ரஜஸு பிரதானமாகும்போது அதில் பிரதிபிம்பித்த ஈசுரன் ஜகத்தை சிருஷ்டிக்கையினுல் பிரமாவென்றும், சத்துவத்தில் தமஸு பிரதானமாகும்போது அதில் பிரதிபிம்பித்த ஈசுரன் ஜகத்தை உபசம்மாரம் பண்ணுகையினுல் உருத்திரனென்றும்சொல்லப்படுவன். இப்படி மூலப் பிரகிருதியின் சத்துவகுண கற்பனை சொல்லப்பட்டது.

இனி மூலப்பிரகிருதியின் இரஜோகுணம் அநேக ரூபமாய்ப்பிரிந்து அவித்தைகளென்றும், ஜீவகாரண சரீரங்களென்றும் ஒன்றற்கொன்று தாரதம்மியமாகச் சொல்லப்படும். இந்த அவித்தைகளிடத்திலும் மலின சலப் பிரதிபிம்பம் போலப் பிரமசைதன்னியம் பிரதிபிம்பிக்கும். இந்தப் பிரதிபிம்ப சைதன்னியங்களை கிஞ்சிக்ஞரென்றும், சீவ சிதாபாசரென்றும், பிராக்ஞரென்றும் சொல்லப்படும். இந்த அவித்தைகளிடத்திலேயும் ரஜஸில் சத்துவம், ரஜசில் ரஜசு, ரஜசில் தமசு என மூன்று குணங்கள் உண்டு. இரஜஸில் சத்துவம் பிரதானமாகும்போது அதில் பிரதிபிம்பித்த சிதாபாசன் தத்துவக்ஞான நிஷ்டனுவன். இரஜஸில் ரஜசு பிரதானமாகும்போது அதில் பிரதிபிம்பித்த சிதாபாசன் காமக்குரோதபரனுய்க் கர்மநிஷ்டனுவன். இரஜஸில் தமசு பிரதானமாகும்போது அதில் பிரதிபிம்பித்த சிதாபாசன் சோம்பல் நித்திரை மயக்கம் ஆகிய இவைகளை யடைவன்; இப்படி மூலப் பிரகிருதியின் இரஜோகுண கற்பனை சொல்லப்பட்டது.

இனி மூலப் பிரகிருதியின் தாமோகுணத்திற்கு ஆவரணம், விக்ஷேபம் என இரண்டு சத்திகள் உண்டு. இவ்விரண்டில் ஆவரணசத்தியானது தத்துவஞானியையும்

ஈசுரனையுந் தவிர மற்றைச் சீவருக்கெல்லாம் சரீரத்திரயம், சிதாபாசன், சாக்ஷி சைதன்னியம் என்னு மிவைகளின் ஒன்றற்கொன்றுள்ள பேதம் தெரியவொட்டாமல் மறைக்கும் இதனுல் மறைக்கப்பட்ட சீவர் இருபத்தொன்பது தத்துவங்களையும் ஒருமைப்பாடாக நானென்று அபிமானிப்பர். இந்த அபிமானத்தை அகங்காரக் கிரந்தியென்றும், சம்சாரபந்தமென்றும் சொல்லப்படும் சற்குரு கடாக்ஷத்தினுலே இந்த ஆவரணம் நீங்கி இருபத்தொன்பது தத்துவங்களின் ஒன்றற்கொன்றுள்ள பேதந் தெரிகின்றதே முத்தி. இப்படி ஆவரண சத்தியின் காரியஞ் சொல்லப்பட்டது.

இனி விக்ஷேபசத்தியினின்றும் சத்ததன் மாத்திரையான ஆகாசம் தோன்றிற்று. ஆகாசத்தினின்றும் பரிசதன் மாத்திரையான வாயு தோன்றிற்று. வாயுவினின்றும் ரூபதன்மாத்திரையான அக்கினி தோன்றிற்று. அக்கினியினின்றும் ரஸதன் மாத்திரையான அப்பு தோன்றிற்று. அப்புவினின்றும் கந்ததன் மாத்திரையான பிருதிவி தோன்றிற்று. இந்த சூக்ஷும பஞ்சபூதத்திற்குக் காரணமாயிருக்கின்ற விக்ஷேப சத்தியினிடத்திலே தமஸில் சத்துவம், தமஸில் ரஜஸு, தமஸில் தமஸு என்னுமிவை அற்பங் கருவாக விருந்தபடியால் அதன் காரியமாகிய இந்தத் தன்மாத்திரைகளான பஞ்சபூதங்களும் முக்குணங்களுடனே பிறந்தன. இந்தப் பஞ்சபூதங்கட்குத் தன்மாத்திரைகளென்றும், அபஞ்சீகிருத பூதங்களென்றும், சூக்ஷும பூதங்களென்றும், முக்குண பூதங்களென்றும் சாஸ்திரங்களில் நாமஞ் சொல்லப்படும்.

இந்தச் சூக்ஷும பூதங்களினின்றும் சூக்ஷும சரீரங்களும் ஸ்தூல பூதங்களும் தோன்றும்; அஃதெங்ஙனமெனின்:

ஆகாச முதலான பஞ்சபூதங்களின் சத்துவாம்சத்திலே பூதத்திற்கு ஒவ்வொரு மாத்திரையெடுத்து ஒன்று

கக்கூட்டி வைத்தது அந்தக்கரணம். இந்த அந்தக்கரணத்தில் ஆகாசத்தின் அம்சங் கூடினதற்கு அடையாளம்; இந்த அந்தக் கரணமும் ஆகாசத்தைப்போலச்சகலமான கேள்விக்கும் இடங்கொடுத்துத் தரிக்கின்றது. இப்படித் தரிக்கின்ற * விருத்திக்கு உள்ளம் என்று பெயர். இந்த அந்தக் கரணத்தில் வாயுவின் அம்சங் கூடினதற்கு அடையாளம்; இந்த அந்தக்கரணமும் வாயுவைப்போல அலைகின்றது. இப்படி அலைகின்ற விருத்தி மனமென்று பெயர். இந்த அந்தக்கரணத்தில் அக்கினியின் அம்சங் கூடினதற்கு அடையாளம்; இந்த அந்தக்கரணமும் அக்கினியைப்போல ஈது இன்னதென்று விளக்குவிக்கின்றது. இப்படி விளக்குவிக்கின்ற விருத்திக்குப் புத்தியென்றுபெயர். இந்த அந்தக்கரணத்தில் அப்புவின் அம்சங் கூடினதற்கு அடையாளம்; இந்த அந்தக்கரணமும் அப்புவைப்போல் விடயங்களில் பற்று இழுக்கின்றது. இப்படி இழுக்கின்ற விருத்திக்குச் சித்தம் என்று பெயர். இந்த அந்தக்கரணத்தில் பிருதிவியின் அம்சங் கூடினதற்கு அடையாளம்; இந்த அந்தக்கரணமும் பிருதிவியைப்போலக் கடினமாக நின்று நானென்று அபிமானிக்கின்றது: இந்த அபிமான விருத்திக்கு அகங்காரம் என்று பெயர்.

இன்னும் ஆகாச முதலான பஞ்ச பூதங்களினுடைய சத்துவாம்சத்திலே பூதத்திற்கு ஒவ்வொரு மாத்திரை எடுத்துத் தனித்தனியே வைத்தது சுரோத்திராதி ஞானேந்திரியமென்று சொல்லப்படும். இவைகளில் சுரோத்திரம் ஆகாசத்தின் அம்சமானபடியால் ஆகாசத்தின் குணமான சத்த மாத்திரத்தை அன்றியும், துவக்கு வாயுவின் அம்சமானபடியால் வாயுவின் குணமான பரிச

* விருத்தி – சிஞை.
உள்ளம் - தேஜஸ் என்றும் பாடமுளது.

மாத்திரத்தை அறியும். சக்ஷு அக்கினியின் அம்சமான படியால் அக்கினியின் குணமான ரூப மாத்திரத்தை அறியும். சிங்ஙுவை அப்புவின் அம்சமானபடியால் அப்புவின் குணமான ரசமாத்திரத்தை அறியும். ஆக்கிராணம் பிருதிவியின் அம்சமானபடியால் பிருதிவியின் குணமான கந்த மாத்திரத்தை அறியும் இப்படி ஐந்தும் ஒன்றேடொன்று கூடாதபடியால் ஒன்று மற்றொன்றின் குணத்தை கிரகிக்க அறியாது. அந்தக்கரணத்தில் ஐந்து மாத்திரையும் ஒன்ருய்க் கூடினதுகொண்டு ஐந்திந்திரியங்களினுலும் ஐந்து விடயங்களையும் அறியும். இந்தச் சத்துவ குணத்திலுண்டான அந்தக்கரணம் ஐந்தும், ஞானேந்திரியம் ஐந்தும் ஆகப் பத்தும் சத்துவாம்சமானபடியால் ஞான சாதனமாயின.

இன்னம் ஐந்து பூதங்களினுடைய இராஜசாம்சத்திலே பூதத்திற்கு ஒவ்வொரு மாத்திரை யெடுத்து ஒன்ருகக் கூட்டி வைத்தது வியானுதி பஞ்சவாயுக்கள். இவைகளில் வியான வாயு ஆகாசத்தின் அம்சமானபடியால் ஆகாசத்தை போலச் சர்வாங்கமும் வியாபித்திருக்கும். பிராண வாயு வாயுவின் அம்சமானபடியால் வாயுவைப்போல் இருதயத்தி லிருந்து நாசியாதிபரியந்தம் அலையும். அபானவாயு அக்கினியின் அம்சமானபடியால் அக்கினியைப்போலச் சாடராககினியாக உஷ்ணத்துக் கொண்டு குதத்தைப்பற்றி நின்று உண்ட அன்னபானுதிகளைச் சீரணிப்பிக்கும். சமானவாயு அப்புவின் அம்சமான படியால் சரீர நடுவான நாபித் தானத்தினின்று உண்ட அன்ன ரஸங்களை அப்புவைப்போல இழுக்கும். உதான வாயு பிருதிவியின் அம்சமானபடியால் கண்டத்தைப் பற்றி பிருதிவியைப்போலக் கடினமாக நின்று உண்ட அன்ன பானுதிகளைக் கடையும். இந்தப் பஞ்ச வாயுக்களையு மல்லாமல் வாந்தி பண்ணுவிக்கின்றது நாகனென்றும், இமைத்து விழிப்பிக்கின்றது கூர்மமென்றும், குறு

குறுத்துத் தும்மச் செய்கின்றது கிரிகரனென்றும், கொட்டாவி கொள்ளச் செய்கின்றது தேவதத்தனென்றும், வீங்கச் செய்கின்றது தனஞ்செயனென்றும் வேறே ஐந்து வாயுக்களுண்டென்று சிலர் சொல்லுவார். இவ்வைந்தும் பிராணனுடைய தொழிலானபடியால் வேறல்ல. இன்னம் ஆகாச முதலிய பஞ்ச பூதங்களினுடைய இரஜசாம்சத்திலே பூத்திற்த ஒவ்வொரு மாத்திரை யெடுத்துத் தனித்தனியே வைத்தது வாக்காதி கர்மேந்திரியமென்று சொல்லப்படும்.

இவைகளில் ஆகாசத்தினிடமாக வாக்கு வசனிக்கும் வாயுவினிடமாகப் பாணியிடுதல், ஏற்றம் செய்யும். அக்கினியிடமாகப் பாதம் நடக்கும். அப்புவினிடமாகப் பாயுரு மலசலாதிகளை வெளியிலே தள்ளும். பிருதிவினிடமாக உபயஸ்தம் சுகத்தைப்பண்ணும். இந்த ஐந்துந் தனித்தனியே இருந்தது கொண்டு மறு தொழில் செய்ய மாட்டாது. வியானுதி வாயுக்கள் ஐந்து மாத்திரையும் ஒன்ருக் கூடினது கொண்டு கர்மேந்திரியம் ஐந்தின் வழியினலும் ஐந்து தொழில்களையும் செய்து முடிக்கும். இந்த வாயுக்கள் ஐந்தும், கர்மேந்திரியங்கள் ஐந்தும் ஆகப் பத்தும் இரஜசாம்சமானபடியினல் கிரியா சாதனமாயின அர்தக்கரணம் 5, ஞானேந்திரியம் 5, வாயுக்கள் 5, கர்மேந்திரியம் 5, ஆம் இருபது தத்துவமும் சூக்ஷும சரீரமென்று சொல்லப்படும். இந்த சூக்ஷும சரீரத்தை மாயாப்ரதிவிம்பனுகவிருக்கின்ற ஈசுரன் அவித்தையாய் பிரதிபிம்பராகிய ஜீவர்கள் அநேகராகையால் ஒவ்வொருவருக்கு ஒவ்வொரு சரீரமாகச் சிருஷ்டித்து அளித்தான். அப்போது பஞ்ச பூதத்தினுடைய சாத்வீகாம்சமும் இரஜசாம்சமும் செலவழித்தன. தாமதகுணமாத்திரம் சேடித்தது சூட்சுமசரீரம் வாங்காத சீவர்களுக்கெல்லாம் இன்னுமொரு சிருட்டிக்கு ஆகட்டுமென்று நிறுத்தினர். இப்படிச் சூக்ஷும சரீர கற்பனை சொல்லப்பட்டது.

இனித் தூலபூத உற்பத்தி சொல்லுகின்றோம். அஃதெங்ஙன மெனில்:—தமோம்சமா யிருக்கின்ற ஐந்து பூதங்களையும் ஒவ்வொன்றை இரண்டிரண்டாகப்பகுத்து முதற் பாதி ஐந்தையும் ஒவ்வொன்றை நான்கு நான்காகப்பகுத்து இரண்டாம் பாதி ஐந்தில் தனி அம்சத்துடனே கூட்டாமல் மற்றை நான்கு பூதங்களுடன் அரைக்கால் அரைக்கால் மாத்திரையாகக் கொடுக்கின்றது * பஞ்சீகரணமென்று சொல்லப்படும்

இப்படிப் பஞ்சீகரணம் பண்ணின தூல பூதங்களிலே ஆகாசத்திலே பரிச ரூப ரஸ கந்தம் ஆகிய நான்கு குணங்களும் வியாப்பியமானபடியால் அதிருசியமாய்ப் போக நிச குணமாகிய சத்தம் திருசியமாம். வாயுவிலே ரூப ரஸ கந்தம் ஆகிய மூன்று குணங்களும் வியாப்பியமானபடியினால் அதிருசியமாய்ப் போகக் காரண குணமாகிய சத்தமும், நிச குணமாகிய பரிசமுந் திருசியமாம். அக்கினியிலே ரஸ கந்தமாகிய இரண்டு குணங்களும் வியாப்பியமானபடியினால் அதிருசியமாய்ப்போகக் காரண குணங்களாகிய சத்த பரிசமும், நிசகுணமாகிய ரூபமும் திருசியமாம் அப்புவிலே கந்தகுணம் வியாப்பியமானபடியினால் அதிருசியமாய்ப் போகக் காரண குணங்களாகிய சத்த பரிச ரூபமும், நிசகுணமாகிய ரசமும் திருசியமாம். பிரிதிவியிலே காரண குணங்களாகிய சத்த பரிச ரூப ரசமும், நிசகுணமாகிய கந்தமும் திருசியமாம்.

முன் சூக்ஷும பூதங்களினின்றும் சூக்ஷும சரீரங்கள் தோன்றினாற்போலப் பஞ்சீகரணம் பண்ணின ஸ்தூல பூதங்களினின்றும் ஆறு தத்துவமாய், நால்வகைப் பிறப்பாய் மூவகைச் சாதியா யிருக்கின்ற ஸ்தூலசரீரங்கள் தோன்றின.

---

* பஞ்சீகரணம் ஒவ்வொரு பூதத்தில் ஐந்து ஐந்து பூதங்களைச் சேர்த்துப் பண்ணுவது

இவற்றுள் ஆறு தத்துவங்களாவன :—சர்மம், உதிரம், மாமிசம், சனுயு, அத்தி, மச்சை இவைகளாம்.

நால்வகைத்தோற்றங்களாவன:-சராயுஜம், அண்டஜம், சுவேதஜம், உத்பிஜம் இவைகளாம்.

மூவகை சாதிகளாவன :—இகலோக, பரலோகபுத்தி இருவகையுங் கொடுக்கின்ற மாநுட சரிரப் உத்தமசாதி, பரலோக புத்தியை மறைத்து இகலோக பத்தியை மாத்திரங்கொடுக்கின்ற பசு பக்ஷி முதலானவை மத்திமசாதி. இரண்டு லோகட்புத்தியையும் மறைத்திருக்கின்ற மரம் கொடி செடி முகலியவை அதமசாதி இப்படிப் பிருதிவி தத்துவமா யிருக்கின்ற பூலோகத்திற் கண்டாற்போல அப்பு, அக்கினி, வாயு ஆகாசம் என்னப்பட்ட தத்துவங்களாய் நிரை நிரையே யிருக்கின்ற பிதிர்லோகம், தேவலோகம், யட்ச, கந்தர்வ, சித்தர் லோகங்களிலும் நட்சத்திரமாகத் தோன்றுகின்ற சந்திரன் முதலான பிதிர்க்கள், சூரியன் முதலான தேவதைகள், கந்தருவர், சித்தர் என்னப்பட்டவர்கள் உத்தமசாதி. காமதேனு அயிராவதம், அனனம், கருடன் முதலானவை அதமசாதி. இந்தத் தூலசரீரமே அன்னமயகோசம். சூட்சும சரீரம் மூன்று கோசங்களா யிருக்கும்.

அஃதெங்ஙன மெனின் :—பிராணவாயுவும், கர்மேந்திரியங்களுங் கூடிப் பிராணமயகோசம். மனதும், ஞானேந்திரியங்களுங்கூடி மனோமயகோசம். புத்தியும், ஞானேந்திரியங்களுங் கூடி விஞ்ஞான மயகோசம் காரண சரீரமே ஆனந்த மயகோசம். இப்படிப் பஞ்சகோசஞ் சொல்லப்பட்டன.

ஆறு தத்துவங்களா யிருக்கின்ற ஸ்தூல சரீரத்திலே இருபது தத்துவங்களா யிருக்கின்ற சூட்சும சரீர மிருக்கின்றது.

அஃதெப்படியெனில் :—கர்மேந்திரியங்களுள் வாக்கும், ஞானேந்திரியங்களுள் சிங்ஙுவையும் வாயிலிருக்கும். உதானவாயும், மனதும் கண்டத்திலே யிருக்கும். பிராணவாயுவும், புத்தியும் இருதயத்திலே யிருக்கும். சமானவாயுவும் சித்தமும் நாபியிலிருக்கும். அபானவாயுவும் பாயுருவும் குதத்திலிருக்கும். வியானவாயுவும், ஞானேந்திரியுங்களுள் துவக்கும், அகங்காரமும் சர்வாங்கமும் வியாபித்திருக்கும். உச்சியிலே உள்ளமும், கருவிழி நுனியிலே சக்ஷிந்திரியமும், காதிற்குள்ளே சுரோத்திரியமும், மூக்குநுனியிலே கிராணேந்திரியமும், கழுத்திற்குமேலே தனித்தனியே யிருக்கும். கழுத்திற்குக் கீழே கை, கால், குய்யங்களில் பாணி, பாதம், உபயஸ்தம் மூன்றுந் தனித்தனியே யிருக்கும். இப்படித் தூல சரீர தத்துவங்கள் ஆறு. அதிற்குடிபுகுந்த சூட்சம சரீர தத்துவங்கள் இருபது. ஆகத் தத்துவங்கள் இருபத்தாறும் பஞ்ச பூதங்களின் காரியமானபடியினாலே ஒருமைப் பாடாகக் காரிய சரீரமென்று சொல்லப்படும்.

அவ்வித்தையிற் பிரதிபிம்பித்த காரணசரீரமும் சிதாபாசனும் சாக்கிரத்திலே இந்த இருபத்தாறு தத்துவங்களுடனே கலந்து நின்றபோது விசுவனென்றும், வியவகாரிகசீவனென்றும் சொல்லப்படுவான். சொப்பனத்திலே தூல சரீரத்தைவிட்டு அந்தக்கரணத்துடனே கூடி நின்றபோது தைஜசனென்றும், பிராதிபாசிக சீவனென்றும்; சொப்பன கற்பிதனென்றுஞ் சொல்லப்படுவான். சுழுத்தியிலே காரிய சரீர தத்துவங்கள் இருபத்தாறையுங்கைவிட்டுக் காரண சரீரத்தை மாத்திரம் பொருந்தி யிருக்கும்போது பிராக்ஞனென்றும், பாரமார்த்திக சீவனென்றும் சொல்லப்படுவன். பிரமசைதன்னியமும் சாக்கிரத்திற்குச் சாக்ஷியாயிருக்கும்போது சீவாத்மாவென்றும், சொப்பனத்திற்கு சாக்ஷியா யிருக்கும்போது அந்தராத்மா வென்றும்,

சுழுத்திற்குச் சாக்ஷியா யிருக்கும்போது, பரமாத்மாவென்றும், அவன் தாத்திரய சாக்ஷியாயிருக்கும்போது ஞானத்மாவென்றும், கூடஸ்தனென்றும் சொல்லப்படும். இப்படி சீவனுக்கு மூன்று சரீரங்களும், மூன்று அவஸ்தைகளும் சொல்லப்பட்டன.

இனி ஈசுரனுக்கு மூன்று சரீரங்களும், மூன்றவஸ்தைகளும் சொல்லப்படும். கற்பித பிரபஞ்ச வடிவமாகத் தோன்றுகின்ற தூல பஞ்சபூதங்களும், அந்தப் பூதங்களிலே தோன்றின. மூன்று சாதியா யிருக்கின்ற தூல சரீரசமஷ்டியுங்கூடி ஈசுர தூலசரீரமென்றும், விராட்டென்றுஞ் சொல்லப்படும். இதனுடனே கூடிச் சாக்கிராவஸ்தையைப் பொருந்துகின்ற ஈசுரன் வைசுவானரனென்றும், இந்த இருவகைக்கும் அதிஷ்டான சைதன்னியம் பிரமாவென்றுஞ் சொல்லப்படும்.

சூட்சும பூதங்கள் ஐந்தும், அந்தப் பூதங்களிலே தோன்றின சூட்சும சரீர சமஷ்டியுங்கூடி ஈசுர சூட்சும சரீரமென்றும், இரண்ய கர்ப்பமென்றும் சொல்லப்படும். இதனுடனே கூடிச் சொப்பனவஸ்தையைப் பொருந்துகின்ற ஈசுரன் சூத்திராத்மாவென்றும், இந்த இநவகைக்கும் அதிஷ்டான சைதன்னியம் விஷ்ணுவென்றும் சொல்லப்படும்.

இந்தத் தூலம் சூட்சுமம் இரண்டின் வாசனையுடனே கூடி இருக்கின்ற மாயை ஈசுர காரண சரீர மென்றும், அவ்வியாகிருதமென்றுஞ் சொல்லப்படும். இதனுடனே கூடிச் சுழுத்தியவஸ்தையைப் பொருந்துகின்ற ஈசுரன், அந்தர்யாமியென்றும், இந்த இருவகைக்கும் அதிஷ்டான சைதன்னியம் உருத்திரன் என்றும் சொல்லப்படும்.

சீவன், தன் மூன்றவஸ்தைகளிலும் தன் மூன்று சரீரங்களா யிருக்கின்ற இருபத்தேழு தத்துவங்களுடனும் நான் என்று கலந்து நிற்கின்றதுபோல, ஈசுரனுந் தன் மூன்றவஸ்தைகளிலும் தன் மூன்று சரீரங்களா யிருக்கின்ற முப்பத்திரண்டு தத்துவங்களுடனும் கலந்து நிற்பன்.

ஆகையினுலே சீவ சிதாபாசன் தன் சரீரமாத்திரமே கலந்து நிற்பன், ஈசுரன், தன் சரீரமாகிய சகல சரீரங்களோடும் சகல பிரபஞ்சகளோடும் கலந்து நிற்பன். இந்த இருவகைக்கும் சாக்ஷியமாயிருக்கின்ற பரம சைதன்னியமும், சகல சரீரங்களிலும், சகல பிரபஞ்சங்களிலும் நிறைந்து அப்பாலும் பத்துத் திக்கையும் அதிக்கிரமித்து எல்லையற்றிருக்கும்.

சீவனுக்குத் தூலசரீர வியவகாரத்திற்கு அன்னமயமான சட்கோசதத்துவங்கள்-6, சூட்சுமசரீர தத்துவங்கள்-20. சீவன்-ஈசுரன்-அவித்தை-வித்தை-பிரமம்-5. ஆகத் தத்துவங்கள்-31.

சூக்ஷுமசரீர வியவகாரத்திற்குச் சூக்ஷுமசரீர தத்துவங்கள்-20 சீவன், ஈசுரன், அவித்தை, வித்தை, பிரமம்-5. ஆகத் தத்துவங்கள்-25.

காரணசரீர வியவகாரத்திற்கு சீவன், ஈசுரன், அவித்தை, வித்தை, பிரமம்-5. சீவவியவகாரத்திற்கு சீவன், ஈசுரன், பிரமம்-3. சாட்சி வியவகாரத்திற்கு சாட்சி-1, ஈசுரனுக்கு தூலசரீர வியவகாரத்திற்கு சமஷ்டி அன்னமயகோச தத்துவங்கள்-6. சமஷ்டி சூக்ஷுமசரீரதத்துவங்கள்-20. சமஷ்டி சீவன், அவித்தை-2. ஈசுரன், வித்தை, பிரமம்-3, தூலபூதங்கள்-5. ஆகத் தத்துவங்கள்-30.

சூக்ஷுமசரீர வியவகாரத்திற்கு சமஷ்டி சூக்ஷுமசரீர தத்துவங்கள்-20. சமஷ்டி சீவன், அவித்தை-5. சூக்ஷும

பூதங்கள்-5. வித்தை, ஈசுரன், பிரமம்-3. ஆகத் தத்துவங்கள்-30.

காரணசரீர வியவகாரத்திற்கு வித்தை, ஈசுரன், பிரமம்-3. ஈசுர வியவகாரத்திற்கு ஈசுரன், பிரமம்-2. பிரம வியவகாரத்திற்கு பிரமம்-1. இந்திரிய வியவகாரத்திற்கு இந்திரியம்-1. சட்கோச தத்துவங்கள்-6, அந்தக்கரணம்-5, வாயு-5, சீவன், ஈசுரன், அவித்தை, வித்தை, பிரமம்-5. ஆகத் தத்துவங்கள்-22.

மனோராச்சிய வியவகாரத்திற்கு அந்தக்கரணம்-5. சீவன், ஈசுரன், அவித்தை, வித்தை, பிரமம்-5. ஆகத் தத்துவங்கள்-10. இப்படித் தத்துவங்களினுடைய தோற்றமும் நிலையுஞ் சொல்லப்பட்டன.

இனி தத்துவங்கள் ஒடுங்குகின்ற வழிசொல்லுகின்றோம்.

சகல சீவரிடத்திலு மிருக்கின்ற தூலசரீரங்களனைத்தும் தமக்கு ஆதாரமான தூலபூதங்களிலே மடிந்து, பூத மாத்திரமாக ஒடுங்கும். இந்தத் தூலபூதங்களும், பஞ்சீகரணம் விட்டுத் தன் மாத்திரைகளான தமோகுண பூதங்களாக மிஞ்சும். அப்போது கேவலம் இரண்ய கர்ப்பாவஸ்தை யென்று சொல்லப்படும் சூக்ஷும சரீர தத்துவங்களிருபதும் கட்டுவிட்டுப் பூதங்களினுடைய சத்துவ குணமும், இரஜோ குணமுமாக ஒடுங்கும். அஃதெங்ஙனமெனின் :

சகல பிராணிகளிடத்திலு மிருக்கின்ற அகங்காரமும், கிராணேந்திரியமும், உதானவாயுவும், உபஸ்தேந்திரியமும் பிருதிவியில் ஒடுங்கும். சித்தமும், சிங்ஙுவையும், சமானனும், பாயுருவும் அப்புவில் ஒடுங்கும். புந்தியும், சக்ஷுவும், அபானனும், பாதமும் அக்கினியில் ஒடுங்கும். மனதும், தொக்கும், பிராணனும், பாணியும் வாயுவில்

ஒடுங்கும். உள்ளமும், சுரோத்திரமும், வியானனும், வாக்கும் ஆகாசத்தில் ஒடுங்கும். அப்போது பழையபடியே முக்குண பூதங்களாகும். இந்தச் சூக்ஷ்ம பூதங்களும், பிருதிவி அப்புவில் கரைந்து ஒடுங்கும். அப்புவும், அக்கினியிற் சுவறி ஒடுங்கும். அக்கினியும் விளக்குபோல வாயுவிலணைந்து ஒடுங்கும். வாயுவும் ஆகாசத்திலே ஓய்ந்து ஒடுங்கும். ஆகாசமும், விக்ஷேபசத்தியில் ஒடுங்கும். ஆவரணசத்தியும், விக்ஷேபசத்தியும், மூலப்பிரகிருதியின் தமோகுண மாத்திரமாய் ஆலமரம் ஆலம் விதையில் ஒடுங்கினாற்போல இன்னம் ஒரு சிருஷ்டிக்கு வித்தாக மாயையிலும் அவித்தையிலும் ஒடுங்கும். இந்த மாயையும், அவித்தையும் அதி நுண்மையான மூலப்பிரகிருதியென்று சொல்லப்பட்ட விந்து தத்துவத்தில் ஒடுங்கும். அந்த விந்துவும், பாம்பென்கிற பெயர் போய்ப் பழுதையாகக் கண்டாற்போலத் தனக்கு அதிஷ்டமான சைதன்னியமான பிரம சைதன்னிய மாத்திரமாக ஒடுங்கும். இப்படிப் பொய்யெல்லாம் மெய்ப்பொருள் ஒன்றாகக் கண்டு, அதுவே சுபாவ சித்தமாய் நிசமா யிருக்கின்ற தன் வடிவெனக் கண்டு தெளிந்து கவலை கெட்டிருக்கின்றவனே சீவன் முத்தன். இப்படித் தத்துவங்களின் ஒடுக்கஞ் சொல்லப்பட்டது.

இப்படி தோற்றி ஒடுங்கின தத்துவங்கள் 36. அவை யாவன :—

பூதங்கள்-5. ஸ்தூல சரீரதத்துவங்கள்-6. சூக்ஷ்ம சரீரதத்துவங்கள்-20. காரணசரீரமான மாயை, அவித்தை-2. இவற்றில் பிரதிபிம்பித்த சீவன், ஈசுரன்-2. இவைகட்கெல்லாம் அதிஷ்டான சைதன்னியமா யிருக்கின்ற * பிரமம்-1. ஆக 36.

* பிரமத்திற்குத் தோற்றமொடுக்கங் கூறினது நாமகற்பனையைப் பற்றி யென்க.

இவைகளில், பூதங்கள்-5. மாயை-1. மாயப் பிரதிபிம்பரான ஈசுரன்-1. பிரமம்-1. ஆக இந்த எட்டும் சகல பிராணிகளுக்குஞ் * சமுதாயமாக அநுபவிக்கப்படும். மற்றை இருபத்தெட்டும், அவன் அவனுக்குப் † பிருதக்காக அனுபவிக்கப்படும். அஃதெங்ஙன மெனில், பிருதிவி தத்துவம் ஒன்று இறக்கில் எல்லாருக்கும் ஆதாரமில்லை. மழை மறுக்கில் எல்லாருக் குஞ் சலமில்லை. தேயு இல்லாதிருந்தால் பாகமில்லை. வாடைதென்றல் இல்லாவிட்டால் வாயு வியக்கவில்லை. ஆகாசம் இறக்கில் ஒருவருக்கும் அவகாசமில்லை: மாயையும், மாயாப் பிரதிபிம்பரும் இறக்கில், சகல சமயங்களுக்குத் தெய்வமில்லை. பிரமமில்லையேல் ஒருவருக்கும் அறிவில்லை. ஆகையால் இந்த எட்டும் எல்லாருக்குஞ் சமுதாயமாம். பிருதக்கு எங்ஙனமெனின், ஒருவனுக்கு ஸ்தூலசரீரம் இறக்கில், எல்லாருக்கும் ஸ்தூலசரீரம் இல்லாதபடியினலும் சூக்ஷும சரீரத்தில் ஒருவனுக்கு அங்க ‡ வைகல்யம் வந்தால் எல்லாருக்கும் வாராதபடியினலும், முத்தராயிருந்த சுகர், வாமதேவர் முதலான பேருக்கு அவித்தையும், சீவனும் இறந்து போயிருக்க, மற்றைப்பேருக்கெல்லாம் அவித்தையும்,சீவனும் இறவாதபடியினலும், இந்த இருபத்தெட்டுத் தத்துவங்களும் அவனவனுக்குப் பிருதக்கென்பதிலே சந்தேகமேயில்லை.

இந்தத் தத்துவங்கள் 36-ல் எப்போதும் தானகவே காணப்படுகிற தத்துவம்-1. எப்போதும் தனக்கு அன்னியமாகக் காணப்படுகிற தத்துவங்கள்-7. தானகவும் தனக்கு அன்னியமாகவும் அநுபவிக்கப்படும் தத்துவங்கள்-28. அஃதெங்ஙனமெனில் :

---

* சமுதாயம் - பொது. † பிருதக்கு - வேறு.
‡ வைகல்யம் - குறைவு.

அவஸ்தாத்திரய சாக்ஷியாயிருக்கின்ற பிரமசைதன்னியம் எல்லா வவஸ்தைகளிலுந் தானாகவிளங்குகையினாலும், மற்ற தத்துவங்கள் போலத் தனக்கு அன்னியமாக விளங்காதபடியினாலும், அந்தப் பிரமசைதன்னியம் ஒன்றுமே தானாகக் காணப்படுகிறது. பஞ்சபூதங்கள்-5, மாயை மாயப்பிரதிவிம்பர்-2, ஆக ஏழும் தந்தந்தொழிலான வெட்டு, குத்து, உழவு, பஞ்சகிருத்தியம், தசாவதார முதலானவை ஒருகாலும் தன்னுடைய தொழிலாகக் காணப்படாதபடியினாலே தனக்கு அன்னியங்களே யல்லாமல் தானாகமாட்டா. மற்றை 28-தத்துவங்களுள்ளே நான் பிராமணன், நான் க்ஷத்திரியன், நான் வைசியன், நான் சூத்திரன், நான் பிரமசாரி, நான் கிருகஸ்தன், நான் வானப்பிரஸ்தன், நான் சன்னியாசி, நான் ஆண்மகன், நான் பெண்மகள், நான் கறுவல், நான் சிவலை. நான் கட்டையன், நான் நெட்டையன், நான் பருத்தேன், நான் இளைத்தேன் என்று தானாக வழங்குகிற ஸ்தூலசரீரம் ஆறு தத்துவங்களும், மற்றொரு வேளையிலே தனக்குப் புறம்புபட்டு என் மாடு, என் கன்று என்றாற்போல என் சரீரம் பருத்தது, என் சரீரம் இளைத்தது; என் மயிர் நரைத்தது, என் சரீரம் பிறந்து இத்தனை நாளாயிற்றென்று தான் வேறு, தூல சரீரம் வேறாக வழங்குகிறபடியினாலும், நான் கண்டேன், நான் கேட்டேன், நான் தொட்டேன், நான் போகித்தேன், நான் கொடுத்தேன், நான் வாங்கினேன், நான் நடந்தேன், நான் புசித்தேன், நான் சிந்தித்தேன், நான் நிச்சயித்தேன், நான் இந்தப் பஞ்சத்திற்குச் சீவித்தேன் என்று தானாக வழங்குகிற சூக்ஷும சரீர தத்துவங்கள் இருபதும், மற்றொரு வேளையிலே தனக்குப் புறம்புபட்டு என் வீடு, என் உடைமை என்றாற் போல என் கண், என் காது, என் மூக்கு, என் நாக்கு, என்கை, என்கால், என்மனம், என்புத்தி, என் அகங்காரம், என்சித்தம், என்பிராணன்,

என்று தான்வேறு அவைகள் வேருக வழங்குகிறபடியினுலும், நான் அறிவேன், நான் அறியேன் என்று தானுக வழங்குகிற அஞ்ஞானமும், சிதாபாசனும் மற்றொருவேளையிலே தனக்குப் புறம்புபட்டு என் அஞ்ஞானம், என் சீவன் என்று வழங்கக் கண்டபடியினுலும் இந்த 28-தத்துவங்களும் தானுகவும், தனக்கு அன்னியமாகவும் வழங்குகின்றது சித்தம்.

இப்படிச்சொன்ன குருவைப் பார்த்து சீடன் கேட்கும்படி இந்த 28-தத்துவங்களுந் தானுனல், சாட்சியைப் போல ஒருதன்மையாகத் தோற்றவேண்டுமேயல்லாமல், பஞ்சபூதங்களைப் போலத் தனக்கு அன்னியமாகக் காணக் கணக்கில்லை. இந்த 28-ம் தனக்கு அன்னியமேயானுல் எப்போதும் புறம்புபட்டே இருக்கவேண்டுமல்லாமல் தானுக வழங்கக் கணக்கில்லை. தானுமாய், தனக்கு அன்னியமுமாய் இருக்குமென்கிறது இருட்டாதித்தன் என்ருற் போலும், வெள்ளாழ தீட்சிதன் என்ருற்போலும் விருத்தமாமென்னுஞ் சங்கைக்கு? பரமார்த்தமாகத் தான் என்கின்றது ஒரு வகையும், அத்தியாசத்தினுலே தான் என்கின்றது ஒரு வகையும், ஆக இருவகையும் உண்டு. சாட்சி சைதன்னியத்தைத் தான் என்கிறது பரமார்த்தமல்லாமல் உபசாரமல்ல. தனக்கு அன்னியமாயிருக்கின்ற இந்த 28-யும் தான் என்கின்றது கட்டையைக் கள்ளனென்ருற்போலும், பழுதையைப் பாம்பென்ருற் போலும் புத்திரதாராதிகளைத் தான் என்ருற்போலும் மயக்கமேயல்லாமல் உண்மையல்ல. ஆகையினுல் அஞ்ஞானகாலந் தொடங்கித் தானல்லவென்று காணப்பட்ட தத்துவங்கள்-7. இப்போது இப்படிப்பட்ட விவேகம் பண்ணினபிற்பாடு தானல்லவென்று காணப்பட்ட தத்துவங்கள் 28. ஆக இந்த 35 தத்துவங்களையும் அதற்குச் சொன்ன குணம், குறிகளுடனே கூடக் காண்கின்ற அறிவானது

மாரின்ப் மூலையா ளோடு மன்றிலே நடஞ்செய் வோனைப்
பேரின்ப வீட்டைக் கண்டு பிரணவ விளக்கை யேற்றிச்
சேரின்ப வெளியில் வாசித் திருவிளை யாடல் பார்த்தால்
ஓரின்ப நாகைநாதர்க் தகந்துவந் துரைப்பார் நெஞ்சே.

நாயனை யறிந்திடாமல் நானென்னும் ஆண்மை யாலே
ஆயனில் லாதகாலி யாகி நீ யலைய லுற்றாய்
காயமே கோயி லாகக் கலந்திருந் தவனைக் கண்டு [சே.
மாயொறு வாழ்க்கை நாகைநாதரை வணங்கு நெஞ்

உருப்படுங் கல்லுஞ் செப்பும் உண்மையாய்த் தெய்வ
[மென்றே
மருப்புனை மலரை சூட்டி மணியாட்டித் தூபங் காட்டி
விருப்பமுற் றலைந்தாய் அந்த வினைமயல் விட்டு நின்னுள்
இருப்பவர் நாகைநாதர் இணையடி பூசி நெஞ்சே. 63

உனைவிட வேறே தெய்வர் உண்டென உலகிற் றேடும்
நினைவதே தெய்வமாகி நீகண்டு நின்றா யானால் [ன்
செனனமாம் பிறவிபோகும் சிவத்துளே சேர்க்த மெங்கோ
மனமகிழ் வாசி நாகை நாதர்தாள் வணங்த நெஞ்சே 64

ஆசையாம் பாச மாயை அறிவதை மயக்கி யுன்னுள்
ஈசனைத் தேடொட் டாம லிருக்குமவ் விருளைப் போக்கிக்
கோசமா குறியை நோக்கிக் குருபரன் வடிவைக் கண்டு
வாசமா மலரால் நாகை நாதரை வணங்த நெஞ்சே. 65

கன்றதைத் தேடுங் காறுங் காலியைப் போலே யுன்னுள்
நின்றபே ரொளியைக்கண்டு நினைவெனுமறிவாற் றெய்வ
ஒன்றெனக் கண்டா யானால் உமையவ ளுட னேதில்லை[ம்
மன்றினுள் ஆடும் நாகை நாதர்முன் வருவாய் நெஞ்சே.

மடைவாயிற் பட்சிபோலே மனந்தனை யடக்கி வாதி
விடையேறு மீசன் பாதம் விரும்பிய பெரியோர் பின்னே
தடையறத் திருந்து ஞான சாதகர் பெற்று நீதான்
புடைசூழ நாகை நாதர் பொன்னடி போற்று நெஞ்சே.

சிரமெனுங் குகையி னுள்ளே சிவகயி லாய மன்றில்
அரனிட மமையும் வாசி யாடல்தான் செய் வா ரென்று
பரமமெய்ஞ் ஞான நூல்கள் பலவகை யறிந்து பார்த்து
வரமிகு நாகை நாதர் மலரடி வணங்கு நெஞ்சே. 68

கடமதில் நிறைந்து நின்ற கனவெளி போலே யுன்றன்
செடமதில் நிறைந்து நின்ற சீவனை யறிவாற் கண்டு
திடமிகு சீவ சாட்சி தரிசிக்கச் சீவன் முத்தி
இடமரு நாகை நாத ரிணையடி யுணர்வாய் நெஞ்சே. 69

மெய்யருள் விளங்குட் சோதி வெளிதனை அறிவா லுன்னி
ஐயமில் லாமற் காண்போ ரவரின்ப முத்த ரென்று [கிச்
துய்யமெய்ஞ் ஞான நூல்கள் சொல்வதாற் பரத்தை நோக்
செய்பதாள் வாசி நாகை லிங்கரைத் தெரிசி நெஞ்சே.70

முந்தின பிறப்புவந்த முதன்மையும் அறியாய் இப்பால்
பிந்தின பிறப்பு வந்த பெருமையும் அறியாய் நீதான்
அந்தரப் பட்சிபோல அலைகின் றய் அகத்த ளேமுச்
சந்தியை அறிந்து நாகை நாதரைச் சார்வாய் நெஞ்சே.

சாகத்தின் கண்ணிரண்டிற் காண்பதுங் கண்ணென்
றேபோல், தேகத்தின் அறிவின் கண்ணைத் திடமுடன்
அறிந்து கொண்டு. மோகத்தின் கனலில் விழா முனை
சுழி வாசி பார்த்தால், ஏகத்தால் நாகை நாத ரிணையடி
சார்வாய் நெஞ்சே. 72

ஓட்டிலே பட்ட பட்சி உடல்கின்ற நெறிபோ லாசைக்
கட்டிலே மயங்கி மாருக் கவலையுற் றலைந்தாய் நீதான்
நெட்டிலே யோடு வாசி நிலைமையாய் நிறுத்தி மேரு
வட்டிலே நாகை நாதர் வாழ்பதி அறிவாய் நெஞ்சே. 73

ஆனைவாய்க் கரும்புபோலும் அரவின்வாய்த் தேரை
போலும், பூனைவாய் எலியைப் போலும் புளியில் நைந்
தலைந்தாய் ஞானத், தேனைவாய் அருந்திமுத்தி சேர்ந்
திடச் சிவத்தை நோக்கி, ஊனுளே நாகை நாதர் உற்
றிட மறிவாய் நெஞ்சே 74

மித்திர குருக்கள் சொல்லை மெய்யென்று கல்லைவைத்துப்
பத்திர புட்பஞ் சாத்திப் பணிந்திடும் பாவை நீதான்
சித்திரப் பதுமை போலுஞ் செய்தொழி லொடுங்கி நின்று
புத்தியாய் நாகை நாதர் பொன்னடி போற்றி நெஞ்சே.

உப்போடு புளிப்புங் கைப்பும் உணர்வினால் அறிந்து நீதான், எப்போது முனக்குள் நாயன் இருப்பிடம் அறியா தென்னே, மூப்போதுங் குருவைப் போற்றி முனைசுழி வாசிபார்த்தால். அப்போது நாகை நாதர் அடியிணை அறிவாய் நெஞ்சே. 76

படிக்கவும் நாவிருக்கப் பணியவுஞ் சிரமிருக்கப்
பிடிக்கவுங் கரமிருக்கப் பேணவுங் குருவிருக்க
நடிக்கவுந் தாளிருக்க நாடவுங் கண்ணிருக்க
இடுக்கமுற்றலைந்தாய்நாகைநாதரை இறைஞ்சுநெஞ்சே.

அருவுரு வில்லா நாயன் அணுவினுக் கணுவாய் நின்றும்
மருவுபல் லுயிர்கட் கெல்லாம் வடிவுவே றுனதன்மை
ஒருவரும் அறியார் நல்லோர் உறுதியா லறிவார் ஞான
குருபர நாகை நாதர் குறிப்பறிந் துணர்வாய் நெஞ்சே.

ஆண்டொரு நூறு கற்பம் ஔடத மூலி யுண்டு
நீண்டதோர் காயசித்தி நெடுநாளைக்கிருந்தபேரும்[டோ
மாண்டுதான் போவா ரல்லால் வையகத் திருப்பா ருண்
தீண்டொணு நாகை நாதர் சீர்ப்பதந் தேடு நெஞ்சே.79

பொருடனைத் தேடிப் பாரிற் புதைக்கின்ற புத்திபொன்
அருடனை நிதமுந்தேரு அரனடியதனில் வைத்தால்[மெய்
இருடனை அகற்றுஞ் சோதி எம்பிரான் முன்னே வந்துன்
மருடனை மாற்றும் நாகை நாதரை வணங்கு நெஞ்சே.80

ஆண்டியின் வேடந் தானும் அறிவுடன் எடுத்திடாமல், தூண்டிலில் மீனைப் போலத் துள்ளிவீழ்ந் தலைந்தாய் நீதான், வேண்டியபோது நாதன் மெல்லடி வெளிதாய்த் தோன்றும், தாண்டிய வாசி நாகை நாதரைத் தழுவாய் நெஞ்சே. 81

சேற்றிலே நுழைந்தி ருந்த சிறுபிள்ளைப் பூச்சி போலும்
நீற்றிலே நுழைந்தி ருந்த நேர்மையாம் அழற்சி போலும்
மாற்றுபே ருலகில் நல்லோர் மருவிரி மருவார் சித்தத்
தோற்றியே நாகை நாதர் இணையடி வைப்பாய் நெஞ்சே.

நாடகப் பெண்ணை ஆட்டும் நட்டுவன் போலே யுன்றன்
கூடகச் சடத்தை யாட்டுங் குருவைநீ அறிந்திடாமல்
மூடக மானாய் ஞான முதல்வனை அறிவால் தேடி
ஆடக நாகை நாதர் அடியிணை பணிவாய் நெஞ்சே. 83

சத்தியுஞ் சிவமு மாகித் தாண்டவ மாடும் வாசி
சுத்திய மூல நாடிச் சுழுமுனைக் கம்பத் துள்ளே [லார்
புத்தியைச் செலுத்தி மேலாம் பொருடனை யெடுக்க வல்
பத்திசெய் நாகை நாதர் பதிதனைப் பார்ப்பாய் நெஞ்சே.

நாட்டமாம் அறிவின் கண்ணால் நாயனைப் பருகிப் பார்த்துத், தேட்டமாங் கருணை பெற்ற சிவனடி யார்கள் தங்கள், கூட்டமாம் பரத்திற் சென்று குருபணி விடை யுஞ் செய்கொண், டாட்டமா நாகை நாதர் அருள்தர வருவார் நெஞ்சே. 85

காலனை உதைத்த நாயன் காலெனும் வாசி தன்னை
மூலநன் மனையிற் கண்டு முப்பதி மூப்பாழ் தாண்டிப்
பாலமு தருந்த மேலாம் பராபரை பாதம் போற்றி
மாலயன் அறியா நாகை நாதரை வணங்கு நெஞ்சே. 86

கடுமையாம் பகட்டி லேறிக் கயிற்றொடு சூலமேந்திக், கொடுமையாங் காலன் வந்து கொண்டுபோம் முன்னே நீதான், அடிமை நாதன் பாதம் அனுதினம் மறவா தேத் தில், நெடுமையா நாகை நாதர் நிலைமைகண் டறிவாய் நெஞ்சே. 87

அரகரா சிவ சிவாவென் றனுதினம் மறவா தேத்திச்
சிரகயி லாயவீட்டிற் சிவனை நீ யறிந்து தேடில்
மரகத வல்லி பங்கன் வந்துமுன் காட்சி நல்கிப்
பரக்தி கொடுக்கும் நாகை நாதரைப் பணிவாய் நெஞ்சே.

நடக்கிலும் வாசி பாரு நாட்டமும் வாசி பாரு
முடக்கிலும் வாசி பாரு முனிசுழி வாசி பாரு
மடக்கிலும் வாசி பாரு மறிவிலும் வாசி பாரு
திடக்குரு நாகை நாதர் திருநடஞ் செய்வாய் நெஞ்சே 89

போனநாள் வீணாய்ப் போனாற் புதியநாள் கெடவி டாமல், ஞானநாள் இதுதா னென்று நாடெங்கும் குருவைப் போற்றி, வானநா ளத்திற் சென்னி வழிகண்டு மதிப்பாலூறும், தேனைநன் கருந்தி நாகை லிங்கரைத் தெரிசி நெஞ்சே. 90

தராதல மெல்லாந் தானாய்த் தாவர சங்க மங்கள்
நிராமய மாகக் கோத்து நின்றதோர் பொருளா மந்தப்
பராபர வடிவங் கண்டு பரத்துளே யடக்கி மேலாம்
புராதன மூர்த்தி நாகை லிங்கரைப் போற்றுநெஞ்சே. 91

மாணிக்கவாச கர்க்கும் மகிழ்பரஞ் சுந்த ரர்க்கும், ஆணிப்பொன் திருமூலர்க்கும் அறுபத்து மூவர்க்கும், பேணிக்கொள் பெரியோ ருக்கும் பேறநல் சிவனை யுன்னுள், தோணக்கண் டிருந்து நாகை லிங்கரைத் தொழுவாய் நெஞ்சே. 92

மகத்துமம் அடைந்தநெஞ்சே மலமாயைக்கொண்ட நெஞ்சே
பகுத்தறிவில்லா நெஞ்சே பலநினை வான நெஞ்சே
மிகுத்திடு காமநெஞ்சே மெய்ப்பொருள் அறியா நெஞ்சே
செகத்தினில் நாகை நாதர் சீர்ப்பதந் தேடு நெஞ்சே. 93

காலதுமேல தாகக் கனியுண்ணும் வௌவால் போல
மூலநல் வாசி யோடு முறைமையை அறிவாற் கண்டு
சீலமெய்ஞ் ஞான போத சிவயோகந் தன்னைப் பார்த்து
ஞாலமேல் நாகை நாதர் நடனங் காண்பாய்நெஞ்சே. 94

உறக்கமும் விழிப்பும் போல உடல்பிறந் திறக்குந் தன்மை
சிறக்கவே அறிந்து மிந்தச் செகவாழ்வை மெய்யென்
[றெண்ணிக்
குறித்தலை குலாமர் சொல்லைக் குறிப்புடன் நம்ப லாமோ
மறக்கொணு நாகை நாதர் மலரடி வணங்கு நெஞ்சே. 95

எத்தனை புத்திசொல்லி எடுத்தெடுத் துரைத்தும் நீதான்
பித்தனைப் போலே யோடிட பிறவி சாகரத்தில் வீழ்ந்தாய்
முத்தமிழ் நாகை நாதர் முண்டக மலர்த்தாள் போற்றிச்
சத்தமுன் னுடலிற் றேற்றுந் தலந்தனைப் பார்ப்பாய்
[நெஞ்சே. 96

சுவர்த்தலைப் பூனை போலச் சுற்றிய பிறவி தீரத்
தவத்தினுக் குருவ மான சற்குரு தாளைப் போற்றிச்
சிவத்துடன் கலந்து மேவிச் சிதம்பர வழியே சென்றங்
கெவர்க்குமே லான நாகை நாதரை வணங்கு நெஞ்சே.

அலைவாயிற் பூநு போலும் ஆனைவாய்க் கவளம் போலும்
வலைவாயில் மிருகம்போலும் மயங்கினைந் தலையாய் நீதா
உலைவாயில் மெழுகைப் போல உருகிமெய்ப் பொருளை [ன்
[யுன்னிப்
பலகாலு மேத்தி நாகை லிங்கரைப் பணிவாய் நெஞ்சே.

மூலமாம் நரக மீதில் மூளைத்தெழுஞ் சுடரைக் கண்டு
காலத்தீ மேலே யேற்றிக் கபாலத்தே னமுத ருந்திக்
கோலமா மதுவே யுண்டு குருபதந் தன்னிற் சேர்ந்து
வாலசுந் தரியால் நாகை லிங்கரை வணங்கு நெஞ்சே.

இறந்திடும் இருபத் தோரா யிரத்தறு நூறு பேரும்
இறந்திடக் காயம் போனு லீசனைக் காண்ப தெந்நாள்
மறந்திடா தறிவால் மூல வாசியை மேலே யேற்றிச்
சிறந்தசிற் பரத்து நாகை லிங்கரைத் தெரிசி நெஞ்சே.

## நூற்பயன்

கதிதருமூலா தாரக் கணபதி தாசன் சொன்ன
நிதிமணி மாலே யான நெஞ்சறி விளக்கம் நூறும்
துதிசெயும் அறிவோர் ஞான சோதியின் வடிவமாக
மதியணி நாகை நாதர் மலர்ப்பதம் பெற்று வாழ்வார். 1

நித்தியப் பொருள தான நெஞ்சறி விளக்கம் நூறும்
பத்தியாய் மனத்தி லெண்ணிப் படித்ததன் பயன்காண்
[போர்கள்
முத்திமெய்ஞ் ஞானம் பெற்று மூவர்க்கும் முதல்வ ராகிச்
சத்தியுஞ் சிவமுந் தோன்றுந் தற்பர மதனுட் சார்வார். 2

கனகமார் மணிசேர் மூல கணபதி தாச னாக
நினைவி னறிகட் செப்பும் நெஞ்சறி விளக்கம் நூறும்
வினவியே படிப்போர் கேட்போர் வினையெலாம் அகன்று
[மெய்யுற்
பணமெனும் மோட்ச நாலாம் பதம்பெற்றுப் பதத்துள்
[வாழ்வார். 3

நெஞ்சறி விளக்கம் முற்றிற்று.

---

## சேஷயோகி அருளிச்செய்த

# ஞானயேத்தம்

| | |
|---|---|
| பிள்ளையாரும் வாரி | நேசம் லட்சுமியாம் |
| பிள்ளையாருமங்கே | வீசம்பத் திதழும் |
| பெருத்தழலா தாரஞ் | ஓசைமவ்வெ ழுத்தாம் |
| சிறுத்தவிதழ் நாலாம் | தேசமே வெளுப்பாம் |
| உரைத்தகம்ப மாகி | ஆறுசுவை யாலே |
| ஓங்கியுச்சி தொட்டுத் | நடுவே தேயு வீடாம் |
| தாங்கியதன் கீழாய்த் | நாலுடனே வாரி |
| தானிரண்ட தாகித் | நாலுமெட்டி தழும் |
| தங்கிவாயு வானல் | நல்லசெம்பு மேனி |
| அங்குமே கடந்து | எல்லைருத்தி ரனும் |
| சங்கிலி பிளந்து | தொல்லைவிழிப் பார்வை |
| சமத்தவாயு வானல் | செல்லுமே சிகாரம் |
| இங்கிது வுரைத்தே | அல்லலுண்டே யின்னம் |
| இரண்டுடனே வாரி | அஞ்சுடனே வாரி |
| இன்னமதன் மேலே | நெஞ்சிலவ்வெ ழுத்தாம் |
| வன்னமதைச் சொல்வேன் | கொஞ்சிய மயேசன் |
| அன்னத்துக்கு ராசன் | மிஞ்சுமறு கோணம் |
| அயன்சரஸ் வதியாம் | மேனிகறுப் பாமே |
| நயந்தவித ழாறும் | தன்னிதழைப் பார்க்கில் |
| நல்லநிலம் பொன்னும் | தனியேபதி னாறும் |
| நகரமேயெ ழுத்தாம் | முந்தவேலை யோடல் |
| உகரங்கந்த மாகும் | அந்தரங்கஞ் சொல்வேன் |
| முத்திதந்த நாதா | ஆறுடனே வாரி |
| மூன்றுடனே வாரி | கூறுவேனே நானும் |
| மோசம்பண்ண மாயன் | குருவிருந்த நேர்மை |
| வாசமணி பூரம் | அருகிருந்த பீசம் |

அமைச்சல்லவோ அத்
தான்
என்னவென்று சொல்வேன்
ஏழுடனே வாரி
தாழச்சொன்ன பேச்சுச்
சத்தியங்கா ணத்தான்
ஏழை சொன்ன பேச்சு
எட்டுடனே வாரி
எட்டுச்சாணு டம்பு
கட்டையைநம் பாதே
ஒன்றல்லவோ தெய்வம்
ஒருபதியா லெட்டாம்
ஊமையெழுத் தாலே
ஓங்கார முண் டாச்சு
ஓங்காரத்தி னுலே
உண்டாச்சுதே லோகம்
இதுவுங்குரு வாலே
இருபதியா லெட்டாம்
இறைக்கிரண்டேற்றம்
சுரக்குமேழை நாலாம்
முந்திகுரு பாதம்
முப்பதியா லெட்டாம்
முப்பாழுங் கடந்து
அப்பாலே நடந்தால்
அதிசயம்பா ரத்தான்
நல்லகுரு பாதம்
நாற்பதியா லெட்டாம்
நாலுமூலைக் குண்டம்
நடுவெழுந்த தூணும்
படு மூத லிரண்டாம்
படு முதல் பிடுங்கி
பருத்தமர மேற்க்
குருத்தில் கள்ளிறக்கிக்
கூசாமற் குடித்தாற்
பேசாதே பிறகு
அஞ்சாதேநீ யத்தான்
ஐம்பதியா லெட்டாம்

அஞ்சல்லவோ பூதம்
பஞ்சல்லவோவெ ழுத்து
அஞ்சொடுங்கும் போது
நெஞ்சடங்கு மத்தான்
ஆறு முக மல்லோ
அறுபதியா லெட்டாம்
ஆறல்லோவா தாரம்
வேறல்லோ சொரூபம்
வேறறிந்த பேர்க்குத்
தூரமில்லை யத்தான்
என்ன வென்று சொல்
வேன்
எழுபதியா லெட்டாம்
ஏழல் லவோ நாடி
வாழின்பத்து நாடி
பாழல்லவோ நானும்
பாழ் கடந்த பேர்க்குப்
பத் துக்கோடி தெண்டம்
என்னவென்று சொல்வேன்
எண்பதியா லெட்டாம்
எண்ணிக்கை யறிந்து
கண்ணப்பனைக் கண்டு
திண்ணப்பா பழத்தைக்
குண்ணப்பா வறுமை
விண்ணப்ப முரைத்துச்
சண்ணப்பா குருவை
சொன்னதப சாரம்
தொண்ணூ றுடனெட்டாம்
மண்ணில வெகு தூரம்
குண்ணறிந்த பேரை
எண்ணறிந்தே வாடி
ஏகமன மாகிப்
பாரமு மறிந்து
நாதத்தை யெழுப்பிப்
பீசத்தைத் துறந்து
யோகத்தை நடத்திப்
போகத்தைக் கடந்தால்

தாகத்தை நிறுத்தும்
சோதியறிந் தோர்க்குத்
தூரமில்லை யத்தான்
சாதிகுல மில்லை
சற்குருவ றிந்தால்
நித்திய மிது வே
பத்தியமாய்ப் பணிந்தால்
முத்திதரு மத்தான்

வாமநெறி சீவன்
ராம யோகி தந்த
ராசயோகி சேடன்
தாசனரு ளாலே
பாசமறச் சொன்னேன்
பிரியாமலே யத்தாண்
பிள்ளையாரும் வாரி.

ஞானயோத முற்றிற்று.

—

## பீரு முகம்மது அருளிச்செய்த

# ஞானரத்தினக் குறவஞ்சி

### காப்பு

*தரவு கொச்சகம்*

பொன்னுலகு பொருந்துமனப்
பொருளறியத் தனமறிய
மின்னுலகில் மெய்ஞ்ஞானம்
விளங்க குறவஞ்சிதனை
உன்னுமற் றன்னினைவின்
உன்னியுதிப் பொருநான்காய்த்
தன்னிறையைத் தன்னினைவாய்த்
தரிப்பதுவே காப்பாமே.

### கண்ணிகள்

ஆதிக்கு முன்னம நாதியு மென்னடி சிங்கி
அந்தக் கருக்குழி முந்த இருளறை சிங்கா. 1

ஆதியாய் வந்த அரும்பொரு ளேதடி சிங்கி-அது
சோதியி லாத சொரூபா யெழுந்தது சிங்கா. 2

சோதியி லாத சொரூபான தெப்படிச் சிங்கி-அது
வேதமா முட்பொரு ளொன்றாய் முடிந்தது சிங்கா. 3

முப்பொரு ளென்றுநீ முன்சொன்ன தாரடி சிங்கி-அவர்
அப்பனு மாயிர மாதியாம் நாமடா சிங்கா. 4

எப்படி யுலகில் இப்படி யுருவானோம் சிங்கி-அது
அப்பன்தன் னட்புக்கு ஒப்பிய தாயாலே சிங்கா. 5

பராப ரத்தினிற் பஞ்சவன் னமேது சிங்கி-அது
வேராகித் தூரான விந்து நிறமடா சிங்கா. 6

ஒன்றுக்குள் ஐவர்கள் உண்டான தெப்படிச் சிங்கி-அது
ஒன்றோடே ஒன்றாக ஓடி இணைந்தது சிங்கா. 7

மூலக்கு கைக்குள்ளே முச்சுட ரேதடி சிங்கி-அது
நாதத்தி லைம்பூதம் நன்பா யுதித்தது சிங்கா. 8

மூலக்கு கையெனுங் கோட்டைக் கரசர்யார் சிங்கி-அது
முப்பொருள் ஒன்றாய் முடிந்த நினைவடா சிங்கா. 9

மூலக்கி ழங்கு முளைத்திடம் எவ்விடஞ் சிங்கி-அது
நாதத்தி லான நடுநிலை யல்லவோ சிங்கா. 10

முன்னே முளையாய் முளைத்திடம் எவ்விடஞ் சிங்கி-அது
மூளைமு னையிரு கண்ணிற் எல்லவோ சிங்கா. 11

முன்னே யுருவாய் முடிந்திட மெவ்விடம் சிங்கி-அது
பெண்ணுணு மாகப் பிறந்த தலமடா சிங்கா. 12

இந்த வுடலுக்கு வேரென்ன தூரென்ன சிங்கி-அது
இந்த வுடலுக் குயிராதி மூலமே சிங்கா. 13

இந்த வுடலுக் குயிர்வந்த தெப்படிச் சிங்கி-அது
தொந்தி நடுக்குழி தொப்பூழ் வழியடா சிங்கா. 14

இந்த வுடலுக் குயிரெங்கே நின்றது சிங்கி-அது
அந்தர மாயண்ட மாக்கொடி யல்லவோ சிங்கா. 15

இந்த வுடற்கனி எந்தக் கொடிக்கனி சிங்கி-அது
முந்திய தொப்பூழு மாக்கொடி யல்லவோ சிங்கா. 16

மாக்கொடி என்பதை மானிடர் என்சொன்னார்-சிங்கி
மட்டி லடங்காத மாகலி மாவடா சிங்கா. 17

எந்த வழியினால் வந்தோ மூலகினில் சிங்கி-அது
எல்லா முடிந்த பொருள்வழி யாமடா சிங்கா. 18

முன்னே அறிவால் அறிவகை என்னடி சிங்கி-அது
முன்சுடர் மூன்று முடலுயி ராத்துமா சிங்கா 19

பின்னே ரறிவர்க ளொன்றுன தெப்படிச் சிங்கி-அது
பேதக மற்ற பெருவெளி யானது சிங்கா. 20

ஆசைகொண்டு நம்மை யாட்டுவா ராரடி சிங்கி-அது
அக்கினி வாயுநீர் மண்ணின் மகிமையே சிங்கா. 21

ஆசைபா சப்பலன் அனுபோகம் ஆரடி சிங்கி-அது
அங்கம் பொருந்திய பங்குமண் அல்லவோ சிங்கா. 22

தன்னை அறியுந் தலமேது சொல்லடி சிங்கி-அது
கண்ணிடை யான நடுநிலை யல்லவோ சிங்கா. 23

என்ன விதமாகத் தன்னையறிவது சிங்கி-அது
தன்னவன் ருய்தந்தை யாகிநா மானது சிங்கா. 24

இறையை அறிவதிங் கெப்படிச் சொல்லடி சிங்கி-அது
இறையெங்கு நின்றுடுந் தன் நினை வாகுமே சிங்கா. 25

தன்னுள் விளங்குந் தவமென்ன சொல்லடி சிங்கி-அது
தன்னை மறந்து தவத்தி லிருப்பது சிங்கா. 26

என்ன விதமாகத் தன்னை மறப்பது சிங்கி-அது
ஒன்றைப் பொருந்தி யொடுங்கி யிருப்பது சிங்கா. 27

என்ன விதமாக ஒன்றைப் பொருந்தலாம் சிங்கி-அது
எல்லா மறந்து இருளா யிருப் பது சிங்கா. 28

ஒன்றென்று சொன்ன உயர்நிலை என்னடி சிங்கி-அது
உன்னு லுதிப்பல மூன்னுல் நினைவடா சிங்கா. 29

கன்னி யெழுந்து கலந்திடம் எவ்விடஞ் சிங்கி-அது
உன்னி யெழுந்த வுயிர்நிலை யல்லவோ சிங்கா. 30

எங்கும் பரந்த பெரும்பொரு ளென்னடி சிங்கி-அது
அங்கிங்கு மெங்குமாய்க் கண்ட பெருவெளி சிங்கா. 31

அண்ணினு மெண்ணு மழியாப்பொருளென்ன சிங்கி-இரு
கண்ணேயு மூட இருளழி யாப்பொருள் சிங்கா. 32

ஆங்கார வுடலுக்கு ஆணியா னென்னடி சிங்கி அது
ஓங்கார மூலத்தி னுள்ளொளி யல்லவோ சிங்கா. 33

ஆணியாய் வந்த அரும்பொரு ளென்னடி சிங்கி-முன்
தோணிய சற்குரு முதனுமை மல்லவோ சிங்கா 34

இந்தப் பொருள் வந்த தெந்த வழியடி சிங்கி-அது
அந்தக் கதிர்மதி வந்த வழியடா சிங்கா 35

கத்த னொளிவு கலந்திட மெவ்விடம் சிங்கி-வழி
அத்தன் நடனந்தா னுடிய தற்பரஞ் சிங்கா, 36

உத்தமப் பொருளுக் குயிரெழுத் தென்னடி சிங்கி-அது
நச்சர வாடும் நடுநிலை யல்லவோ சிங்கா 37

எட்டெழுத் தாக எழுந்தெழுத் தென்னடி சிங்கி-அது
மட்டி லடங்கா வடிவட்ட கோணமே சிங்கா. 38

அஞ்செழுத் தாக அமைந்தெழுத் தென்னடி சிங்கி அது
அஞ்சும் பொருந்திய ஆகாய வட்டமே சிங்கா. 39

அன்பத்தோ ரட்சரம் அறியநீ சொல்லடி சிங்கி அது
வஞ்ச மகார நடுச்சுழி மூன்றுமே சிங்கா. 40

கற்பக வாசி கலந்திடம் எவ்விடஞ் சிங்கி-அது
உற்பன மூலத்தி னுள்ளொளி யல்லவோ சிங்கா. 41

சத்தம் பிறந்திடுஞ் சற்குரு வேதடி சிங்கி-அது
உற்ற சுவாச முயிர்நிலை யல்லவோ சிங்கா. 42

கண்டு தொழுஞ்சிவ காரண மேதடி சிங்கி-நம்மை
உண்டு படுத்திய வுள்ளொளி யானதே சிங்கா. 43

எப்படிக் கண்டே இறையை வணங்கலாம் சிங்கி-அது
நட்புடன் இரண்டு நடுநிலை காண்பது சிங்கா 44

நடுநிலை யானதை நாடுவ தெப்படிச் சிங்கி-அது
நாட்டந்தேட் டமோட்ட மாட்டமொன் றுயினுல் சிங்கா.

தேட்டமு நாலுந் திருந்துவ தெப்படிச் சிங்கி-அது
திருவைப் பொருந்தி ஒருமித் திருப்பதே சிங்கா. 46

ஒருமித் திருக்கின்ற ஓரிடமெவ்விடம் சிங்கி-அது
ஒன்று மிரவும் பகலும் உதிப்பிடம் சிங்கா. 47

இரவும் பகலுமொன் றுனது மெவ்விடம் சிங்கி-அது
எப்போதுமிருளா யிருப்பது மூளையே சிங்கா. 48

இரவும் பகலும் பிறப் பிட மெவ்விடம் சிங்கி- அது
இருளி லுதித்துன்னி வந்தத டிமூலம் சிங்கா 49

இரவும் பகலு மெழுந்திட மெவ்விடம் சிங்கி-அது
ஏகாந்த உன்னல்வந் தேறிய தாமரை சிங்கா. 50

இரவும் பகலும் பிறந்திட மெவ்விடம் சிங்கி-அது
எழுத்தறு கோண மிடம்வலம் வாசியே சிங்கா. 51

இரவும் பகலும்நின் றுடிய தெவ்விடம் சிங்கி அது
எழுந்துநின் றுடுஞ் சுழுமுனை மண்டலம் சிங்கா. 52

இரவும் பகலு மிருப்பிட மெவ்விடம் சிங்கி- அது
ஈராறு மோடிய வோரான நான்கடா சிங்கா. 53

இரவும் பகலு முதிப்பிட மெவ் விடம் சிங்கி- அது
ஏறுமெட் டங்குல மிருவிழி நடுநிலை சிங்கா. 54

இரவு பகலுமென்றென்னத்தைச்சொல்லலாம் சிங்கி-அது
இரவு பகலிடை பிங்கலை வாசியே சிங்கா. 55

இடைகலை பிங்கலை எனத்தைச்சொல்லலாம் சிங்கி-அது
இடைகலை சந்திரன் பிங்கலை சூரியன் சிங்கா. 56

என்னத்தைச்சொல்லலாம் சந்திரன் சூரியன் சிங்கி-அது
கலையும் பொருந்தும் நடுசுழு முனையே சிங்கா. 57

சந்திரன் சூரியன் ஒன்ருனதெவ்விடம் சிங்கி-அது
கலையும் பொருந்து நடுச்சுழு முனையே சிங்கா. 58

என்னத்தி லேபால னேறி நின் ருடுது சிங்கி-அது
உன்னுக்குள் வாசி நடனப் புரவிமேற் சிங்கா. 59

என்ன விதமாய் எடுத்துநின் ருடலாம் சிங்கி-அது
ஏற்றவு மாற்றவு மிணங்கிநின் ருடிப் பார் சிங்கா. 60

மாற்றிப் பிடிக்க மருந்தென்ன சொல்லடி சிங்கி-அது
மாளாமல் மாண்டு மறந்தே இருப்பதே சிங்கா. 61

அட்ட கசங்கன் அறிந்திட மெவ்விடம் சிங்கி-அது
எட்டு விதமா யெழுதும் பலனடா சிங்கா. 62

உற்றஞா னப்பொருளுத்தியாய் சொன்னதார் சிங்கி-அது
உத்தமர் பீரு மூகம்ம துரைத்தது சிங்கா. 63

ஞானரத்தினக் குறவஞ்சி முற்றிற்று.

---

## மதுரை வாலசாமி அருளிச்செய்த

# ஞானக்கும்மி

---

### காப்பு

சீர்மேவு ஞான வடிவான-பர
தேசிகன் சற்குரு தன்னருளாற்
பார்மீதில் ஞானக்தும் மிபாடச்-சிவ
பாலன் கணபதி காப்பாமே. 1

அம்பிகை வாலை பதம்போற்றி-அருள்
ஆனந்தக் கும்மித் தமிழ்பாடத்
தும்பி முகனுக் கிளையவ ஞஞ்சிவ
சுப்பிர மண்யனுங் காப்பாமே. 2

நாலாம் வேதமு மோராறும் வெது
நாநா பேதமாய் நின்ருனை
மேலாய்ப் போற்றிக்கும் மிபாடச் செந்தில்
வேலவன் தன்பதங் காப்பாமே. 4

பாரி லுயர்மது ராபுரியில்-வாலை
சாமிசொல் லுங்கும்மிப் பாடலுக்கு
மேரு வதனடி மூலமூக் கோண
விநாயகன் தன்பதங் காப்பாமே. 4

ஆதியும் அந்தமு மொன்ருகி-வளர்
அண்டபிண் டம்மூமி ரண்டாகிச்
சாதி பலபல வேருகிநின்ற
தத்துவங் கேளடி ஞானப்பெண்ணே. 5

தேகமா னதோர்ம லபாண்டம்- அதிற்
சிற்பணம் வந்திடு முற்பணத்தை
யோக மெனுந்தமிழ்ப் பாடலுக்கு- மனம்
உவந்து கேளடி ஞானப்பெண்ணே. 6

ஏகப் பெருவெளி பட்டணமாம்- அதில்
எவனே சித்த னொருவனுண்டாம்- அந்த
வாச னில்லைபேசா வாயு மில்லை- அந்த
மாப்பிள்ளை பெண்ணென்றுஞானப்பெண்ணே.

சாட்சி யெனும்பிர மன்பிள்ளைக் குழலைச்
சத்தியென் றவொரு பெண்ணுச்சு
சூட்சும காரண மிரண்டினுக் குநிலை
தூலநா மென்கிருள் ஞானப்பெண்ணே. 8

ஊமையன் என்றே அறிந்துகொண் டாளந்த
ஊமைபேச் செல்லாமே நாமென்கிருள்
சீமையை ஆளத் துசங்கட்டி னுளந்தச்
சீமாட்டிதானடி ஞானப்பெண்ணே. 9

பெண்ணர சானதி ரத்தின மாமதைப்
பெண்ணென்று சொல்லவுங் கேள்வியுண்டோ
மண்ணையும் விண்ணையுங் கூட்டிப் பயிர்செய்த
மார்க்கத்தைக் கேளடி ஞானப்பெண்ணே. 10

பட்டணங் கட்டி மகரா சிதுரை
பாங்குடன் செய்த அதிகாரச்
சட்டமுஞ் சொல்லத் தொலையா தேவிதைச்
சற்றே கேளடி ஞானப்பெண்ணே. 11

அஞ்சூர் அஞ்சூர் வகுப்பாச் சாமதில்
அஞ் சூர் அஞ்சு பிரிவாச்சாம்
அஞ்சூருக்கொரு வித்தாச் சாமதற்
கான தூாமுண்டு ஞானப்பெணணே. 12

ஊரை யடுத்து மலையுமுண் டாமதற்
குள்ளா யிருந்த நிலைக்காரர்
பேரை யுரைக்க இனிக்கே ளுமவர்
பெருமைதா னென்னடி ஞானப்பெண்ணே. 13

தலைமன் னாரிலி ருப்பவ ராமந்தச்
சட்டையப் பிள்ளையும் நெட்டையராம்
நிலமு மான்யமு மென்னவென் றாளந்த
நிசந்தெ ரியுமோ ஞானப்பெண்ணே. 14

கும்பகோ ணத்திலே அப்புப்பிள் ளையவர்
கூட்டமற் றால்வெகு வாட்டமென்று
செம்பாதிப் பங்குதான் கேட்டுவந் தால்நியாயந்
தெளிவ தெப்படி ஞானப்பெண்ணே. 15

மூலக் குடிவன்னித் தேவரை வரவர்
மூர்க்கமுந் தீர்க்கவு மார்க்க முண்டோ
நாலு கரைப்பங்கு நாமென்கி றாரிந்த
ஞாயந் தெரியுமோ ஞானப்பெண்ணே. 16

காத்தவ ராயக் கவுண்டனுக் குத்திசைக்
காவலும் மற்ற விசாரணையும்
பார்த்து வருவது நாமென்கி றாரிந்தப்
படிநி லைக்குமோ ஞானப்பெண்ணே. 17

ஆகாய மான பரஞ்சோ தியவர்
அஞ்சுக் கரைப்பங்கும் தனக்குள்ளே
சேகர மாமென்றுஞ் சொல்லுகி றாரிந்தச்
சேதியைக் கேளடி ஞானப்பெண்ணே. 18

அம்பலக் காரரும் மூன்றுபே ராம்பின்னும்
அத்தக னாட்டுக் கணக்கனென்றாம்
வம்புசெய் தாலந்த முன்னா ளனுப்படி
வகைதெ ரியுமோ ஞானப்பெண்ணே. 19

ஒன்பது கூத்தரும் பங்காளி எந்த
ஊருக்கு மூர்களும் அப்படியாம்
ஐம்பது சேருவைக் காரருக் குமவன்
அண்ண னொருவனும் ஞானப்பெண்ணே. 20

கோயிற் குருக்க ளொருபார்ப் பான் தெப்பக்
குளத்தின் மேலே யவன் வீடு
தாவிக்கொண் டுதொடை தட்டுகி றானிலஞ்
சாருமோ கேளடி ஞானப்பெண்ணே. 21

கெட்டி யொருவனும் பங்கா ளிஅதிற்
சேர்ந்தவ னாக மிகவோங்கிக்
கட்டி வராகனைக் கொண்டுவந் தால்காணி
யாட்சி செல்லுமோ ஞானப்பெண்ணே. 22

காரியக் காரரோ அஞ்சுபே ராமவர்
காரியம் பார்க்கவீ ரஞ்சுபேராம்
மாரீசக் காரர் சமாதிகண் மூன்றுபேர்
வார்த்தையைக் கேளடி ஞானப்பெண்ணே. 23

ஊழியக்காரர் அனேகருண் டாமவர்க்
கும்பளஞ் சம்பளம் நிரம்பவுண்டாம்
பானையங் கோட்டைக்குச் சாரிவைத் தாலிவர்
பதுங்குவாரடி ஞானப்பெண்ணே. 24

பாமூ ருக்கொரு மேல்மணி யாமவன்
பார்த்தாற் சின்னப் பயல்காணும்
வேளூ ரானரைப் பங்குத் தனமுதல்
விற்றுக் கொடுக்கிறான் ஞானப்பெண்ணே. 25

ஆராறு குடியு முண்டா மதில்
அந்யக் குடிமுப்பத் தைந்துமுண்டாம்
ஓராறு பத்துக் குடிதனி லேயஃது
ஓட்டுக் குடியடி ஞானப்பெண்ணே. 26

இத்தனை பேரு மிருந்தா லும்மதில்
இரண்டே பேர்கள் சமுசாரி
அத்தனை பேரையுந் தள்ளிவைத் தாற்பயிர்
ஆரிடு வாரடி ஞானப்பெண்ணே. 27

ஒற்றேர் ஒற்றை எருதா கும்மதில்
ஒன்று பரம்புமுச் சாலடிக்கும்
கற்றுடன் காரணங் கண்டா யோஞானக்
கண்கொண்டு பாரடி ஞானப்பெண்ணே. 28

இரண்டு கரைக்குடி மானிய மாமதில்
இட்ட விதையொட்டி ரட்டியுண்டாம்
பண்டு பழகின மேன்புள்ளிக் காரனும்
பார்த்துப் போயினன் ஞானப்பெண்ணே. 29

புள்ளிக் குறைச்சலும் வாரா மல்முன்னே
போட்ட பலனுங்கை யாடாமற்
கொள்ளை யிடச்சொல்லி ஓலைவந் தாலிது
கொடுமை சொல்லடி ஞானப்பெண்ணே. 30

வந்த விதியென்றி ருந்தா லும்வசக்
கட்டு நிலுவையுங் கேட்கிறானே
இந்த மகிமை யவன்றன் னேவிதற்
கென்ன சுகமடி ஞானப்பெண்ணே. 31

தரிசுக் கிடக்கிற பெட்டியி லேயேறித்
தண்ணீர் பாய்ச்சவுஞ் சொல்லுகிறான்
வரிகொடுக்கிற தில்லையென் றுற்பூசை
மாட்டுகி றானடி ஞானப்பெண்ணே. 32

வரிற் றுடியதி ருக்கவொட் டானிருந்
தாழியஞ் செய்யவும் வேலையிட்டான்
தீரமில் லையென்று சொன்ன லுமவன்
தெண்டம் பிடிக்கிறான் ஞானப்பெண்ணே. 33

அந்த இருபத்தோ ராயிரத் திருநூற்
றுக்கல நெல்லுமே கண்டுமுதல்
வந்ததுண் டோவ தில் மூன் றத் தொருபங்கு
வாரம் பிடித்தாண்டி ஞானப்பெண்ணே. 34

மிச்ச மிருந்தநெல் லுத்தொகை யில்வாரம்
விண்ணுறு நோய்கொண்ட பேயனுடன்
அச்சுதன் சேயனுந் துங்கக்கோ னுமாய்
அழித்துப்போட் டாரடி ஞானப்பெண்ணே. 35

நிலம்வி ளைந்ததுங் காணீ ரோவதிற்
செலவ ழிந்ததும் பாரீரோ
அலமந் துதிரி யாம லையருள்
ஆனந்தஞ் சேரடி ஞானப்பெண்ணே. 36

எண்சா ணீள மொருவீ டாமதில்
எட்டொரு பீற்றல் மலங்கூடாம்
பஞ்சாயக் காரரீ ரைந்துபே ருந்தெய்வப்
பதியி தென்கிறார் ஞானப்பெண்ணே. 37

தேக மென்னுஞ் சிவாலய மாமதிற்
சென்னி சிறுவாயிற் கோபுரமாம்
காக மான விரண்டு கரக்கோடுங்
கையாங் கேளடி ஞானப்பெண்ணே. 38

உண்ணுக் கென்ற கொடிமர மாமதிற்
கோபுர சந்திர புட்கரணி
அண்ணுக் கென்ற வலப்புறத் திற்கண்ட
தக்குனி தீர்த்தமாம் ஞானப்பெண்ணே. 39

நாற்பத்து மூக்கோண மண்டப மாமதன்
நடுவி ருக்குதாஞ் சிங்காரம்
பார்ப்பது சக்கரக் கோட்டையி லேயிந்தப்
படியி ருக்குதாம் ஞானப்பெண்ணே. 40

பீட மிருப்பது மையத்தி லேபவி
பீட மிருப்பதுங் குய்யத்திலே
மாட மிருந்த சிவாலயத் தின்மணி
விளக்கி ருக்குது ஞானப்பெண்ணே. 41

இப்படி யான திருக்கோ விலதற்
கெப்படி வாயி லிருக்காதோ
அப்படி யென்று தெரியா மற்றெரிந்
தலேகி ருராடி ஞானப்பெண்ணே. 42

பூட்டைத் திறப்பதுங் கையா லேமனப்
பூட்டைத் திறப்பது மெய்யாலே
வீட்டைத் திறக்க முடியாமல் விட்ட
விதியி தென்கிருர் ஞானப்பெண்ணே. 43

வாசலி லேயொரு மேல்வா சலந்த
வாசலி லேசிறு வாசலுண்டு
நேசமு டன்றிரு வாசலிற் பூட்டு
நெருக்கம் பாரடி ஞானப்பெண்ணே. 44

அட்சர மாமௌ ளுட்சர மாவது
ஆஞல் நல்ல திறவுகோலாம்
உச்சித மாகத் திறந்தா லேயந்த
உச்சி வழிகாணும் ஞானப்பெண்ணே. 45

கண்ணு லேமனக் கண்ணு லேயதைக்
கண்டா லேவழி யுண்டாகும்
பெண்ணுசை தன்னே யடுக்கா மல்வழி
பேணிப் பாரடி ஞானப்பெண்ணே. 46

பார்த்து நடப்பது மேல்வா சலந்தப்
பாதை யறிவது மெவ்வாறு
வாத்திரை நேரம் பிரியா மற்பாதை
மார்க்கங் கேளடி ஞானப்பெண்ணே. 47

ஏருக்கி டந்த குறிதாண் டியதில்
இரண்டு விரற்கடை மேற்ருண்டிக்
கருக்கி டைக்கும் அடையா ளமதைக்
கண்டு கேளடி ஞானப்பெண்ணே. 48

மாயன் அரண்மனை காணீ ரோவன்னி
மரமி ருப்பதுந் தோலீரோ
நேய மதுக்கடந் தப்பா லேயறு
கோணப் படியடி ஞானப்பெண்ணே. 49

கோணத்தில் நின்று மயங்கா தேசுழிக்
காற்றை யடக்கிச் சிணுங்காதே
வீணுக் கலைந்து தியங்கா தேதூல
வேடத்தைத் தள்ளடி ஞானப்பெண்ணே. 50

தூலத்தை விட்டு விடாயா கிலதிற்
சூட்சமத்தைக் காண முடியாது
பாலத்தி லேறி நடந்தக் காற்பெரும்
பாதையி தல்லவோ ஞானப்பெண்ணே. 51

பாதையா னபெரும் பாதையைக் கிட்டிடப்
பட்டண முண்டொரு வட்டமதாய்
நாதமுங் கீதமுங் கேட்குத டிதெய்வ
நாயகன் சந்நிதி ஞானப்பெண்ணே. 52

சந்நிதி யென்னடி கண்டதுண் டோகண்டால்
தத்துவம் பேசத் திறமுமுண்டோ
முன்னேழுப் பாழுங் கடப்பதுண் டோ அதில்
முச்சுட ருண்டடி ஞானப்பெண்ணே. 53

முச்சுடர் வட்டமே சக்கர மாமது
மூக்கு நுனியிற் சுழுமுனையாம்
அச்சுடர் வட்டத் திருந்தவ னேதுரு
ஆனந்த நந்தியாம் ஞானப்பெண்ணே. 54

நந்தி யிருந்தது வன்னிவட் டம்மதில்
நாட்டம் புருவமத் யான திட்டம்
சந்திர னுங்கதிர்ச் சூரிய னுமந்தத்
தலத்தில் நின்றனர் ஞானப்பெண்ணே. 55

நாதவிந் தல்லவோ நால்யோ னிதச
நாதவிந் தல்லோ எழுதோற்றம்
நாதவிந் தாலுட லும்முயி ரும்பரம்
நந்தியைப் போற்றடி ஞானப்பெண்ணே. 56

விந்து விருந்த தலந்தனி லேகுரு
நந்தி யிருந்தார் கொலுவாகி
சிந்தை தெளிந்து மகாரம்வைத் தாலந்தச்
சீமானைக் காணலாம் ஞானப்பெண்ணே. 57

சீமான் கிட்ட அடுத்தக் கால்மேலைச்
சீமை நமக்குக் குடியாச்சு
ஆமா மென்றுதும் மிப்பா டியருள்
ஆனந்தஞ் சேரடி ஞானப்பெண்ணே. 58

ஆனந்த மான தலந்தா னே அது
அத்து விதமாந் தலந்தானே
தானந்த மான சதா சிவத் தைப்போற்றித்
தாண்டிக் கும்மி யடியுங்கடி. 59

ஞானமா யிரந் தெட்டிதழ்ப் பீடம்
நாட்டமாஞ் சந்திர னுர்வீடு
மோன மிருந்த மகார மவுனத்தை
மூட்டிக் கும்மி யடியுங்கடி. 60

குண்டலி வாசி யகாரம டிபிடர்க்
கண்ட மதிலே யுகாரமடி
உண்டு சுழியின் மகாரம்வைத் தாற்சிவ
லோகமி தல்லவோ ஞானப்பெண்ணே. 61

ஓங்கார மான பிரணவத் தாள் எங்கும்
உயர்ந்த சோம கலைநிறத்தாள்
ரீங்கார மான பராசத்தி யைநீங்கள்
நேர்ந்து கும்மி யடியுங்கடி 62

பூரக முப்பத்தி ரண்டா குமணப்
பூரண கும்ப மிரட்டியதாம்
கூறவே ரேசகம் எண்ணிரண் டாமந்தக்
குறிப்ப றிந்துகொள் ஞானப்பெண்ணே. 63

பிங்கலை யாவதி ரேசகத் தைவளர்
பூரகந் தன்னி லிடத் தூதி
நங்கலை நந்தியிற் கும்பிக்க வேசிவ
நாட்டமி தல்லவோ ஞானப்பெண்ணே. 64

அறிந்து கொள்ளு மெழுத்தோ டேபவு
ரணைமு தலமா வாசிமட்டும்
மறந்தி டாமற்செய் மாத்திரை யின்படி
வாசி வசமாகும் ஞானப்பெண்ணே. 65

காலா லேகன லேற்றுங்க டிசுழி
மேலே கொண்டமூ தூட்டுங்கடி
மூலா தாரத் தலங்கேச ரமென்று
முழங்கிக் கும்மி யடியுங்கடி. 66

சார்ந்து கொள்ளடி கேசரத் தைமுதற்
றன்னை யறியலாந் தானுகக்
கூர்ந்து மூலக் கணபதி பாதத்தைக்
கும்பிட்டுக் கொள்ளடி ஞானப்பெண்ணே. 67

நவ்வெழுத் தேபிரம ஞரா குமதில்
நாரணன் மவ்வெழுத் தானுனே
சிவ்வெழுத் தேதெய்வ ருத்திர னுமென்னுஞ்
செப்புவன் கேளடி ஞானப்பெண்ணே. 68

செப்பவே வவ்வு மகேசுர னும்வட்டஞ்
சேர்ந்துப சாரம் சதாசிவனும்
தப்பிலா வைந்தெழுத் தாலே சராசரந்
தங்கி யிருந்தது ஞானப்பெண் ணே. 69

வாலையி னட்சர மூன்று கும் அதை
வாய்கொண்டு சொல்பவ ரார்காணும்
மேலொன்றும் கீழொன்றும் மத்திம மூங்கூட்டி
விரைந்து பாரடி ஞானப்பெண்ணே. 70

விரைந்து சொல்லுவன் மூன் றெழுத் தாற்சதம்
விரிந்து தானுபி ருண்டாச்சு
தெரிந்து கண்டவர் தங்களுக் காவலே
தீட்சையி தல்லவோ ஞானப்பெண்ணே. 71

தீட்சை யெனுஞ்சிவ சக்கரத் தின்மையந்
தேவி யெழுத்தை நிரை நிறுத்திக்
காட்சி யுடன்சிவ பூசைசெய் தாற்சித்தி
கைவச மாமடி ஞானப்பெண்ணே. 72

தள்ளுண்டு தள்ளுண்டு நில்லா தேபின்பு
கஞ்சா வுறக்கமுங் கொள்ளாதே
உள்ளுண்டு சோமக் கலையாதி பானத்தை
ஊட்டிக் கும்மி யடியுங்கடி. 73

கும்மி அடிபெண்கள் அம்பலத் தையரைக்
கூட்டி யமுதங் குடியங்கடி
அம்மென்று மும்மென்றுஞ் சொல்லா மல்நின்ற
அத்விதம் பாரடி ஞானப்பெண்ணே. 74

அத்வித மாவத்துக் காதிய டிமதி
ஆயிரத் தெட்டிதழப் பூசை பண்ண
முத்தி தருஞ்சோமப் பாலை யனுதினம்
மூட்டிக் கும்மி யடியுங்கடி. 75

மூட்டுவ தென்ன திரிகோண வட்ட
மூலத்தில் குண்டலி வாசியினுல்
நாட்டுவன் பூரண நாலையுங் கட்டினுன்
ஞாயமி தல்லவோ ஞானப்பெண்ணே. 76

கட்டிக்கொள் விந்துவைத் தள்ளா தேசுழிக்
காற்றை யடக்கிப் பெருக்காதே
சுட்டி மனப்பொரு துருதே காமச்
சோம்பலைத் தள்ளடி ஞானப்பெண்ணே. 77

சோம்பலுந் தூக்கமு மாகா தே அன்ன
சுகியுஞ் சோகமுங் கொள்ளாதே
சாம்ப சதாசிவ நாட்டத்தி லேநின்று
சார்ந்து கும்மி யடியுங்கடி. 78

கைவச மாவது சட்டிவித் தைஞானக்
கற்பமும் வந்து லபிக்குமடி
தெய்வ மிவரென்று சொன்னு ரே நல்ல
சித்தரு முத்தரு ஞானப்பெண்ணே. 79

யோகத்துக் காதி யுமைதீட் சைமற்ற
யோகத்துக்கெல்லா முதற்றீட் சை
போகத்தைக் கைவிட லாகா தேசுத்திப்
பூசையை வேண்டிக்கொள் ஞானப்பெண்ணே.

வேண்டிக்கொள் விந்து முதனு தஞ்சத்தி
மேவுஞ் சிவத்துட னேபரமாம்
தாண்டிக்கொ ளிந்த வகையா றும்யோக
சாதக சாக்கிரம் ஞானப்பெண்ணே. 81

சாக்கிரம் விந்துக்கு மேலண்ட மாமதைச்
சார்ந்திடும் நிற்குண நிட்களந்தான்
பார்க்கில் நிரா தார மாமலத் தை அதைப்
பாரா விடமந்தம் ஞானப்பெண்ணே. 82

அந்த மடியிந்த மேலா றுங்கண் டே
ஆர றி வாரடி ஞான வழி
சிந்தை தெரிந்த பெரியோ ரைக்கண்டு
சேவித்துக் கும்மி யடியுங்கடி. 83

சேவிப்ப துந்தவ னந்தியடி யோக
மாய்நிற்ப தும்விந்து நாதமடி
ஆவிக் கிசைந்த சதாசிவ சாக்கிரம்
அவ்விட மாமடி ஞானப்பெண்ணே. 84

அவ்விட் டே யுவ் விட்டே மேற்சுழி யிற்சுழி
அங்கி யைவிட்டுக் காலாலே
மவ்விட்டு நாத விந் துட் பொரு ளைக்கண்டு
வாழ்த்திக் கும்மி யடியுங்கடி. 85

மூழக்க மென்ன பிரணவ மாமதை
மூட்டுச் சமாதியி லிரேசகத்தை
விளக்கு மாகு மிரவிகாந் தி நித்தம்
வேண் டிக் கும் மி யடி யுங்கடி. 86

பார்க்குஞ் சுழுமுனை காணு ரேயது
மூக்கு நுனியென் றறியாரே
மார்க்க மறிந்து பெரி யோ ரைக்கண்டு
வாழ்த்திக் கும்மி யடியுங் கடி. 87

வாழ்த்தி யடி பெண்ணே ரேசகத் தைவினை
மாற்றி யடி பெண்ணே பூரகத்தை
தூற்று மகாமிய சஞ்சிதத் தைத்தொல்லை
தொலைத்துக் கும்மி யடியுங்கடி. 88

பாசமற் றவிடம் கோர மாம்ஒரு
பாதியி னின்றிட யோகமுமாம்
நேசமற் றுர்பிர்ம ஞான சமாதியும்
நிருவி கற்பமாம் ஞானப்பெண்ணே. 89

கற்ப மடியிது மெய்யா குமற்றைக்
கர்ம மெல் லாமிக அற்பமடி
தற்பரா னந்த சதாசிவ மோனத்தைச்
சார்ந்து கும்மி யடியுங்கடி. 90

பாசத்தைச் சொல்லு மூடலாக அந்தப்
பசுவைச் சொல்லு முயிராக
நேசத்தி னிற்பது யாதது பிரம
நிட்டை யென் பாரடி ஞானப் பெண்ணே. 91

தேகத்துக் காதியா மைம்பூ தமற்றைச்
செயலுக் காதியாம் விட்சேபம்
மோகத்துக் காதியா மம்மா யையின்னும்
முழுதுங் கேளடி ஞானப்பெண்ணே. 92

இன்ன மூண் டந்த வியாகிரு தற்கும்
இரணிய கர்ப்பன் விஷ்ணுவுக்கும்
மின்னிய விராட்பு ருடனுக் குமின்னும்
மேலுண்டு சைதன்யம் ஞானப்பெண்ணே. 93

சைதன்னிய வத்துவே பிரமம டிஅந்தச்
சாட்சிக்குப் பிரதி பிம்பமடி
மெய்நின்ற சுத்த அறிவா னால்ப்ரதி
பிம்பத்தைத் தள்ளலாம் ஞானப்பெண்ணே. 94

ஆமடியிந்தப் பதந்தா னேகண்டால்
ஆதியு மந்தமுநீ தானே
நாமடி வாசிக் குதிரையி னால்மிக்க
நல்ல கதியடி ஞானப்பெண்ணே. 95

சாதிக் குதிரை வலுவே கஞ்சரு
தாரு இருக்கின்றான் மேலாக
வீதிக்கு வீதி சாரிவைத் தாற்பரி
வேடிக்கை பார்க்கலாம் ஞானப்பெண்ணே. 96

கட்டுப்படா தந்த அச்சுமட் டம்அது
காலோ பன்னிரண் டாகையினுல்
எட்டுக் கயிற்றினுற் கட்டிக்கொண் டாலிது
மட்டுப் படுமடி ஞானப்பெண்ணே. 97

கட்டுப் படுமோ மலவா யில்நடு
மையத்தின் குண்டலி வாசியினுல்
எட்டையும் நாலையுங் கட்டியே போற்றிடில்
ஏறி நடத்தலாம் ஞானப்பெண்ணே. 98

சூட்சக் குதிரை யடங்கா துசுழிக்
கோட்டுக்குட் செல்ல முடியாது
மூச்சுக் காயிரங் காதவ ழிமிக
முந்தி நடக்குதாம் ஞானப்பெண்ணே. 99

குதிரை கட்டிய லாயத்தி லேமனக்
கோட்டையி லேசந்தைப் பேட்டையிலே
எதிரி தான்வந்து தட்டுகி ருனதை
ஏதென்று கேளடி ஞானப்பெண்ணே. 100

காமனெ வருக்தும் மூத்தவ னுமவன்
கற்றிடும் வித்தைகள் மெத்தவுண்டாம்
தாமத மான குரோதனும் லோபனுந்
தம்பியாங் கேளடி ஞானப்பெண்ணே. 101

மோக மதமிரு பிள்ளைக ளாம்ஒரு
மூர்க்க மமசியக் காரனெடு
சேகர விரசை டம்பனுஞ் சம்பனுஞ்
சினேக மாமடி ஞானப்பெண்ணே. 102

சினேகனுக் கேற்ற வுறவாளி பொல்லாத்
தீயவ னுகுமோ ராங்காரி
அனேகத்தைச் செய்யு மவதியில் ரோசனும்
அத்தை மகளடி ஞானப்பெண்ணே. 103

பெண்ணே கேளு பதின்மூன்ருகிய
பேர்க ளுண்டு பகையாளர்
ஒன்றே யொன்று வசமா னுலவர்
ஒடுங்கு வாரடி ஞானப்பெண்ணே. 104

ஒடுக்க மில்லை யிவரா லேபலன்
ஓட்டமெல் லாமனக் கோட்டையிலே
படுக ளத்துக்கு மேய்ந்துவ ரப்பசு
பற்றுகி ருரடி ஞானப்பெண்ணே. 105

பாம்பி ருக்குது புற்றுக்குள் ளேசுக
பந்த மிருக்குது நெஞ்சுக் குள்ளே
வீம்பை யடக்கி யுயர்ந்தக் கால்பரி
வேடிக்கை பார்க்கலாம் ஞானப் பெண்ணே. 106

பித்துப் பிடித்த மனக்குரங் குவெறிப்
பேயும் பிடித்துக்கொண் டாட்டமிட்டால்
அத்தை யடக்க மருந்துசெய் தாற்பரி
அன்று நடத்தலாம் ஞானப்பெண்ணே. 107

நடத்த லாமே மனவா சிஒரு
நாலைந்து பீற்றலை மூடாமல்
திடத்தி னுல்மனஞ் சித்தா னுற்சித்தந்
தெளிந்து கொள்ளலாம் ஞானப்பெண்ணே. 108

தெளிந்த சித்தகம் பூட்டிய திற்சேணத்
தேறு மறிவை ய திர்சேர்த்துக்
குளிர்ந்து ஞானவை ராக்கியக் குறடா
கொண்டு மாட்டடி ஞானப்பெண்ணே. 109

மூலத் தெருவி லொருபாய்ச் சலந்த
முச்சந்தி வீதியி லோர்பாய்ச்சல்
மேலைத் தெருவி லொருபாய்ச் சற்பரி
வேடிக்கை பார்க்கலாம் ஞானப் பெண்ணே. 110

அந்த விதங்கள் அறியா மல்மணி
மந்திர மென்று திரிகின்றார்
அந்தர மான வெழுத்தறிந் தால்மணி
மந்திர மல்லவோ ஞானப்பெண்ணே. 111

மவுன மந்திரங் களினாலே தங்கள்
வாய்தனை மூடித் திரிவார்கள்
புவன சாரம் புசிப்பார்க் குமதி
போசன மாகுமோ ஞானப்பெண்ணே. 112

தாயென்று சொல்லுவார் சொப்பனத் திற்காம
சன்னதம் வந்தால் நினைப் பாரோ
வாய்கொண்டு வேதம் படித்தா லுஞ்சுத்த
மௌனந் தந்தமோ ஞானப்பெண்ணே. 113

தாடி வளர்த்துச் சடைவளர்த் துநல்ல
சந்யாசி யென்றொரு வேடமிட்டே
ஓடித் திரிந்த விளையாட் டையிங்கே
ஒப்புவ தாரடி ஞானப்பெண்ணே. 114

பேசா திருக்கும் இடம்பார்த் தேஅதைப்
பெற்றே யிருப்பது மந்திரமாம்
ஆசானென் றேயுப தேசமிட் டாற்குரு
அல்லவென் றும்மி யடியுங்கடி. 115

சொற்குரு வாலே கதியா மோபொய்யைச்
சொல்லுவார் தங்க ளுறவாமோ
சற்குரு வானவ ரைச்சேர்த் தேயவர்
தம்சொல்லைக் கேளடி ஞானப்பெண்ணே. 116

நானென்ற ஆணவம் பேசார் கள்நல்ல
நாடென்றுங் காடொன்றுஞ் சொல்வார்கள்
தானென் றியாவையுங் கண்டா ரேநல்ல
சற்குரு வாமடி ஞானப்பெண்ணே. 117

குருவி நப்பதும் உள்ளத்தி லேமனக்
கோணல் அறுப்பதுந் தனக்குள்ளே
பொருளி ருப்ப தறியா மற்புடம்
போடுவ தெப்படி ஞானப்பெண்ணே. 118

வாதஞ் செய்ய அறியா மல்ரச
வாதஞ் செய்கிறே மென்று சொல்லிச்
சூதங் கெந்தி புடத்திலிட் டாலதிற்
சொன்னம் விளையுமோ ஞானப்பெண்ணே. 119

லிங்க முருக்க அலைவார் கள்சாதி
லிங்க மிருப்ப தறியாமல்
வங்கமுந் தங்கமுஞ் சேர்த்து ருக்கினல்
பங்கமி தல்லவோ ஞானப்பெண்ணே. 120

பாசா ணங்கு கை தன்னில்வைத் துவெள்ளைப்
பாலா லூட்டிக் குகைமூடி
ஈசானி யப்புட மிட்டா லுமதில்
இருப்ப தென்னடி ஞானப்பெண்ணே. 121

காரண மானது காரிய மாவதைக்
கட்ட அறியார் முழுமூடர்
பூரண மென்று திரிந்தா லுமதிற்
புண்ணிய முண்டாமோ ஞானப்பெண்ணே. ()

முப்பூ வென்று திரிவார் கள்அந்த
முப்பூ வந்த வகைகாணர்
அப்பூ வென்று மறிந்தக் காற்சித்தி
ஆமென்று கும்மி அடியுங்கடி. 123

காரத்தைக் கட்ட அறியார் கள்கடுஞ்
சாரத்தை நீற்றினஞ் செய்யாமல்
வீரத்தைப் பூரத்தை சேர்த்தத னலது
வீணல்ல வோசொல்லு ஞானப்பெண்ணே. 124

கோசவித் தையை யறியா மல்லோக
வேசத்தி னின்று மலேவார்கள்
கோச பீசம றிந்தா லேவாதங்
கோசா மாமடி ஞானப்பெண்ணே. 125

வாதத் திறவுகோல் காணு ரேபஞ்ச
பூதச் சரக்கையுந் தோணுரே
எதுக்குக் கண்புடை நந் தூதுகின் ருரிதை
ஏதென்று கேளடி ஞானப்பெண்ணே. 126

துருசு சுன்ன முடிந்தாச் சேஅதைச்
சோதிக்க எட்டரை மாற்ருச்சு
பொருளேச் சொல்லிப் பணம்பறிப் பாரிவர்
பொய்க்குரு அல்லவோ ஞானப்பெண்ணே. 127

கவனி சூத முடிந்ததென் பார்ஊசிக்
காந்தத்தைக் கிண்ணமுஞ் செய்தோமென்பார்
புமனி வாதப் புரட்டா லேயவர்
பிழைக்கி ருரடி ஞானப்பெண்ணே. 128

பிழைக்க முத்தி யறியா மற்சென்ம
பூர்வக் கியானந் தெரியாமல்
தழையைத் தின்று சருகா கித்திசை
தயங்கு ருரடி ஞானப்பெண்ணே. 129

தயங்கி யென்ன பலனு மோமனஞ்
சாதித்து நிற்கத் திறமாமோ
மயங்கி டாதே அழலே மகத்துவம்
மருவ தெப்படி ஞானப்பெண்ணே. 130

உப்பை யறிந்தவ னேவா திசகத்
துப்பை யொழிந்தவ னேயோகி
தப்பிலே யேபூமி நாத மகிமையைச்
சார்ந்து பாரடி ஞானப்பெண்ணே. 131

வீட்டி லிருக்குதொருமூ லம்வெள்ளிக்
காட்டி லிருக்கு திருமூலம்
மாட்டி லிருக்கும் பெரியோர்க் குரச
வாதமி தல்லவோ ஞானப்பெண்ணே. 182

தோணு தென்ற சரக்கெடுத் துக்கருஞ்
சூரா சூரையில் வைத்தெடுப்பச்
சாணுன் கண்ட பொருள்போ லேசித்தி
தானென்று கும்மி யடியுங்கடி. 183

நெல்லி யிருக்குது காட்டுக்குள் ளேகரு
நெல்லி யிருக்கு து வீட்டுக்குள்ளே.
கொல்லி மலைக்குத் திரிந்தா லும்தரு
கொண்டு வருவாரோ ஞானப்பெண்ணே. 184

காயாம் பட்டிக்கு ளத்துக்குள் ளேவெள்ளைக்
காயா வேரு முளைத்திருக்கும்
வாயாற் றின்று நிமிர்ந்தக் காலுடல்
மாயா தல்லவோ ஞானப்பெண்ணே. 185

கற்ப நிலையறிந் தெண்ணு மல்வெறிக்
கஞ்சா வுண்டு விழிப்பார்கள்
அற்பர் குகைமலை சென்று லும்வத்தை
அறிய லாகுமோ ஞானப்பெண்ணே. 186

கொங்கணர் சொன்ன கடைக்காண் டம்அதிற்
சங்கை யறிவது பிரமாண்டம்
எங்கள் குருசட்டை மாமுனி யாரிரு
நூறும் பாரடி ஞானப்பெண்ணே. 187

நூறிலுரைத்தது மெய்ஞ்ஞா னந்திரு
மூல ருணர்ந்தது வேஞானம்
பூரண தம்ப முனிசொன்ன சூத்திரம்
பூண்டகம் பாரடி ஞானப்பெண்ணே. 188

தீட்சையில் மச்ச முனிதீட் சையவர்
செப்பின ஞான மொருநூறும்
தாழ்ச்சிவா ராது பெரியோ ரைக்கண்டு
சாட்சி கேளடி ஞானப்பெண்ணே. 139

ரேசக பூரக கும்பகத் தால்வாசி
நேரிட்டுச் செய்வதும் ஆசையடி
கேசர மாகிய அத்தை பிரமத்தைக்
கிட்டிக் கும்மி யடியுங்கடி. 140

உப்பை விடுவதும் ஆசையடி அன்னம்
ஓர்பொழு துண்பதும் ஆசையடி
செப்பவொண் ணாத மனோன்மணி தேவனைச்
சேர்ந்து கும்மி யடியுங்கடி. 141

வாசலி லேயொரு மேல்வா சலந்த
வாசலி லேசிறு வாசலுண்டு
நேச முடன்சிறு வாசலிற் பூட்டியே
நெருக்கம் பாரடி ஞானப்பெண்ணே. 142

தேசங்கள் போவதும் ஆசைய டிதல
தெய்வமுண் டென்பதும் ஆசையடி
நேச மெய்ப்பிர மஞான சோதியைச்
சேர்ந்து கும்மி யடியுங்கடி. 143

சமய பேதமும் ஆசைய டிகங்கா
ஸ்நான பூசையும் ஆசையடி
மமதை யற்றிருக் கின்ற மமதையை
வாழ்த்திக் கும்மி யடியுங்கடி. 144

பால்கற வாப்பசு தள்ளுங்க டிபதி
பாசத்தை யும்விட்டுத் தீருங்கடி
மேல்வி ளங்கிய தற்பர சோதியை
வேண்டிக் கும்மி யடியுங்கடி. 145

தத்துவக் குப்பையைத் தள்ளுங்க டிவேத
சாத்திரப் பொத்தலை மூடுங்கடி
முத்தி தருஞான வத்துவை வாவென்று
மூட்டிக் கும்மி யடியுங்கடி. 146

ஆரு தாரமுந் தொல்லைய டியதற்
கப்பா லேயொன்று மில்லையடி
சீராய் நின்ற நிலைபார்த் துப்பெண்கள்
சேர்ந்து கும்மி யடியுங்கடி. 147

சித்தர் சொற்படி சித்தானந் தங்கண்டு
தெளிந்து கொள்ளடி வேதாந்தம்
தத்துவ மாகிய வுற்பத்தி சூக்குமச்
சார்பு கேளடி ஞானப்பெண்ணே. 148

சார்புதா னென்னடி வேதாந் தஞ்சொல்லுந்
தத்துவந் தானிவ் வகையுடனே
கார ணாதி அவத்தை நிலைகளின்
கண்க்கு ரைக்கிறேன் ஞானப்பெண்ணே. 149

உரைக்குந் தத்துவம் நாலே ழிற்கண்டே
ஓதுஞ் சித்துரு நாலாரும்
மறைக்குட் சொல்லிய சித்துரு நாலாகும்
மகிமை பாரடி ஞானப்பெண்ணே. 150

மகிமை யாகிய தொம்பத மாமதில்
வந்த வுபாதி யுணர்த்துகிறேன்
தகைமை யென்னமுன் சொன்ன வசித்திருத்
தன்செயல் கேளடி ஞானப்பெண்ணே. 151

வாசல் மிதந்த உடம்போ டுப்ராண
வாயுவோ டிந்திரிய மானதென்று
காசலை யாமதி சேர்ந்து வளர்ந்ததன்
காரணம் நாலடி ஞானப்பெண்ணே. 152

காரண மென்ப திவையே மூம்வந்து
கலந்த தாமடி தொம்பதத்தைத்
தாரண தொம்பத மான துரியத்தில்
தன்னுட லாச்சுதாம் ஞானப்பெண்ணே. 153

தன்னுட லாகிய சாக்கிரத் தைத்தன
தாக விருந்திடும் ஆத்துமற்குப்
பின்சொல்வ தாம்விசு வனென்ற பிமானப்
பேரல்லோ சொல்லடி ஞானப்பெண்ணே. 154

பேர்பெறும் எந்த்ரமு பாதியு டன்கூடப்
பெற்றிடு சூட்சுமச் சொப்பனத்தின்
சார்பி விருந்த துரியற்து நாமமுஞ்
சைதன் யமடி ஞானப்பெண்ணே. 155

ஆகும் பிராணனல் ஆய்வு டன்கூடி
அடங்கி மூலத்து டன்சேர்த்து
சேகர மாவந்த நாத துரியத்தைச்
சேர்ந்திடிற் காரண தேகமடி. 156

சேர்ந்த அவத்தை சுழுத்திய டியதைச்
சேர்ந்த வனும்பிராக்ஞ னுதமடி
கூர்ந்த மூன்றையுங் கண்ட துரியத்தைக்
கும்பிட்டுக் கும்மி யடியுங்கடி 157

கும்பிட்டுத் தொம்பதச் சித்தார்த் தங்கண்டு
கூறிய ஞாய மிதுபோல
அம்பிட்டுத் தற்பதமான விவேகத்தை
அறியச் சொல்லுவேன் ஞானப்பெண்ணே. 158

அறிவ தென்னடி தொம்பத மாம்பொருள்
ஆன வுபாதியும் ஆனதுபோல்
சருவ தற்பர மான பொருளுக்குத்
தன் னுடைச் சீவன் துரியமடி. 159

சர்வஞ்ஞ னுஞ்சரு வக்கார னுஞ்சரு
வேந்திரி யாமிசர் வேசுரனுஞ்
சர்வ சிருட்டி சர்வதி திசர்வ
சங்கார னும்பேராம் ஞானப்பெண்ணே. 160

பேரான தென்ன இவையே மூமிகப்
பேசிடில் வேதம் துரியமடி
தோரா வுபாதியைப் பெற்றத னல்முத்தி
துாசண முண்டாச்சு ஞானப்பெண்ணே. 161

துாசணச் சீவ னிவையே மூங்கண்டு
சொல்லும் பரனுக் குட லாச்சு
சாசுவ தமென்ற தானத்தி னுற்சாயா
கிரக மென்றுபேர் ஞானப்பெண்ணே. 162

சாக்கிரந் தன்னைத்தா னென்றுசொல் லியப்பால்
தானபி மானித் தருந்தாக்காற்
சேர்க்க விராட்டெனச் சொல்லுவார் நாமந்
தெரிந்து கொள்ளடி ஞானப்பெண்ணே. 163

தெரிந்த மூன்றனு பாதியு மாமதிற்
சேர்ந்த பரன்பர சொப்பனமாம்
பிரிந்தி டாதபி மான னிரணிய
கற்பனென் பாரடி ஞானப்பெண்ணே. 164

பாரு மிதிலொரு பாதியு டன்பரா
பரனுக் கல்லவோ பார்சுழுத்தி
சேரும் பொழுது வியாகிரு தனெனச்
சிந்தையிற் காணடி ஞானப்பெண்ணே. 165

காணடி தற்பர சித்தார்த் தமதைக்
கண்டு தெரிந்த வகைபோலே
ஊனடிஞான சிவப தார்த்தத்தில்
உண்மையைக் கேளடி ஞானப்பெண்ணே. 165

உண்மையாந் தற்பர நற்றுரி யங்கண்டு
உற்றுப்பா ராதொரு தோடமு தால்
தன்மைச் சிவபத சுத்தனுக் குப்பரன்
தன்னுட லாச்சுது ஞானப்பெண்ணே. 167

ஓதும் பரம்விஸ்வ கிராசம டியுப
சாந்த மெனும்வகை மூன்றிலொன்றைச்
சாதனை செய்த சிவத்துக்கல் லோபர
சாக்கிர மாகுமே ஞானப்பெண்ணே. 168

ஆகும் பொருள்சிவ சாக்கிரத் தையபி
மானித்தி ருந்த சிவதுரியம்
சேகர மாயிடிற் சிறிசொ லிதையென்று
செப்பிடும் வாக்கியம் ஞானப்பெண்ணே. 169

வாக்கிய மாய்விஸ்வ கிராசம டியந்த
மார்க்கமென் னசிவ சொப்பனத்தைப்
பாக்கி யனபி மானிடத் திற்பிரசா
பந்த னென்றுசொல் ஞானப்பெண்ணே. 170

சொல்வது மென்ன வுபசாந் தஞ்சிவ
சுழுத்தி தானென்றி ருந்தாக்கால்
நல்லது பொற்புறு சார்தனென் றுலஃது
நாமம தல்லவோ ஞானப்பெண்ணே. 171

நாமச் சிவதுரி யத்தில டியபி
மான மிழந்து தனித்ததனுல்
நேமமி தல்லவோ வாதி துரியத்தின்
நிலைமை கண்டிலர் ஞானப்பெண்ணே. 172

கண்டறி யாதது முற்றுரி யமதைக்
கண்டு சுழன்றுமே லானதடி
பண்டு பிரமா னந்த சொரூபத்தைப்
பணிந்து கும்மி யடியுங்கடி. 173

பணிந்த ஞான மது தாண் டிபர
மானந்த மான திது தாண்டி
துணிந்து பாருமா னந்த சொ ரூபனைத்
தொழுது கும்மி யடியுங்கடி. 174

தொழுது கொள்ளுஞ் சுகசீ வபர
சுத்தப் பொருளு மிது தாண்டி
பழுதி லாதசொ ரூபக் குருவுடைப்
பாதமி தல்லவோ ஞானப்பெண்ணே. 175

பாதமி தாகிய தொம்பத மாம் அதிற்
பாதமுந் தற்பர மானதடி
பேதவு பாதி யவத்தைக ளும்பல
பேர்களு மானது ஞானப்பெண்ணே. 176

பேருக்குச் சார்ந்த துரியம டியதைப்
பேசவுந் தற்பிர காசமடி
யாருக்குங் கண்டறி யாத பொருளைக்கண்
டகந்தெளிந் துகும்மி யடியுங்கடி. 177

முத்தி பெறுந்தேவ தத்தனைப் போற்சக
முழுதுந் தன்மய மானதடி
நத்தியை விட்டுவி டாதேயி லக்கண
ஞானமி தல்லவோ ஞானப்பெண்ணே. 178

ஞானமாம் மோட்சம் இதுதாண் டிமற்ற
ஞாயமெல் லாமன மாயமடி
தானசங் கற்ப விகற்ப சமயமுந்
தன்மய மானது ஞானப்பெண்ணே. 179

தூர தூரமு மில்லைய டியதைச்
சொல்வதுங் கேட்பது மில்லையடி
தாரார் பிரம நிலைபார்த் துப்பெண்கள்
தாண்டிக் கும்மி யடியுங்கடி. 180

அண்டமும் பிண்டமும் பாழாச் சேஅதற்
கப்பாலும்பெரும் பாழாச்சே
உண்டில்லை யென்று பராபரப் பிரமத்தை
உவந்து கும்மி யடியுங்கடி. 181

சொல்லினும் கல்லினும் நில்லா தேபிரம
சோதியை யாதியைத் தூவெளியை
வல்லதத் தற்பிர காச மவுனத்தை
வகை யறிந்துகொள் ஞானப்பெண்ணே. 182

பிருதிவி தூய்மை மயமாச் சேயதில்
பேதம் பலபல வுண்டாச்சே
சுருதி முடிவைக் குருசொல்லு வாரந்தச்
சூட்சந் தெரியுமோ ஞானப்பெண்ணே. 183

அறிந்து கொண்ட பெரியோர் பாதங்கள்
அர்ச்சனை செய்துகும் மித்தமிழைப்
பிரிந்தி டாமனூற் றெண்பத்தைந் துகண்ணி
பேசினேன் சற்குரு தாள்வாழி. 184

சற்குரு பாத மிகவா ழிவாலை
சாமி தமிழ்நிதந் தான் வாழி
நற்குண ஞானக்கும் மித்தமிழ் கற்றவர்
ஞான நெறியே மிகவாழி. 185

ஞானக் கும்மி முற்றிற்று.

———

# சுப்பிரமணியர் ஞானம்

## காப்பு

*எண்சீர் விருத்தம்*

ஒழியாத சுழுமுனையி லொடுங்கி நல்ல
உற்றகலை வாசிசிவ யோகத் தேகி
வழியான துறையறிந்து மவுனங் கொண்டு
மகத்தான அண்டவரை முடிமேற் சென்று
தெளிவான ஓங்கார வடிவேல் கொண்டு
தெளிந்துமன அறிவாலே தன்னைக் கண்டு
வெளியான பரவெளியில் வாச மாகி
வேதாந்த சத்திசிவ ஆதி காப்பே.

## நூல்

ஆதியிலே பராபரத்திற் பிறந்த சத்தம்
அருவுருவாய் நின்றபர சிவமு மாகிச்
சோதியென்ற சிவனிடமாய்ச் சத்தி யாகித்
தொல்லுலகி லெழுவகையாந் தோற்ற மாகி
நீதியென்ற அறிவதனால் தானாய் நின்று
நிறைந்தபரி பூரணநிட் களமு மாகிச்
சாதியென்ற சத்திசிவ மருள் தன்னாலே
சண்முகனுங் கணபதியுந் தாமுண்டாச்சே. 1

உண்டான சத்திசிவம் ஏக மாகி
உளங்கனிந்து பூரணமாய் நிற்கும் போது
குண்டான மாங்கனியைக் கையில் வாங்கிக்
குமரனுடன் கணபதியைக் குணமாய்ப் பார்த்து

நன்றாகக் கிரிவலமாய் வந்த பேர்க்கு
நல்லகனி தானீவோம் என்று சொன்னார்
பன்றான கனியறிந்து குமரன் றானும்
பாய்ந்துமயி லேற்கிரி வலஞ்சென் றானே. 2

சென்றபின்பு கணபதியும் ஆலோ சித்துத்
தீர்க்கமுள்ள மேருகிரி நீர்தா மென்று
கண்டவுடன் சிவனுமைபாள் பாதந் தன்னைக்
கருத்துடனே சுற்றிவந்து கனியை வாங்கிக்
கொண்டந்த சிவனுமையைத் தியானஞ் செய்து
குறியறிந்து நெறிதமக்குள் திருவைப் போற்றித்
தின்றுருசி கண்டறிந்து நிற்கும் போது
தீர்க்கமுள்ள கணபதியை வாவென் றாரே. 3

வாவென்றே எடுத்தணைத்தங் கருட்பா லீந்து
மகத்தான ஐவருக்கும் பீட மாகி
ஆவென்று மூலமதற் கரசாய் நின்றே
ஐந்தெழுத்திற் குயிரான ஆதி யாகிக்
கூவென்ற சத்துசித்த சுத்த மாகிக்
குவிந்தெழுந்த வாதிதரு தேசி யாகிப்
பூவென்ற வாயிரத்தெண் மலருக் குள்ளே
பொருந்திமன அறிவாலே யிருந்து வாழே. 4

இருந்துவா ழென்றுரைத்த வேலை தன்னில்
ஏகாந்த மயில்வீர னெதிரில் வந்தே
அருந்தவமாய் நின்றநிலை தன்னைப் பார்த்தே
அருமையுள்ள கண்மணியே வாவென் றேதான்
வருந்தியே மாங்கனியொன் றீந்து நல்ல
மகத்தான அண்டரண்ட வரைகள் சுற்றித்
திருந்தியே தீர்க்காயுள் பெற்று வாழ்ந்து
தீர்க்கமுடன் மலைக்கரசா யிருந்து வாழே. 5

வாழென்று சொன்னவுடன் மயில்வீ ரன்தான்
மகத்தான சிவசக்தி பதமேழ் கொண்டே
ஆவென்று மயிலேறிக் கயிலா சத்தை
ஆவலுடன் சுற்றிவரும் போதிலேதான்
சூழென்றே இமயகிரி வடபா கத்திற்
சுத்தசித்த மானதபோ தனர்கள் கண்டு
தாள்பணிந்து வணக்கமதாய் நிற்கும் போது
தபோதனர்கள் ரிடிகளுமே தாம்வந் தாரே. 6

வந்தவரைத் தான்பார்த்து வரையில் நிற்க
மகத்தான சற்குருவென் றடிப ணிந்தே
இந்தமலைச் சாரலிலே வெகுநா ளாக
இன்பமுடன் தவஞ்செய்து வாழ்ந்தோ மையா
அந்தமாய் ராட்சதர்க ளண்டி வந்தே
அலங்கோலஞ் செய்துமே துரத்து கின்றார்
சுந்தரமா யிருந்துதவங் காவாய் என்று
சுத்தசித்த மாய்த்தவத்தைத் தொடங்கி னாரே. 7

தொடங்கிமன மடங்கிநிலை தன்னைக் காத்துச்
சுத்தமுட னின்றுவிளை யாடும் போதில்
அடங்கிமன மடங்காத அசுரர் தாமும்
அஞ்சாமல் அழும்புசெய்யு மதத்தைப் பார்த்துத்
திடங்கொண்டு மயிலேறிச் செவ்வேல் கொண்டு
சிவந்துவரும் அசுரர்களை மாள வென்ற
படங்குவித்து வேல்முனையைத் தியானம் பண்ணிப்
பாயவிட அசுரர்களை பறந்து போச்சே. 8

பறந்துபோய்ப் பலவிதமாய் ரூபங் கொண்டு
பந்திபந்தி யாயசுரர் பறந்து வந்தார்
சிறந்துவந்த சேனைகளை நன்றாய்ப் பார்த்துத்
தீர்க்கமுள்ள மயிலேறித் தெளிந்து நின்றே

அறந்தழைக்க வேணுமென்ற தூல சூட்சம்
அருபமெனுங் காரணமாய் ரூபங்கொண்டு
நிரந்தரமாய் வந்தபொலா அசுராள் தம்மை
தீர்த்தூளி செய்துதவம் நிலைகொண்டாரே. 9

நிலைகொண்டு நின்றசெயங் கொண்டு சிந்தை
நேர்மையுடன் தவஞ்செய்யு முனிவர் கண்டு
கலைகொண்டு மனந்தெளிந்து மகிழ்ச்சி யாகிக்
கானமயில் வீரனடி கருதிப் போற்றித்
தலைகொண்டு தாள்பணிந்தே அருட்கண் பெற்றுத்
தபோதனரும் ரிடிகளுமே தாம்பணிந்து
சிலைகொண்டு நின்றவடி வேலன் தன்னைத்
தெரிசித்தே அவரவர்கள் பதிசென்றாரே. 10

பதிதேடி யவரவர்கள் செல்லும் போது
பக்தியுள்ள அகத்தியாமா முனிவன் வந்து
விதியறிந்தே அசுரர்கிளை மாள வென்ற
வெற்றியுள்ள வடிவேலைத் தியானம் பண்ணிக்
கெதியறிந்து தூலமுடன் சூட்ச மாகிக்
கிருபையுள்ள காரணமாம் ரூபங்கொண்டு
சதியறிந்து சங்காரஞ் செய்தீரையா
சண்முகமே என்குருவே சரணந் தானே. 11

சரணமென்ற அகத்தியமா முனியைப் பார்த்துச்
சண்முகமாய் நின்றவடி வேலன் தானும்
திரணமதாய்த் தானறிந்து நீயார் என்னத்
திருவடியைப் பூசைசெய்யுஞ் சேயன் என்றார்
கரணமந்தக் கரணமதாய் வந்ததேதோ
கருணையுடன் வாஎன்று கடாட்சம் நல்கித்
தருணமறிந் துதவுவது தருமமென்று
சங்கையுடன் தான்வந்த வகைசொல்வாயே. 12

சொல்லென்று மயில்வீரன் கேட்க வந்து
சோதிமய மானஅகத் தியர்தாம் சொல்வார்
சல்லென்று வந்தபொலா அசுராள் தம்மைச்
சண்முகமாம் நின்றவடி வேலுங் கொண்டு
செல்லென்று சங்காரஞ் செய்தீ ரந்தத்
திருவுருவாய் நின்றகா ரணத்தைக் காட்டி
உள்ளென்ற ஆகார தூல சூட்சம்
உண்மையென்ற காரணமு முரைசெய் வீரே. 13

உரைசெய்வீ ரென்றுசொன்ன வுறுதி கேட்டே
உண்மையென்று மயில்வீரன் உறுதி யாகி
நிரைசெய்தே எக்கியங்கள் தாமுண் டாக்கி
நேமமுடன் அகத்தியமா முனிவர் என்றே
அரையறிந்தே அருகிருத்தி ஓம குண்டம்
ஆதியென்ற மந்திரத்தி லங்கி யாக்கிப்
புரையறிந்து மந்திரங்கள் செபிக்கும் போது
பூரணமாய்க் கும்பமதில் தானுண் டாச்சே. 14

உண்டான பூரணமாய்க் கும்பம் வாங்கி
உண்மையென்ற மாமுனிக்கே அபிஷே கித்து
நன்றாக நவக்கிரக மொன்ப துக்கும்
நலமான அனுக்கிரக நிலையுங் காட்டிக்
குன்றான அனுக்கிரக வாசல் காணக்
குவிந்துமன அறிவதனால் விண்ணென் றானே. 15

விண்ணென்று விசையுடனே முனைநா வுள்ளே
மெய்ஞ்ஞான வாசலது திறக்கு மப்போ
கண்ணென்ற கபாடவழிக் குள்ளே நின்று
கலையறிந்து வாசியினால் காலம் நோக்கி

உன்னென்று மூலமதில் வங்கென் பூரி
உறுதியென்ற சமாதியிலே சிங்கென் ரேசி
என்றென்று மிப்படியே கொண்டு நின்ருல்
ஏகமுள்ள தசதீட்சை யுண்மை கேளே. 16

உண்மையுடன் சுழுமுனையில் விண்ணென்றூணி
உறுதியுடன் ஆதார தீட்சை கேளு
நன்மையுடன் ஓங்-ரீங்-அங்-உங்கென் ரூேதி
நாட்டமுடன் பதினாரும் உருவே செய்தால்
தண்மையுடன் கணபதியும் பிரகாசிப் பார்
தானமென்ற சுழுமுனையில் தன்னைப் பார்த்து
நுண்மையுடன் ஓம் நமசி வாய மென்ருல்
நோக்குமுன்னே பிரமந்தரி சனமு மாமே. 17

ஆமப்பா நமசிவா யநம வென்றே
அதன்பின்வய நமசிவய நமசியென்று
தாமப்பா தலைகாலால் மாறிக் கொள்ளு
சங்கையுடன் கால்தலையால் மாறிக் கொள்ளு
ஆமப்பா நமசிவய சிவயநம வென்றும்
அதன்பிறகு சிவயநம சிவநம வென்றும்
ஓமப்பா நமசிவய வென்று மாற
உண்மையென்ற ஆகாரஞ் சித்தி யாமே. 18

சித்தமுட னைந்தெழுத்தை மைந்தா நீயும்
செம்மையுடன் தலைகால்கால் தலையாய் மாறச்
சுத்தமுடன் ஆதரதே வதைகள் வந்து
சொன்னபடி யிருதயத்தில் சுகமாய் நின்று
பத்தியுட னிப்படியே தியானம் பண்ணிப்
பதிவாக விபூதியையுந் தளமாய்ப் பூசி
நித்தியமு மிப்படியே செய்து நின்ருல்
நிலையில்லாத் தூலசடம் நிலைக்கும் பாரே. 19

பாரப்பா கலையறிந்து நிலையில் நின்று
பத்தியுட னுதார சூட்சங் கேளு
நேரப்பா ஓம்கிலிஅங் கென்றென் றோது
நிலையறிந்தே அங்கிலிநங் கென்றென் றோது
காரப்பா வங்கிலிசிங் கென்றென் றோது
கருணையுடன் சிங்கிலிவங் கென்றென் றோது
சாரப்பா வங்கிலியங் கென்றென் றோது
சலுதியாம் அங்கிலிமங் கென்றென் றோதே. 20

ஓதியபின் வங்கிலிசிங் கென்றென் றோது
உண்மையுடன் அங்கிலிசிங் கென்றென் றோது
நீதியுடன் அங்கிலிசிங் கென்றென் றோது
நிலையறிந்து மங்கிலிரீங் கென்றென் றோது
ஆதியுடன் ரீங்கிலிஓ மென்றென் றோது
அப்பனே தலைகாலாய் மாறியபோது
சோதியுடன் சுழுமுனையில் மனக்கண் சாத்திச்
சுத்தமுடன் விபூதியைநீ தரித்துக் கொள்ளே. 21

கொள்ளப்பா விபூதியைநீ தரித்துக் கொண்டு
கூர்மையுடன் கால்தலையாய் மாறிக் கொண்டு
சொல்லப்பா ஓங்கிலிரீங் கென்றென் றோது
சுத்தமுடன் ரீங்கிலிமங் கென்றென் றோது
வில்லப்பா மங்கிலிசிங் கென்றென் றோது
விவரமதாய்த் தோற்றுமடா செய்கையாவும்
உள்ளப்பா மங்கிலிங் கென்றென் றோது
உத்தமனே சிங்கிலிமங் கென்றென் றோதே. 22

ஓதியபின் வங்கிலிசிங் கென்றென் றோது
வுத்தமனே சிங்கிலிமங் கென்றென் றோது
நீதியுடன் மங்கிலிநங் கென்றென் றோது
நிலையறிந்து நங்கிலியங் கென்றென் றோது

சோதியுடன் மங்கிலிஓ மென்றென் றோது
சுத்தமுடன் ஈராறு தவமுஞ் சித்தி
விதியென்ற ஆதார மேலா தாரம்
விண்ணடங்கிக் கண்ணடங்கி மேவி நில்லே. 23

நில்லப்பா கண்ணடங்கி விண்ணென் றூணி
நிலையறிந்து பிராணாயஞ் செய்தால் மைந்தா
கல்லப்பா தேகமது காலனேது
காலனென்னும் வியாதியெல்லாங் காணாதோடும்
உள்ளப்பா வாசியது முறுதி யாகும்
ஓதுகின்ற மந்திர முஞ் சித்தி யாகும்
சொல்லப்பா தூலமுடல் சூட்சஞ் சொன்னேன்
துலங்கிநின்ற தூலத்தின் சுருக்கங் கேளே. 24

சுருக்கமுடன் ஆதார தூல சூட்சஞ்
சொன்னபடி பிராணாயஞ் செய்து கொண்டே
உருக்கமுடன் ஜெபதபங்கள் பூஜை யாலும்
உண்மையா யுனக்குள்ளே கண்டு தேறிப்
பெருக்கமுடன் தானிருந்து சீவான் மாவே
பிரணவமாய் நின்றபரம் நீரு மாகி
நெருங்கியந்த அண்டவெளிக் குள்ளே சென்று
நேமமுடன் பிராணாயம் நினைவாய்ச் செய்யே. 25

செய்யப்பா பிராணாயம் நினைவாய்ச் செய்யச்
சிவசிவா கருமானஞ் செப்பக் கேளு
பொய்யப்பா போகாது பிராண வாயு
பொருந்திநின்று விளையாடும் புதுமை கேளு
பையப்பா சுழுமுனையில் விண்ணென் றூணிப்
பதியாக மூலமதில் வங்கென் பூரி
மெய்யப்பா சுழுமுனையில்சிங் கென்று ரேசி
வேகமுடன் கண்டம்அங் கென்று கும்பே. 26

அங்கென்று கண்டமதில் கும்பித் தேதான்
அசையாது வாசிதிரு வாசிதானும்
செங்கமல மானசுழி பிண்டத் தேறும்
திரும்பியந்தப் பிண்டமதில் சென்று வாழும்
சங்கையுடன் தன்னகத்தில் தானே தானய்த்
தன்மையுடன் நின்றுவிளை யாடும் வாசி
மங்களமாய்ச் சுழுமுனையில் விண்ணென் றூணி
மார்க்கமுடன் இகபரமா யிருந்து காணே. 27

காணவே சத்தியவள் தியானம் கேளு
கருவாகச் சொல்லுகிறேன் கருத்தாய்க் கேளு
பூணவே யுரைத்திடுவாய் அங்சிங் கென்று
புத்தியுடன் பதினறு வுருவே செய்து
தோணவே விபூதிதூ ளிதமே பூசிச்
சுத்தமுடன் பராசத்தி நிர்த்தஞ் செய்வாள்
ஊணவே யிப்படியே தியானம் பண்ணி
உண்மையுடன் பிராணய வுறுதி பாரே. 28

உறுதியுள்ள அகத்தியமா முனியே கேளாய்
உண்மையுள்ள சத்தியைநீ தியானம் பண்ணிப்
பருதிமதி சுடரொளிபோல் பஞ்ச கர்த்தாள்
பதியறிந்து பிராணயம் பதிவாய்ச் செய்து
சுருதிபொரு ளானதொரு பொதிகை மேவிச்
சுகசீவ பிராணகலை வாசி யேறிக்
கருதிமன மொன்ருகிச் சுழியில் நின்று
கலக்கமற்ற அமிர்தபா னங்கைக் கொள்ளே. 29

பானமென்ற மதியமிர்த பானங் கொள்ளப்
பரபிரம மானசுழி வழியுங் காட்டித்
தானமென்ற ஆதார மேலா தாரந்
தனையறியும் பிராணயச் சங்கை சொல்லி

ஞானமென்ற நிலைகாட்டி மூலங் காட்டி
நாதாந்த ஆறுமுக நிலையுங் காட்டி
மோனமென்ற வடிவேலின் முனையுங் காட்டி
முனையறிந்து கலைநிறுத்தி முடிமேல் நில்லே. 30

நில்லப்பா சதுரகிரி மூடியிற் சென்று
நிலையான பொதிகையிலே வாச மாகி
உள்ளப்பா தானாகி விண்ணென் றூணி
உன்மனத்தில் நினைத்தவொரு மந்த்ரந் தன்னைச்
சொல்லப்பா தியானமுடன் செபிக்கும் போது
சுத்தமுடன் சித்திக்கும் சும்மா நின்று
செல்லப்பா அட்டாங்க யோகத் தேகிச்
சிவாயவொரு பாதமதில் தெளிவாய் நில்லே. 31

தெளிவான தெளிவதனால் தன்னைக்கண்டு
தீர்க்கமுட னிருந்துதவஞ் செய்ய வென்றும்
அழியாத அனுக்கிரக வரமு மீந்தே
ஆர்வமுடன் மயில்வீரன் வடிவேலைக் கொண்டே
அழியாத அண்டவரை முடிமேற் சென்றே
அட்டகிரி பர்வதத்திற் கரசு மாகி
அழிவாகி அண்டவெளி யெங்குந் தானாய்
ஓங்கார வடிவேலை யுவந்தான் முற்றே. 32

சுப்பிரமணிய ஞானம் முற்றிற்று.

---

# காயகப்பல்

ஏலேலோ ஏகரதம் சர்வரதம்
பிரமரதம் ஏலேலோ ஏலலிலோ.

பஞ்சபூதப் பலகை கப்பலாய்ச் சேர்த்து
பாங்கான ஓங்குமரம் பாய்மரங்கட்டி
நெஞ்சு மனம் புத்தி ஆங்காரஞ் சித்தம்
மானுபி மானங் கயிறுகச் சேர்த்து
ஐந்தெழுத்தைக் கட்டிச் சரக்காக வேற்றி
ஐம்புலன் தன்னிலே சுக்கா னிறுத்தி
நெஞ்சு கடாட்சத்தால் சீனிப்பாய் தூக்கி
சிவனுடைய திருப்பொருளைச் சிந்தையில் நினைந்து
தஞ்சமான வெள்ளத்தில் தானே
அகண்டரதம் போகுதடா ஏலேலோ ஏலேலோ. 1

களவையும் கேள்வையுந் தள்ளுடா தள்ளு
கருணைக் கடலிலே தள்ளுடா கப்பல்
நிற்குணந் தன்னிலே தள்ளுடா தள்ளு
நிறைந்தபரி பூரணத்தால் தள்ளுடா கப்பல்
மூக்கணை மூன்றையுந் தள்ளுடா தள்ளு
மூப்பா மூக் கப்பாலே தள்ளுடா கப்பல்
திக்குதிசை யெங்கும் தள்ளுடா தள்ளு
திருமந்திரம் சொல்லி தள்ளுடா கப்பல்
பக்கமுடன் கீழ் மேலும் தள்ளு
பரவெளிக் கப்பாலே போகுதடா கப்பல்
ஏலேலோ ஏலேலோ. 2

தந்தைதாய் சுற்றமும் சகலமு மறந்து
தாரம் சகோதரம் தானதும் மறந்து
பந்தமும் நேசமும் பாசமும் மறந்து
பதினாலு லோகமும் தனையும் மறந்து
இந்திரியங்கள் இரட்சித்த கப்பலிலேறி
ஏகாந்த மானதொரு கடலிலே தள்ளி
அந்தர மானவெளி அருளானந்த வெள்ளத்தில்
அழுந்துதையோ காயகப்பல் ஏலேலோ ஏலேலோ.

காயகப்பல் முற்றிற்று.

---

# அகஸ்தியர் ஞானம்—13

எண்சீர் விருத்தம்

கற்பமென்ன வெகுதூரம் போக வேண்டா
கன்மலையில் குவடுகளில் அலைய வேண்டா
சர்ப்பமென்ன நாகமதோர் தலையில் நின்று
சாகாத கால்கண்டு முனையி லேறி
நிற்பமென்று மனமுறுத்து மனத்தில் நின்று
நிசமான கருநெல்லிச் சாற்றைக் காணு
சொற்பமென்று விட்டுவிட்டால் அலைந்து போவாய்
துரியமென்ற பராபரத்திற் சென்று கூடே. 1

கூடப்பா துரியமென்ற வாலை வீடு
கூறரிய நாதர்மகேச் சுரியே யென்பார்
நாடப்பா அவள் தனையே பூசை பண்ணு
நந்திசொல்லுஞ் சிங்கார ந் தோன்றும் தோன்றும்
ஊடப்பா சிகாரவரை யெல்லாந் தோன்றும்
ஊமையென்ற அமிர்தவெள்ளம் ஊற லாகும்
தேடப்பா இதுதேடு காரிய மாகும்
செகத்திலே இதுவல்லோ சித்தி யாமே. 2

ஆமென்ற பூர்ணஞ்சுழு முனையிற் பாராய்
அழகான விந்துநிலை சந்த்ர னிற்பார்
ஓமென்ற ரீங்காரம் புருவ மையம்
உத்தமனே வில்லென்ற வீட்டிற் காணும்
வாமென்ற அவன்பாதம் பூசைபண்ணு
மற்றொன்றும் பூசையல்ல மகனே சொன்னேன்
பாமென்ற பரமனல்லோ முதலெ முத்தாம்
பாடினேன் வேதாந்தம் பாடினேனே. 3

பாடுகின்ற பொருளெல்லாம் பதியே யாகும்
பதியில்நிற்கும் அட்சரந்தான் அகார மாகும்
நாடுகின்ற பரமனதோங் கார மாகும்
நலம்பெரிய பசுதானே உகாரமாகும்
நீடுகின்ற சுழுமுனையே தாரை யாகும்
நின்றதோர் இடைகலையே நாத விந்தாம்
ஊடுகின்ற ஓங்கார வித்தை யாகும்
ஒளியான அரியெழுத்தை யூணிப்பாரே. 4

உணியதோர் ஓங்காரம் மேலு முண்டே
உத்தமனே சீருண்டே ஊணிப் பாரே
ஆணியாம் நடுநாடி நடுவே மூட்டும்
ஆச்சரிய வெழுத்தெல்லாம் அடங்கி நிற்கும்
ஏணியா யிருக்குமடா அஞ்சு வீடே
ஏகாந்த மாகியவவ் வெழுத்தைப் பாரு
தோணிபோற் காணுமடா அந்த வீடு
சொல்லாதே ஒருவருக்குந் துறந் திட்டேனே. 5

துறந்திட்டேன் மேல்மூலங் கீழ்மூலம்பார்
துயரமாய் நடுநிலைமை யூணிப் பாராய்
அறைந்திட்டேன் நடுமூலம் நடுநடிப்பார்
அப்ப வல்லோ வரைதாக்கும் தாரை காணும்
உறைந்திட்ட ஐவருந்தான் நடனங் காணும்
ஒளிவெளியும் சிலம்பொலியு மொன்றாய்க் காணும்
நிறைந்திட்ட பூரணமு மிதுதா னப்பா
நிசமான பேரொளிதா னிலைத்துப் பாரே. 6

சும்மாநீ பார்க்கையிலே மனத்தை யப்பா
சுழுமுனையி லோட்டியங்கே காலைப் பாராய்
அம்மாநீ தேவியென்று அடங்கிப் பாராய்
அப்பவல்லோ காயசித்தி யோக சித்தி

உம்மாவும் அம்மாவும் அதிலே காணும்
ஒருமனமாய்ச் சுழுமுனையில் மனத்தை யூன்று
நம்மாலே ஆனதெல்லாஞ் சொன்னே னப்பா
நாதர்களி லிதையாரும் பாடார் காணே. 7

காணுகின்ற ஓங்கார வட்டஞ் சற்றுக்
கனலெழுப்பிக் கண்ணினிலே கடுப்புத் தோன்றும்
பூணுகின்ற இடைகலையில் பம்பரம்போ லாடும்
பொல்லாத தேகமென்று லுருகிப் போகும்
ஆணவங்க ளானவெல்லா மழிந்து போகும்
அத்துவிதத் தூரியாட்ட மாடி நிற்கும்
ஊணிய யீதா ரெழுத்தெல்லாந் தேவி யாகும்
ஓங்காரக் கம்பமென்ற உணர்வு தானே. 8

உணர்வென்றுற் சந்திரனி லேறிப் பாவி
ஓடியங்கே தலையென்ற எழுத்தில் நில்லே
அணுவென்றால் மனையாகுஞ் சிவனே யுச்சி
அகாரமென்ன பதியுமென்ன சூட்சமாகும்
கணுவென்ன விற்புருவ மகண்ட வீதி
கயிலாய மென்றதென்ன பரத்தின் வீடு
துணுவென்ற சூரியன்றன் நெருப்பைக் கண்டு
தூணென்ற பிடரியிலே தூங்கு தூங்கே. 9

மூவெழுத்தும் ஈரெழுத்து மாகி நின்ற
மூலமதை யறிந்துரைப்போன் குருவு மாகும்
ஊமெழுத்துக் குள்ளே தா னிருக்கு தப்பா
உணர்வதுவே கண்ட றிந்தோ னவனே யாசான்
யாவருக்குந் தெரியாதே அறிந்தோ மென்றே
அவரவர்கள் சொல்வார்க ளறியா மூடர்
தேவரொடு மாலயனுந் தேடிக் காணார்
திருநடனங் காணமுத்தி சித்தி யாமே. 10

ஈரெழுத்து மோரெழுத்து மாகி யாங்கே
இயங்கிநிற்கும் அசபையப்பா மூலத் துள்ளே
வேரெழுத்தும் வித்தெழுத்து மிரண்டுங் கொண்டு
வித்திலே முளைத்தெழுந்து விளங்கி நிற்கும்
சீரெழுத்தை யூணிநல்ல வாசி யேறித்
தெருவீதி கடந்தமணி மண்டபத்துச்
சாரெழுத்தி னுட்பொருளாம் பரத்தை நோக்கிச்
சார்ந்தவர்க்குச் சித்தி முத்தி தருமே தானே. 11

ஏகமெனு மோரெழுத்தின் பயனைப் பார்த்தே
எடுத்துரைத்து மிவ்வுலகி லெவரு மில்லை
ஆகமங்கள் நூல்கள் பல கற்றுக் கொண்டே
அறிந்தமென்பார் மவுனத்தை அவனை நீயும்
வேகாக்கால் சாகாத்தலை விரைந்து கேளாய்
விடுத்ததனை யுரைப்பவனே ஆசா னாகும்
தேகமதி லோரெழுத்தைக் காண்போன் ஞானி
திருநடனங் காணமுத்தி சித்தி யாமே. 12

குருவாக உமைபாக னெனக்குத் தந்த
கூறரிய ஞானமது பத்தின் மூன்று
பொருளாகச் சொல்லிவிட்டே னப்பா நீதான்
பொருளறிந்தார் பூரணமும் பொருந்திக் காணே
அருளாகா திந்நூலைப் பழித்த பேர்கள்
அருநரகிற் பிசாசெனவே அடைந்து வாழ்வார்
அருளாக ஆராய்ந்து பார்க்கும் பேர்கள்
ஆகாயம் நின்றநிலை அறிய லாமே. 13

அகஸ்தியர் ஞானம்-13 முற்றிற்று.

---

வால்மீகர் அருளிச்செய்த

# சூத்திர ஞானம்-16

எண்சீர் விருத்தம்

இருள் வெளியாய் நின்றசிவ பாதம் போற்றி
எழுத்ததனின் விவரத்தை விரித்துச் சொல்வேன்
அருவுருவாய் நின்றதுவே எழுத்த தாகும்
ஆதியந்தம் அண்ட பிண்ட மதுவே யாகும்
திருவுருவாய் ரவிமதியாய் நின்ற ரூபம்
சிவசத்தி திருமாலின் ரூபமாகும்
வருமுருவே சிவசத்தி வடிவ மாகும்
வந்ததிலும் போனதிலும் மனத்தை வையே. 1

வந்ததுவும் போனதுவும் வாசி யாகும்
வானில்வரும் ரவிமதியும் வாசி யாகும்
சிந்தைதெளிந் திருப்பவனு ரவனே சித்தன்
செகமெலாஞ் சிவமென்றே யறிந்தோன் சித்தன்
நந்தியென்ற வாகனமே தூல தேகம்
நான்முகனே கண்மூக்குச் செவிநாக் காகும்
தந்திமுகன் சிவசத்தி திருமூச் சாகும்
தந்தைதாய் ரவிமதியென் றறிந்து கொள்ளே. 2

அறிந்துகொள்ளு பூரகமே சரியை மார்க்கம்
அடங்குகின்ற கும்பகமே கிரியை மார்க்கம்
பிரிந்துவரும் ரேசகமே யோக மார்க்கம்
பிசகாமல் நின்றதுவே ஞான மார்க்கம்
மறிந்துடலில் புகுகின்ற பிராண வாயு
மகத்தான சிவசக்தி அடங்கும்வீடு
சிறந்துமனத் தெளிவாகிச் சேர்ந்தேன் சித்தன்
சிவசிவா அவனவனென்று றுரைக்க லாமே. 3

ஆமப்பா வுலகத்தில் பெருநூல் பார்த்தோர்
அவரவர்கண் டதையெலாம் சரிதை யென்பார்
ஓமப்பா கல்செம்பைத் தெய்வ மென்றே
உருகுவார் பூசிப்பார் கிரியை யென்பார்
வாமப்பா யோகமென்று கனிகாய் தின்று
வாய்பேசா ஊமையைப்போல் திரிகு வார்கள்
காமப்பா ஞான மென விண்டு மேலும்
காக்கைபித்தன் மிருகம்போல் சுற்று வாரே. 4

சுற்றுவார் பெருநூலைப் பார்த்துப் பார்த்துத்
தூடிப்பா ருலகத்தில் சிற்சில் லோர்கள்
தெற்றுவா ரவர்பிழைக்க அனேக வேடம்
தேகத்தி லணிந்து கொண்டு திரிகுவார்கள்
பற்றுவார் குருக்களென்பார் சீட ரென்பார்
பையவே தீட்சைவைப்பார் தீமை யென்பார்
கத்துவார் திரிமூர்த்தி தாமே யென்று
காரணத்தை யறியாத கசடர் தானே. 5

தானென்ற வுலகத்தில் சிற்சில் லோர்கள்
சடைபுலித்தோல் காசாயந் தாவ டம்பூண்
டேனென்ற வுடம்பெல்லாம் சாம்பல் பூசி
உலகத்தில் யோகியென்பார் ஞானி யென்பார்
தேனென்ற சிவபூசை திட்சை யென்பார்
திருமாலைக் கண்டாலே கண்டோ மென்பார்
கானென்ற காட்டுக்கு ளலைவார் கோடி
காரணத்தை யறியாமல் கதறு வாரே. 6

கதறுகின்ற பேர்களையா கோடி கோடி
காரணத்தை கண்டவர்கள் கொஞ்சம் கொஞ்சம்
பதறுகின்ற பேர்களெல்லாம் பராப ரத்தைப்
பற்றிநின்று பார்த்தவர்கள் சுருக்க மப்பா

உதறுகின்ற பேர்களெல்லாம் மூலகத் துள்ளே
　　உதித்தகலை தம்முள்ளே யறிய மாட்டார்
சிதறுகின்ற பேர்களைப்போல் சிதறி டாமல்
　　சிவசத்தி வரும்போதே தன்னில் நில்லே. 7

நில்லென்ற பெரியோர்கள் பாஷை யாலே
　　நீடுலகம் தன்னுள்ளே நாலு வேதம்
வல்லமையாய்ச் சாத்திரங்க ளிருமூன்றாக
　　வயிறுபிழை புராணங்கள் பதினெட் டாகக்
கல்லுகளைக் கரைப்பதுபோல் வேதாந் தங்கள்
　　கட்டினா ரவரவர்கள் பாஷை யாலே
தொல்லுலகில் நாற்சாதி யனேகஞ் சாதி
　　தொடுத்தார்க ளவரவர்கள் பிழைக்கத் தானே. 8

தானென்ற வுலகத்தி லில்லா விட்டால்
　　தன்பெருமை யாலறிந்து சகத்தில் வீழ்வார்
ஊனென்ற வுடம்பெடுத்தா லெல்லாம் வேணும்
　　உலகத்தி லவரவர்கள் பாவை வேணும்
மானென்ற சிவகாமி சிவனுங் கூடி
　　மாமுனிவர் முகம்பார்த்து மறைநூல் சொன்னார்
தேனென்ற சிவகாமி யருளி னாலே
　　திரட்டினார் வெகுகோடி தேச பாஷை 9

தேசத்தின் பாஷைதனை யறிந்தி டாமல்
　　தெளிவாகத் தாமுரைப்பார் பாஷை பார்த்தோர்
ஆசிப்பா ருலகத்தில் கண்ட தெல்லாம்
　　ஆச்சரியந் தனைக்கண்டு மறந்து போவார்
வாசிதனை யறியாத சண்டி மாண்பர்
　　வார்த்தையினால் மருட்டிவைப்பர் வகையி லாமல்
நாசிநுனி யதனடுவில் சிவத்தைக் கண்டோர்
　　நான்முகனும் திருமாலும் சிவனுந் தாமே. 10

சிவசிவா பதினெண்பேர் பாடற் கெல்லாம்
திறவுகோல் வால்மீகன் பதினாறும்
சிவம்பெத்த சித்தரெல்லா மென்னூல் பார்த்துச்
சிவனோடே கோள்சொன்னார் சினந்தான் நாதன்
அவமாகிப் போகாமல சிவனுத் தார
அருளினால் திறந்து சொன்னேன் உலகுக்காக
நவமான நவக்கிரகந் தன்னுள் ளேயே
நாக்குவாய் செவிமூக்கு மத்திக் கப்பால். 11

நாக்குவாய் செவிமூக்கு மத்திக் கப்பால்
நடுவீதி குய்யமுதல் உச்சி தொட்டுத்
தாக்குவாய் அங்கென்றே அதில் முட்டுத்
தாயாரைப் பூசித்து வேதம் ஓது
வாக்குவாய் அசையாமல் மவுனங் கொண்டு
வாசிவரு மிடத்தில்மனம் வைத்துக் காத்து
நீக்குவாய் வாசியொடு மனந்தான் புக்கு
நினைவதனி லடங்கிவரும் வரிசை காணே. 12

காணரிதே யெவராலு மிருசு வாசம்
காண்பவனே சிவசித்த னவனே யாதும்
பூணரிதிவ் வுலகத்தி லிந்நூல் கிட்டில்
பூலோக சித்தனென வுரைக்க லாகும்
காணரிது சிவசத்தி திருமூச் சாகும்
காட்டாதே மூடருக்கே யிந்நூல் தன்னை
தோணரிதே விழிமயக்கம் சும்மா போமே
சொல்லரிய சூட்சுமத்தைச் சொன்னே னப்பா. 13

சூட்சமிந்நூல் சொல்லுகிறேன் வாசி காண
சூட்சாதி சூட்சத்தைத் துறக்கப் போகா
சாட்சியில்லை துணையில்லை கேள்வி யில்லை
சந்தேக மொன்றுமில்லை விழியைக் காணக்

காட்சியென்ன கற்பகத்தில் வசிக்கு மாப்போல்
காரணத்தைக் கண்ணுலே கண்டி ருக்க
ஆட்சிதரு முமையாளப் படியே கண்டேன்
ஆனந்தத் திருக்கூத்தின் நடக்கை காப்பே. 14

காப்பதற்குப் பத்தியத்தைச் சொல்லக் கேளு
காய்கனிகள் பஞ்சரசம் பரமான் னங்கள்
ஏற்கையுட னுண்டுகொண்டு சிவத்தைக் காத்தே
என் மகனே சித்தருடைக் குருநூல் பாராய்
ஆத்துமத்துக் கழிவில்லா திருக்க வேணும்
அவரவர்கள் நித்யகர்மம் நடக்க வேணும்
தீர்க்கமுட னின்றவர்க்கு வாசி சித்தி
சிறப்புடனே பதினாறும் பலிக்குந் தானே. 15

தானவனு யிருக்கவென்ருல் வாசி வேணும்
தனக்குள்ளே தானிற்க இடமும் வேணும்
வானவனுய் நின்றவர்கட் கெல்லாஞ் சித்தி
வானுக்குள் மனமிருக்க மதிபோல் காணும்
தேனவனுஞ் சித்தருக்குத் தெவிட்டா மூலி
சிரசப்பா வுடலுக்குப் பதியே யாகும்
கோனவனு யிருக்கவென்று குறியைச் சொன்னேன்
குவலயத்தில் பதினாறுங் குறுகத் தானே. 16

வால்மீகர் ஞானம்—16 முற்றிற்று.

## சிதம்பரம் இராமலிங்க சுவாமிகள் அருளிச்செய்த

# சிவநாமாவளித் திரட்டு

---

### சிவநாமாவளி

திருச்சிற்றம்பலம்

இராகம்-இந்துஸ்தான பியாக்-ஆதிதாளம்

சிவசிவ கஜமுக கணநாதா சிவகுண வந்தித குணநீதா
சிவசிவ சிவசிவ தத்துவ போதா
சிவகுரு பரசிவ சண்முக நாதா
சிவசிவ சிவசிவ சின்மயதேஜா சிவசுந் தரகுஞ் சிதநடராஜா

அம்பலத் தரசே அருமருந்தே
ஆனந்தத் தேனே அருள் விருந்தே. 1

பொதுநடத் தரசே புண்ணியனே
புவவரெ லாம்புகழ் கண்ணியனே. 2

மலைதரு மகளே மடமயிலே
மதிமுக அமுதே இளங்குயிலே. 3

ஆனந்தக் கொடியே இளம்பிடியே
அற்புதத் தேனே மலைமானே. 4

சிவசிவ சிவசிவ சின்மய தேஜா
சிவசுந் தரகுஞ் சிதநட ராஜா. 5

படன விவேக பரம்பர வேதா
நடன சபேச சிதம்பர நாதா 6

அரிபிர மாதியர் தேடிய நாதா
அரகர சிவசிவ ஆடிய பாதா. 7

அந்தண அங்கண அம்பர போகா
அம்பல நம்பர அம்பிகை பாதா. 8

அம்பர விம்ப சிதம்பர நாதா
அஞ்சித ரஞ்சித குஞ்சித பாதா. 9

தந்திர மந்திர யந்திர பாதா
சங்கர சங்கர சங்கர நாதா. 10

கனக சிதம்பர சங்கர புரஹர
அனக பரம்பர சங்கர ஹரஹர. 11

சகல கலாண்ட சராசர காரண
சகுண சிவாண்ட பராபர பூரண. 12

இக்கரை கடந்திடிற் அக்கரையே
இருப்பது சிதம்பர சர்க்கரையே. 13

என்னுயி ருடம்பொடு சித்தமதே
இனிப்பது நடராச புத்தமுதே. 14

ஐயர் திருச்சபை ஆடகமே
ஆடுத லானந்த நாடகமே. 15

உத்தர ஞான சிதம்பரமே
சித்தி யெலாந்தரு பம்பரமே. 16

அம்பல வாசிவ மாதேவா
வம்பல வாவிங்கு வாவாவா. 17

நடராச னெல்லார்க்கும் நல்லவனே
நல்லவெ லாஞ்செய வல்லவனே. 18

ஆனந்த நாடகங் கண்டோமே-பர
மானந்த மோனங் கொண்டோமே. 19

சகல வுபகள நிட்கள நாதா
உகள சததள மங்கள பாதா. 20

சந்தத முஞ்சிவ சங்கர பசனம்
சங்கீத மென்பது சற்சன வசனம். 21

சங்கர சிவசிவ மாதேவா
எங்களை யாட்கொள்ள வாவாவா. 22

அரகர சிவசிவ மாதேவா
அருளமு தந்தர வாவாவா. 23

நடன சிகாமணி நவமணியே
திடன கமாமணி சிவமணியே. 24

நடமிடு மம்பல நன்மணியே
புடமிடு செம்பல பொன்மணியே. 25

உவட்டாது தித்திக்கும் உள்ளமுதே
தெவிட்டாது தித்திக்குந் தெள்ளமுதே. 26

நடராச வள்ளலை நாடுதலே
நந்தொழி லாம்வினை யாடுதலே. 27

அருட்பொது நடமிடு தாண்டவனே
அருட்பெருஞ் சோதியென் ஆண்டவனே. 28

நடராச மாணிக்க மொன்றதுவே
நண்ணுத லாணிப்பொன் மன்றதுவே. 29

நடராசப் பலமது நம்பலமே
நடமாடு வதுந்திரு வம்பலமே. 30

நடராச பாட்டே நறும்பாட்டு
ஞாலத்தார் பாட்டெல்லாம் வெறும்பாட்டு. 31

சிதம்பரப் பாட்டே திருப்பாட்டு
சீவர்கள் பாட்டெல்லாந் தெருப்பாட்டு 32

அம்பலப் பாட்டே அருட்பாட்டு
அல்லாத பாட்டெல்லா மருட்பாட்டு. 33

அம்பல வாணனை நாடினனே
அவனடி யாரொடுங் கூடினனே. 34

தம்பத மாம்புகழ் பாடினனே
தந்தன வென்றுகூத் தாடினனே. 35

நான்சொன்ன பாடலுங் கேட்டாரே
ஞான சிதம்பர நாட்டாரே. 36

இனித்துயர் படமாட்டேன் விட்டேனே
என்குரு மேலாணை யிட்டேனே. 37

இனிப்பாடு படமாட்டேன் விட்டேனே
என்னப்பன் மேலாணை யிட்டேனே. 38

சன்மார்க்கம் நன்மார்க்கம் நன்மார்க்கம்
சகமார்க்கந் துன்மார்க்கந் துன்மார்க்கம். 39

நாதாந்த நாட்டுக்கே நாயகரே
நடராச ரேசபா நாயகரே. 40

நான்சொல்லு மிதுகேளீர் சத்தியமே
நடராச ரெனில்வரும் நித்தியமே. 41

நல்லோரெல் லார்க்குஞ்ச பாபதியே
நல்வர மீயுந் தயாநிதியே. 42

நடராசர் தந்நடம் நன்னடமே
நடம்புரி கின்றது மென்னிடமே. 43

சிவகாம வல்லிக்கு மாப்பிள்ளையே
திருவாள னுனவன் சீர்ப்பிள்ளையே. 44

சிவகாம வல்லியைச் சேர்ந்தவனே
சித்தெல்லாஞ் செய்டத்த் தேர்ந்தவனே. 45

இறவா வரந்தரும் நற்சபையே
எனமறை புகழ்வது சிற்சபையே. 46

என்னிரு கண்ணு ளிருந்தவனே
இறவா தருளு மருந்தவனே. 47

சிற்சபை யப்பனை யுற்றேனே
சித்தியெ லாஞ்செயப் பெற்றேனே. 48

அம்பல வானவர்தம் அடியவரே
அருளர சாள்மணி முடியவரே. 49

அருட்பெருஞ் சோதியைக் கண்டேனே
ஆனந்தத் தெள்ளமு துண்டேனே. 50

இருட்பெரு மாயையை விண்டேனே
எல்லாஞ்செய் சித்தியைக் கொண்டேனே. 51

கருணை நிதியே குணநிதியே
கதிமா நிதியே கலாநிதியே. 52

தருண பதியே சிவபதியே
தனிமா பதியே சபாபதியே. 53

கருணை நிதியே சபாபதியே
கதிமா நிதியே பசுபதியே. 54

சபாபதி பாதம் தபோபிர சாதம்
தயாநிதி போதம் சுகோதய வேதம். 55

கருணம் பர்வர கரசிவ பவபவ
அருணம் பரதர ஹர ஹர சிவசிவ. 56

கனகா கரபுர ஹரசிர கரதர
கருணா கரப்ர சுரவர ஹிரஹர. 57

கனக சபாபதி பசுபதி நவபதி
அனக வுமாபதி அதிபதி சிவபதி. 58

வேதாந் தபராம் பரசய சயசய
நாதாந் தநடாம் பரசய சயசய. 59

ஏகாந்த சர்வேச சமோதம
யோகாந்த நடேச நமோ நம. 60

ஆதாம் பர வா டகவதி சயசய
பாதாம் புசநா டகசய சயசய. 61

போதாந்த புரேச சிவாகம
நாதாந்த நடேச நமோ நம. 62

ஜாலகோலகன காம்பர சாயக
கால காலவன் காம்பர நாயக. 63

உபல சிர தல சுபகண வங்கண
சுபல கரதல கணபண கங்கண. 64

அபய வரதகர தலபுரி காரண
உபய பரதபத பரபரி பூரண. 65

அகர வுகர சுப கரவர சினகர
தகர வகரநவ புரசிர தினகர. 66

வகர சிகரதின கரசசி கரபுர
மகர வகரவர புரஹர ஹாஹர. 67

பரம்மந் திரசக ளாகள கரணு
படனதந் திரநிக மாகம சரணு 68

அனந்த கோடிகுண கரகர சொலிதா
அகண்ட வேதசிர கரதர பலிதா. 69

பரிபூரண ஞான சிதம்பர
பதிகாரண நாத பரம்பர. 70

சிவஞானப தாடக நாடக
சிவபோதப ரோகள கூடக. 71

சகல லோகபர காரக வாரக
சபள போகசர பூரக தாரக. 72

சத்வ போதக தாரண தன்மய
சித்ய வேத பூரண சின்மய. 73

வரகே சாந்த மகோதய காரிய
பரபர சாந்த சுகோதய சூரிய. 74

பளித தீபக சோபித பாதா
லளித ரூப ஸ்தாபித நாதா. 75

அனுர்த போபகரு ணும்பக நாதா
அமிர்த ரூபதரு ணுபுச பாதா. 76

அம்போ ருகபத அரஹர சங்கர
சம்போ சிவசிவ சிவசிவ சங்கர. 77

சிதம்பர காசா பரம்பிர காசா
சிதம்பர ரேசா சுயம்பிர காசா 78

அருட்பிர காசம் பரப்பிர காசம்
அகப்பிர காசம் சிவப்பிர காசம். 79

நடப்பிர காசம் சிவப்பிர காசம்
நவப்பிர காசம் சிவப்பிர காசம். 80

நாத பரம்பரனே பர நாத சிதம்பரனே
நாத திகம்பரனே தச நாத சுதந்தரனே. 81

ஞான நடத்தவனே பரஞானி யிடத்தவனே
ஞான வரத்தவனே சிவஞான புரத்தவனே. 82

ஞான சபாபதியே மறைநாடு சதாகதியே
தீன தயாநிதியே பரதேவியு மாபதியே. 83

புத்தந் தரும்போதா வித்தந் தருந்தாதா
நித்தந் தரும்பாதா சித்தந் திரும்பாதா. 84

திருச்சிற்றம்பலம்

---

## அருள் விளக்க மாலை

திருச்சிற்றம்பலம்

எண்சீர் விருத்தம்

கல்லார்க்குங் கற்றவர்க்குங் களிப்பருளுங் களிப்பே
காணார்க்குங் கண்டவர்க்குங் கண்ணளிக்குங்கண்ணே
வல்லார்க்கும் மாட்டார்க்கும் வரமளிக்கும் வரமே
மதியார்க்கும் மதிப்பவர்க்கும் மதிகொடுக்கும் மதியே
நல்லார்க்கும் பொல்லார்க்கும் நடுவில்நின்ற நடுவே
நரர்களுக்குஞ் சுரர்களுக்கும் நலங்கொடுக்கும் நலமே
எல்லார்க்கும் பொதுவில்நட மிடுகின்ற சிவமே
என்னரசே யான்புகலு மிசையுமணிந் தருளே. 1

தனிச்சிறியேன் சிறிதிங்கே வருந்தியபோ ததனைத்
தன்வருத்த மெனக்கொண்டு தரியாதக் கணத்தே
பனிப்புருமவ் வருத்தமெல்லாந் தவிர்த்தருளி மகனே
பயமுனக்கேன் என்றென்னைப் பரிந்தணைத்தகுருவே [ன்
இனிப்புறுநன் மொழிபுகன்றென் முடிமிசைநின் மலர்த்தா
இணையமர்த்தி யெனையாண்ட வென்னுயிர்நற் றுணையே
கனித்தநறுங் கனியேயென் கண்ணே சிற்சபையில் [யே
கலந்தநடத் தரசேயென் கருத்துமணிந்தருளே. 2

இருளிரவி லொருமூலைத் திண்ணையில்நான் பசித்தே
இளைப்புடனே படுத்திருக்க வெனைத்தேடி வந்தே
பொருளுணவு கொடுத்துண்ணச் செய்வித்தே பசியைப்
போக்கியருள் புரிந்தவென் றன் புண்ணியநற்றுணையே
மருளிரவு நீக்கியெல்லா வாழ்வுமெனக் கருளி
மணிமேடை நடுவிருக்க வைத்தவொரு மணியே
அருளுணவும் அளித்தென்னை ஆட்கொண்ட சிவமே
அம்பலத்தென் னரசேயென் அலங்கலணிந்தருளே. 3

நான்பசித்த போதெல்லாம் தான்பசித்த தாகி
நல்லுணவு கொடுத்தென்னைச் செல்வமுற வளர்த்தே
ஊன்பசித்த இளைப்பொன்றும் தோன்றாத வகையே
ஒள்ளியதெள் ளமுதெனக்கிங் குவந்தளித்த ஒளியே
வான்பதிக்கும் நெடுமாற்றும் நான்முகர்க்கு மரிதாம்
வாழ்வெனக்கே யாகியுற வரமளித்த பதியே
தேன்பரித்த மலர்மணமே திருப்பொதுவில் ஞானத்
திருநடஞ்செய் யரசேயென் சிறுமொழியேற் றருளே. 4

திசையறிய மாட்டாதே திகைத்தசிறி யேனைத்
தெளிவித்து மணிமாடத் திருத்தவிசி லேற்றி
நசையறியா நற்றவரு மற்றவருஞ் சூழ்ந்து
நயப்பவருட் சிவநிலையை நாட்டவைத்த பதியே

வசையறியாப் பெருவாழ்வே மயலறியா அறிவே
வானடுவே யின்பவடி வாயிருந்த பொருளே
பசையறியா மனத்தவர்க்கும் பசையறிவித் தருளப்
பரிந்தநடத் தரசேயென் பாட்டுமணிந் தருளே. 5

நன்மையெலாந் தீமையெனக் குரைத்தோடித் திரியும்
நாய்க்குலத்திற் கடையான நாயடியே னியற்றும் [ன்
புன்மையெலாம் பெருமையெனப் பொறுந்தருளிப் புலே யே
பொய்யுரைசெய் யுரையாகப் புரிந்துமகிழ்ந் தருளித்
தன்மையெலா முடைய பெருந் தவிசேற்றி முடிபுந்
தரித்தருளி ஐந்தொழில்செய் சதுரளித்த பதியே
இன்மையெல்லாந் தவிந்தடியா ரின்பமுறப் பொதுவில்
இலங்குநடத் தரசேயென் இசையுமணிந் தருளே. 6

மதமென்றுஞ் சமயமென் றுஞ் சாத்திரங்க ளென்றும்
மன்னுகின்ற தேவரென்றும் மற்றவர்கள் வாழும்
பதமென்றும் பதமடைந்த பத்தரனு பவிக்கப்
பட்டவனு பவங்களென்றும் பற்பலவா விரிந்த
விதமொன்றுந் தெரியாதே மயங்கியவென் றனக்கே
வெட்டவெளி யாயறிவித் திட்டவரு ளிறைவ
சதமொன்றுஞ் சுத்தசிவ சன்மார்க்கப் பொதுவில்
தனிநடஞ்செய் யரசேயென் சாற்றுமணிந் தருளே. 7

அருளுடையா ரெல்லாருஞ் சமரசசன் மார்க்கம்
அடைந்தவரே யாதலினு லவருடனே கூடித்
தெருளுடைய அருள்நெறியிற் களித்துவிளை யாடிச்
செழித்திடுக வாழ்கவெனச் செப்பியசற் குருவே
பொருளுடைய பெருங்கருணைப் பூரணமெய்ச் சிவமே
போதாந்த முதலாறும் நிறைந்தொளிரு மொளியே
மருளுடையார் தம்க்குமருள் நீக்கமணிப் பொதுவில்
வயங்குநடத் தரசேயென் மாலையுமேற் றருளே. 8

காலையிலே யென்றனக்கே கிடைத்தபெரும் பொருளே
களிப்பேயென் கருத்தகத்தே கனிந்தநறுங் கனியே
மேலையிலே இம்மையிலே ஒருமையிலே தவத்தால்
மேவுகின்ற பெரும்பயனும் விளைவையெலாந் தருமச்
சாலையிலே யொருபகலிற் றந்ததனிப் பதியே
சமரசசன் மார்க்கசங்கத் தலையமர்ந்த நிதியே
மாலையிலே சிறந்தமொழி மாலையணிந் தாடும்
மாநடத்தென் னரசேயென் மாலையணிந் தருளே. 9

தலைகாலின் கறியாதே திரிந்தசிறி யேனைத்
தான்வலித்தாட் கொண்டருளித் தடைமுழுதுந்தவிர்த்
மலைவறுமெய் யறிவளித்தே அருளமுதம் அருத்தி [தே
வல்லபசத் திகளெல்லா மருவியிடம் புரிந்து
நிலையுறவே தானுமடி யேனுமொரு வடிவாய்
நிறையநிறை வித்துயர்ந்த நிலையதன்மே லமர்த்தி
அவர்தலைப்பே ரருட்சோதி அரசுகொடுத் தருளி
ஆடுகின்ற அரசேயென் அலங்கலணிந்தருளே. 10

திருச்சிற்றம்பலம்

---

## முறையீடு

திருச்சிற்றம்பலம்

எண்சீர் விருத்தம்

மருந்தறியேன் மணியறியேன் மந்திரமொன் றறியேன்
மதியறியேன் விதியறியேன் வாழ்க்கைநிலை யறியேன்
திருந்தறியேன் திருவருளின் செயலறியேன் அறந்தான்
செய்தறியேன் மனமடங்குந் திறத்தினிலோ ரிடத்தே
இருந்தறியேன் அறிந்தோரை ஏத்திடவும் அறியேன்
எந்தைபிரான் மணிமன்றம் எய்தவறி வேனோ
இருந்ததிசை சொலவறியேன் எங்ஙனம்நான் புகுவேன்
யார்க்குரைப்பேன் என்னசெய்வேன் ஏதுமறிந்திலனே.

அகங்காரக் கொடுங்கிழங்கை அகழ்ந்தெறிய அறியேன்
அறிவறிந்த அந்தணர்பாற் செறியுநெறி அறியேன்
நகங்காண முறுதவர்போல் நலம்புரிந்து மறியேன்
நச்சுமரக் கனிபோலே இச்சைகனிந் துழன்றேன்
மகங்காணும் புலவரெலாம் வந்துதொழ நடிக்கும்
மணிமன்றந் தனையடையும் வழியுமறி வேனோ
இகங்காணத் திரிகின்றேனெங்ஙன நான் புகுவேன் [னே.
யார்க்குரைப்பேன் என்ன செய்வேன் ஏதுமறிந் தில

கற்றுமறை கற்றறியேன் கற்பனகற் றறிந்த
கருத்தர்திரு கூட்டத்திற் களித்திருக்க அறியேன்
நிற்குநிலை நின்றடியே னின்றாரி னடித்தேன்
நெடுங்காமப் பெருங்கடலை நீந்தும்வகை அறியேன்
சிற்துணமாம் மணிமன்றிற் றிருநடனம் புரியுந்
திருவடியென் சென்னிமிசைச் சேர்க்கவறி வேனோ
இற்குணஞ்செய் துழல்கின்றே னெங்ஙனநான் புகுவேன்
யார்க்குரைப்பே னென்செய்வே னேதுமறிந் திலனே.

தேகமுறு பூதநிலைத் திறஞ்சிறிது மறியேன்
சித்தாந்த நிலையறியேன் சித்தநிலை யறியேன்
யோகமுறு நிலைசிறிது முணர்ந்தறியேன் சிறியேன்
உலகநடை யிடைக்கிடந்தே உழைப்பாரிற் கடையேன்
ஆகமுறு திருநீற்றி னொளிவிளங்க அசைந்தே
அம்பலத்தி லாடுகின்ற அடிமையறி வேனோ
ஏகவனு பவமறியே னெங்ஙன நான் புகுவேன்
யார்க்குரைப்பே னென்செய்வே னேதுமறிந்திலனே. 4

வரையபர மார்க்கமொடு பரமார்க்கம் அறியேன்
மரணபயந் தவிர்த்திடுஞ்சன் மார்க்கமதை அறியேன்
திரையறுதண் கடலறியேன் அக்கடலைக் கடந்தே
தெள்ளமுத முணவறியேன் சினமடக்க அறியேன்

உரையுணர்வு கடந்துதிரு மணிமன்றந் தனிலே
ஒருமைநடம் புரிகின்றார் பெருமையறி வேனோ
விரையுறுபொய் யுலகினிடை யெங்ஙனநான் புகுவேன்
யார்க்குரைப்பே னென்செய்வே னேதுமறிந் திலனே.

திருச்சிற்றம்பலம்

---

## ஆனந்தமேலீடு

திருச்சிற்றம்பலம்

இராகம்—சஹானா—ஆதிதாளம்

குறள் வெண்செந்துறை

கையறவி லாதுநடுக் கண்புருவப் பூட்டு
கண்டுகளி கொண்டுதிறந் துண்டுநடு நாட்டு
ஐவர்மிக வுய்யும்வகை அப்பர்விளை யாட்டு
ஆடுவதென் றேமறைகள் பாடுவது பாட்டு. 1

சிற்சபையும் பொற்சபையுஞ் சொந்தமென தாச்சு
தேவர்களு மூவர்களும் பேசுவதென் பேச்சு
இச்சமய வாழ்விலெனக் கென்னையினி ஏச்சு
என்பிறவித் துன்பமெலா மின்றோடே போச்சு. 2

ஐயரருட் சோதியர சாட்சியென தாச்சு
ஆரணமும் ஆகமமும் பேசுவதென் பேச்சு
இவ்வுலக வாழ்விலெனக் கென்னையினி ஏச்சு
என்பிறவித் துன்பமெலா மின்றோடே போச்சு. 3

ஈசனரு ளார்கடலில் ஏற்றதொரு ஓடம்
ஏறிக்கரை யேறினனங் கிருந்ததொரு மாடம்
தேசுறுமம் மாடநடுத் தெய்வமணிப் பீடம்
தீபவொளி கண்டவுடன் சேர்ந்ததுசந் தோடம். 4

மேருமலை உச்சியினில் விளங்குகம்ப நீட்சி
மேவுமதன் மேலுலகில் வீறுமர சாட்சி
சேருமதிற் கண்டபல காட்சிகள்கண் காட்சி
செப்பலரி தாமிதற்கென் அப்பனருள் சாட்சி 5

துரியமலை மேலுளதோர் சோதிவள நாடு
தோன்றுமதி லையர் நடஞ் செய்யுமணி வீடு
தெரியுமது கண்டவர்கள் காணிலுயி ரோடு
செத்தவரெ ழுவரென்று கைத்தாளம் போடு. 6

சொல்லால ளப்பரிய சோதிவரை மீது
தூய துரி யட்பதியில் நேயமறை போது
எல்லாஞ்செய் வல்லசித்தர் தம்மையுறும் போது
இறந்தா ரெழுவரென்று புறந்தாரை யூது. 7

சிற்பொதுவும் பொற்பொதுவும் நானறிய லாச்சு
சித்தர்களும் முத்தர்களும் பேசுவதென் பேச்சு
இப்பெரிய இவ்வுலகி லென்னையெ னிரச்சு
என்பிறவித் துன்பமெலா மின்றோடே போச்சு. 8

வலதுசொன்ன பேர்களுக்கு வந்ததுவாய்த் தாழ்வு
மற்றவரைச் சேர்ந்தவர்க்கும் வந்ததுதலைத் தாழ்வு
வலதுபுச மாடநம்மால் வந்தருள் வாழ்வு
மற்றுநமைச் சூழ்ந்தவர்க்கும் வந்ததுநல் வாழ்வு. 9

அம்பலத்தி லெங்களையர் ஆடியநல் லாட்டம்
அன்பொடுது தித்தவருக் கானதுசொல் லாட்டம்
வம்புசொன்ன பேர்களுக்கு வந்ததுமல் லாட்டம்
வந்ததலை யாட்டமன்றி வந்ததுபல் லாட்டம். 10

நாத்திகஞ்சொல் கின்றவர்தம் நாக்குமுடை நாக்கு
நாக்குருசி கொள்ளுவது நாறியபிண் ணாக்கு
கீர்த்திபெறும் அம்பலவர் சீர்புகன்ற வாக்கு
செல்வாக்கு நல்வாக்கு தேவர்திரு வாக்கு. 11

திருச்சிற்றம்பலம்

———

# வேட்கைக் கொத்து

[தலைமகன் பாங்கியொடு கூறல்]

## எண்சீர் விருத்தம்

விண்படைத்த புகழ்த்தில்லை அம்பலத்தா னெவர்க்கும்
மேலான அன்பருளர் மேவுநட ராஜன்
பண்படைத்த எனையறியா இளம்பருவந் தனிலே
பரிந்துவந்து மாலையிட்டான் பார்த்தறியான் மீட்டும்
பெண்படைத்த பெண்களெல்லாம் அவமதித்தே வலது
பேசுகின்றார் கூறுகின்றேன் பிச்சியென லானேன்[றன்
கண்படைத்துங் குழியில்விழக் கணக்குமுண்டோ அவன்
கணக்கறிந்தும் விடுவேனோ கண்டாயென் தோழி. 1

சித்தமணி யம்பலத்தான் என்பிராண நாதன்
சிவபெருமா னெம்பெருமான் செல்வநட ராசன்
வாய்த்தவென்னை யறியாத இளம்பருவந் தனிலே
மகிழ்ந்துவந்து மாலையிட்டான் மறித்துமுகம் பாரான்
ஆய்த்தகலை கற்றுணர்ந்த அணங்கனையார் தமக்குள்
ஆர்செய்த போதனையோ ஆறுலு மிதுகேள்
காய்த்தமரம் வளையாத கணக்குமுண்டோ அவன்றன்
கணக்கறிந்தும் விடுவேனோ கண்டாயென் தோழி. 2

என்னுயிரிற் கலந்துகலந் தினிக்கின்ற பெருமான்
என்னிறைவன் பொதுவில்நடம் இயற்றுநட ராசன்
தன்னையறி யாப்பருவத் தென்னைமணம் புரிந்தான்
தனையறிந்த பருவத்தே எனையறிய விரும்பான்
பின்னையன்றி முன்னுமொரு பிழைபுரிந்தே னில்லை
பெண்பரிதா பங்காணல் பெருந்தகைக்கும் அழகோ
அன்னலென்றுல்கைக்கின்றகணக்குமுண்டோ அவன்றன்
கணக்கறிந்தும் விடுவேனோ கண்டாயென் தோழி.

தெருளமுதத் தனியோகர் சிந்தையிலும் ஞானச்
செல்வரறி விடத்தும்நடஞ் செய்நடராசன்
அருளமுதம் அளிப்பனென்றே அன்றுமனம்புணர்ந்தான்
அளித்தறியான் அணுத்துணையு மனுபவித்து மறியேன்
மருளுடையான் அல்லனொரு வஞ்சகனும் அல்லன்
மனவிரக்க மிகவுடையான் வல்வினையேன் அடவில்
இருளுடையார் போலிருக்கும் இயல்பென்னை அவன்றன்
இயல்பறிந்தும் விடுவேனோ இனித்தானென் தோழி. 4

சின்மயமாம் பொதுவினிலே தன்மயமாய் நின்று
திருநடஞ்செய் பெருங்கருணைச் செல்வநடராசன்
என மயநான் அறியாத இளம்பருவந் தனிலே
என்னைமணம் புரிந்தனனீ தெல்லாரும் அறிவர்
இன்மயமில் லாதவர்போ லின்றுமணந் தருளான்
இறையளவும் பிழைபுரிந்தேன் இல்லையவன் இதயம்
கன்மயமோ அன்றுசுவைக் கனிமயமே யென்னுங்
கணக்கறிந்தும் விடுவேனோ கண்டாயென் தோழி. 5

எண்குணத்தான் எல்லார்க்கும் இறைவனெல்லாம்வல்லான்
என்னகத்தும் புறத்துமுளான் இன்பநடராசன் [ன்
பெண்குணத்தை அறியாத இளம்பருவந் தனிலே
பிச்சேற்றி மணம்புரிந்தான் பெரிதுகளித் திருந்தேன்
வன்குணத்தால் அனுபவநா னறியநின்ற பொழுதில்
வந்தறியான் இன்பமொன்றுந் தந்தறியான் அவனும்
வெண்குணத்தான் அல்லன்மிக நல்லனெனப் பலகால்
விழித்தறிந்தும் விடுவேனோ விளம்பாயென் தோழி. 6

பொய்யாத புகழுடையான் பொதுவில்நடம் புரிவான்
புண்ணியர்பால் நண்ணியநற் புனிதநடராசன்
கொய்யாத அரும்பனைய இளம்பருவந் தனிலே
குறித்துமணம் புரிந்தனனேன் மறித்துவரக் காணேன்

செய்யாத செய்கையொன்றுஞ் செய்தறியேன் சிறிதும்
திருவுளமே அறியுமற்றென் ஒருவுளத்தின் செயல்கள்
நையாத வென்றனுயிர் நாதனருட் பெருமை
நானறிந்தும் விடுவேனே நவிலாயென் தோழி. 7

கண்ணனையான் என்னுயிரிற் கலந்துநின்ற கணவன்
கணக்கறியான் பிணக்கறியான் கருணை நடராசன்
தண்ணனையாம் இளம்பருவந் தன்னிலெனைத் தனித்துத்
தானேவந் தருள்புரிந்து தனிமாலை புனைந்தான்
பெண்ணனையார் கண்டபடி பேசவுநான் கூசாப் [ந்தான்
பெருமையொடும் இருந்தேனென் அருமையெலாம் அறி
உண்ணனையா வகைவரவு தாழ்த்தனனின் றவன்றன்
உளமறிந்தும் விடுவேனே உரையாயென் தோழி. 8

ஊன்மறந்த உயிரகத்தே ஒளிநிறைந்த ஒருவன்
உலகமெலா முடையவனென் னுடையநடராசன்
பான்மறந்த சிறியவிளம் பருவமதில் மாலை
பரிந்தணிந்தான் தெரிந்ததனிப் பருவமிதிற் பரியான்
தான்மறந்தா னெனினுமிங்கு நான்மறக்க மாட்டேன்
தவத்தேறி அவத்தழியச் சம்மதமும் வருமோ
கோன்மறந்த குடியேபோல் மிடியேனுன் அவன்றன்
குணமறிந்தும் விடுவேனே கூறாயென் தோழி. 9

தனித்தபர நாதமுடித் தலத்தின்மிசைத் தலத்தே
தலைவரெலாம் வணங்கநின்ற தலைவனடராசன்
இனித்தசுகம் அறிந்துகொள்ள இளம்பருவந் தனிலே
என்புருவ நடுவிருந்தான் பின்புகண்டே னில்லை
அனித்தமிலா இச்சரிதம் யார்க்குரைப்பே னந்தோ
அவனறிவான் நானறியேன் அயலறிவா ருளரோ
துனித்தநிலை விடுத்தொருகாற் சுத்தநிலை யதனிற்
சுகங்கண்டும் விடுவேனே சொல்லாயென் தோழி. 10

திருச்சிற்றம்பலம்

———

## சிவதரிசனம்

திருச்சிற்றம்பலம்

எண்சீர் விருத்தம்

பாவிமனக் குரங்காட்டம் பார்க்கமுடி யாதே [த்தேன்
பதிவெறுத்தேன் நிதிவெறுத்தேன் பற்றனைத்தும் தவிர்
ஆவியுடல் பொருளையன்பாற் றொடுத்தேனுன் னருட்கே
ராசைமய மாகியுனை அடுத்துமுயல் கின்றேன்
கூவியெனை ஆட்கொள்ள நினையாயோ நினது
குறிப்பறியேன் பற்பலகால் கூவியிளைக் கின்றேன்
தேவிசிவ காமவல்லி மகிழுமண வாளா
தெருணிறைவா னமுதளிக்குந் தருணமிது தானே. 1

கட்டவிழ்ந்த கமலமெனக் கருத்தவிழ்ந்து நினைவே
கருதுகின்றேன் வேறொன்றுங் கருதுகிலேன் இதுதான்
சிட்டருளந் திகழ்கின்ற சிவபதியே நினது
திருவுளமே யறிந்ததுநான் செப்புதலென் புவிமேல்
விட்டகுறை தொட்டகுறை இரண்டுநிறைந் தனனீ
விரைந்துவந்தே அருட்சோதிபுரிந்தருளுந் தருணம்[தே
தொட்டதுநான் துணிந்துரைத்தேன் நீயுணர்த்த உணர்ந்
சொல்வதலால் என்னறிவாற் சொல்லவல் லேனன்றே.

காட்டையெலாங்கடந்துவிட்டேன் நாட்டையடைந் தனது
கடிநகர்ப்பொன் மதிற்காட்சி கண்குளிரக் கண்டேன்
கோட்டையெலாங் கொடிநாட்டி கோலமிடப் பார்த்தேன்
கோயிலின் மேல் வாயிலிலே தடைகளெலாந் தவிர்ந்தே
சேட்டையற்றுக் கருவியெலாம் என்வசநின் றிடவே [ன்
சித்தியெலாம் பெற்றேனென் திருச்சிற்றம் பலமே
பாட்டையெலாம் பாடுகின்றேன் இதுதருணம் பதியே
பலந்தருமென் னுளந்தனிலே கலந்துநிறைந் தருளே.

திருச்சிற்றம்பலம்

———

# பிரியேனென்றல்

திருச்சிற்றம்பலம்

எண்சீர் விருத்தம்

அப்பாநான் பற்பலகால் அறைவதென்ன அடியேன்
அச்சமெலாந் துன்பமெலாம் அறுத்துவிரைந் துவந்தே
இப்பாரில் இத்தருணம் என்னையணைந் தருளி
எண்ணமெலா முடித்தென்னை ஏன்றுகொளாய் அனிலோ
தப்பாமல் உயிர்விடுவேன் சத்தியஞ்சத் தியநின்
தாளிணைகள் அறிகவிது தயவுடையோய் எவர்க்குந்
துப்பாகித் துணையாகித் துலங்கியமெய்த் துணையே
சுத்தசிவா னந்தவருட் சோதிநடத் தரசே. 1

படமுடியா தினித்துயரம் படமுடியா தரசே
பட்டதெல்லாம் போதுமிந்தப் பயந்தீர்த்திப் பொழுதெ
உடலுயிரா தியவெல்லாம் நீயெடுத்துக் கொண்டுன் [ன்
உடலுயிரா தியவெல்லாம் உவந்தெனக்கே அளிப்பாய்
வடலுறுசிற் றம்பலத்தே வாழ்வாயென் கண்ணுள்
மணியேயென் குருமணியே மாணிக்க மணியே
நடனசிகா மணியேயென் நவமணியே ஞான
நன்மணியே பொன்மணியே நடராச மணியே. 2

உன்னைமறந் திடுவேனோ மறப்பறியேன் மறந்தால்
உயிர்விடுவேன் கணந்தரியேன் உன்னாணை யிது நீ
என்னைமறந் திடுவாயோ மறந்திடுவா யெனில்யான்
என்னசெய்வேன் எங்குறுவேன் எவர்க்குரைப்பேன்
அன்னையினுந் தயவுடையாய் நீமறந்தா யெனினும்
அகிலமெலாம் அளித்திடுநின் அருள்மறவா தென்றே
இன்னுமிகக் களித்திங்கே இருக்கின்றேன் மறவேல்
இதுதருணம் அருட்சோதி எனக்குவிரைந் தருளே. 3

பெரியனருட் பெருஞ்சோதிப் பெருங்கருணைப் பெருமான்
பெரும்புகழைப் பேசுவதே பெரும்பேறென் றுணர்ந்தே
துரியநிலத் தவரெல்லாந் துதிக்கின்றா ரேழை
துதித்தல்பெரி தலவிங்கே துதித்திடவென் றெழுந்த
அரியபெரும் பேராசைக் கடல்பெரிதே அதுவென்
அளவுகடந் திழுக்கின்ற தாதலினாற் விரைந்தே
உரியவருள் அமுதளித்தே நினைத்துதிப்பித் தருள்வாய்
உலகமெலாங் களித்தோங்க ஓங்க நடத் தரசே. 4

கவலையெலாந் தவிர்ந்துமிகக் களிப்பினொடு நினையே
கைகுவித்துக் கண்களினீர் கனிந்து சுரந்திடவே
சவலைமனச் சலனமெலாந் தீர்ந்துசுக மயமாய்த்
தானேதா னாகியின்பத் தனிநடஞ்செய் இணைத்தாள்
தவலருஞ்சீர்ச் சொன்மாலை வனைந்துவனைந் தணிந்து
தானாகி நானாடத் தருணமிது தானே
குவலயத்தா ரதிசயிக்க எழுந்தருளி வருவாய்
குருவேயென் குற்றமெலாங் குணமாக்கொண் டவனே.

திருச்சிற்றம்பலம்

---

## வாதனைக்கிரங்கல்

திருச்சிற்றம்பலம்

எண்சீர் விருத்தம்

படமாட்டேன் துயர்ச்சிறிதும் படமாட்டேன் இனிநான்
பயப்படவு மாட்டேனும் பதத்துணையே பிடித்தேன்
விடமாட்டேன் ஏமாந்து விடமாட்டேன் கண்டீர்
மெய்ம்மையிது நும்மாணை விளம்பினனும் மடியேன்
கெடமாட்டேன் பிறர்மொழிகள் கேட்டிடவுமாட்டேன்
கிளரொளியம் பலத்தாடல் வளரொளிநும் மல்லால்
நடமாட்டேன் என்னுளத்தே நான்சாக மாட்டேன்
நல்லதிரு வருளாலே நன்றானே னானே. 1

சாகாத கல்வியிலே தலைகாட்டிக் கொடுத்தீர்
தடையறியாக் கால்கட்டித் தரம்பெறவும் அளித்தீர்
மாகாத லுடையவனுன் மனங்கனிவித் தழியா
வானமுதும் மெய்ஞ்ஞான மருந்துமுணப் புரிந்தீர்
போகாத புனலாலே சுத்தவுடம் பினராம்
புண்ணியரும் நண்ணரிய பொதுநிலையுந் தந்தீர்
நாகாதி பதிகளுநின் றேத்தவளர் கின்றீர்
நடராச ரேதுமக்கு நானென்செய் வேனே. 2

வேதாந்த நிலையுமதன் அந்தத்தே விளங்கும்
மெய்ந்நிலையுங் காட்டுவித்தீர் விளங்கியசித் தாந்தப்
போதாந்த நிலையுமப்பாற் புகலரிதாம் பெரிய
பொருள்நிலையுந் தெரிவித்தீர் புண்ணியரே நுமது
பாதாந்தம் அறிவித்தீர் சுத்தவலி வுடனே
பகர்பிரண வாகாரப் பரிசுமெனக் களித்தீர்
நாதாந்தத் தனிச்செங்கோல் நான்செலுத்தக் கொடுத்தீர்
நடராச ரேநுமக்கு நானென்செய் வேனே. 3

பாயிரமா மறைகளெலாம் பாடுகின்ற பாட்டுன்
பாட்டேயென் றறிந்துகொண்டேன் பரம்பொருளுன் பெ
ஆயிரமா யிரங்கோடி நாவுடையோ ரெனினும் [ருமை
அணுத்துணையும் புகலரிதேல் அந்தோவிச் சிறியேன்
வாயிரங்கா வகைபுகலத் துணிந்தேனென் னுடைய
மனத்தாசை ஒருகடலே எழுகடலிற் பெரிதே
சேயிரங்கா முனமெடுத்தே அணைத்திடுந்தாய் அனையாய்
திருச்சிற்றம் பலம்விளங்குஞ் சிவஞான குருவே. 4

அந்நாளில் அடிச்சிறியேன் அம்பலவா யிலிலே
அருளைநினைந் தொருபுறத்தே அயர்ந்தழுது நின்றேன்
முன்னாளில் யான்புரிந்த பெருந்தவத்தா லெனக்கு
முகமலர்ந்து மொழிந்தவருள் மொழியைநினைந் தந்தச்

செந்நாளை எதிர்பார்த்தே பன்னாளுங் கழித்தேன்
சிந்தைமலர்ந் திருந்தேனச் செல்வமிகு திருநாள்
இந்நாளே யாதலினால் எனக்கருள்வீ ரென்றேன்
என்பதன்முன் அளித்தீர்நும் அன்புலகிற் பெரிதே. 5

திருச்சிற்றம்பலம்

---

## ஆனந்தக்களிப்பு

திருச்சிற்றம்பலம்

ராகம் காமக்கிரியை — ரூபக தாளம்

பல்லவி

நல்ல மருந்திம் மருந்து சுகம்
நல்கும் வயித்திய நாத மருந்து

சரணங்கள்

அருள்வடிவான மருந்து-நம்முள்
அற்புத மாக அமர்ந்த மருந்து
இருளற வோங்கு மருந்து-அன்பர்க்
கின்புரு வாக இருந்த மருந்து — நல்ல

சஞ்சலந் தீர்க்கும் மருந்து-எங்குந்
தானேதா னாகித் தழைக்கும் மருந்து
அஞ்சலென் றுரைக்கும் மருந்து-சச்சி
தானந்த மாக அமர்ந்த மருந்து — நல்ல

வித்தக மான மருந்து-சதுர்
வேத முடிவில் விளங்கும் மருந்து
தத்துவா தீத மருந்து-என்னைத்
தானாக்கிக் கொண்ட தயாள மருந்து — நல்ல

பிறப்பை ஒழிக்கும் மருந்து-யார்க்கும்
பேசப்படாத பெரிய மருந்து

இறப்பைத் தவிர்க்கும் மருந்து-என்னுள்
என்றும் மதுரித்தி னிக்கும் மருந்து நல்ல

அம்பலத் தாடும் மருந்து-பர
மானந்த வெள்ளத் தழுந்தும் மருந்து
எம்பல மாகும் மருந்து-வேளூர்
என்னுந் தலத்தி லிருக்கும் மருந்து நல்ல

சேதப் படாத மருந்து-உண்டால்
தேன்போ லினிக்குந் தெவிட்டா மருந்து
பேதப் படாத மருந்து-மலைப்
பெண்ணிடங் கொண்ட பெரிய மருந்து நல்ல

பால்வண்ண மாகும் மருந்து-நல்ல
பச்சை நிறமும் படர்ந்த மருந்து
நூல்வண்ணம் நாடும் மருந்து-உள்ளே
நோக்குகின் றோர்களை நோக்கும்-மருந்து நல்ல

பார்க்கப் பசிபோம் மருந்து-தன்னைப்
பாராத வர்களைச் சேரா மருந்து
கூர்க்கத் தெரிந்த மருந்து-அனு
கூல மருந்தென்று கொண்ட மருந்து நல்ல

கோமளங் கூடும் மருந்து-நலம்
கொடுக்கத் துசங்கட்டிக் கொண்ட மருந்து
நாமளவாத மருந்து-நம்மை
நாமறியும்படி நண்ணும் மருந்து நல்ல

மூவர்க் கரிய மருந்து-நல்ல
முத்துக் குமரனை ஈன்ற மருந்து
நாவிற் கினிய மருந்து-தையல்
நாயகி கண்டு தழுவும் மருந்து. நல்ல

திருச்சிற்றம்பலம்

---

## மெய்யருள் வியப்பு

திருச்சிற்றம்பலம்

செஞ்சுருட்டி - ரூபக தாளம்

பல்லவி

எனக்கு முனக்கு மிசைந்த பொருத்த
மென்ன பொருத்தமோ
இந்தப் பொருத்த முலகில் பிறருக்
கெய்தும் பொருத்தமோ.

சரணங்கள்

நனக்கு நிகரிங் கில்லா துயர்ந்த தம்ப மொன்றதே
தாவிப் போகப் போக நூலின் தரத்தில் நின்றதே
கனக்கத் திகைப்பற் றங்கே நானுங் கலங்கி வருந்தவே
கலக்க நீக்கித் தூக்கி வைத்தாய் நிலைபொருந்தவே.

இங்கோர் மலையி னடுவி லுயர்ந்த தம்பம் நண்ணுகவே
ஏறிப் போகப்போக நூலின் இழை போல் நுண்ணுகவே
அங்கே திகைத்து நடுங்குற்போதென் நடுக்கம் நீக்கியே
அதன்மே லுயர்ந்தநிலையில் வைத்தாய் அடிமை யாக்
[கியே. எனக்

ஊரிற் பெரிய வெள்ளம் பரவி எங்குந் தயங்கவே
யானும் சிலரும் படகி லேறி யேம யங்கவே
ஏரவித் தனித்தங் கென்னை யொருகல் மேட்டி லேற்றியே
விண்ணி லுயர்ந்த மாடத் திருக்க விதித்தாய் போற்
[றியே. எனக்

மேலைப் பாற்சிவ கங்கை யெனுமோர் தீர்த்தந் தன்னையே
மேவிப் படியிற் றவறி நீரில் விழுந்த என்னையே
ஏலத் துகிலு முடம்பும் நனையா தெடுத்த தேயொன்றே
எடுத்தென் கரத்திற் பொற்பூண் அணிந்த இறைவன்
[நீயன்றே. எனக்

என்ன துடலு முயிரும் பொருளும் நின்ன தல்லவோ
எந்தாயிதனைப் பெறுக வென நான் இன்றுசொல்லவோ
சின்ன வயதி லென்னை யாண்ட திறத்தை நினைக்குதே
சித்தை நினைக்கக் கண்ணீர் பெருக்கி உடம்பை
[நனைக்குதே. எனக்

அப்பா நின்னை அன்றி எங்கும் அணைப்பா ரில்லையே
அந்தோ நின்னை அன்றி எந்தம் அருள்வா ரில்லையே
எப்பா லவர்க்கும் நின்னை அன்றி இறைமை இல்லையே
எனக்கும் நின்மே லன்றி யுலகிலிச்சை இல்லையே. என

அரசே உன்னை அணைக்க எனக்குள் ஆசை பொங்குதே
அணைப்போ மென்னு முண்மையாலென் ஆவிதங்குதே
விரைசேர் பாதம் பிடிக்க என்கை விரைந்து நீளுதே
மேவிப்பிடித்துக்கொள்ளுந்தோறும்உவகை ஆளுதே. எ

தனியன்மேல்நீ வைத்த தயவுதாய்க்கும் இல்லையே [யே
தகுமைந் தொழிலும் வேண்டுந்தோறுந் தருதல் வல்லை
வினவு மெனக்கென் னுயிரைப் பார்க்க மிகவும் நல்லையே
மிகவும்நான்செய்குற்றங்குறித்துவிடுவாய் அல்லையே. எ

என்னை யாண்டவண்ணம் எண்ணில் உள்ளமுருகுதே
என்னை விழுங்கி எங்கும் இன்ப வெள்ளம் பெருகுதே
உன்ன வுன்ன மனமு முயிரு முடம்பு மினிக்குதே [குதே
உன்னேடென்னை வேறென் றெண்ணின் மிகவும்பனிக்

உன்பே ரருளை நினைக்குந் தோறும் உடம்பு பொடிக்குதே
உண்டு பசிதீர்ந் தாற்போற் காதல் மிகவுந் துடிக்குதே
அன்பே அமையு மென்ற பெரியர் வார்த்தை போயிற்றே
அன்போர் அணுவும் இல்லா எனக்கிங் கருளலாயிற்றே.

திருச்சிற்றம்பலம்

---

## திருவருள் விலாசப்பத்து

திருச்சிற்றம்பலம்

சிவசண்முக சிவஞான தேசிகன் திருவடி வாழ்க

எண்சீர் விருத்தம்

ஆறுமுகப் பெருங்கருணைக் கடலே தெய்வ
யானைமகிழ் மணிக்குன்றே அரசே முக்கட்
பேறுமுகப் பெருஞ் சுடர்க்குட் சுடரே செவ்வேல்
பிடித்தருளும் பெருந்தகையே பிரமஞானம்

வீறுமுகப் பெருங்குணத்தோர் இதயத் தோங்கும்
விளக்கமே ஆனந்த வெள்ள மேமுன்
தேறுமுகப் பெரியவருட் குருவா யென்னைச்
சிறுகாலே ஆட்கொண்ட தேவ தேவே. 1

கண்ணிமதி புனைந்தசடைக் கனியே முக்கட்
கரும்பேயென் கண்ணேமெய்க் கருணை வாழ்வே
புண்ணியநன் னிலையுடையோ ருளத்தில் வாய்க்கும்
புத்தமுதே ஆனந்த போக மேசீர்
எண்ணியமெய்த் தவர்க்கெல்லாம் எளிதி லீந்த
என்னரசே ஆறுமுகத் திறையாம் வித்தே
திண்ணியவென் மனமுருக்கிக் குருவா யென்னைச்
சிறுகாலே ஆட்கொண்ட தேவ தேவே. 2

பன்னிருகண் மலர்மலர்ந்த கடலே ஞானப்
பரஞ்சுடரே ஆறுமுகம் படைத்த கோவே
என்னிருகண் மணியேயென் தாயே என்னை
ஈன்றானே என்னரசே என்றன் வாழ்வே
பின்னிருவர் புடைவிளங்க மயில்மீ தேறி
விரும்புமடி யார்காண மேவுந் தேவே
சென்னியினின் அடிமலர்வைத் தென்னை முன்னே
சிறுகாலே ஆட்கொண்ட தேவ தேவே. 3

திருச்சிற்றம்பலம்

---

## பாங்கியர்க்கு அறிவுறுத்தல்

திருச்சிற்றம்பலம்

ஆனந்தபைரவி-ஆதிதாளம்

### கண்ணிகள்

அம்பலத்தில் ஆடுகின்றார் பாங்கிமாரே-அவர்
ஆட்டங்கண்டு நாட்டங்கொண்டேன்பாங்கிமாரே. 1

ஆடுகின்ற சேவடிமேற் பாங்கிமாரே மிக
ஆசைகொண்டு வாடுகின்றேன் பாங்கிமாரே. 2

இன்பவடி வாய்ச்சடையிற் பாங்கிமாரே-நடம்
இட்டவர்மே லிட்டம்வைத்தேன் பாங்கிமாரே. 3

ஈனவுடற் கிச்சைவையேன் பாங்கிமாரே-நட
னேசர்தமை எய்தும்வண்ணம் பாங்கிமாரே. 4

உத்தமர் பொன்னம்பலத்தே பாங்கிமாரே-இன்ப
உருவாகி ஓங்குகின்ருர் பாங்கிமாரே. 5

ஊனவுல கைக்கருதேன் பாங்கிமாரே-மன்றில்
உத்தமருக் குறவானேன் பாங்கிமாரே. 6

கற்பனையெல் லாங்கடந்தார் பாங்கிமாரே-என்றன்
கற்பனைக்குட் படுவாரோ பாங்கிமாரே. 7

கண்டிலர்நான் படும்பாடு பாங்கிமாரே-மூன்று
கண்ணுடைய ரென்பாரையோ பாங்கிமாரே. 8

கன்மனமெல் லாங்கரைப்பார் பாங்கிமாரே-மனம்
கரையாரென் னளவிலே பாங்கிமாரே. 9

கள்ளமொன்று மறியேனன் பாங்கிமாரே-என்னைக்
கைவிடவுந் துணிவாரோ பாங்கிமாரே. 10

கற்பழித்துக் கலந்தாரே பாங்கிமாரே-இன்று
கைநழுவ விடுவாரோ பாங்கிமாரே. 11

கண்டவரெல் லாம்பழிக்கப் பாங்கிமாரே-என்றன்
கன்னியழித் தேயொளித்தோர் பாங்கிமாரே. 12

காமனைக்கண் ணலெரித்தார் பாங்கிமாரே-என்றன்
காதலைக்கண் டறியாரோ பாங்கிமாரே. 13

காவலையெல் லாங்கடந்து பாங்கிமாரே-என்னைக்
கைகலந்த கள்ளரவர் பாங்கிமாரே. 14

காணவிழைந் தேனவரைப் பாங்கிமாரே-கொண்டு
காட்டுவாரை யறிந்திலேன் பாங்கிமாரே. 15

கிட்டிவர வேண்டுமென்றார் பாங்கிமாரே-நான்
கிட்டுமுன்னே எட்டிநின்றார் பாங்கிமாரே. 16

கின்னரங்கே ளென்றிசைத்தார் பாங்கிமாரே-நான்
கேட்பதன்முன் சேட்படுத்தார் பாங்கிமாரே. 17

கிள்ளையைத்தூ தாவிடுத்தேன் பாங்கிமாரே-அது
கேட்டுவரக் காணேனையா பாங்கிமாரே. 18

கீதவகை பாடிநின்றார் பாங்கிமாரே-அது
கேட்டுமதி மயங்கினேன் பாங்கிமாரே. 19

கீழ்மைகுறி யாமலென்னைப் பாங்கிமாரே-மனம்
கேண்மைகுறித் தாரேயன்று பாங்கிமாரே. 20

கீடமனை யேனென்னையும் பாங்கிமாரே-அடிக்
கேயடிமை கொண்டாரன்று பாங்கிமாரே. 21

குற்றமெல்லாங் குணமாகப் பாங்கிமாரே-கொள்ளும்
கொற்றவரென் கொழுநர்காணீர் பாங்கிமாரே. 22

குற்றமொன்றுஞ் செய்தறியேன் பாங்கிமாரே-என்னைக்
கொண்டுதலம் பேசுவாரோ பாங்கிமாரே. 23

குஞ்சிதப்பொற் பாதங்கண்டார் பாங்கிமாரே-உள்ளக்
குறையெல்லாந் தீருங்கண்டீர் பாங்கிமாரே. 24

கூற்றுதைத்த பாதங்கண்டீர் பாங்கிமாரே-எங்கள்
குடிக்கெல்லாங் குலதெய்வம் பாங்கிமாரே. 25

கூறரிய பாதங்கண்டு பாங்கிமாரே-களி
கொண்டுநிற்க விழைந்தேனன் பாங்கிமாரே. 26

கூடல்விழைந் தேனவரைப் பாங்கிமாரே-அது
கூடும்வண்ணங் கூட்டிடுவீர் பாங்கிமாரே. 27

திருச்சிற்றம்பலம்

---

# வெண்ணிலா

திருச்சிற்றம்பலம்

புன்னாகவராளி ஆதி தாளம்

## கண்ணிகள்

தன்னையறிந் தின்பமுற வெண்ணிலாவே-ஒரு
தந்திரம்நீ சொல்லவேண்டும் வெண்ணிலாவே. 1

நாதர்முடி மேலிருந்த வெண்ணிலாவே-அங்கே
நானும்வர வேண்டுகின்றேன் வெண்ணிலாவே. 2

சச்சிதானந்தக் கடலில் வெண்ணிலாவே-நானுந்
தாழ்ந்துவிழ வேண்டுகின்றேன் வெண்ணிலாவே. 3

இராப்பகலில் லாவிடத்தே வெண்ணிலாவே-நானும்
இருக்கவெண்ணி வாடுகின்றேன் வெண்ணிலாவே. 4

தேசுநிற மாய்நிறைந்த வெண்ணிலாவே-நானுஞ்
சிவமயம தாய்விளைந்தேன் வெண்ணிலாவே. 5

போதநடு வூடிருந்த வெண்ணிலாவே-மலம்
போதமற வேண்டுகின்றேன் வெண்ணிலாவே. 6

ஆருமறி யாமலிங்கே வெண்ணிலாவே-அரு
ளாளர்வரு வாரோ சொல்வாய் வெண்ணிலாவே. 7

அந்தரங்க சேவைசெய்ய வெண்ணிலாவே-எங்கள்
ஐவர்வரு வாரோசொல்வாய் வெண்ணிலாவே. 8

வேதமுடி மேலிருந்த வெண்ணிலாவே-மல
வேதையுள வேறுசொல்வாய் வெண்ணிலாவே. 9

குண்டலிப்பால் நின்றிலங்கும் வெண்ணிலாவே-அந்தக்
குண்டலிப்பால்வேண்டுகின்றேன் வெண்ணிலாவே.

ஆதியந்த மென்றுணர்ந்தார் வெண்ணிலாவே-அந்த
ஆதியந்த மாவதென்ன வெண்ணிலாவே. 11

வித்திலாமலேவிளைந்த வெண்ணிலாவே-நீதான்
விளைந்தவண்ண மேதுசொல்வாய் வெண்ணிலாவே.

முப்பொருளு மொன்றதென்பார் வெண்ணிலாவே-அந்த
மூன்றுமொன்ருய் முடிந்ததென்ன வெண்ணிலாவே.

நானதுவாய் நிற்கும்வண்ணம் வெண்ணிலாவே-ஒரு
ஞானநெறி சொல்லுகண்டாய் வெண்ணிலாவே. 14

ஞானமயமாய்விளங்கும் வெண்ணிலாவே-என்னை
நானறியச் சொல்லுகண்டாய் வெண்ணிலாவே. 15

வாசிவாசி யென்றுரைத்தார் வெண்ணிலாவே-அந்த
வாசியென்ன பேசக்கண்டாய் வெண்ணிலாவே. 16

ஐந்தலைப்பாம் பாட்டுகின்ருர் வெண்ணிலாவே- அவர்
அம்பலத்தில் நின்றதென்ன வெண்ணிலாவே. 17

ஓரெழுத்தில் ஐந்துண்டென்பார் வெண்ணிலாவே- அது
ஊமையெழுத் தாவதென்ன வெண்ணிலாவே. 18

அந்தரத்தி லாடுகின்ருர் வெண்ணிலாவே-அவர்
ஆடுகின்ற வண்ணமென்ன வெண்ணிலாவே. 19

அம்பலத்தி லாடுகின்ருர் வெண்ணிலாவே- அவர்
ஆடும்வகை எப்படியோ வெண்ணிலாவே. 20

அணுவிலணு வாயிருந்தார் வெண்ணிலாவே-எங்கும்
ஆகிநின்ற வண்ணமென்ன வெண்ணிலாவே. 21

அண்டபகிரண்டமெல்லாம் வெண்ணிலாவே-ஐயர்
ஆட்டமென்று சொல்வதென்ன வெண்ணிலாவே.22

அம்பலத்தி லாடுகின்ருர் வெண்ணிலாவே-என்னை
ஆட்டுகின்ரு ரிப்பரத்தே வெண்ணிலாவே. 28

திருச்சிற்றம்பலம்

———

# காட்சிக்கண்ணி

திருச்சிற்றம்பலம்

எதுகுலகாம்போதி-அடதாளம்

பல்லவி

ஆணிப்பொன் னம்பலத் தேகண்ட காட்சிகள்
அற்புதக் காட்சிய டி-அம்மா
அற்புதக் காட்சியடி.

சரணங்கள்

சோதி மலையொன்று தோன்றிற் றதிலொரு
வீதியுண் டாச்சுதடி-அம்மா
வீதியுண் டாச்சுதடி. (ஆ)

வீதியிற் சென்றேனவ் வீதி நடுவொரு
மேடை இருந்ததடி-அம்மா
மேடை இருந்ததடி. (ஆ)

மேடையி லேறினேன் மேடைமே லங்கொரு
கூட மிருந்ததடி-அம்மா
கூட மிருந்ததடி. (ஆ)

கூடத்தை நாடவக் கூடமே லேழ்நிலை
மாட மிருந்ததடி-அம்மா
மாட மிருந்ததடி. (ஆ)

ஏழ்நிலைக் குள்ளு மிருந்த அதிசயம்
என்னென்று சொல்வனடி-அம்மா
என்னென்று சொல்வனடி. (ஆ)

ஓர்நிலை தன்னில் ஒளிர்முத்து வெண்மணி
சீர்நில மாச்சுதடி-அம்மா
சீர்நில மாச்சுதடி. (ஆ)

பாரோர் நிலையிற் கருநீலஞ் செய்ய
பவளம தாச்சுதடி-அம்மா
பவளம தாச்சுதடி. (ஆ)

மற்றோர் நிலையில் மரகதப் பச்சைசெம்
மாணிக்க மாச்சுதடி அம்மா
மாணிக்க மாச்சுதடி. (ஆ)

பின்னோர் நிலையிற் பெருமுத்து வச்சிரப்
பேர்மணி யாச்சுதடி-அம்மா
பேர்மணி யாச்சுதடி. (ஆ)

வேறோர் நிலையில் மிகும்பவ ளத்திரள்
வெண்மணி யாச்சுதடி-அம்மா
வெண்மணி யாச்சுதடி. (ஆ)

புகலோர் நிலையிற் பொருந்திய பன்மணி
பொன்மணி யாச்சுதடி-அம்மா
பொன்மணி யாச்சுதடி. (ஆ)

பதியோர் நிலையிற் பகர்மணி யெல்லாம்
படிகம தாச்சுதடி-அம்மா
படிகம தாச்சுதடி. (ஆ)

பொற்றம்பங் கண்டேறும் போதினில் நான்கண்ட
புதுமையென் சொல்வனடி-அம்மா
புதுமையென் சொல்வனடி. (ஆ)

ஏறும்போ தங்கே எதிர்த்த வகைசொல்ல
என்னள வல்லவடி-அம்மா
என்னள வல்லவடி. (ஆ)

ஆங்காங்கே சத்திகள் ஆயிர மாயிரம்
ஆகவந் தார்களடி-அம்மா
ஆகவந் தார்களடி. (ஆ)

வந்து மயக்க மயங்காமல் நானருள்
வல்லபம் பெற்றேனடி-அம்மா
வல்லபம் பெற்றேனடி. (ஆ)

வல்லபத் தாலந்த மாதம்பத் தேறிநான்
மணிமுடி கண்டேனடி-அம்மா
மணிமுடி கண்டேனடி. (ஆ)

மணிமுடி மேலோர் கொடுமுடி நின்றது
மற்றது கண்டேனடி-அம்மா
மற்றது கண்டேனடி. (ஆ)

கொடுமுடி மேலா யிரத்தெட்டு மாற்றுப்பொற்
கோயி லிருந்ததடி-அம்மா
கோயி லிருந்ததடி. (ஆ)

கோயிலைக் கண்டங்கே கோபுர வாயிலிற்
கூசாது சென்றேனடி-அம்மா
கூசாது சென்றேனடி (ஆ)

கோபுர வாயிலுட் சத்திகள் சத்தர்கள்
கோடிபல் கோடியடி-அம்மா
கோடிபல் கோடியடி. (ஆ)

ஆங்கவர் வண்ணம்வெள் வண்ணம்செவ் வண்ணமுன்
ஐவண்ண மாகுமடி-அம்மா
ஐவண்ண மாகுமடி. (ஆ)

அங்கவ ரெல்லாமிங் காரிவ ரென்னவும்
அப்பாலே சென்றேனடி-அம்மா
அப்பாலே சென்றேனடி. (ஆ)

அப்பாலே சென்றேனங் கோர்திரு வாயிலில்
ஐவ ரிருந்தாரடி-அம்மா
ஐவ ரிருந்தாரடி. (ஆ)

மற்றவர் நின்று வழிகாட்ட மேலோர்
மணிவாயி லுற்றேனடி-அம்மா
மணிவாயி லுற்றேனடி. (ஆ)

எண்ணுமவ் வாயிலிற் பெண்ணோ டாணுக
இருவ ரிருந்தாரடி-அம்மா
இருவ ரிருந்தாரடி. (ஆ)

அங்கவர் காட்ட அணுகத் திருவாயில்
அன்பொடு கண்டேனடி-அம்மா
அன்பொடு கண்டேனடி. (ஆ)

அத்திரு வாயிலி லானந்த வல்லியென்
அம்மை யிருந்தாளடி-அம்மா
அம்மை யிருந்தாளடி. (ஆ)

அம்மையைக் கண்டேன் அவளருள் கொண்டேன்
அமுதமு முண்டேனடி-அம்மா
அமுதமு முண்டேனடி. (ஆ)

தூங்கும் அவளரு ளாலே நடராசர்
சந்நிதி கண்டேனடி-அம்மா
சந்நிதி கண்டேனடி. (ஆ)

சந்நிதி யிற்சென்று நான்பெற்ற பேறது
சாமி யறிவாரடி-அம்மா
சாமி யறிவாரடி. (ஆ)

ஆணிப்பொன் னம்பலத் தேகண்ட காட்சிகள்
அற்புதக் காட்சியடி-அம்மா
அற்புதக் காட்சியடி. (ஆ)

திருச்சிற்றம்பலம்

———

## அக்கச்சி

எதுகுல காம்போதி – அடதாளம்

கண்ணிகள்

வானத்தின்மீது மயிலாடக் கண்டேன்
மயில்குயி லாச்சுதடி—அக்கச்சி
மயில்குயி லாச்சுதடி

துள்ளலை விட்டுத் தொடங்கினேன் மன்றுடும்
வள்ளலைக் கண்டேனடி—அக்கச்சி
வள்ளலைக் கண்டேனடி

சாதி சமயச் சழக்கைவிட் டேனருட்
சோதியைக் கண்டேனடி—அக்கட்சி
சோதியைக் கண்டேனடி

பொய்யை ஒழித்துப் புறப்பட்டேன் மன்றுடும்
ஐயரைக் கண்டேனடி—அக்கச்சி
ஐயரைக் கண்டேனடி.

திருச்சிற்றம்பலம்

———

## திருவொற்றியூர்
## எழுத்தறியும் பெருமான் மாலை

திருச்சிற்றம்பலம்

தரவு கொச்சகம்

சிந்தை மயங்கித் தியங்குகின்ற நாயேனை
முந்தை வினைதொலைத்துன் மொய்கழற்கா ளாக்காதே
நிந்தையுறு நோயால் நிகழவைத்தல் நீதியதோ
எந்தைநீ ஒற்றி எழுத்தறியும் பெருமானே. 1

பித்தனைவன் னெஞ்சகனை வஞ்சகனை வன்பிணிகொள்
பித்தனை வீணாட்போக்கும் பேயேனை நாயேனை
முத்தனையா யுன்றன் முளரித்தாட் காளாக்க
எத்தனைநாட் செல்லும் எழுத்தறியும் பெருமானே. 2

நன்னெறிசேர் அன்பர்தமை நாடிடவும் நின்புகழின்
சென்னெறியைச்சேர்ந்திடவுஞ்செய்தாயெனக்குனக்கும்
முன்னறியேன் பின்னறியேன் மூடனேன் கைம்மாறிங்
கென்னறிவேன் ஐயா எழுத்தறியும் பெருமானே. 3

மைப்படியுங் கண்ணார் மயலுழக்கச் செய்வாயோ
கைப்படிய வுன்றன் கழல்கருதச் செய்வாயோ
இப்படியென் றப்படியென் றென்னறிவே னின்சித்தம்
எப்படியோ ஐயா எழுத்தறியும் பெருமானே. 4

நில்லா வுடம்பை நிலையென்றே நேசிக்கும்
பொல்லாத நெஞ்சப் புலையனே னிவ்வுலகிற்
சொல்லா மனநோயாற் சோர்வுற் றலையுமல்லல்
எல்லா மறிவாய் எழுத்தறியும் பெருமானே. 5

தீதறிவேன் நன்கணுவுஞ் செய்யேன்வீ ணாட்போக்கும்
வாதறிவேன் வஞ்சகனேன் வல்வினையேன்வாய்மையிலே
சூதறிவேன் மாலயனுஞ் சொல்லிய நின்பெருமை [ன்
யாதறிவேன் ஐயா எழுத்தறியும் பெருமானே. 6

மாருத வன்பிணியால் மாழாந்து நெஞ்சயர்ந்தே
கூருத துன்பக் கொடுங்கடற்குள் வீழ்ந்தடியேன்
ஆரு தாற்றி அழுகின்றேன் நின்செவியில்
ஏருதோ ஐயா எழுத்தறியும் பெருமானே. 7

உண்ணுடும் வல்வினையால் ஓயாப் பிணியிழந்து
புண்ணாக நெஞ்சம் புழுங்குகின்றேன் புண்ணியனே
கண்ணுவா உன்றன் கருணை எனக்களிக்க
எண்ணுயோ ஐயா எழுத்தறியும் பெருமானே. 8

புன்செய்கை மாருப் புலையமட மங்கையர்தம்
வன்செய்கை யாலே மயங்குகின்ற வஞ்சகனேன்
கொன்செய்கை மாருத கூற்றன் வருவானேல்
என்செய்வேன் ஐயா எழுத்தறியும் பெருமானே. 9

சங்குடையான் தாமரையான் தாள்முடியுங் காண்ப நரிதாம், கொங்குடைய கொன்றைக் குளிர்சடையாய் கோதையொரு, பங்குடையாய் ஏழைமுகம் பாராது தள்ளிவிட்டால், எங்கடைவேன் ஐயா எழுத்தறியும் பெருமானே. 10

மன்றி னிடைநடஞ்செய் மாணிக்க மாமலையே
வென்றிமழுக் கையுடைய வித்தகனே என்றென்று
கன்றின் அயர்ந்தழுமென் கண்ணீர் துடைத்தருள
என்று வருவாய் எழுத்தறியும் பெருமானே. 11

மன்னளவிற் சோதி மணிபோல்வாய் மாதவத்தோர்
தென்னளவும் வேணிச் சிவனே என வொருகாற்
சொன்னளவிற் சொன்னவர்தந் துன்பொழிப்பாய் என்ப
என்னளவிற் காணேன் எழுத்தறியும் பெருமானே. [ரது

மின்போல்வார் இச்சையினுல் வெம்புகின்றேன் ஆனாலும், தன்போல்வாய் என்னின்ற தாய்போல்வாய் சார்ந்துரையாப், பொன்போல்வாய் நின்னருளிப்போ தடியேன் பெற்றேனே, என்போல்வா ரில்லை எழுத்தறியும் பெருமானே. 13

பூமாந்தும்வண்டெனநின் பொன்னருளைப்புண்ணியர்கள்
தாமாந்தி நின்னடிக்கீழ்ச் சார்ந்துநின்றார் ஐயோநான்
காமாந்த காரமெனுங் கள்ளுண்டு கண்மூடி
ஏமாந்தேன் ஒற்றி எழுத்தறியும் பெருமானே. 14

பன்னருமிப் பார்நடையிற் பாடுழன்ற பாதகனேன்
துன்னியநின் பொன்னடியைச் சூழாதே னாயிடினும்
புன்னிகரேன் குற்றம் பொறுக்கப் பொறுப்புனக்கே
என்னருமைத் தாய்நீ எழுத்தறியும் பெருமானே. 15

வீட்டுக் கடங்கா விளையாட்டுப் பிள்ளையெனத்
தேட்டுக் கடங்காத தீமனத்தா லாந்துயரம்
பாட்டுக் கடங்காநின் பத்தர் அடிப்புகழ்போல்
ஏட்டுக் கடங்கா தெழுத்தறியும் பெருமானே. 16

பன்னும்மனத்தாற் பரிசிழந்த பாதகனேன்
துன்னுமல வெங்கதிரோன் சூழ்கின்ற சோடையினுல்
நின்னருணீர் வேட்டு நிலைகலங்கி வாடுகின்றேன்
இன்னுமறி யாயோ எழுத்தறியும் பெருமானே. 17

கல்லை நிகராங் கடை மனம்போம் கானெறியிற்
புல்லைமதித் தையோவைம் பூவிழந்த பொய்யடியேன்
ஒல்லைபடு கின்ற ஒருவே தனை தனக்கோர்
எல்லை அறியேன் எழுத்தறியும் பெருமானே. 18

பொன்னைமதித் தையாநின் பொன்னடியைப் போற்ருத
கன்னிகரும நெஞ்சாற் கலங்குகின்ற கைதவனேன்
இன்னல் உழக்கின்ற ஏழைகட்கு மேழைகண்டாய்
என்னை விடாதே எழுத்தறியும் பெருமானே. 19

மாசுவரே என்னும் மலக்கடலில் வீழ்ந்துலகோர்
ஆசுவரே என்ன அலைவேனை ஆளாயேல்
கூசுவரே கைகொட்டிக் கூடிச் சிரித்தடியார்
ஏசுவரே ஒற்றி எழுத்தறியும் பெருமானே. 20

ஊர்சொல்வேன் பேர்சொல்வேன் உத்தமனே நின் திருத்தாள், சீர்சொல்வேன் என்றனை நீ சேர்க்காதகற்று வையேல், நேர்சொல்லா யுன்றனக்கு நீதியீ தல்ல வென்றே, யார்சொல்வார் ஐயா எழுத்தறியும் பெருமானே. 21

நேக்கமிலா மெய்யடியார் நேசமிலாப் பொய்யடியேன்
ஊக்கமிலா நெஞ்சத்தின் ஓட்டகலச் செய்வாயேல்
தூக்கமிலா ஆனந்தத் தூக்கமின்றி மற்றுமிங்கோர்
ஏக்கமிலேன் ஒற்றி எழுத்தறியும் பெருமானே. 22

போகின்றவஞ்சகரைப் போக்கியுன்றன் பொன்னடிக்காள்
ஆகின்ற மேலோர் அடிவழுத்தா நாயேற்குப்
பாகின் தனிச்சுவையிற் பாங்காகுப் நின்னருளை
ஈகின்ற தென்றோ எழுத்தறியும் பெருமானே. 23

ஊழை அகற்ற உளவறியாப் பொய்யனிவன்
பீழைமனம் நம்மைப் பெருதம் மனங்கொடிய
தாயையென எண்ணியெனைத் தள்ளிவிட்டா லென்செய்
ஏழைநான் ஒற்றி எழுத்தறியும் பெருமானே. [வேண்

மடுக்க முடியா மலவிருட்டிற் சென்றுமனம்
கடுக்கமுடி யாப்புலனுற் கட்டிச் சுமக்கவைத்த
தொடுக்க முடியாத துன்பச் சுமையையினி
எடுக்கமுடி யாதே எழுத்தறியும் பெருமானே. 25

முள்ளளவு நெஞ்ச முழுப்புலைய மாதர்களாம்
கள்ளளவு நாயிற் கடைப்பட்ட என்றனக்கே
உள்ளளவும் அன்பர்க் குதவுமுன்ருட் கன்பொருசிற்
றெள்ளளவு முண்டோ எழுத்தறியும் பெருமானே. 26

பண்ண முடியாப் பரிபவங்கொண் டிவ்வுலகில்
நண்ண முடியா நலங்கருதி வாடுகின்றேன்
உண்ணமுடி யாவமுதாம் உன்னையன்றி எவ்வெவர்க்கும்
எண்ணமுடி யாதே எழுத்தறியும் பெருமானே. 27

வெங்கொளித்தேள் போன்ற வினையால் வெதும்பிமனம்
அங்கொளிக்கா துன்னை அழைத்தழுது வாடுகின்றேன்
இங்கொளிக்கா நஞ்சமுண்ட என்னருமை அப்பாநீ
எங்கொளித்தாய் ஒற்றி எழுத்தறியும் பெருமானே. 28

பித்தனைக்குங் காமப் பெரும்பேய் மயக்குமயல்
வித்தனைத்தாம் ஆணவப்பொய் வீறுமழுக் காறுசினம்
கொத்தனைத்தாம் வஞ்சங் கொலைமுதலாம் பாவங்கள்
இத்தனைக்கும் நான்காண் எழுத்தறியும் பெருமானே. 29

ஒல்லையே நஞ்சனைத்தும் உண்ட தயாநிதிநீ
அல்லையோ நின்றிங் கயர்வேன்முன் வந்தொருசொற்
சொல்லையோ ஒற்றியூர் தூயதிருக் கோயிலுள்நீ
இல்லையோ ஐயோ எழுத்தறியும் பெருமானே.] 30

நினையுடையாய் நீயன்றித் தேடியெங்கும் இல்லாதாய்
மனையுடையார் மக்களெனும் வாழ்க்கையிடைப் பட்டவி
இனையுடையான் என்றிங் கெனையாள்வதுன்கடனே [மே
எனையுடையாய் ஒற்றி எழுத்தறியும் பெருமானே. 81

திருச்சிற்றம்பலம்

———

## திருமுல்லைவாயில் திருவிண்ணப்பம்

திருச்சிற்றம்பலம்

கலி விருத்தம்

தாயின் மேவிய தற்பர மேமுல்லை
வாயில் மேவிய மாமணி யேஉன்றன்
கோயில் மேவிநின் கோமலர்த் தாள்தொழா
தேயில் மேவி இருந்தன னென்னையே. 1

தில்லை வாய்ந்த செழுங்கனி யேதிரு
முல்லை வாயில் முதற்சிவ மூர்த்தியே
தொல்லை யேனுன்றன் தூய்திருக் கோயிலின்
எல்லை சேரவின் றெத்தவஞ் செய்ததே. 2

வளங்கொ ளும்முல்லை வாயிலின் மேவிய
துளங்கொ ளுங்கட குரும ணியேஉனை
உளங்கொ ளும்படி உன்றிருக் கோயிலக்
களங்கொள் நெஞ்சினன் கண்டதுங் கண்டதே. 3

மல்லி லாமுல்லை வாயிலின் மேவிய
வில்லயி லாமணி யேவிளக் கேசற்றும்
கொல்லயி லாதவர் கூடுநின் கோயிலின்
[illegible]யி லாவத் தவமென்கொல் செய்ததே. 4

சீர்சி றக்குந் திருமுல்லை வாயிலில்
ஏர்சி றக்கும் இயல்மணி யேகொன்றைத்
தார்சி றக்குஞ் சடைக்கனி யேஉன்றன்
ஊர்சிறக்க உறுவதெவ் வண்ணமே. 5

சேர்கொள் பொய்கைத் திருமுல்லை வாயிலிற்
பாற்கொள் வண்ணப் பரஞ்சுட ரேவிடை
மேற்கொள் சங்கர னேவிம லாஉன்றன்
சார்கொள் அன்பர் கலங்குதல் நன்றதோ. 6

வண்ண மாமுல்லை வாயிலின் மேவிய
அண்ண லேஅமு தேஅர சேநுதற்
கண்ண னேஉனைக் காணவந் தோர்க்கெலாம்
நண்ண ருந்துயர் நல்குதல் நன்றதோ. 7

மண்ணில் ஓங்கி வளர்முல்லை வாயில்வாழ்
கண்ணுள் மாமணி யேகரும் பேஉனை
எண்ணும் அன்பர் இழிவடைந் தாலது
பண்ணு நின்னருள் பாரிடை வாழ்கவே. 8

தீதிலாத திருமுல்லை வாயில்வாழ்
கோதிலாத குணப்பெருங் குன்றமே
வாதி லாதுனை வாழ்த்தவந் தோர்தமை
ஏதி லாரென் றிருப்பதும் என்கொலோ. 9

தேசு லாவிய சீர்முல்லை வாயில்வாழ்
மாசி லாமணி யேமருந் தேசற்றும்
கூசி டாமனின் கோயில்வந் துன்புகழ்
பேசிடாத பிழைபொறுத் தாள்வையே. 10

திருச்சிற்றம்பலம்

———

# நடேசர் கும்மி

ஆனந்த பைரவி - ஆதி தாளம்

பல்லவி

கும்மியடி பெண்ணே கும்மியடி—இரு
கொங்கை குலுங்கவே கும்மியடி.

அநுபல்லவி

நம்மை யாளும்பொன் னம்பல வாணனை
நாடிக் கும்மி யடியேடி-பதம்-பாடிக் கும்மி யடியேடி.

சரணங்கள்

நாமம் அகற்றிய தூயனடி—சிவ
காம சவுந்தரி நேயனடி
மாமறை யோதுசெவ் வாயனடி—மணி
மன்றெனு ஞானவா காயனடி. 1

ஆனந்தத் தாண்டவ ராசனடி—நமை
ஆட்கொண் டருளிய தேசனடி
வானந்த மாமலை மங்கைமகிழ்—வடி
வாளன டிமண வாளனடி. 2

கல்லைக் கனிவிக்குஞ் சித்தனடி-முடி
கங்கைக் கருளிய கர்த்தனடி
தில்லைச் சிதம்பர சித்தனடி—தேவ
சிங்கம டியுயர் தங்கமடி. 3

பெண்ணொரு பால்வைத்த மத்தனடி—சிறு
பிள்ளைக் கறிகொண்ட பித்தனடி
நண்ணி நமக்கருள் அத்தனடி—மிக
நல்லனடி யெல்லாம் வல்லனடி. 4

அம்பலத் தாடல்செய் ஐயனடி—அன்பர்
அன்புக் கெளிவரு மெய்யனடி
தும்பை முடிக்கணி தூயனடி—நயஞ்
சோதிய டிபரஞ் சோதியடி. 5

திருச்சிற்றம்பலம்

கோமாகனி த் திரட்டு முற்றிற்று

---

குருஞானசம்பந்த சுவாமிகள்
அருளிச்செய்த

# சிவபோகசாரம்

## அடிகள் வணக்கம்

### நேரிசை வெண்பா

சித்திதரும் நாதன் தென்கமலை வாழ்நாதன்
பத்திதரு நாதன் பரநாதன்—முத்திப்
பெருநாதன் ஞானப்பிரகாசன் உண்மை
குருநாதன் நங்குருநா தன். 1

அருவும் உருவும் அருவுருவம் அல்லா
ஒருவன் உயிருக்குயிராய் ஓங்கித்—திருவார்
கமலைவரு ஞானப்பிர காசனென வந்தே
அமலபதந் தந்தெனையாண் டான். ௨

ஆரறிவார் நீதிவழி ஆரறிவார் சித்திமுத்தி
ஆரறிவார் நற்றவங்கள் அன்பனைத்தும்—பாரெவர்க்குங்
கத்தன் கமலையில்வாழ் ஞானப்பிர காசனெனும்
அத்தனென்போல் வந்திலனா னால். 3

அரியயற்கு முன்னால் அடிமுடியுங் காணாய்
பெரியவனே வந்து பிறந்து—துரியம்
பெருக்கின்றான் ஞானப் பிரகாச னாகி
இருக்கின்றா னூரில் இன்று. 4

கண்டேனிப் பாசங் கழிந்தேன் அமுதைமுகந்
துண்டேன் சுகானந்தத்துள்ளிருந்தேன்—வண்டிமிர்காத்
தேனைப் பொழிகமலைச் செங்கமலப் பொற்பாத
ஞானப்பிர காசனையே நான். ௫

உள்ளிருந்தே என்று முணர்த்துகினும் கண்டிலரென்
றுள்ளும் புறம்புமா வேமென்று—மெள்ள
நரகுருவாய் ஆரூரில் வந்தான் நமையாண்
டருள் புரிஞா னப்பிரகா சன் 6

இருளுதயம் நீக்கும் இரவியைப்போல் என்னுள்
அருளுதயம் நன்றாய் அருளி—மருளுதயம்
மாற்றியவன் ஆரூரன் மாமறையும் ஆகமமுஞ்
சாற்றியஞா னப்பிரகா சன். 7

ஒழியாத பேரின்பத் துள்ளாய் உலகில்
விழியா திருந்து விடவே அழியாத
பூரண செங்கமலப் பொற்பாதா தென்கமலை
ஆரண நாயேற் கருள். 8

தேடுந் திரவியமுஞ் சிற்றறிவும் பற்றுதலுங்
கூடும்பொய் யென்றருளிற் கூட்டினன்—நாடறிய
ஞானப்ர காசனுயர் நங்கமலை மாநகர்வாழ்
வானப் பிறையணிந்த மன். 9

காண்பதும்பொய் கேட்பதும்பொய் காரியம்போலே யிதமாய்ப், பூண்பதும்பொய் எவ்விடத்தும் போகமும் பொய்—மாண்டாகத், தோற்றியின்ப வெள்ளமாய்த் துன்னியென்னுட் சம்பந்தன். வீற்றிருப்ப தொன்றுமே மெய். 10

———

## பெருதற்கருமை

### நேரிசை வெண்பா

ஒருமையுடன் ஈசனருள் ஓங்கியென்றுந் தூங்கல்
அருமை அருமை அருமை—பெருமையிடும்
ஆங்காரம் கோபம் அபிமானம் ஆசைவினை
நீங்காத போதுதா னே. 11

தன்பெருமை எண்ணாமை தற்போத மேயுறத்தன்
பின்பெருமை யாஞ்சகத்தை வேண்டாமை—தன்பால்
உடலைத் தினம்பழித்தல் ஓங்கிசிவந் தோன்றல்
நடலைப் பிறப்பொழியும் நாள். 12

உரையிறந்தால் உன்னும் உணவிறந்தால் மாயைத்
திரையிறந்தாற் காண்கின்ற தேவை —வரைபெருக
வாசிப் பதும்நாவால் வாழ்த்துவதும் நாடகமாய்ப்
பூசிப் பதுஞ்சுத்தப் பொய். 13

பரம ரகசியத்தைப் பாழான வாயால்
இரவுபகல் எந்நேர மின்றிக்—தரனெரியக்
கூப்பிட்டுங் காணுமோ கோழைமட நெஞ்சேமால்
பூப்பிட்டுங் காணாப் பொருள். 14

ஒருகோடி ஆகமங்கள் எல்லாம் உணர்ந்தும்
பெருகுதவஞ் சித்தியெல்லாம் பெற்றும்—குருவருளால்
வைத்த படியிருக்க மாட்டாத மாந்தர்ச்
சித்தசல னம்மாந் தினம். 15

அன்புமிக உண்டாய் அதிலே விவேகமுண்டாய்த்
துன்ப வினையைத் துடைப்பதுண்டாம் இன்பம்
தரும்பூ ரணத்துக்கே தாகமுண்டாய் ஓடி
வருங்கா ரணர்க்குண்மை வை. 16

———

## அறியும் பகுதி

### நேரிசை வெண்பா

உருவை அருவை ஒளியை வெளியை
இருளைச் சிவமென்றி ராதே மருளைப்
பிரிந்தறிவிற் கண்டிதனைப் பின்னமற எங்குஞ்
செறிந்த பொருள் தானே சிவம். 17

அகமாதி கண்ட அறிவாகி எங்குஞ்
சுகமாகி யின்பச் சுகமாய்ச்—சுகாதீதத்
தானந்த வெள்ளம் அதுவாய்ச் சுகத்தையகன்
ருனந்த மாதியிலா தான். 18

இந்தனத்தில் அங்கி எரியுநீர் தேனிரதங்
கந்தமலர்ப் போதுவான் காலொளிகண்—சந்ததமும்
அத்துவிதம் ஆவதுபோல் ஆண்மாவும் ஈசனுமாய்
முத்தியிலே நிற்கும் முறை. 19

ஆருறு தத்துவமும் ஆணவமும் நீங்கியுயிர்
வேருக நின்ற விடஞ்சொல்லின்—மாரு
இருளாய பாவனையற் றெங்குமாய் நின்ற
பொருளேகா ணீயே புணர். 20

நனவாதி அந்தத்தில் நாடுசுகந் தன்னைக்
கனவாதி அந்தத்திற் கண்டு—நனவாதி
தோற்றிடும்போ தாந்தச் சுகரூபங் கண்டவர்கள்
மாற்றிடுவ ரென்றும் மலம். 21

தத்துவங்கள் எண்ணித் தலையடுத்துக் கொள்ளாதே
சத்துவங்க ளேதென்னிற் சாற்றக்கேள்—மெத்துஞ்
சுகாரம்ப மாஞ்சிவத்திற் ருேயாத மாயா
விகாரங்கள் தத்துவமா மே. 22

ஆருறு தத்துவமும் ஆணவமும் வல்வினையும்
நீருக முத்திநிலை நிற்போர்க்குப்—பேருகப்
பார்விரித்த நூலெல்லாம் பார்த்தறியிற் சித்தியிலே
ஓர்விருத்தப் பாதிபோ தும். 23

———

# உபதேச விளக்கம்

## நேரிசை வெண்பா

பரவிமனம் போகாப் பரத்தடைய நாளும்
இரவுபகல் அற்ற இடத்திலே—திரமாக
நில்லென்ருல் கண்டவெல்லாம் நேதிபண்ணிமும்மலமுங்
கொல்லென்ருன் ஞான குரு. 24

காயங் கரணமுதல் நான்கிற்குங் காரணந்தான்
ஆயவிருள் மாயை அதுவென்ருல்—தூயபொருட்
போதனே செங்கமலப் பொற்பாத னேஎனை நீ
ஏதென்று சொல்லா யினி. 25

என்னை யறிவென்ருன் என்னறிவில் ஆனந்தத்
தன்னைச் சிவமென்ருன் சந்ததமும்—என்னையுன்னைப்
பாரா மறைத்ததுவே பாதமென்ருன் இம்மூன்றும்
ஆராய்ந் தவர் மூத்த ராம். 26

எங்கும் இருக்கும் அறிவுநீ ஏகமாய்
அங்கங் குணர்த்தும் அறிவுநாம்—பொங்கும்
மலமறைத்தல் மாயை மயக்கல் விகாரப்
பலமனைத்துங் கன்மமலம் பார். 27

செங்கமலப் பொற்பாதன் சீர்பாத வல்லபங்கள்
நங்கமலே வாழ்கிளியே நாடிக்கேள்—சங்கையிலாத்
தத்துவத்தைக் காட்டியதிற் றத்துவத்தைக் காட்டியருட்
டத்துவத்தைக்காட்டியது தான். 28

தேசு செறிகமலைச் செங்கமலப் பொற்பாதன்
பேசுதமிழ் ஞானப் பிரகாசன்—பாசவினை
வாட்டினுன் மீட்டுநான் வாரா வகையருளைக்
காட்டினுன் கூட்டினுன் காண். 29

நானிங்காய் நீயங்காய் நாட்டமற வைத்ததற்பின்
நானெங்கே நீயெங்கே நாதாவே—வானெங்கும்
ஒன்றாகி நின்ற உணர்வுநீ உன்னறிவில்
நன்றாகத் தோன்றுசுகம் நான். 30

அலைவற் றிருந்த அறிவுநீ ஆங்கே
நிலைபெற் றிருந்தசக ஞேய—மலைவற்
றிருந்ததுகண்டாயே இருந்தபடி யத்தோ
டிருந்துவிடப் போதும் இனி 31

அகத்தை இழந்தருளாய் அவ்விடத்தே தோன்றுஞ்
சுகத்தில் அழுந்திவிடச் சொன்னான்—மகத்தான
சிற்பரனூர் தனில்வாழ் செங்கமலப் பொற்பாதா
தற்பரஞா னப்பிரகா சன். 32

கிட்டாத ஈசனுனைக் கிட்டி அருள்புரிந்த
நிட்டானுபூதி நிலையிலே—முட்டா
திருவன்னி சேர்ந்துமாற் றேறியபொன் போல
வருமின்பப் பூரணமா வை. 33

அநாதி சுகரூபி அரனடிக்கீழ் என்றும்
அநாதி சுகரூபி ஆன்மா—அநாதி
இருந்தமலம் போக்கி இறையருளி னாலே
இருந்தபடி யேகண் டிரு. 34

இற்றை வரைக்கா ணத்தோ டிணங்கினையே
இற்றைவரைச் சென்ம மெடுத்தனையே—இற்றைவரைத்
துன்பவெள்ளத் துள்ளே துளைந்தனையே ஈதறநல்
லின்பவெள்ளத் துள்ளே இரு 35

தேகாதி நானல்ல என்றிருந்தாற் சித்தமயல்
போகாத தென்னையோ புண்ணியா - தேகாதி
தன்னளவே அம்மயக்கஞ் சத்தியமாய் எப்பொழுதும்
உன்னளவே இல்லை உணர். 36

ஆறாறு தத்துவநீ அன்றென் றறிந்தனையே
ஆறாறுங் கண்டறிவ னுயினையே—மாறாமல்
உன்னறிவில் ஆனந்தத் தோங்கினையே ஓராமல்
நின்னறிவை விட்டதுவாய் நில். 37

மாதா பிதாசுற்றம் என்று மயங்கினையே
நீதான் தனுவாகி நின்றனையே—ஈதெல்லாம்
பொய்யென் றறிந்தனையே பூரணா னந்தவெள்ளம்
மெய்யென் றறிந்தனையே மெய். 38

மனையில்வரு போகத்தின் மாதர்மக்கள் பாச
வினையில் அழுந்தி விடாதே—உனையிழந்து
காணாமற் கண்டானைக் காட்சி அறக்கலந்து
பூணாமல் எப்பொழுதும் பூண். 39

சுத்தவத்தை நாடியிடுஞ் சுத்த இராப்பகலா
மெத்தவத்தை நாடி விடுவையேற்—சுத்தவத்தை
தானா யிரண்டுந் தவிர்த்த சிவானந்த
வானாவை நீயே மதி. 40

சுத்தநிலம் உன்றனக்குச் சொல்லக்கேள் தொல்லைவினை
தத்துவங்கள் ஆறாறுந் தாம்பெருகக்—கத்திடுவர்
எல்லாம் இழந்த இடமே அதுவாக
நில்லாய் அதுவே நிலை. 41

நெருப்பென்றால் வாய்சுடுமோ நெய்பால்தேன் கட்டிக்
கருப்பென்றாற் றித்தியா காணீ—விருப்பமுடன்
நீபிரம மென்றக்கால் நீபிரமம் ஆயினையோ
நீபிரமஞ் சற்குருவா நில். 42

ஆர்க்குந் தெரியாத ஆனந்த இன்பவெள்ளம்
மேற்கொண்டு கொண்டு விடுகுதில்லை—யார்க்குந்
தெரியாத பரபிரமஞ் சேர்த்தாய் உனக்குச்
சரியார் சிதம்பரநா தா. 43

———

# அனுபூதி நிலை

## நேரிசை வெண்பா

உள்ளங் கரைய வுடல்கரைய ஆனந்த
வெள்ளங் கரைபுரண்டு மேலாகக்—கள்ளமலம்
பொய்யாக என்னுட் புகுந்தவா றென்கொலோ
ஐயா தியாகவினோ தா. 44

ஏதேது செய்தாலும் ஏதேது சொன்னாலும்
ஏதேது சிந்தித் திருந்தாலும்—மாதேவா
நின்செயலே என்று நினைதருளா லேயுணரில்
என்செயலே காண்கிலே னே. 45

மாயைமலம் எங்கே மறைந்ததோ மாயை தனில்
ஆயசகம் எங்கே அழிந்ததோ—காயமதில்
தங்கும் புருடனெங்கோ சச்சிதா னந்தவெள்ளம்
எங்கு மிகக்கோத்த தே. 46

நானுஞ் சுகவடிவாய் நண்ணினேன் நின்னருளால்
வானுஞ் சுகவடிவாய் மன்னிற்றே—வானுஞ்
சுகரூப மன்றுமணந் தோற்றநிலம் போலுன்
அகரூப மட்டே அது. 47

ஈசன் அடியில் இருக்கையில் எங்கெங்கும்
ஈசனடி தேடி இளைத்தேனே—பேசரிய
பொற்பதத்தின் செங்கமலப் பொற்பாதன் தன்னுடைய
நற்பதத்தைக் காணுமுன் நான். 48

நற்பதஞ்சேர் ஆரூரின் ஞானப்பிர காசனெந்தை
தற்பரனோர் ஞானவாட் டந்தானே—கொற்பனத்தும்
காரார் மறலியயன் கண்ணனுக்கும் அஞ்சேனே
யாராலு மென்னசெய்ய லாம். 49

வெறும்பாழிற் பேரின்ப வெட்டவெளி தன்னிற்
குறும்பாளர் காணுக் குடலின்—உறும்பாசம்
ஓட்டியெனே வைத்தனனே யுற்றபிர பஞ்சமெல்லாம்
ஆட்டியஞா னப்பிரகா சன். 50

என்றுஞ் சிவத்தோ டிணை பிரியா தேயறியாய்
நின்றபடி தன்னை நிகழ்த்திஞன்—மன்றில்
நடமாடும் ஆநரன் ஞானப்பிர காசன்
திடமாக என்னுள்ளத் தில். 51

நாதனுர் தென்கமலை நாயகனுர் எவ்வுயிர்க்கும்
போதனுர் செங்கமலப் பொற்பாதர்—போதமற
ஒன்றிரண்டு தானறவே உண்மையிலே கூட்டியெனை
இன்றறவே வைத்துவிட் டாரே. 52

நன்னெஞ்சே நீகேட்ட நன்மையெல்லாஞ்சொல்லுதற்குக்
கன்னெஞ்ச மாலயனுங் காணுதோன்—வன்னெஞ்சர்
இன்ன துறை யுண்டென்று ஈசன் எதிர்வந்தான்
என்னகுறை சொல்வாய் இனி 53

இட்டசனம் எங்கே இதமகிதந் தாமெங்கே
துட்டசனம் எங்கே தொழிலெங்கே—சிட்டருடன்
கூடி யிருந்ததெங்கே குன்ருச் சிவானந்தம்
நாடியது வாயிருந்த நாள். 54

வாக்குமனக் காயத்தான் வந்தபொருள் அத்தனையும்
வாக்குமனக் காயமுடன் மாயுமே—வாக்குமனக்
காயமுடனிழந்து காணத் திருஞான
ஞேயம் இழத்த நிலை. 55

புசிப்போஞ் சிவபோகம் பூரணமாய் எங்கும்
வசிப்போம் உலகில் வசியோம்—மூசிப்பின்றி
வாழ்வோஞ் சிவத்தையுணர் மாதவர்தம் பொன்னடிக்கீழ்
தாழ்வோம் எமக்கார் சரி. 56

———

## உபாயமில்லை

### நேரிசை வெண்பா

அறிவுநீ என்ன அறிந்தறிந்து மாயைச்
செறிவுநா னென்றென்று சேர்ந்தால்—அறிவு
தெரிந்திடுமோ இன்பசுகஞ் சேர்ந்திடுமோ நின்னைப்
பிரிந்திடுமோ சென்மப் பிணி. 57

அரணங்கள் தாமெரித்த அத்தரே என்னுட்
கரணங்க ளோட்டும் வகை காட்டீர்—கரணங்கள்
நீயதுவாய் நில்லாமல் நின்னறிவைக் கண்டருளிற்
போயதுவாய் நின்றுவிடப் போம். 58

தானல்லா தத்தனையுந் தானென் றுழலாமல்
தானெல்லா மாயதனுட் டாக்காமற்—றானெல்லாம்
ஆனேம் எனும்போ தத் தாக்காமல் ஈசனிடத்
தானேனே யாயினவ னும். 59

தேகநாம் என்னென்று செப்புவீர் ஈதில்வரும்
போகநா மென்று புலம்புவீர்—நோக
வருந்துவீர் தீவினையின் மாருத இன்பம்
பொருந்துவீ ரெப்படிநீர் போம். 60

தன்னை இழந்திடத்தே தானே சுகவடிவாய்
இன்னபடி என்றறியா எங்கோனும்—பின்னமற
நின்றநிலை தானுந் தெரியாதே நின்றவர்கட்
கன்றே பிறப்பறுக்க லாம். 61

உன்னுதே பற்று துரையாதே ஒன்றியதில்
நின்னும மில்லை நிகழாதே—பன்னுட்
பறையிறந்து நிற்கும் பயனணைந்தார் நெஞ்சிற்
றிறையிறந்து நிற்குஞ் சிவம். 62

அருளறிந்து தானும் அறிவறிந்தே ஆங்குட்
பொருளறிந்து தானடங்கிப் போகா—இருளகல
விம்மா திருத்து விகற்பமற ஒன்றாகிச்
சும்மா இருக்கை சுகம். 63

செறியுந் தனுவாதி சேர்ந்தறிந்து நின்ற
அறிவை அறிவால் அறிந்தே—அறிவிழந்து
நின்றாற் சுகானந்த நீடுநிலை வேறு
சென்றாங் சுகங்கிடையா தே. 64

தத்துவத்தை விட்டருளிற் றான்கலந்து தன்னிழப்பின்
மெத்துஞ் சுகத்தின் மிகவழுந்திச்—சுத்தமாய்
ஒன்றாகி நின்ற உணர்வும் ஒழிந்தக்கால்
அன்றே சிவபோக மாம். 65

சுட்டறிவு கெட்ட சுகாதீத உண்மையிலே
விட்டகலா தென்றும் விரவுவோர்—இட்டமுடன்
யோக சமாதிகளும் உட்புறம்பாம் பூசைகளும்
ஆக நினையார் அவர். 66

நின்னறிவில் யானொளித்து நீயாகி நின்றதுபோம்
என்னறிவில் நீயொளித்தே யானாகி—எந்நாளும்
நிற்கவில்லை யாமாகில் நின்சனனம் போக்குதற்குக்
கற்கவல்ல தேதுமில்லை காண். 67

இன்பசுகத் துள்ளே இருக்கலாம் எப்போதுந்
துன்பவினை யுன்னைத் தொடராது—வன்பா
மருட்டேக மாயடங்கி மாயாமல் நெஞ்சே
அருட்டேக மாயடக்கு வாய். 68

தேக மறந்து திருவருளாய் நின்றசிவ
போகம் விளையப் புணர்நெஞ்சே—நோக
வருந்தாமற் றீவினையில் வாடாமற் றுன்பம்
அருந்தாமல் நீபிறவா மல். 69

பூதாதி பாசமன்றோ பூரணா னந்தமன்றோ
பேதமற நம்முட் பிரானன்றோ—வாதனைகள்
விட்டாற் சுகமன்றோ ஒன்றுணர்வில் வேண்டுவதுங்
கெட்டாற் பிறப்பும் கெடும். 70

அழுந்தாதே பாசத் தனுதினமும் ஐயோ
விழுந்தால் எழுந்திருக்க வேண்டுஞ்—செழும்பாகை
மீறித் தருமிரத வீட்டின்ப மாமலைமேல்
ஏறித் திருப்பலாமே. 71

என்றுஞ் சனனத் திடர்க்கடலி லேமூழ்கிப்
பொன்றுமன மேயுனக்கோர் புத்திகேள்—நன்று
தனிச்சங்கஞ் சேராமற் றற்பரனைச் சேரில்
இனிச்சங்கஞ் சேரா திரு. 72

———

## பணியறுத்தல்

### நேரிசை வெண்பா

அவரவருக் குள்ளபடி ஈசனரு ளாலே
அவரவரைக் கொண்டியற்று மானல்—அவரவரை
நல்லார்பொல் லாரென்று நாடுவதென் னெஞ்சமே
எல்லாஞ் சிவன்செயலென் றெண். 73

எங்கே நடத்துமோ எங்கே கிடத்துமோ
எங்கே இருத்துமோ என்றறியேன்—கங்கைமதி
சூடினன் தில்லையிலே தொந்தோந்தோம் என்றுநடம்
ஆடினனெங்கோன் அருள். 74

போகம் புவனம் பொருந்துமிடம் எங்கெங்குந்
தேகங் கரணந் திரியுமே—ஆகிலது
தன்னை நீ என்று தவியாதே நெஞ்சமே
தின்னையே கண்டருளில் நில். 75

ஏதேது செய்திடினும் ஏதேது பேசிடினும்
ஏதேது சிந்தித் திருந்திடினும்—மாதேவன்
காட்டிடுவ தானவருட் கண்ணைவிட்டு நீங்காது
நாட்டம் அதுவாய் நட. 75

எடுத்தவுடற் கேய்ந்தகன்மம் எப்போது மூட்டும்
விடுத்துவிட் டோமென்பர் விழலர்—விடுத்த
ததுவன்றே யைந்துமலம் ஆறாறும் நீத்த
இதுவன்றே யாந்துறவென் பேம். 77

எவ்வுயிரும் காக்கவோர் ஈசனுண்டோ இல்லையோ
அவ்வுயிரில் நாமொருவர் அல்லவோ—வவ்விப்
பொருகுவதும் நெஞ்சே புழுங்குவதும் வேண்டா
வருகுவதும் தானே வரும். 78

முப்பதுஞ்சென் றால்விடியும் முப்பதுஞ்சென் றாலிருளும்
அப்படியே ஏதம் அறிநெஞ்சே—எப்பொழுதும்
ஆங்காலம் எவ்வினையும் ஆகும் அதுதொலைந்து
போங்காலம் எவ்வினையும் போம். 79

ஆவலுற்றி டுஞ்சகலத் தாவதுவும்—ஆங்கவரே
கேவலத்தின் மூழ்கிக் கிடப்பதுவும்—நாவாற்றல்
இல்லாத சத்தத் திருப்பதுவும் இம்மூன்றும்
இல்லான் செயலென் றிரு. 80

பாசஞ் சடமுயிரோ நானாகப் பற்றறியா
ஈச னிரண்டு மிணைத்தாட்டிப்—பூசலென்றுஞ்
செய்பவனே தானே திரும்பியருள் செய்யாமல்
உய்பவர்க ளுண்டோ உரை. 81

முற்றின்ப மாமருளில் மூழ்குவதும் மோகமிது
சிற்றின்ப மாமருளிற் சேர்குவதும்—உற்றிங்
கறிந்தால்நன் னெஞ்சே அகிலாண்ட மெங்குஞ்
செறிந்தான் செயலே தெளி. 82

என்னிடத்தில் நின்செயலே இல்லையென்றால்யாதுறினும்
நின்னிடத்தில் யான்வேண்டல் நிச்சயமே—என்னிடத்
இன்மை யுயிர்க்குயிர்நீ இன்மை யிருந்தியற்றில் [தில்
நன்மைதின்மைக் கேதுவோ நான். 83

நாம்பெரிய ரென்னுமதை நாடா கடக்குமவர்
தாம்பெரிய ரென்றுமறை சாற்றிடும்—நாம்பெரியம்
என்பார் சிறியர் இவரலால் இவ்வுலகில்
துன்பார் சுமப்பார்கள் சொல். 84

கட்டமாங் காயங் கலையனைத்துங் கற்றாலும்
அட்டமா சித்தி அடைந்தாலும்—இட்டம்
பரம சுகமே பதியாத போது
திரமே சுகமே தெளி. 85

மனவாக்குக் காயமுயிர் மண்ணியசைப் பானும்
அனமாதி போகமளிப் பானும்—நனவாதி
கூட்டிவிடு வானுமுத்தி கூட்டிடுவா னும்பிறப்பில்
ஆட்டிவிடு வானும் அரன். 86

முன்னைவினைக் கீடா முதல்வன் அருணமைக்கொண்
டென்னவினை செய்ய இயற்றுமோ—இன்னவினை
செய்வோந் தவிர்வோந் திரிவோ மிருப்போமிங்
குய்வோ மெனும்வகையே தோது. 87

ஊட்டும் வினையிருந்தால் உன்னை உன்பதத்தைப்
பூட்டிப் பிடித்துப் புசிப்பிக்கும்—கேட்டுத்
திரியாதே வந்துதில்லைத் தெய்வமே என்றென்
றெரியாதே நெஞ்சே இரு. 88

என்னதன்று நின்செயலே என்றறிருந்தால் யான்விரும்பி
என்னவென்று வாய்திறப்பேன் ஈசனே—இன்னமின்னம்
எப்படியோ நாயேனை ஈடேற்ற வேண்டுமுனக்
கப்படியே செய்தருளு வாய். 89

வன்மைபுரி காய மரப்பாவை தன்னையரன்
கன்மமெனுஞ் சூத்திரத்தாற் கட்டியே—நன்மைதின்மை
ஆட்டுவதும் நாடா தறிவிலார் தஞ்செயலாய்
நாட்டுதல்போ லுண்டோ நகை. 90

ஆருறு தத்துவமும் ஆணவமும் நீங்கியுயிர்
பேருக ஆனந்தம் பெற்றாலும்—வேருகப்
பார்த்திருப்ப தன்றியே பாழான கன்மத்தை
நீத்திருக்க லாமோ நிலத்து. 91

ஆனசுக துக்கத் தழுந்துகினும் ஞானிகடாம்
யானெனதென் றெண்ணி இயைந்திடினும்—தானதற்கு
வேறென் றருளால் விரளமாய்க் காணிலென்றும்
ஏறுமோ கன்ம மிலை. 92

சத்துருவும் மித்துருவும் தாரணியில் வேறில்லை
சத்துருவும் மித்துருவுந் தன்னெஞ்சே—பெத்தமலம்
வீட்டும் படிக்கு வினைக்கீ டுனைத்தனுவோ
டாட்டுஞ் சிவனென் றறி. 93

இன்னவினை இன்னதலத் தின்னபொழு தின்னபடி
இன்னதனுல் எய்தும் எனவறிந்தே—அன்னவினை
அன்னதலத் தன்னபொழு தன்னபடி அன்னதனுற்
பின்னமறக் கூட்டும் பிரான். 94

அன்றே அநாதி அமைந்தபடி அல்லாதொன்
றின்றே புதிதா யியையுமோ—என்றுஞ்
சலியா தியற்றுவான் றன்னையே நோக்கி
மெலியா திருந்து விடு. 95

ஆர்பெரியர் ஆர்சிறியர் ஆருறவர் ஆர்பகைஞர்
சீர்பெரியர் ஆனந்த சிற்சொருபர்—பேர்பெரியர்
எங்கெங்குந் தாமா யிருந்தசட சித்தனைத்தும்
அங்கங் கியற்றுவதா னல். 96

நன் கருத்தே தென்கமலை ஞானப்பிர காசனே [தே
என்கருத்தென் உன் கருத்தென் றெண்ணுமல்—உன்கருத்
என் கருத்தென் றெண்ணியே யான்பட்ட துன்பமெலாம்
உன்கருத்தே தீரவறி யும். 97

அமைத்தவினைக் கீடா அனுதினமுஞ் செய்வ
திமைப்பொழுதும் வீண்செயலொன் றில்லை—உமைக்குரி
எல்லாம் அறிந்தெங் கியற்றுவதுந் தன்னடிமை [யான்
வல்லார் தமக்குணர்த்து வான். 98

கள்ள அரனே தருணையுடன் என்னறிவில்
உள்ளசுகந் தந்துவிட ஒண்ணாதோ—மெள்ள
வருத்துவதுந் தீவினையில் வாட்டுவதும் ஞானம்
பொருத்துவதும் என்றுன் புகல். 99

கேளா தெனைமலத்திற் கிட்டியெடுத் தாளாக்கி
மீளா தளித்தபர வீட்டிலெனை—ஆள
உனக்குப் பொறியோ உனைத்தொடர்ந்தால் என்ன
எனக்குப் பொறியோ இனி. 100

சும்மா தனுவருமோ சும்மா பிணிவருமோ
சும்மா வருமோ சுகதுக்கம்—நம்மான்முன்
செய்தவினைக் கீடாச் சிவனருட்செய் விப்பதென்றால்
எய்தவனை நாடி இரு. 101

பொல்லாத தீவினையிற் போகார்கள் போனாலும்
எல்லாஞ் சிவன்செயலே என்றிருப்பர்—நல்லார்கள்
நத்துங் கமலையில்வாழ் ஞானப்பிர காசனருள்
சற்றும் பிரியா தவர். 102

கூட்டுவதுங் கூட்டிப் பிரிப்பதுவும் ஒன்றொன்றை
ஆட்டுவதும் ஆட்டி அடக்குவதும்—காட்டுவதும்
காட்டி மறைப்பதுவுங் கண்ணுதலோன் முன்னமைத்த
ஏட்டின் படியென் றிரு. 103

உள்ளதுதான் போமோமற் றில்லா ததுவருமோ
பள்ளமே வெள்ளம் பரவாதோ—கள்ளமாய்ப்
பித்துப்போ லேபிதற்றும் பேதையட நெஞ்சமே
செத்துப்போ னுனே சிவன். 104

ஈசன் பலவீனன் என்றக்கால் ஆலயத்தின்
மோசம்வந்த தென்று மொழியலாம்—ஈசனே
ஆக்குவதும் ஆக்கி அழிப்பதுவுந் தானுனல்
நோக்குவதென் யாம்பிறரை நொந்து 105

தேசஞ் சிவாலயங்கள் சேர அலையவொரு
மோசம்வந்த தையோ முதல்வனே—தேசத்து
மன்னைவெறுப் பேனோ வருவினையை யூட்டுவிக்கும்
உன்னைவெறுப் பேனோ உரை. 106

---

## துறவின் பகுதி

### நேரிசை வெண்பா

துரத்தியுன்னை ஆசை தொடராமல் என்றும்
விரத்தியினுல் ஆங்கவத்தை விட்டுப்—பரத்திலன்பு
செய்யடா செய்யடா சேரப்ர பஞ்சமெலாம்
பொய்யடா பொய்யடா பொய். 107

அனைத்துலகும் நம்பால் அனுக்கிரகம் பெற்றென்
அனைத்துலகும் நம்வசமாய் ஆயென்—அனைத்துலகுங்
கொண்டாடி லென்னைவினைக் கொத்தறுத்துப் பேரின்பங்
கண்டாடில் அன்றோ கதி. 108

அறிவிழந்து நின்றசுக ஆனந்தத் துள்ளே
குறியிழந்து நின்று குலாப்பிப்—பிரியா
திருந்தாற் பிறப்பறுமோ இச்சைமால் கொண்டு
திரிந்தாற் பிறப்பறுமோ செப்பு. 109

எத்திசையும் எவ்வுலகும் எத்தொழிலும் எப்பயனும்
நித்தியமென் றெண்ணின் நிலையாதே—புத்திபினற்
கண்ணுடி யிற்றேன்றி மாய்ந்துவிடுங் காணிவற்றைக்
கண்ணுடி யிற்கனவிற் காண். 110

எத்தனைதான் கற்றாலும் எத்தனைதான் கேட்டாலும்
எத்தனைசா தித்தாலும் இன்பருு—சித்தமே
மெய்யாகத் தோன்றி விடுமுலக வாழ்வனைத்தும்
பொய்யாகத் தோன்றுத போது. 111

மின்போலத் தோன்றி விடுமுலக வாழ்வனைத்தும்
என்போ லிகள்திரமென் றெண்ணுவார்—தன்போகம்
இல்லார் சிவபோக மென்றும் அருந்தியிடும்
நல்லார் திரமிதுவென் னூர். 112

தேசமூர் பேர்காணி சீர்வரிசை சாதியெனும்
ஆசையால் நெஞ்சே அலையாதே—நேசப்
பொருப்பானை நின்னறிவிற் போக்கு வரவற்
றிருப்பானைப் பார்த்தே யிரு. 113

ஆகம் பகையாவ தன்றிப் பகையுண்டோ
மோகந் தவிர்ந்த முனிவோர்க்கிங்—கேகன்
இருவர் அறியாத ஈசனருள் அல்லாற்
ஒருவர்துணை யுண்டோ உரை. 114

அளவிலாச் செல்வத் தடைந்தாலும் ஆகத்
தளவிலாச் சித்திகளுண் டாயும்—அளவில்லை
ஆய்ந்தாலும் என்னைசுகர் அல்லர் சிவானந்தம்
தோய்ந்தார்கள் அன்றே சுகர். 115

ஆகாத காரியஞ்செய் தாஞ்சுகமும் ஆங்கதனுற்
போகாத துக்கம் பொருந்துவரும்—போகா
உரைக்கிலணு வுக்கும் உயர்ந்தமா மேரு
வரைக்கும் திகரா மதி. 116

பொய்யில்வருந் துன்பம் புகுத்தறிந்தும் பூரணமே
மெய்யில்வரு மின்ப விளைவறிந்தும்—ஐயோ
தெளியாத தென்னநலந் தீங்குகண்டு சற்றும்
களியாத தென்னமயக் கம். 117

ஆகஞ் சிறைச்சாலை அக்கரணங் காவலாள்
போகம் புவனம் பொருந்துமிடம்—ஓகோ
இதனுட் படுமுயிர்கட் கீடேற்றஞ் செய்வான்
அதனுக் கிறைவன் அரன். 118

அதிட்டானம் ஈசன் அருளன்றி மற்றை
அதிட்டான மெல்லாம் அநித்தம்—அதிட்டானம்
பொய்யென் றறியாமற் பூதலத்து நெஞ்சமே
மெய்யென் றுழல்வதெல்லாம் வீண். 119

நின்னை மதிக்கின் நினக்கதிபர் செல்வம்நிலை
நினை வறிஞனென நீநினையின்—நின்னிற்
சிறியார் வறுமைநினை சிந்தைபுக என்றுங்
குறியா இடும்பைதுக்கங் கோள். 120

---

## அறிவோர்ப் புகழ்ச்சி

### நேரிசை வெண்பா

அனித்தியத்தை நித்திய மென் றுதரிக்கும் பொல்லா
மனித்தருடன் கூடி மருவார்—தனித்திருந்து
மோனந்த மாஞ்சிவத்தின் மூழ்கி மலத்தையறுத்
தானந்த மாயமுழுந்து வார். 121

தாகம் மறந்து சதிர்மறந்து தான்மறந்து
தேகமறந் தட்டமா சித்திமறந்—தாகத்தின்
வந்தகறி யாதிருந்து மாறுச் சிவானந்தஞ்
சந்ததம்வாழ் வார்க்கார் சரி. 122

உள்ளமலம் நீங்கி ஒழியாச் சிவானந்த
வெள்ளந் துளைந்து விளையாடும்—பிள்ளைகாள்
அத்துவித மானீர்தம் ஆகம் பிரிந்தோமென்
றத்துவித மெண்ணுவா னேன். 123

அறிவாய் அறிவிழப்பில் ஆகின்ற இன்பச்
செறிவாய்ச் சுகமாய்த் தினமும்—பிரியா
திருந்தங் கதீதமாம் ஏய்ந்தசிவா னந்தம்
பொருந்துவார் முத்தரெல்லாம் போய். 124

---

## மடவோர்ப் பழிப்பு

நேரிசை வெண்பா

தனையறியார் ஈசன் றனையறியார் பாச
வினையறியார் ஆனந்தம் மேவார்—தனையறியுஞ்
சிட்டர்தமக் கில்லாத தீங்குரைப்பர் பொல்லாத
துட்டர்தமக் குள்ள தொழில். 125

தன்னை அறியார் தலைவன் றனையறியார்
முன்னை வினையின் முடிவறியார்—பின்னைக்
குருக்களென்றும் பேரிட்டுக் கொள்வார்கள் ஐயோ
தெருக்கள் தமிலே சிலர். 126

வாயுவெளி தானசையா வாற்றிருந்தாற் போலென்றும்
நீயதுவும் பூரணமாய் நிற்கவே—காயத்துக்
குள்ளுள்ளே தான்சிவமென் றுற்றுப்டார்ப் பாருசிப்
பொள்ளலால் வான்பார்ப்பார் போல். 127

கற்கவிடர்ப் பட்டுமிகக் கற்றவெல்லாம் கற்றவர்பால்
தர்க்கமிட்டு நாய்போலச் சள்ளெனவோ—நற்கருணை
வெள்ளம் அடங்கும் விரிசடையார்க் காளாகி
உள்ளம் அடங்கவல்ல வோ. 128

அறியார் கனவிலும் ஆனந்த ரூபம்
அறிவார் தமையும் அடையார்—அறிவார்கட்
கில்லாத திங்கே எடுத்துரைப்பார் இவ்வுலகில்
பொல்லார் தலையிற் பொறி. 129

---

## பொது நிலை

### நேரிசை வெண்பா

நீதியிலா மன்னர் இராச்சியமும் நெற்றியிலே
பூதியிலார் செய்தவமும் பூரணமாஞ்—சோதி
கழலறியா ஆசானுங் கற்பிலருஞ் சுத்த
விழலெனவே நீத்து விடு. 130

ஐந்தறிவாற் கண்டாலும் ஆரேது சொன்னாலும்
எந்த விருப்புவெறுப் பேய்ந்தாலுஞ்—சிந்தையே
பார விசாரத்தைப் பண்ணாதே ஏதொன்றுந்
தீர விசாரித்துச் செய். 131

பரபரக்க வேண்டா பலகாலுஞ் சொன்னேன்
வரவரக்கண் டாராய் மனமே—ஒருவருக்கும்
தீங்கு நினையாதே செய்நன்றி தன்றாதே
ஏங்கி யிளையா திரு. 132

மிகுத்தகுலஞ் செல்வத்து மேவுவதும் அத்தைப்
பகுத்துப்பொய் யென்றுவிடும் பாங்குந்—தொகுத்து
விரித்தால்நன் னெஞ்சே மிகுவா ரணத்தை
உரித்தான் செயலென் றுணர். 133

ஆறாறு தத்துவம்வைத் தத்திலுறை மூர்த்திகள்வைத்
தேறு மலபாக மேறவே—மாறாமல்
உன்னைவிடா தாள்வான் உனக்கேட்டோ நெஞ்சமே
என்ன விசாரம் எமக்கு. 134

தானே அசத்தல்ல என்றறிந்தாற் றூரணியில்
ஏனே பிதற்றிடுவ தேழைநெஞ்சே—தானே
இறவா ததுதான் இறக்க அருளே
மறவா திருசிவமாவை. 135

ஏற்று தவையா யிருப்பதுவும் உன்மயக்கம்
ஆற்ற துதிரென் றாற்றுவதுந்—தோற்றுது
தோற்றுவதும் உன்னைச் சுகபூ ரணனென்று
தோற்றுவதும் ஈசன் செயல். 136

அன்றே அரனணுக்கள் பாசங்கள் ஐந்தொழில்கள்
நன்றே சிவனும் நடுவனே—சென்றருளில்
நிற்கச் சிலர்சிலர்கள் நீணரகிற் பூதலத்திற்
சொற்கத் திருப்பதென்னே சொல். 137

ஆசையறுப் பாசம்விடாய் ஆனசிவ பூசைபண்ணாய்
நேசமுட னைந்தெழுத்தை நீநினையாய்—சீசீ
சினமே தவிராய் திருமுறைகள் ஓதாய்
மனமே உனக்கென்ன வாய். 138

தில்லைவனங் காசி திருவாரூர் மாயூரம்
முல்லைவனங் கூடல் முதுகுன்றம்—நெல்லைகளார்
காஞ்சிகழுக் குன்றமறைக் காடருணை காளத்தி
வாஞ்சியமென் முத்தி வரும். 139

———

## தனிப்பாடல்

### கட்டளைக் கலித்துறை

ஆய்வார் பதிபசு பாசத்தி னுண்மையை ஆய்ந்தறிந்து, காய்வார் பிரபஞ்ச வாழ்க்கையெல் லாங்கல்வி கேள்வியல்லல், ஓய்வார் சிவானந்த வாரியுள் ளேயொன் றிரண்டுமறத், தோய்வார் கமலையுள் ஞானப்ர காசன் மெய்த் தொண்டர்களே. 140

கனக்கும் பொதிக்கும் எருதுக்குந் தன்னிச்சைகண்ட
[துண்டோ
எனக்குமுடற்கு மெனதிச்சை யோவிணங் கார்புரத்தைச்
சினக்குங் கமலையில் ஞானப்ர காச சிதம்பரவின்
றுனக்கிச்சை எப்படி அப்படி யாக உரைத்தருளே. 141

எல்லா முனது செயலென் றறிந்து மெனதுளத்திற்
பொல்லாத சங்கற்ப மேன்வரு மோபுர மூன்றெரிக்க
வல்லாய் கமலையில் ஞானப்பிர காச வரதஇது
சொல்லாய் கரண மயக்கமன் றேஎன் றொழிலல்லவே.

கலி விருத்தம்

அவரவர் வினைவழி அவரவர் வந்தனர்
அவரவர் வினைவழி அவரவர் அனுபவம்
எவரெவர்க் குதவினர் எவரெவர்க் குதவிலர்
தவரவர் நினைவது தமையுணர் வதுவே. 143

சிவபோக சாரம் முற்றிற்று.

———

குருஞான சம்பந்த சுவாமிகள்
அருளிச்செய்த

# சொக்கநாத வெண்பா

நேரிசை வெண்பா

ஆடரவஞ் சூழ்மதுரை அம்மானே அன்பருடன்
கூட விளை யாடிவரும் கோமானே—நீடுபுகழ்
மென்மெலு மென்றனக்கு மேவியிடப் பொல்லாத
என்மேல் வினைகெடுப்பா யே. 1

புண்கட்டு தோலைப் புதுக்கி மயக்க மறக்
கண்கட்டு வித்தைபோற் காட்டுவாய் பண்கட்டுப்
பூணுவேன் றன்னையின்பப் பூரணத்திற் பூணவருள்
தாணுவே சொக்கநா தா. 2

ஏடாரும் நாரியரை ஐயோ யமன்பிடிக்கும்
மாடா வதியென்று பாராமற்—கேடாரப்
பூண்ட ஆ பாதமென்று போடா தெனையருளில்
ஆண்டவா சொக்கநா தா. 3

காக்கைநரி ஞாளி கழுகுபருந் துக்கிரையாம்
ஆக்கையினை யானென் றலையாமல்—வாக்குமனம்
எட்டாத வீட்டி லெனைக்காட்டு துட்டருளந்
தட்டாத சொக்கநா தா. 4

பஞ்சமா பாதகனை யாண்டபுகழ் பார்மீதிற்
கொஞ்சமா வீறுபுகழ் கூறுமே—வஞ்சமே
பூண்டளவில் பாதகஞ்செய் பொல்லாத நாயேனை
ஆண்டளவிற் சொக்கநா தா. 5

வறிஞர் தமையொக்க வைக்குமன்னர் போல
அறிஞர் தமையாள்வ தன்றிப் - பொறிபுலனால்
வெம்புவேன் றன்னை விடுத்தாள்வ தேபாரஞ்
சம்புவே சொக்கநா தா. 6

என்னால் உனையடைய வல்லேன் எனிவிடரில்
இந்நாள் அளவு மிருப்பேனோ—பன்னாகம்
பூண்டவா வேணிப் புனிதா மதுரைநகர்
ஆண்டவா சொக்கநா தா. 7

எல்லாமும் வல்லசித்தர் என்றக்கால் என்னுடைய
பொல்லாக் கருத்தகற்றப் போகாதே—அல்லாடும்
பொங்கரா வேணிப் புனிதா மதுரைநகர்ச்
சங்கரா சொக்கநா தா. 8

பேசானு பூதி பிறக்க எனதுளத்தில்
ஆசா பசாசை அகற்றுவாய்—தேசாருஞ்
சிற்பரா னந்தா திருவால வாயுறையுந்
தற்பரா சொக்கநா தா. 9

இறந்தும் பிறந்தும் இளைத்தேன் இனியான்
மறந்தும் பிறவா வரந்தா—சிறந்தபுகழ்
ஞாலவா யாமுடிக்கு நாட்டுசூ ளாமணியாம்
ஆலவாய்ச் சொக்கநா தா. 10

உலக வெறுப்பும் உடல்வெறுப்பும் உள்ளத்
திலகு மலவெறுப்பும் எல்லாம்—அலகிறந்த
நந்நாத இன்பசுக நாட்டின் விருப்பமுறத்
தந்நாள்வை சொக்கநா தா. 11

எப்போது மும்மலம்விட் டேறுவேன் பூரணமாய்
எப்போதுன் இன்பசுகத் தெய்துவேன்—எப்போதும்
நித்தியா சுத்தா நிராமயா சொற்றவருச்
சத்தியா சொக்கநா தா. 12

காயமோ காலன் கருத்தோ மகாகாலன்
ஞாயமோ சற்றும் நடப்பதில்லை—பேயனேன்
மாளுவனோ தென்மதுரை மாமணியே என்னையுகந்
தாளுவையோ சொக்கநா தா. 13

எரிசுடுவ தல்லால் இரும்பு சுடுமோ
அரியயற்கும் வாசவற்கும் யார்க்கும்—பெரியவர்க்கும்
பூணுமே தத்தொழினின் பொன்னருளாற் றென்மதுரைத்
தாணுவே சொக்கநா தா. 14

ஆரிடத்தில் வந்தும் அடியேன் உளத்திருந்தும்
ஓரிடத்தி லுற்பவித்து முள்ளபடி—பாரிடத்தில்
நாயே னுளமகிழ நன்று வுணர்த்திடுவாய்
தாயேநீ சொக்கநா தா. 15

நித்தம் எழுந்தருளி நின்மலனே என்றனக்குப்
புத்தி மிகமிகவும் போதித்துச்—சித்தமயல்
போக்குவாய் இன்பசுக பூரணத்தி ரண்டறவே
ஆக்குவாய் சொக்கநா தா. 16

மறையா கமவிதியும் வந்தவுட றன்னின்
நிறையூழ் விதி முன்னு னின்றுன்—மறைவிதிக்கே
ஏற்கவே செய்வே னிசைந்தா லூழ் வேறதனே
யார்க்காவேன் சொக்கநா தா. 17

நலம்விளக்கு முன்பதத்தி னுளவைப்ப தல்லால்
மலம்விளக்குஞ் சோறருந்த வைத்தாய்—சலம்விளக்கும்
சென்னியா மாமதுரைச் செல்வாஎல் லாம்வல்ல
தன்னியா சொக்கநா தா. 18

ஆர்வந்தென் ஆர்போயென் ஐயாவுன் ஆனந்தச்
சீருளத்தே யென்றுஞ் செறிந்திலதேற்—காரிருண்ட
கண்டனே ஓர்புருடன் காதல்கொண்டான் பொன்மதுரை
அண்டனே சொக்கநா தா. 19

காண்றசோ ருயுலகங் காணவில்லை இன்பவெள்ளத்
தூன்ற அடியே னுறங்கவில்லை—ஏன்ற
இருள்சகல நீங்கவில்லை ஏழையேற் குன்றன்
அருளுறுமோ சொக்கநா தா. 20

நீயே பரமசிவ னெனக்கால் நின்மலனே
நாயே னுளமகிழ நன்ருகப்—பேயேன்
கருத்தடங்க நின்கருணை காட்டியின்ப வெள்ளம்
அருத்திடுவை சொக்கநா தா. 21

விதிமார்க்க மெப்பொழுதும் மேவறியே னூழின்
விதிமார்க்க மல்லாது மெய்யாங்—கதிமார்க்கங்
காட்டுவாய் நாயேன் கரையேற எவ்வுலகும்
ஆட்டுவாய் சொக்கநா தா. 22

அருவருப்பே மெத்தியிடும் ஆகத்தைச் சற்றும்
அருவருக்கத் தோற்றதில்லை ஐயோ—அருவருக்கத்
தோற்றியிடா தென்னவினை துய்ப்பித் தறுப்பதற்கோ
சாற்றியிடாய் சொக்கநா தா. 23

தவமோ சிறிதறியேன் தாரணிமேற் செய்யும்
அவமோ அளவில்லை ஆனுற்—சிவமோ
பெறுமாறென் கூடற் பிரானேமுப் பாசம்
அறுமாறென் சொக்கநா தா. 24

அனைத்துயிர்க்கும் பாசம் அறுத்திமுத்தி கூட்ட
மனத்துயரஞ் செய்தல் மருந்தோ—மனத்துயரஞ்
செய்யாமற் றீர்மருந்து சிந்தா அறிந்திலையோ
ஐயாவென் சொக்கநா தா. 25

உணர்த்தில் உணர்வேன் உணர்த்தாயேல் நாயேன்
கணத்தும் உணரும்வகை காணேன்—உணர்த்தியென்
பூண்டமல மாயைகன்மம் போக்கிச் சிவானந்தத் [னுட்
தாண்டருள்வை சொக்கநா தா. 26

பிறிந்தேன் மலத்துனது பேரருளி னாலே
அறிந்தேன் உனைநன்று ஐயா—செறிந்தவின்பப்
பூரணா செங்கமலப் பொற்பாதா கூடலில்வாழ்
ஆரணா சொக்கநா தா. 27

கெடுங்காலம் வந்தாற் கெடுப்பை கதியில்
விடுங்காலம் வந்தால் விடுவை—கொடுந்தவங்கள்
பண்ணிடினும் பாவம் பயிற்றிடுனு மாரேனும்
அண்ணலே சொக்கநா தா. 28

என்னவினை நாயேற் கிருக்கிறதோ இக்காயத்
தென்னவினை நின்று ளியற்றுமோ—என்னவினை
வந்திடுமோ என்றற்பேன் வந்தாலும் நின்னருளே
தந்திடுவாய் சொக்கநா தா. 29

ஆறாறு தத்துவத்தும் ஆணவத்துங் கன்மத்தும்
மாறாதெந் நாளும் மயங்காமற்—பேறாக
நித்தனே நின்மலனே நின்பதத்தில் ஆள்மதுரை
அத்தனே சொக்கநா தா. 30

அடியேன் உனைவேண்ட அப்படியே என்றும்
கொடியேன் கருத்திசையக் கூறி—அடியேனை
மீண்டுபிற வாதுன் விரைமலர்த்தாள் சூட்டியெனை
ஆண்டவனே சொக்கநா தா. 31

ஆசான் உளத்திருக்கும் ஆன்மா உளத்திருந்தும்
ஆசார் மலத்தை அறுத்தருளி—நேசா
ஒளித்திருந்த இன்பவெள்ளம் ஒன்றவுயிர்க் கென்றும்
அளிப்பவனே சொக்கநா தா. 32

ஆற்றையணி வேணி அமலனே மெய்யதனில்
நீற்றைப் புனையும் நிமலனே—கூற்றைக்
குமைத்தவனே என்சிரத்துன் கோகனத் தாளை
அமைத்தவனே சொக்கநா தா. 33

கால வசமோ கடியேன் வினைவசமோ
ஞாலவச மோவருளே நாடியே—கோலமறச்
சிற்பரா னந்தவெள் ளஞ் சேர்ந்தறிந்துஞ் சேர்கிலேன்
தற்பரா சொக்கநா தா. 34

நீணாட் பிறந்திறந்து நின்ற துயர் நீயறிவை
வீணாட் கழித்து விடாமலே—பூணவருள்
நண்ணரிய பேரின்ப நாடி அதுவாக
அண்ணலே சொக்கநா தா. 35

ஆறாறு தத்துவத்தும் ஆணவத்துஞ் சாராமல்
மாறாத பேரின்ப வாரிதியே—பேறாகச்
சார்ந்திருக்க வல்ல சதுரர் உளத்ததுவாய்
ஆர்ந்திருக்குஞ் சொக்கநா தா. 36

காடோ வனமோ கன கிரியோ காசினியோ
நாடோ சகலகலை ஞானமோன்—வாடி
ஒடுங்குவதோ மெய்வீ டுயிர்க்களித்தல் போதம்
அடங்குவதோ சொக்கநா தா. 37

துன்றுபர மானந்தச் சோதியிலி ரண்டற்று
நின்றுவிட என்னைவிட என்னை நிறுத்துவாய்—அன்று
கமலனே காண்பரிய கண்ணுதலே கூடல்
அமலனே சொக்கநா தா. 38

எக்காலம் இக்காயம் இற்றிடுமோ என் வினைகள்
எக்காலம் மும்மலங்க ளிற்றிடுமோ—எக்காலம்
ஆனந்த சாகரத்தில் ஆடிடுமோ என்னுளந்தான்
ஆனந்தா சொக்கநா தா. 39

எக்காலம் மெய்க்கே இரையிடுதல் இற்றிடுமோ
எக்காலம் இக்கரணம் இற்றிடுமோ—எக்காலம்
பேசானுபூதி பிறந்திடுமோ என்னுளத்தில்
ஆசானே சொக்கநா தா. 40

வாக்கிலுரை பொய்யே மனநினைப்ப துங்கவடே
ஆக்கைதினஞ் செய்வ தகிர்த்தியமே—நோக்கில்
திரிவிதமு மிப்படிநீ செய்வித்தால் முத்தி
தருவிதமென் சொக்கநா தா. 41

இக்காலத் தின்னவினை என்றமைப்பை அப்படியே
அக்காலத் தவ்வூ மருத்திடுவை—இக்காலத்
தப்புவா ருண்டோ தமியேற்குந் தப்பரிதென்
அப்பனே சொக்கநா தா. 42

மோகாபி மானமின்னும் முற்றும் மறக்கவில்லை
தேகாபி மானஞ் சிதையவில்லை—ஓகோ
உனையடைந்தும் பாசம் ஒளியவில்லை கூடல்
தனையடைந்த சொக்கநா தா. 43

பத்திமெத்தச் சித்தம் பதியவில்லை அட்டமா
சித்தி அவாவெறுக்கச் செய்யவில்லை—முந்தியுளங்
கூடவில்லை எந்நாளுங் கூடலிலே மாறிநடம்
ஆடவல்ல சொக்கநா தா. 44

என்னைவளை பாசவரண் இன்னமுநீ கொள்ளவில்லை
அன்னையனை நீபதன மானாலும—முன்னைமலம்
ஓடவே எவ்வுயிர்க்கு மோட்டு மருட்சேனை
சாடிவிடுஞ் சொக்கநா தா. 45

சோரத்தி னுச்சியின்மேற் செந்தேனுக் கிச்சித்தே
போகவச மாதமோ போகாதார்—தாகம்
மிகவறவே யுள்ளத்தில் வேண்டிலுன்ருட் செந்தேன்
அகமுறுமோ சொக்கநா தா. 46

அடியார் பரிபாக மெல்லாம் அறிந்து
படிகீழ்ப் பதமேற் பதத்திற்—கொடுபோய்
இருத்திடுவை சேர இனிமேலாம் போகம்
அருத்திடுவை சொக்கநா தா. 47

வாழைம் மலத்தால் வருந்தி மிகவுடைந்த
ஏழையனுக் கையோ இரங்குவாய்—கோழையனுய்ப்
போனேன் புலப்பகையாற் பொன்னடியைநின்னருளால்
தானேதா சொக்கநா தா. 48

எக்காலந் தாகங்கள் இற்றிடுமோ காயங்கள்
எக்காலம் ஆசைசினம் இற்றிடுமோ—எக்காலம்
நல்லார் குணம்வருமோ நாதாவெல் லாமுமாய்
அல்லானே சொக்கநா தா. 49

உள்ளமுனை அல்லாலொன் றுள்ளவில்லை நின்றெளிக்கும்
கள்ளமற நீயும் கருதவில்லை—எள்ளளவும்
நற்றவமோ செய்யவில்லை நாயேன் உனையடைதற்
கற்றதென்ன சொக்கநா தா. 50

ஆர்க்குக் கிடைக்கும் அடியேன்முன் வந்துமறைக்
கேற்கக் கருத்துக் கிசையவே—யார்க்குந்
தெரிவரியா வேதசிகை சித்தா வுரைத்தாய்
அரியறியாய்ச் சொக்கநா தா. 51

எவ்விதையை மாக்கள்பயிர் இட்டார்கள் இட்டவரே
அவ்விதையின் போகம் அருந்துதல்போற்—செவ்விதமாய்த்
துன்மார்க்கஞ் செய்தார்க்குத் தோன்றும் பிறப்புமுத்தி
சன்மார்க்கஞ் சொக்கநா தா. 52

எல்லார் கருத்தும் இதமா வுரைக்கறியேன்
நல்லாங்கு தீங்கிதென நாடறியேன்—எல்லாரும்
நீரூரும் வேணி நிமலா மதுரையில்வாழ்
ஆரூரா சொக்கநா தா. 53

உரையிறந்த பேரின்ப உய்லாச வீட்டிற்
றிரையிறந்து தூங்கித் திளையேன்—வரைபெருகப்
பேசுவேன் யானென்றே பெற்றவர்தம் உள்ளத்துக்
காசுவே சொக்கநா தா. 54

ஆருறு தத்துவமும் அத்திலுறை மூர்த்திகளும்
பேரும் வினையினையும் பெந்தித்து—மாருமல்
ஆட்டுவது நீயானுல் ஆகா மியமென்பாற்
சாட்டுவதென் சொக்கநா தா. 55

முன்னளவில் மாக்களுக்கு முத்தி கொடுத்தவருள்
என்னளவிற் சும்மா இருப்பதேன்—முன்னளவிற்
சீர்பெற்ரு ரேலுன் திருவருளொத் தாசையின்றி
ஆர்பெற்ருர் சொக்கநா தா. 56

நோயால் வருந்தியுனை நூறுகுரற் கூப்பிட்டால்
நீயா ரெனுதிருக்கை நீதியோ—தாயாய்
அலைகொடுத்த சேழல் அருங்குழவிக் கன்று
முலைகொடுத்தாய் நீயலவோ முன் 57

தாயார் மகவருத்தஞ் சற்றுந் தரியார்கள்
ஆயவினைக் கீடாய் அமைந்தாலும்—காயம்
பரிக்குந் துயரமெல்லாம் பார்க்கவுனக் கென்றுந்
தரிக்குமோ சொக்கநா தா. 58

தீவினையால் இன்னமின்னந் தேகமுறச் செய்வையோ
தீவினையற் றுன்மயமாய்ச் செய்வையோ—தாவிதமால்
இன்னபடி மேல்விளைவ தென்றறியேன் ஈதறிந்த
அன்னையே சொக்கநா தா. 59

என்னதியான் என்பதுவும் யான்பிறர்செய் தாரெனலும்
மன்னுமதி பாதகமேல் வாஞ்சைகளும்—இன்னமின்னஞ்
சொல்லுகின்ற இச்செயல்நீ தூண்டுதலற் றென்செயலால்
அல்லவே சொக்கநா தா. 60

ஆலந் தரித்தலிங்கம் ஆலவாய்ச் சொக்கலிங்கம்
மூலமாய் எங்கும் முளைத்தலிங்கம்—பாலொளியாம்
அத்தனே கூடல் மதுரா புரியுமையாள்
அத்தனே சொக்கநா தா. 61

எல்லா முனதுபதம் எல்லா மு௷துசெயல்
எல்லா முனதருளே என்றிருந்தாற்—பொல்லாத
மாதுயர நீங்கும் மருவு முன தடிக்கே
ஆதரவாய்ச் சொக்கநா தா. 62

தீதாம் அவாநந்தச் செய்மதுரை வாழ்வேந்தா
நாதா சிவாநந்தம் நல்குவாய்—வேதச்
சிரகரா நித்தா திரபரா சுத்தா
அரகரா சொக்கநா தா. 63

மற்றொருவர் தஞ்சமின்றி வந்தடைந்தக் காலெனை நீ
சற்றுமிரங் காதிருக்கை தன்மமோ—கொற்றவா
பாவலா கூடற் பரமா பரதேசி
காவலனீ தானுனைக் கால். 64

தன்னந் தனியே தமியேன் முறையிட்டால்
இன்னந் திருச்செவியி லேறதோ—மன்னவனே
தென்மதுரை மேவித் திருந்தியசெங் கோல்செலுத்துந்
தன்மதுரை நீயலவோ தான். 65

என்போல் மலகடினர் எவ்விடத்துங் கண்டதுண்டோ
இன்பே மதுரைக் கிறைவரே—அன்பேதும்
இல்லா தெனையாண்ட எண்ணத்தாற் றேவரீர்
எல்லாமும் வல்லசித்த ரே. 66

நீயே ஒளித்திருப்பை நீயென்றுங் காணமல்
நீயே யொளித்திருப்பை நின்னருளால்—நீயேதான்
காட்ட அன்னியமாய்க் கண்டேன் உனதுவிளை
யாட்டதென்ன சொக்கநா தா. 67

பேரன்பன் அல்லேன் பிழைசெய்யான் றனல்லேன்
ஓரன்பு மில்லா உலுத்தனேன் பேரன்பு
காட்டியெனைக்காட்டியுனைக் காட்டியின்பத் தொட்டிலிலே
ஆட்டிவளர் சொக்கநா தா. 68

இட்டா சனத்தில் இரவுபகல் அற்றிடத்தில்
முட்டா திருக்கவருள் முற்றுந்தா—அட்டாங்க
யோகந்தா னீங்கி யொழியாச் சிவானந்த
ஆகந்தா சொக்கநா தா. 69

மோகங் கரைய முழுதும் மலங்கரைய
ஆகங் கரையவறி வானந்த—மோகமாய்ப்
பூரணமா யெங்கெங்கும் பொங்கி யெழவிழித்த
ஆரணமே சொக்கநா தா. 70

ஊனது வான வுடலொடணு காமலருள்
ஆனசிவ போகமது வாயருள்வாள்—ஞானக்
கரும்பொருளே வாழ்மதுரைக் கண்ணுதலே யார்க்கும்
அரும்பொருளே சொக்கநா தா. 71

பூண்டமலம் மாண்டுவிடல் போந்தசிவா னந்தவெள்ளத்
தாண்டுமெனை மீண்டுவிடல் ஆதமோ—நீண்டமால்
வீரென்பார் தாரா விமலா எனைக்கண்டார்
ஆரென்பார் சொக்கநா தா. 72

முன்னை மலமகற்றி மூதறிவா னந்தமயந்
தன்னை யறிந்த தபோதனருள்—என்னையுநீ
ஆண்டுபரிச் சொக்கநா தாந்தமருள் கூடவிலே
தாண்டுபரிச் சொக்கநா தா. 73

கருணை நிதியே கடவுளே அன்பர்
பொருளான பேரின்பப் பொற்பே—ஒருநாளும்
நீங்கா தெனதறிவில் நின்றசுகா னந்தமே
ஆங்காணீ சொக்கநா தா. 74

நீரிலே மூழ்கிலுமென் நித்தமருச் சிக்கிலுமென்
பாரிலே சுற்றிப் பணியிலுமென்—வேரிலே
உற்றிருந்தால் அன்றோ உயிர்க்குறுதி ஒன்றிரண்டும்
அற்றவனே சொக்கநா தா. 75

என்செயலே என்றென் றியற்றுவதும் என்செயலும்
உன்செயலே என்றெண் றுணர்த்துவதும் -நின்செயல
தாகுமே என்ன அடியேற் குணர்த்தலுநீ
ஆகுமே சொக்கநா தா. 76

ஈண்டுமெனை ஆண்டிலையேல் என்வினைக்கீ டாயானே
வேண்டும் பவங்களினீ விட்டாலும்—பூண்டருளால்
அங்கங்கே என்னோ டன்னியமாய் என்னுநவிற்
றங்கியருள் சொக்கநா தா. 77

உன்னைவிட நீங்த முயிர் ஒன்றில்லை ஆதலினல்
உன்னைவிட நீங்குவது மில்லைநீ—பொன்னை யிடப்
பூந்தேன் அலருடையாய் பொங்குமதுரா புரியில்
வேந்தே பிரியா விடை. 78

அன்பர்க் கருள்புரிவ தல்லாமற் றேவரீர்
வன்பர்க் கருள்புரிய மாட்டீரேல்—உம்பர்தொழும்
நல்லார் புகழ்மதுரை நாதரே தேவரீர்க்
கெல்லாமும் வல்லசித்த ரேன். 79

நரகம் இனிநாட நாடோம் உமையாள்
விரகர் தமிழ்மதுரை மேவித்—துரகம்நரி
ஆக்கினர் வைகையினி ராடினேம் அவ்வெல்லைப்
போக்கலாம் யாந்திரிந்திப் போது. 80

நானே தனுகரணம் நானே மலமாயை
நானே இவைகள் நடத்துவது—நானேதான்
பூண்ட வினையறுப்டோன் புண்ணியபா வம்புரிவோன்
ஆண்டவனே சொக்கநா தா. 81

அரும்பாச நன்மைதின்மை யாகம் அதன்மேல்
விரும்பாது நிட்டையிலே மேவித்—திரும்பாத
வானந்தா என்னறிவில் மாருது பொங்கியெழும்
ஆனந்தா சொக்கநா தா. 82

துஞ்சப் பிணமென்னச் சுற்றத்தா ரிட்டத்தார்
அஞ்சச் சலிக்க அருவருக்கக்—கொஞ்சமுற
வந்த தனுவிருந்து வாழ்ந்து நா னென்னவைத்த
தந்திரமென் சொக்கநா தா. 83

தனுவாதி யாக்கியுயிர் தன்னிலிசைத் தாட்டி
எனுமாக மருங்கருணை என்றுந்—தினமுநீ
ஆச்சரியம்யானெனதென் றுட்டல்மறந்தொன்றுரைத்தல்
ஆச்சரியஞ் சொக்கநா தா. 84

தேகாதி யெல்லாஞ் செடம்பிணம்பொய் யென்றிருக்க
மேகாதி யெல்லாம் முடிந்திருக்க—ஏகமாய்
எப்போது மின்பவெள்ளத்தேயிருக்க வாழ்வையென்னுள்
அப்போதே சொக்கநா தா. 85

நின்பாடல் என்று நினைப்பாடல் அன்றியே
என்பாடல் எங்கே இறைவனே-நின்பாடல்
ஆமே தனுவாதி ஆகமநால் வாக்காதி
ஆமேநீ சொக்கநா தா. 86

நீயியற்ற ஓர்பொருளை நிச்சயித்த நாயேனும்
போயியற்றல் செய்யப் புரிதவேன்—நீயியற்றல்
ஆக்கா தனுவும் அசையுமே அவ்விகற்பந்
தாக்காத சொக்கநா தா. 87

அன்றுமுதல் இன்றளவும் மேலும் அடியேனுக்
கென்றுநீ நன்மைசெய்வ தன்றி நான்—ஒன்றேனுஞ்
செய்யுமா றெங்ஙன் சிவனே இனிநாயேன்
உய்யுமா றெங்ஙன் உறை. 88

அறிவுபர மானந்தம் ஆகவில்லை ஆகம்
பொறிகரணம் யானெனதும் போக—நெறிதவஞ்சேர்
பேரன்போ இல்லை பினைநான் உனக்கடிமைக்
காரென்பேன் சொக்கநா தா. 89

நின்னளவில் ஆனந்தம் நின்கருணை சற்றேனும்
என்னளவிற் றேற்றா திருந்தக்கால்—நின்னளவிற்
பூரணம்பொய் யானந்தம் பொய்கருணை பொய்யுரைத்த
ஆரணம்பொய் சொக்கநா தா. 90

தேவே மதுரைநகர்ச் சிற்பரனே எவ்வுயிர்க்குங்
கோவே எனையாளுங் கோமானே—நாவே
உனைத்துதிக்கச் சிந்தை உனைநினைக்க என்றுங்
கனத்தி லுனைவணங்கக் காண். 91

உன்னைச்சிங் காரித் துனதழகு பாராமல்
என்னைச்சிங் காரித் திடர்ப்பட்டேன்—பொன்னை
அரிவையரை யேநினையும் அன்பிலேற் குன்றாள்
தருவையோ சொக்கநா தா. 92

சொக்கநா தாவுனையே சொல்லுமடி யேனுடைய
பக்கமாய் நின்றுவினை பாற்றியே—எக்காலும்
மீண்டும்வா ராதகதி மேவுவிப்பாய் தென்மதுரைத்
தாண்டவனே சொக்கநா தா. 93

ஆறுதலை இல்லை அடியேனுக் கன்பாகத்
தேறுதலை சொல்வார் சிலரில்லை—வேறெனக்குத்
திக்காரு மில்லை சிவனே பழிக்கஞ்சி
சொக்கேநின் றாளே துணை. 94

புண்டரிகத் தாளைப் புகழ்ந்து புகழ்ந்துதினம்
அண்டமரர் கொண்டிறைஞ்சும் ஆதியே—தொண்டுபடு
நாயேனை யாண்டுகந்து நன்னெறிகள் காட்டுவித்த
தாயேநீ சொக்கநா தா. 95

மிண்டுசெய்யு மும்மலமு மிக்கவினை நல்குரவும்
பண்டுபோ லென்னைவந்து பற்றாமல்—கொண்டுபோய்
நின்னருளிற் சேர்க்க நினைகண்டாய் தென்மதுரை
மன்னவனே சொக்கநா தா. 96

கூரியவெம் பாசக் துளிர்நீங்க நின்னருளாஞ்
சூரியனெப் போதுவந்து தோன்றுமோ—பாரறியக்
கொட்டமிட்ட சண்டனுயிர் கொள்ளையிட்ட மாமதுரை
இட்டமிட்ட சொக்கநா தா. 97

உனக்குப் பணிசெய்ய உன்றனையெந் நாளும்
நினைக்க வரமெனக்கு நீதா—மனக்கவலை
நீக்குகின்ற தென்மதுரை நின்மலனே எவ்வுலகும்
ஆக்குகின்ற சொக்கநா தா. 98

சன்மார்க்கஞ் செய்யும் தபோதனரோ டென்னையுநீ
நன்மார்க்கஞ் செய்யவருள் நாடுமோ—துன்மார்க்கஞ்
செய்கின்ற முப்புரத்தைத் தீயாக்கித் தென்மதுரை
வைகின்ற சொக்கநா தா. 99

வந்தபொருளாசை மண்ணாசை பெண்ணாசை
இந்தவகை ஆசையெல்லாம் என்மனத்தின்—வந்தினிச்
சேராமல் வாழ நினைகண்டாய் தென்கூடற்
பேராத சொக்கநா தா. 100

## மதுரையின் மாண்பு

தண்டுவரும் குண்டுவரும் தானைவரும் ஆனைவரும்
வண்டில்வரும் ஆடுவரும் மாடுவரும் - மீண்டிப்
பெருங்கோட்டை யுஞ்சுமையும் பின்புவரும் கூடல்
அருங்கோட்டை வாசலிற்சென் றால். 101

சொக்காத வெண்பா முற்றிற்று.

———

---

குறிப்பு: 95 முதல் 101 வரை உள்ள வெண்பாக்கள் சில பிரதிகளில் காணப்படவோ.

## கைலாயக் கம்பளிச் சட்டைமுனி நாயனுர்
## அருளிச்செய்த

# முன் ஞானம் - 100

---

எண்சீர் விருத்தம்

அகண்ட பரி பூரணமாம் உமையாள் பாதம்
அப்புறத்தே நின்றதோர் ஐயர் பாதம்
புகன்றுநின்ற கணேசனெடு நாதாள் பாதம்
புகழ்பெரிய வாக்குடைய வாணி பாதம்
நிகன்றெனவே யெனையாண்ட குருவின் பாதம்
நிறைநிறையாய்ச் சொரூபத்தில் நின்றோர் பாதம்
முகன்றெனையீன் றெடுத்தசின் மயத்தின் பாதம்
மூவுலகு மெச்சுதற்குக் காப்புத் தானே. 1

தாங்கிநின்ற சரியையிலே நின்றுசடம் வீழில்
தப்பாது கிரியையுள்ளே சாரப் பண்ணும்.
வாங்கிநின்ற கிரியைவிட்டு விழுந்த தாலல்
மகத்தான வுடலெடுத்து யோகம் பண்ணும்
ஓங்கிநின்ற கிரியைவிட்டு விழுந்த தானல்
உத்தமனே உயர்ந்துநின்ற ஞானந் தோற்றும்
பாங்கில்நின்ற அச்சென்மம் மவுன முத்தி
பரிவாக வாய்ந்தவர்கள் அறிந்து கொள்ளே. 2

அறிந்திருந்த நான்குக்கும் விக்கின முண்டாம்
அப்பனே ஆகாமியஞ் சித்தி னேடே
மறிந்துநின்ற பிராரத்தந் தோயத் தோடு
மகத்தான நாலுக்கும் விக்கின மாச்சு

பிரிந்துநின்ற நாலினுற் செய்வ தென்ன
பேரான வறுமையொடு சினேகந் துக்கஞ்
செறிந்துநின்ற பெண்பொன்னுல் மண்ணி னுலே
சேத்துமத்தி லீப்போலத் தியங்கு வாரே. 3

தியங்கினுல் கெர்ச்சித்துத் துரத்துச் சண்ணுஞ்
சீறியர் மிலேச்சரையே சகத்தி னுள்ளே
மயங்கினுர் நாலுபா தத்தி னுள்ளும்
மனஞ்செவ்வை யாவதெப்போ தறிவ தெப்போ
தயங்கினு ருலகத்திற் கோடி பேர்கள்
சாவதும் பிறப்பதுங்கா வடிபோ லாச்சு
துயங்கினுர் துயரத்தால் ஞானம் போச்சு
சுடுகாட்டில் அறிவதுபோல் சுத்தப் பாழே. 4

பாழான மாய்கைசென் றெழிவ தெப்போ
பரந்தமனஞ் செவ்வையாய் வருவ தெப்போ
வாளான விழியுடைய பெண்ணைச் சேரும்
மயக்கமற்று நிற்பதெப் போ மனமே ஐயோ
காழான வுலகமத னுசை யெல்லாங்
கருவறுத்து நிற்பதெப்போ கருதி நின்ற
கோளான கருவிவிட்டு மேலே நோக்கிக்
கூடுவது மேதென்ருல் மூலம் பாரே. 5

மூலமதி லாறுதலங் கீழே தள்ளி
முதிர்ந்துநின்ற மேலாறு மெடுத்து நோக்கிக்
கோலமுட னுன்மனையைத் தாண்டி யேறிக்
கொடியதொரு ஞானசத்திக் குள்ளே மைந்தா
பாலமென்ற கேசரியாம் மவுனத் தூன்றிப்
பராபரமாம் மந்திரத்தில் ஞானம் முற்றிக்
காலமொடு பிறப்பிறப்புங் கடந்து போகுங்
கைவிட்ட சூத்திரம்போல் சடமு மோங்கே. 6

ஓங்கார முதற்கொண்டைந் தெழுத்தோ டாறும்
உற்றுநின்ற பஞ்சகர்த்தா ளிருந்தி டம்பார்
ஆங்கார மாலவம்நா னெனலும் போனல்
அப்பவலோ அகாரமுத லுகாரங் காணும்
பாங்கான மகாரமொடு விந்து நாதம்
பரவியதன் மேல்நிற்கும் பராப ரந்தான்
வாங்கான மவுனத்தைப் பற்றி யேறு
மருவிநின்ற லகிரியைத்தா னெத்துக் காணே. 7

ஒத்துநின்ற ஓங்காரம் மண்ணை யுண்ணும்
உருவியந்த மண்சென்று சலத்தை யுண்ணும்
பத்திநின்ற சலமதுதான் றீயை யுண்ணும்
பாங்கான தீச்சென்று காலை யுண்ணும்
வெத்திநின்ற கால்சென்று விண்ணை யுண்ணும்
விழுந்ததப்பா சடமென்வே தாந்தப் பேச்சு
முத்திகண்டு கூடுவது மெந்தக் காலம்
மூடரே மதுவையுண்டு மேல்பா ரீரே. 8

பாரப்பா அகாரமுத லுகாரங் கொள்ளும்
பாங்கான உகாரமது மகாரம் கொள்ளும்
நேரப்பா மகாரமது விந்து கொள்ளும்
நேரான விந்துவது நாதம் கொள்ளும்
சேரப்பா நாத மற்றுச் சத்தி கொள்ளும்
சேர்ந்துநின்ற சத்தியல்லோ சிவத்தைக் கொள்ளும்
ஆரப்பா சிவந்தன்னைப் பரந்தான் கொள்ளும்
அப்பரத்தைக் கொண்டவிடம் அறிந்தே யுன்னே.

உன்னிநின்ற மூலமுத லாறும் பார்த்தே
உருகிநின்ற சுழுமுனையை யறிந்த பின்பு
மன்னிநின்ற மதிமேல்சாம் பவியைக் கண்டு
மருவி,நின்று மனமுறைந்து தேர்ந்த பின்பு

பன்னிநின்ற இவ்வளவும் யோக மார்க்கம்
பகலிரவு மற்றவிடம் ஞான மார்க்கம்
கன்னிநின்ற விடங்கண்டா லவனே ஞானி
காட்டுவான் கேசரியைக் காட்டு வானே. 10

காட்டுவான் கிரியுன்னை மேலே யேற்றிக்
கைவிட்டால் கிரியைத்தான் கீழே தள்வாள்
மூட்டுவாள் துளிகைவிட்டால் கணத்துக் குள்ளே
மூதண்ட புவிகடந்து தெளிவுங் காணும்
ஆட்டுவா ளண்டரண்ட மாலை பூண்டாள்
ஆதிவத்து அனாதிவத்து இரண்டு மொன்றே
ஊட்டுவாள் நிர்க்குணத்தி னமுர்த வல்லி
உயர்ந்துநின்ற ஞானசத்தி யுறவுதானே. 11

உறவென்னத் தாரைவிட வுறவு முண்டோ
உலுத்தரையோ வாமத்தைத் தூடிப் பார்கள்
குறைவென்ன திரோதாயி சமயந் தோறுங்
கூடியல்லோ மாயவலை கூட்டி யாட்டி
மறுவென்ன ஞானமென்ன மங்கித் தள்ளி
மகத்தான சமுசார வலையிற் போட்டாள்
நிறவென்ன வாமத்தால் ஞான மாச்சு
நின்றவனே சிவயோகி வாசி பாரே. 12

வாசியென்றும் மவுனமென்றும் இரண்டும் வித்தை
மகத்தான சாம்பவிகே சரியும் ரண்டு
தேசியென்றால் யோகத்துக் காதி வித்தை
திறமான மவுனமென்றால் ஞான வித்தை
மாசியென்ற மனமுடைத்தா லிரண்டு மாகா
மருவிநின்றே அறிவறிந்தா லிரண்டு மாகும்
தூசியென்ற வெளியல்லோ அண்ட வீதி
சொக்காமல் கிரிகொண்டே ஆக்கி யேறே. 13

ஆக்கிநின்ற பரிசத்தால் கொசுவி றந்த
தாச்சரியம் ரூபத்தால் வண்டி றந்த
பாக்கிநின்ற மணியொலியால் மானி றந்த
பாழான வுரிசையினுல் மீனி றந்த
தாக்கி நின்ற கெந்தியினு லெறும்பு சென்று
சாதகமாய் மாண்ட திந்த ஐந்தும் பாரு
பாக்கிநின்ற இந்திரிய விடயத் துள்ளே
பாழான மனஞ்சிக்கிப் படுகு வாரே. 14

வாரான வுலகத்தில் மனிதர் கோடி
மருவிநின்றே யுண்டுடுத் துச் சையோ கித்துத்
தாரான கசதுரங்க ரதங்க ளேறிச்
சகலரத்ன பூடணங்கள் தரித்து விம்மி
மாரான வாழ்வடைந்தோர் இறந்தா ரையா
மாண்டவர் வெகுகோடி மாயவாழ்க்கை
கூரான சிவபோக ஞானம் வந்தால்
கூடழிந்து போகாது கூடு கூடே. 15

கூடுவதம் பரமோகே சரமோ வென்னில்
கூர்மையுள்ள வானேவ தீதமோ வென்னில்
ஆடுவதாச் சரியநின் மலமோ வென்னில்
அருமையுள்ள நிர்க்குணமோ நிரஞ்சனமோ என்னி
பாடுவது பதங்கடந்த பூரணமோ வென்னில் [ல்
பகலிரவு மற்றிடமோ பராபரமோ வென்னில்
ஊடுவதெங் கேபின்னை யெங்கு மில்லை
உம்மென்று ஓமவெள்ள மோகங் காணே. 16

மோகமென்ற வுரலுக்குள் மனந்தான் சிக்கி
முசியாம விடிப்பதற்கைம் பொறியுங் கோல்தான்
பாகமென்ற கோபம்வந்தே யுருவாய் நின்று
பதையாமற் சண்ணிச்சே யுலக மெல்லாந்

தாகமென்ற ஞானம்வந் தென்ன செய்யும்
சண்டாள இந்திரியச் சார்பினாலே
வேகமென்ற மனலகரி யைத்தான் கொண்டு
விண்ணுக்கு ளேநிற்க வெளியாய்ப் போமே. 17

வெளியேது வெளிக்குள்ளே வெளியங் கேது
வேதாந்த வெளிகடந்த வொளியங் கேது
அளியேது வ்வளிகடந்த அண்ட மேது
அப்புறத்தே தோற்றுகின்ற சோதி யேது
நெளியேது நினைவேதுநிர்க் குணந்தா னேது
நேரான பூரணத்தின் நாத மேது
சுழியேது சுழியடக்குஞ் சூட்ச மேது
தோற்றுமப்பா வானத்தை யொத்துப் பாரே. 18

ஒத்துநின்ற சரியையொடு கிரியை ரண்டும்
உறவாதி செய்தவப்பா நன்றாய்க் கேளு
பத்திநின்ற யோகமுதல் ஞானம் ரண்டும்
பாங்காகச் சித்தருக்கே அடுத்த வாறே
அத்திநின்ற ஆகாம்யசஞ் சிதபிரா ரத்வம்
ஆருக்கு மடுக்குமென்றால் யோக மெய்தி
முத்திநின்ற ஞானத்திற் புகுந்தோர்க் கையா
மூன்றுமிந்தப் பிரபஞ்ச முழுதும் போச்சே. 19

போச்சென்பர் முக்காலம் பிறகே நின்று
புரிமுறுக்குப் போலேறிப் புணர்ந்து கொல்லும்
ஆச்சப்பா காலமென்ன வென்று சொல்லி
அவரவர்கள் சபஞ்செய்வா ரறிந்த மட்டும்
நீச்சப்பா அகாலவெள்ளம் கடப்பா ரென்றால்
நேரான ஞானியல்லோ கடந்து நின்றார்
மூச்சப்பா அற்றிடத்தைப் பாரு பாரு
மூட்டுவிக்கு முகிடந்தான் ஞானத் தீயே. 20

தீக்குள்ளே வெந்துநின்ற பற்பம் போலச்
செகசால மதற்கொண்டு காலம் போகும்
தீக்குள்ளே விழுந்தெழுந்த நெய்யைப் போலச்
சிறப்பான ஞானமது திரண்டே யேறும்
தீக்குள்ளே காட்டமொடு கோலுங் கூடித்
திரண்டாற்போற் கருவியெல்லாம் கணத்தில்மாளும்
தீக்குள்ளே பராபரந்தா னிருந்த தாயின்
செகமெல்லாம் வித்தையென்று தெளிந்துபோமே.

தெளிந்துவிடங் கண்டாரரார் சித்தர் யோகி
செகமெல்லாம் நரனென்பார் திருட்டு ஞானம்
ஒளிந்துவிட முனைத்தால்கை சரிக்குள் நிற்பாள்
உற்றுப்பார் மகாரம்வைத்தே யூதி யூதே
அளிந்தவிடம் நிர்க்குணந்தா னதிலே கேளு
ஆச்சரிய மகாரமென்றே யுண்ட துண்டு
களிந்தவிடம் நிராகார மொன்று மில்லைக்
காட்டுந்தா ரறிவுகொண்டே யுற்றுக் காணே. 22

உற்றுநின்றே உலகத்தோர் ஞானம் பார்த்தே
ஊனுக்குக் கிடையாமல் புரட்டுப் பேசி
பற்றுகின்ற மோகத்தாற் பெண்ணைக் கூடிப்
பரந்துநின்ற திரோதாயி தலைபிற் சிக்கிக்
கொத்துகின்ற விடங்காண்பார் கண்ணை மூடிக்
கும்மென்றே யிருளாது மறிவும் பொய்யாம்
மற்றுநின்ற லகரியினல் கொண்டே யேற
மாட்டார்கள் அறுசமய மாடு தானே. 23

சமயமெல்லாஞ் சத்தியுண்டு சிவமு முண்டு
சண்டாளர் பிரித்தல்லோ தள்ளி னூர்கள்
சமயமெல்லாம் வேதாந்தசித் தாந்த முண்டு
சாதகத்தைப் பாராமற் றயங்கி னூர்கள்

சமயமெல்லாம் நாதமுண்டு விந்து முண்டு
காக்காமற் கெட்டார்க ளுலகத் தோர்கள்
சமயமெல்லாம் அம்பரமாம் ஞானமுண்டு
தாயைவிட்ட பாவத்தால் தவறிப் போச்சே. 24

போச்சப்பா ஆருறும் பானத் தாலே
புத்தியுள்ளோர் பாணத்தாற் கண்டா ரையா
ஆச்சப்பா வாமமென்ன நிசித மென்பார்
அதன்குணமோ திரோதாயி யனுட்டா னந்தான்
ஓச்சப்பா நாதாக்கள் ரிடிகள் சித்தர்
உயர்ந்தவரைக் கண்டவர்பா னத்தா லன்றோ
காய்ச்சமரம் பட்டதென்ன வேரற் றுற்போல்
கசடரென்ற அறுசமயங் கேட்ட பாங்கே. 25

பாங்கான குண்டலிக்குள் மூல மொன்று
பாரப்பா கண்டத்தில் மூல மொன்று
போங்கான புருவமைய மூல மொன்று
புகழான விந்துவிலே மூல மொன்று
வாங்கான சத்தியிலே மூல மொன்று
மருவிநின்ற பராபரத்தில் மூல மொன்று
தேங்காம லிவையாறுங் கண்ட ஞானி
சேர்ந்துநின்ற மும்மூல யோகி யாமே. 26

ஆமப்பா நகாரமுதல் யகாரம் நிற்கும்
அவ்வளவும் யோகத்தின் மூல மாச்சு
தாமப்பா அகாரமுதல் உகாரந் தொட்டுச்
சாதகமாய் மகாரவரை ஞான மூலம்
ஓமப்பா திசைநாத மவுனத்திற் காணும்
உற்றேற வுற்றேற அகண்ட வீதி
காமப்பா லுண்டாக்கால் யோக சித்தி
கடுங்கானற் பாலுண்ட ஞான மாச்சே. 27

ஆச்சிந்த வரிசைவிட்டே யுலக ஆசான்
ஆதி அந்த மொன்றுரவி மதிதா னென்பான்
மூச்சற்ற விடங்காட்டத் தெரியா நின்று
முன்னேது பின்னேது சாங்க மென்பான்
வாச்சிந்த மயக்கத்தா லுலகோர் கேட்டார்
மதுவைவிட்டே றியல்லோசை யத்தோர் கேட்டார்
ஓச்சிந்த விதமறிந்தோன் யோக ஞானி
உம்மென்று ஆகுமென்ற நாத மாமே. 28

நாதமப்பா யோகத்தி லேந்து நாதம்
நலமான மவுனத்தி லேந்து நாதம்
வேதமப்பா கடந்திடத்தே சுத்த நாதம்
வெட்டவெளிக் குள்ளே யொரு நாதமுண்டு
போதமப்பா கடந்திடத்தே யந்த நாதம்
புகழாகச் சேவித்து நிற்கு மென்றும்
காதமப்பா தூரமல்ல அந்தோ அந்தோ
கண்ணிமைக்குள் விண்ணுக்குள் கலந்துகாணே. 29

விண்ணேது வெளியேது வொளியங் கேது
விரைந்திந்த மூன்றுங்கே சரிதா னுச்சு
கண்ணேது காதேது மூக்கங் கேது
கண்டிப்பாய்க் கண்டவெல்லாம் அழிந்து போச்சே
ஒண்ணிரண் டேதுசம ரசந்தா னேது
உற்றுப்பார் வெட்டவெளி யொன்றுமில்லை
எண்ணேது நினைவேதிங் கறிவு மேது
ஏகமாய்க் கலந்துத்தி யிடத்தைக் காணே. 30

உத்திகொண்டு ஞானநூல் பார்த்துப் பார்த்தே
உலகத்தோர் ஞானமெல்லாம் வந்த தென்று
பத்திகொண்டே அலைவார்கள் விண்ணைப் பாரார்
பாழான மனத்தையங்கே நிறுத்த மாட்டார்

முத்திகண்ட விடமெங்கே யென்று காணார்
மூச்சற்று நின்றிடத்தை நோக்கிப் பாரார்
சித்திகண் டால் சித்திகொண்டு செய்ய மாட்டார்
சேர்ந்துமதா யிருக்கறியார் திருடர் தானே. 31

தானென்ற ஆணவத்தை நீக்க மாட்டார்
சண்டாள கோபத்தைத் தள்ள மாட்டார்
ஊனென்ற சுகபோக மொழிக்க மாட்டார்
உற்றுநின்ற சையோகம் விடுக்க மாட்டார்
பானென்ற ஞானவெள்ள முண்ண மாட்டார்
பதருமல் மவுனத்தே யிருக்க மாட்டார்
வாவென்ற பொருளென்ன வெளிதோ மைந்தா
மகத்தான மனமடங்க எய்யுங் காணே. 32

காணிந்த வுலகத்தில் மாயக் கூத்தும்
கண்மூக்குச் செவியோடிந் திரியக் கூத்தும்
பூணந்த வாசியினுல் வறுமைக் கூத்தும்
புகழான செனனமொடு மானக் கூத்தும்
ஆணிந்த அண்டமெல்லாம் படைத்த கூத்தும்
ஆங்காரம் மனம்புத்தி யான கூத்தும்
தோணிந்தப் படிபடைத்த பரமே யையா
சொற்பெரிய பூரணமே யென்று கூவே. 33

கூவையிலே யாத்தாளைத் தொழுது கூவக்
குறையாத கருணையினுல் திரும்பிப் பார்த்துத்
தாவையிலே மதலையைத்தான் தாய்தான் சென்று
சார்வாக எடுத்துபோ லுன்னை மைந்தா
தேவையிலே யெடுத்தணைத்தே யுயிரை வைப்பாள்
செகசால மாடுகிற திருட்டுத் தாய்தான்
பாவையிலே மனஞ்சென்று பரவா விட்டால்
பாராது போலிருப்பாள் பாரு பாரே. 34

பாரப்பா செகமனைத்தும் அண்டமெல்லாம்
பாங்கான சூழ்ச்சியில்வைத் திருந்த கன்னி
நேரப்பா இவளைவிட்டு யோகம் பார்த்தேன்
நேராக அண்டத்தில் ஞானம் பார்த்தேன்
சேரப்பா சுத்தவிழல் மனமோ பேயாம்
செகசாலக் கூத்தைவிட்டுத் தெளிய மாட்டார்
ஆரப்பா அவளைவிட்டு ஞானங் கண்டோர்
அலைக்கழிக்கு மாசையென்ற பாம்பு தானே. 35

பாம்பையல்லோ ஆபரணம் பூண்ட ஈசன்
பரிவாக மதியோடு கொன்றை சூடிப்
பாம்பையல்லோ முந்நூலாய்ப் போட்ட கூத்தன்
பாங்கான கரியுரித்த பாணி பாணி
பாம்பையல்லோ கங்கணமாய்த் தரித்துக்கொண்டு
பரியுழுவைத் தோலுடுத்துப் பாதந் தூக்கிப்
பாம்பையல்லோ மணக்குமோ திரமாய்ப் போட்டுப்
பாரென்றே அகண்டத்தி லாடி னரே. 36

ஆடினதோர் கூத்தெல்லா மாத்தாள் மெச்சி
அண்டையிலே யழைத்தானை யிருத்திக்கொண்டாள்
நாடினதோ ரவளருகி லரனு மெய்வான்
நாமறியோ மவன வளு மொன்றே யொன்றே
ஊடினதோ ரிடமெங்கே ஓலிகேட் பெங்கே
ஒன்றாகக் காணுகிற நடன மெங்கே
கூடினதோ ரகண்டத்தின் சோதி யெங்கே
கூசாமல் மவுனத்திற் கூடிக் காணே. 37

## மெய்ஞ்ஞான குரு

காணப்பா மகாரவரை நாத வோசை
கன்னிக்கு பீடமடா மவுன ஞானம்
ஊணப்பா ஊணப்பா நாதத் தோடே
ஒருமுனையா யொருவழியா யொன்று யோடும்

தோணப்பா தோற்றுவதங் கொன்று மில்லை
சுத்தவெளி ரவிகோடி சூழ வன்னி
ஆணப்பா மாகோடி கண்கொள் ளாதே
ஆச்சரிய மதிகமென்ற மகாரங் காணே. 38

மகாரமல் லோ முந்தி யாசான் சுட்டி
வழிகாட்டு முறைமையது ஞானம் மார்க்கம்
மகாரமல்லோ அடங்கியந்த நாதந் தாண்டி
மருவிநின்ற இடமல்லோ கேசரி மைந்தா
மகாரமென்ன மேலெழுத்தே யென்பார் மாண்பர்
மாட்டுவதை மூன்றெழுத்த தென்று காணூர்
மகாரமென்ன மகார வித்தை யதீத வித்தை
வாய்திறந்து பேசாதே மௌன மாமே. 39

மௌனவித்தை யாதெனில்மூன் றெழுத்தே யென்பார்
மாட்டுகிற இனங்காணூர் மார்க்கங் காணூர்
மௌனவித்தை யாவதென் வாய்மூட லென்பார்
மாடுமுதற் குதிரையினு லாவ தென்ன
மௌனவித்தை கேட்டார்கூட் டுறவு காணூர்
வாய்மூடி வழியோடே நாதங் கேளார்
மௌனவித்தை யாசான்றன் தூண்டிக் காட்டில்
மணிமுதலாய்த் திசைநாதங் கேட்குந் தானே. 40

கேட்கையி லே மதியினிட மமிர்தஞ் சிந்துங்
கெடியான துவாசமூர்தங் கடந்து தோன்றும்
வாழ்க்கையிலே யாசையறும் நினைவும் போகும்
வாரிதிபோ லண்ணுக்கி லமிர்த மோடும்
தாக்கையிலே ரவிகோடி காந்தி காணும்
சச்சிதா னந்தவொளி தானே தோன்றும்
மூட்கையிலே மேலமிர்த லகரி மீறும்
மூன்றுகமும் கணமாகு மூட்டிப் பாரே. 41

மூட்டையிலே யுலககிரி கொண்டு மூட்டு
முதிர்ந்தபின்பு விண்ணுள்கிரி வந்து காக்கும்
கூட்டையிலே மகாரத்தை யறிந்து கூட்டும்
கும்மென்ற நாதத்தில் கூடி யேறும்
மாட்டையிலே யறிவோடு மனத்தை மாட்டும்
மறுகாலும் நாதத்தைக் சேர்ந்து கேளே
ஓட்டையிலே யொருவழியா யோடிற் ருனல்
உத்தமனே யச்சின்ன முத்தி யையா. 42

## ஏறுகிற துறை

ஐயனே குருவான அகண்ட மூர்த்தி
அதீதமென்ற ஞானமெல்லாம் அருளிச் செய்தாய்
மெய்யனே ஏறுகிற சாத கஞ்சொல்
வேதாந்த லட்சியத்தை விளங்கச் சொல்லு
துய்யனே நிலைதோறு மெழுத்தைச் சொல்லு
சொற்பெரிய பிராணய சூட்சஞ் சொல்லு
தையனே தையமென்ற நிர்த்தஞ் சொல்லு
சாதகமாய் லட்சியத்தைச் சாற்றி டாயே. 43

சாற்றிடென்று கேட்டமா ணுக்க னேகேள்
சந்தோட மாச்சுதிப்போ சார்பு சொல்வேன்
ஏற்றமென்ற மூலத்தில் வாசி வைத்தே
எளிதாகப் பிராணயம் பண்ணித் தேறி
ஆற்றுமென்ற குண்டலிக்குள் நடனங் கண்டால்
ஆதித்தன் கோடியைப்போல் காந்தி காணும்
மாற்றுமென்ற கண்டத்தி லங்கென் றாணு
வாய்திறக்க வொட்டாது வழிசெய் வாயே. 44

வழியோடே நின்றுரைத்துப் பழக்க மாகி
மனோன்மணியாம் புருவமையத் தூடேசென்றே
ஒளியோடே மவுனத்தை யோட்டி யூகாய்
உத்தமனே சாம்பவியைக் கண்டு கொள்வாய்

நெளிவோபோ யிவ்வளவும் யோக மார்க்கம்
நின்றவனே சிவயோகி நினைவாய்க் கேளு
தெளிவோடே விந்துவென்ற குரு பதத்தில்
தேக்கப்பா மவுனத்தைத் தாரை யாமே. 45

ஆமப்பா விந்துரவி மதியோர் கூடி
ஆச்சரியங் கண்கூசி மயக்க மாகி
ஓமப்பா நாதத்திற் செவிடு பட்டே
ஊமையென்ற வெழுத்துடைய வுருவங் காணும்
தாமப்பா சத்தியிலே வன்னி யோடு
சதகோடி ரவிமதியு மொவ்வா வொவ்வா
வாமப்பா லுண்டவர்க்கித் தனையுங் காணும்
வாய்பேசா ஞானிக்கு மாயந் தானே. 46

தானென்ற சிவத்துக்குள் மௌனஞ் சென்றால்
சதகோடி நவகோடி வன்னிரவி சோமன்
பானென்ற பரத்தின்கீழ் மூப்பா மூண்டு
பார்மகனே அகாரமொன் றுகார மொன்று
வானென்ற மகாரமொன்று மூப்பா மாக
வழங்கிற்றே அதனொளியைச் சொல்லப் போகா
தேனென்ற மொழியுடைய மனமுந் தத்தைத்
தேவிபத மென்றகே சரிதான் காணே. 47

காணிந்தக் கேசரத்தின் தாயின் காந்தி
கண்கொள்ளா விண்கொள்ளா கரையுங் கொள்ளா
ஆணிந்தப் பரையென்பார் அம்பரந்தா னென்பார்
அவளுக்குள் மவுனமுண் டறிவாற் பாராய்
ஊணிந்த மௌனத்தை நிட்களமாய்ப் போவாய்
ஓகோகோ அம்பரத்தி லேதோ வேதோ
தோணிந்தப் படியிருந்தால் மெய்த்தின் நேர்மை
சொல்லரிதாம் அப்புறத்தே சோதி தானே. 48

